# PROVERBS OF COIMBATORE AND PALAKKAD DISTRICTS – A COMPARATIVE STUDY

*Thesis submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil*


*Research Scholar*

**SABEELA. I**

*Under the Supervision of*

**Dr. T. VIJAYALAKSHMI**

DEPARTMENT OF TAMIL

UNIVERSITY OF KERALA

KARIAVATTOM

THIRUVANANTHAPURAM - 695 581


MAY - 2014

# கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் – ஓர் ஒப்பீடு

கேரளப் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**சபீலா. இ**

மேற்பார்வையாளர்
**முனைவர். த. விஜயலட்சுமி**

**தமிழ்த்துறை**
**கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம்**
**திருவனந்தபுரம் – 695 581**

**மே – 2014**

# PROVERBS OF COIMBATORE AND PALAKKAD DISTRICTS – A COMPARATIVE STUDY

*Thesis submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil*

*Research Scholar*

**SABEELA. I**

*Under the Supervision of*

**Dr. T. VIJAYALAKSHMI**

DEPARTMENT OF TAMIL

UNIVERSITY OF KERALA

KARIAVATTOM

THIRUVANANTHAPURAM - 695 581

MAY - 2014

# கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் – ஓர் ஒப்பீடு

கேரளப் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**சபீலா. இ**

மேற்பார்வையாளர்
**முனைவர். த. விஜயலட்சுமி**

**தமிழ்த்துறை**
**கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம்**
**திருவனந்தபுரம் – 695 581**

**மே – 2014**

**DR. T. VIJAYALAKSHMI**

Assistant Professor,

Department of Tamil,

University of Kerala,

Kariavattom,

Thiruvananthapuram – 695 581

# CERTIFICATE

This is to certify that the thesis entitled **"PROVERBS OF COIMBATORE AND PALAKKAD DISTRICTS – A COMPARATIVE STUDY"** here with submitted by Ms. Sabeela. I, for her Ph.D. Degree is an authentic record of research carried out by her under my supervision and guidance in the Department of Tamil, University of Kerala, Kariavattom and that the Thesis has not previously formed the basis for the award of any Degree, Diploma, Associateship, Fellowship or other similar title. The thesis represents entirely an independent work on the part of the candidate but for the general guidance offered by me.

Kariavattom

Date: 10 – 5 – 14

**(Dr. T. Vijayalakshmi)**

**Supervising Teacher**

Dr. T. VIJAYALAKSHMI
M.A.(Eng.) M.A. M.Phil. Ph.D. LLB
Asst. Professor, Dept. of Tamil
University of Kerala
Kariavattom, Thiruvananthapuram-695 581

**SABEELA. I**
Research Scholar,
Department of Tamil,
University of Kerala,
Kariavattom Campus,
Thiruvananthapuram - 695 581

# DECLARATION

I hereby declare that the Ph.D thesis entitled **"PROVERBS OF COIMBATORE AND PALAKKAD DISTRICTS - A COMPARATIVE STUDY"** is an independent work carried out by me and it has not been submitted anywhere else for any other degree, diploma or title.

Kariavattom

Date: 10-05-2014

**SABEELA. I**

# நன்றியுரை

**"கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஓர் ஒப்பீடு"** என்ற தலைப்பினை வழங்கி ஆய்வு செய்வதற்கு அனுமதியளித்து இவ்வாய்விற்கு மேற்பார்வையாளராக மட்டுமல்லாமல் பல பழமொழிகளைத் தந்து தகவலாளியாகவும் இருந்து, ஆய்வேடு செம்மையுற ஆய்வின் அனைத்து நிலைகளிலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து, குறித்த நேரத்தில் ஆய்வேட்டைச் சமர்ப்பிக்க உறுதுணையாய் இருந்த பெருமைமிகு கேரளப்பல்கலைக்கழகத் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் **முனைவர். த. விஜயலட்சுமி அம்மா** அவர்களுக்கு என் முதற்கண் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் இவ்வாய்வுத் தலைப்பிற்கு அனுமதி வழங்கிய தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் **முனைவர். ப.ஜெயகிருஷ்ணன் ஐயா** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குப் பல வகையிலும் உதவி புரிந்த துறைப் பேராசிரியப் பெருமக்கள், சக மாணவ நண்பர்கள், நண்பன் மாரிக்கண்ணன், பிற ஆய்வாளர்கள் நூற்களைத் தந்துதவிய நூலகத்தார் போன்ற அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கேரளப் பல்கலைக்கழகக் கல்லூரி முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர். எஸ். இராஜேந்திரன் ஐயா** அவர்களுக்கும், துறைப் பேராசிரியர்கள் அவர்களுக்கும், நூற்களைத் தந்துதவிய தமிழ், மலையாள நூலகர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

கள ஆய்வின் போது பேருதவி புரிந்த **பானு ராஃபி** குடும்பத்தினர், **சுந்தரன்** குடும்பத்தினர் ஆகியோருக்கும் என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

செய்திகள் வழங்கிய கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்ட மக்கள் அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனைப் பெற்று வளர்த்து, சிறப்பான கல்வியினைக் கற்க தங்கள் வாழ்வினை அர்ப்பணித்த என் அன்புத்தாய், சகோதரிகள் அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டை நல்ல முறையில் செய்த தந்த ***ஸ்கைலேண்ட்*** நிறுவனத்தார் திரு.ராஜன் அவர்களுக்கும் மற்றும் பணியாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எல்லாவற்றிற்கு மேலாக என்னை வாழ்த்தி வழி நடத்தும் எல்லாம் வல்ல இறைவனுக்கும், இறைவனடியைச் சேர்ந்த என் அருமைத் தந்தைக்கும் என் நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

நன்றியுடன்

**சுபீலா. இ**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | – | அகநானூறு |
| இ.பத்து | – | இரண்டாம் பத்து |
| களி.நி | – | களிற்றியானை நிறை |
| தொ. | – | தொல்காப்பியம் |
| ப. | – | பக்கம் |
| பா.எ | – | பாடல் எண் |
| பொ. | – | பொருளதிகாரம் |
| ம.கா | – | மதுரைக் காண்டம் |
| மேலது | – | மேலே குறிப்பிட்ட நூல் |
| P. | – | Page |
| Vol. | – | Volume |

# உள்ளடக்கம்

# முன்னுரை

## 0.1 அறிமுகம்

நாட்டுப்புறவியல் ஆய்வு இன்று பல்வேறு கோட்பாடுகளின் அடிப்படையிலும், பிற துறைகளுடன் தொடர்புபடுத்தியும், இரு வேறுபட்ட மொழிகளில் காணப்படும் ஒரே வகையான இலக்கியங்களை ஒப்பிட்டும் நடைபெற்று வருகின்றது. இம்முறையில் தமிழ் மற்றும் மலையாளத்தில் காணப்படும் நாட்டுப்புற இலக்கியங்களை ஒப்பிட்டு ஆராய்வது தேவையான ஒன்றாகும். அவ்வகையில் பழமொழி என்ற நாட்டுப்புற இலக்கியம் சமூகத்தில் ஆற்றும் பங்கைக் கண்டறிவதை நோக்கமாகக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. பழமொழிகள் ஒவ்வொரு இன மக்களின் வாழ்க்கைச் சூழலில் இருந்து தோன்றுவதாகும். அவற்றை மீட்டுருவாக்கம் செய்யும் போது அம்மக்களின் பாண்பாட்டுக் கூறுகளைக் கண்டறியமுடியும். இங்கு தமிழ்–மலையாளப் பழமொழிகளை ஆய்வுக்கு உட்படுத்தி இவ்விரு மக்களின் பண்பாட்டு ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறியும் விதமாக இவ்வாய்வு அமைகிறது.

## 0.2 ஆய்வுத் தலைப்பு

"கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் – ஓர் ஒப்பீடு" என்பதே இவ்வாய்வின் ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

## 0.3 ஆய்வு எல்லை

இவ்வாய்விற்குக் கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள தமிழ்ப் பழமொழிகளும், பாலக்காடு மாவட்டத்திலுள்ள மலையாளப் பழமொழிகளும் ஆய்வு எல்லையாக விளங்குகின்றன.

## 0.4 ஆய்வின் நோக்கம்

பாமர மக்களின் இலக்கியமான பழமொழிகளில், சமூகக் கூறுகள், கலாச்சாரம், பண்பாடு போன்றவை இரு மாவட்டங்களிலும் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை ஒப்பிட்டுக் கூறுவதே இவ்வாய்வின் நோக்கமாகும். பல நூற்றாண்டுகளாக நாட்டுப்புற மக்களுடைய நாவில் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வரும் இவ்வரிய பழமொழிகள் அழிந்து போகாமலும் அவற்றைச் சேகரித்துப் பதிவு செய்வதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 0.5 ஆய்விற்குரிய கருதுகோள்

பழமொழிகள் அந்தந்த மக்களின் வாழ்க்கைச் சூழலிலிருந்தும் பண்பாட்டிலிருந்தும் உருவாக்கப்படுகின்றன. அப்பழமொழிகளை ஆழமாக ஆய்வதன் மூலம் அம்மக்களின் உண்மையான பண்பாட்டுக் கூறுகளை மீட்டெடுக்கலாம் என்பதே இவ்வாய்வின் கருதுகோளாக அமைகிறது.

## 0.6 ஆய்வுச் சான்றாதாரங்கள்

ஆய்விற்குரிய சான்றுகள் முதன்மைச் சான்றுகள் மற்றும் துணைமைச் சான்றுகள் என்று வகைப்படுத்தப்படுகின்றன.

### 0.6.1 முதன்மைச் சான்றுகள்

கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டத்தில் வாழும் மக்களிடமிருந்து களப்பணி வழி சேகரித்த 1164 தமிழ்ப் பழமொழிகளும் 522 மலையாளப் பழமொழிகளும் முதன்மை சான்றாதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன. பாலக்காடு மாவட்டத்தில் வாழும் தமிழர்களிடம் சேகரித்த தமிழ் பழமொழிகள் கோவை மாவட்டத் தமிழ் பழமொழிகளை ஒத்துக் காணப்படுவதால் அவை கோவை மாவட்டப் பழமொழிகளாகவே கொள்ளப்பட்டன.

### 0.6.2 துணைமைச் சான்றுகள்

தமிழிலும் மலையாளத்திலும் உள்ள பழமொழிகள் பற்றிய நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## 0.7 ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு, பகுப்பாய்வு அணுகுமுறை, விளக்கவியல் அணுகுமுறை, ஒப்பீட்டு அணுகுமுறை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது.

## 0.8 ஆய்வு பயன்

கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்ட மக்கள் வழங்கக்கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகளைச் சேகரித்து பதிவு செய்வதன் மூலம் இப்பழமொழிகள் அழிந்து போகாமல் பாதுகாக்கப்படுகின்றன. வருங்காலத்தில் இது பிறருக்கும், ஆர்வமுள்ள மாணவர்களுக்கும் மிகுந்த பயனை அளிக்கும்.

## 0.9 ஆய்வு முன்னோடிகள்

தமிழ் பழமொழி பற்றியும் அவற்றின் அமைப்பு பற்றியும் பல ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. 'தமிழ்ப் பழமொழிகள் – ஓர் ஆய்வு' என்னும் தலைப்பில், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் 1980ஆம் ஆண்டு தே.லூர்து அவர்கள் முனைவர் பட்டத்திற்காக சமர்ப்பித்த ஆய்வேடும், 'தஞ்சாவூர் மாவட்டப் பழமொழிகள் ஓர் ஆய்வு' எனும் தலைப்பில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 2004–ஆம் ஆண்டு இ.கிளாரா அவர்கள் முனைவர் பட்டத்திற்காக சமர்ப்பித்த ஆய்வேடும் இவ்வாய்விற்கு முன்னோடிகளாக அமைகின்றன. 'தமிழ்ப் பழமொழிகள்: அமைப்பு, பொருண்மை, செயல்பாடு' எனும் தலைப்பில் தே.லூர்து அவர்களின் 2007–ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட நூல் இவ்வாய்விற்கு மிகவும் பயன்பட்டது. மேலே கூறப்பட்டுள்ள

ஆய்வுகளும், நூல்களும் அமைப்பியல் சார்ந்தும், விளக்கவியல் சார்ந்தும் அமைந்துள்ளது. ஆனால் கோயம்புத்தூர் தமிழ், பாலக்காடு மலையாளப் பழமொழிகள் பற்றி ஒப்பீடு செய்து இதுவரை எந்தவொரு முழுமையான ஆய்வும் மேற்கொள்ளப்படவில்லை. இது ஒரு முதல் முயற்சியாக அமைகிறது.

## 0.10 ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டு அமைகின்றது.

ஆய்வு முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, எல்லை, நோக்கம், கருதுகோள், சான்றாதாரங்கள், அணுகுமுறை, பயன், ஆய்வு முன்னோடிகள் மற்றும் ஆய்வேட்டின் அமைப்பு ஆகியவை இடம்பெறுகின்றன.

### 0.10.1 இயல் விளக்கம்

#### 0.10.1.1 பழமொழி

"பழமொழி" எனும் முதல் இயலில் முன்னுரை, பழமொழி சொல் விளக்கம், பழமொழியைக் குறிக்கும் பல்வேறு சொற்கள், பழமொழியின் தோற்றம், பழமொழியின் வளர்ச்சி, தொல்காப்பியத்தில் பழமொழி, பழமொழி பற்றிய கருத்தாக்கங்கள், பழமொழி பற்றிய அகராதிகளின் கருத்துக்கள், நாட்டுப்புற இலக்கியத்துள் பழமொழி, பழமொழியின் தனித்தன்மைகள், பழமொழி வகைப்பாடு, பழமொழியும் பயன்பாடும், பழமொழியும் பயன்பாட்டுச் சூழல் அமைப்பும் எனும் தலைப்புகளின் கீழ் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

#### 0.10.1.2 தமிழ் மலையாளப் பழமொழிகளின் அமைப்பு

"தமிழ் மலையாளப் பழமொழிகளின் அமைப்பு" என்னும் இரண்டாவது இயலில் பழமொழிகளின் அமைப்பியல் பற்றிய ஆசிரியர்களின் கருத்துக்கள் பற்றிக்

கூறப்படவுள்ளது. பழமொழிகளின் விளக்கவுரைக் கூறுகள் எனும் தலைப்பின் கீழ் ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், இரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், மூன்று விளக்கக் கூறுடைய பழமொழிகள் எனும் குறுந்தலைப்புகளின் கீழ் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. மட்டுமின்றி டண்டிஸின் மூவகைப் பாகுபாடான முரணற்ற பழமொழிகள், முரணுடைய பழமொழிகள், முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் எனும் தலைப்பின் கீழும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. மேலும் உவமை உருபு வரக்கூடிய பழமொழிகள், இல்லா என்று வரக்கூடிய மலையாளப் பழமொழிகள், எதுகை, மோனை அமைப்பு வரக்கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள், எதிர்நிலை அமைப்புப் பழமொழிகள் போன்ற தலைப்புகளின் கீழும் செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன.

## 0.10.1.3 கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

"கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்" எனும் மூன்றாவது இயலில் இரு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகளை சமூக உறவுமுறைகள் தொடர்பான பழமொழிகள், புழங்கு பொருள் சார் பண்பாடு, தொழில்கள் தொடர்பான பழமொழிகள், நம்பிக்கை தொடர்பான பழமொழிகள், உயிரினங்கள் தொடர்பான பழமொழிகள், பிற பழமொழிகள் எனும் தலைப்புகளின் கீழ் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. மட்டுமின்றி வட்டாரச் சொற்கள், தகாத சொற்கள் வரக்கூடிய பழமொழிகள், ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல தமிழ்ப் பழமொழிகள், ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல மலையாளப் பழமொழிகள் சில வேறுபாடுடன் இருக்கக்கூடிய தமிழ்ப் பழமொழிகள், சில வேறுபாடுடன் இருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகள், தமிழ்ப் பழமொழிகளின் பாடவேறுபாடு, மலையாளப் பழமொழிகளின் பாடவேறுபாடு போன்றவற்றைப் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளன.

## 0.10.1.4 கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஒப்பீடு

"கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஒப்பீடு" எனும் நான்காவது இயலில் ஒப்பீடு என்பதற்குத் தமிழ் மலையாள சான்றோர்கள் கூறிய

கருத்துகள் கூறப்பட்டுள்ளன. இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் தங்களுடைய பழங்கு வெளிகளை எவ்வாறெல்லாம் பயனபடுத்தி வந்துள்ளனர் என்பதும், அதில் எவ்வகையிலான தொழில்களை செய்து வந்துள்ளனர் என்பதும் தமிழ் மலையாளப் பழமொழிகளின் மூலம் ஒப்பீடு செய்து கூறப்பட்டுள்ளன. மட்டுமின்றி, இவர்களது உணவு முறைகள், கட்டிடங்கள் இரு பாலினரும் அணியக்கூடிய ஆடைவகைகள் போன்றவற்றை ஒப்பீடு செய்து, அவற்றிலுள்ள ஒற்றுமை வேற்றுமை கண்டறியும் விதமாகவும் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

இம்மாவட்டங்களிலுள்ள மக்கள் தங்களுடைய வாழ்க்கையில் எந்த விதமான நம்பிக்கைகளையெல்லாம் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதையும், இவர்களது சடங்குமுறைகள், திருவிழாக்கள், இவர்கள் வழிபடக் கூடிய கடவுள்கள் போன்றவற்றிற்கு இடையில் அமைந்துள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறுவதாகவும் இவ்வியல் அமைகிறது.

### 0.10.1.5 ஆய்வு முடிவுரை

ஒவ்வொரு இயலின் மூலம் ஆய்ந்தறியப்பட்ட முடிவுகள் ஆய்வேட்டின் இறுதியில் முடிவுரையாகத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

### 0.10.1.6 பின்னிணைப்பு

ஆய்வேட்டின் பின் பகுதியில் ஆய்விற்குத் துணை நின்ற நூல்களின் பட்டியலும், பழமொழித் தொகுப்புகளின் பெயர்கள் (காலவரிசை), தமிழ்–மலையாளப் பழமொழிகளும், கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டத் தகவலாளர்களின் பெயர்ப்பட்டியல், கள ஆய்வு மேற்கொண்டிருக்கும் பொழுது எடுத்துக்கொண்ட புகைப்படங்கள், ஆய்வுக்கட்டுரை வெளியீடுகள் போன்றவை இணைக்கப்பட்டுள்ளன.

# இயல் — 1

# பழமொழி

1.1 பழமொழி சொல் விளக்கம்

1.2 பழமொழியைக் குறிக்கும் பல்வேறு சொற்கள்

1.3 பழமொழியின் தோற்றம்

1.4 பழமொழியின் வளர்ச்சி

1.5 தொல்காப்பியத்தில் பழமொழி

1.6 பழமொழி பற்றிய கருத்தாக்கங்கள்

1.7 பழமொழி பற்றிய அகராதிகளின் கருத்துக்கள்

1.8 நாட்டுப்புற இலக்கியத்துள் பழமொழி

1.9 பழமொழியின் தனித்தன்மைகள்

1.10 பழமொழி வகைப்பாடு

1.11 பழமொழியும் பயன்பாடும்

1.12 பழமொழியும் பயன்பாட்டுச் சூழல் அமைப்பும்

தொகுப்புரை

# 1. பழமொழி

உலகிலுள்ள அனைத்து மொழிகளிலும் பழமொழிகள் உள்ளன. தமிழில் மிகப் பழங்காலந்தொட்டே பழமொழிகள் கூறப்பட்டு வந்துள்ளன. படிப்பறிவில்லாத மக்கள் தங்களது உணர்வுகளை பாடல்களாகவும், கதையாகவும் வெளிப்படுத்தினர். அந்தந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப அவை பல வடிவங்கள் பெற்றன. அதில் ஒரு வகை தான் பழமொழி. தமிழில் கிடைத்த தொன்மையான நூலாகக் கருதப்படும் தொல்காப்பியத்தில் பழமொழிக்கென்று இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து அந்நூல் தோன்றுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே, பழமொழிகள் மக்களால் பயன்படுத்தப்பட்டு பழக்கத்திலிருந்திருக்க வேண்டும் என்பது புலனாகிறது. பழமொழிகள் குறிப்பிட்ட ஒரு சிலருக்காகக் கூறப்பட்டவை அல்ல. அனைவருக்கும் பொதுவான ஒன்றாகும். இவ்வாறு கூறப்படும் பழமொழிகள் மக்களின் பட்டறிவால் தோன்றிய அனுபவ மொழியாகக் கருதப்படுகின்றன. இவ்வியலில் பழமொழி சொல் விளக்கம், பழமொழியைக் குறிக்கும் பல்வேறு சொற்கள், பழமொழியின் தோற்றம், வளர்ச்சி, தொல்காப்பியத்தில் பழமொழி, பழமொழி பற்றிய கருத்தாக்கங்கள், பழமொழி பற்றிய அகராதிகளின் கருத்தாக்கங்கள், நாட்டுப்புற இலக்கியத்துள் பழமொழி, பழமொழியின் தனித்தன்மைகள், பழமொழி வகைப்பாடு, பழமொழியும் பயன்பாடும், பழமொழியும் பயன்பாட்டுச் சூழல் அமைப்பும் என்னும் தலைப்புக்களில் கருத்துக்கள் தொகுத்தளிக்கப்படுகின்றன.

## 1.1 பழமொழி சொல் விளக்கம்

காலத்தால் பழமையானதும் காலங்காலமாக மக்களால் மொழியப்படுவதுமான மொழிகளே பழமொழிகள் எனப்படுகின்றன. பழமொழியைக் குறித்துப் பலரும் பலவாறு விளக்கமளித்துள்ளனர்.

"பழமொழி என்றால் என்ன என்பதற்கு அந்தச் சொல்லிலேயே விளக்கம் இருக்கிறது. பழைய மொழி பழமொழி. பழகிப் போன மொழி, பழக்கத்திற்கு வந்துவிட்ட

மொழி பழமொழி. பழமையாகச் சொல்லப்பட்டதனாலும், காலத்தை வென்று என்றைக்கும் ஏற்கக் கூடியதாக உள்ளது பழமொழி"[1].

"பழமொழியை பழைய + மொழி, பழகிய + மொழி, பழகும் + மொழி எனப் பிரித்துப் பொருள் கொண்டாலும் கிடைக்கும் பொருள் முதுமை என்பதேயாகும்"[2].

"பழமொழி = பழமை + மொழி பண்புத்தொகையாகக் கொண்டு பழமையாகிய மொழி எனக் கூறலாம். பழமொழி = பழம் + மொழி. உவமைத் தொகையாகக் கொண்டு பழம் போன்ற இனிமையான மொழி எனவும் கூறலாம்"[3].

## 1.2 பழமொழியைக் குறிக்கும் பல்வேறு சொற்கள்

"தமிழில் பழமொழியைக் குறிக்க பல்வேறு சொற்கள் பழங்காலம் முதலே பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. திவாகர முனிவர் இயற்றிய சேந்தன் திவாகரம் பழமொழி என்ற சொல்லுக்கு மூதுரை, முதுமை, மொழிமை, முன்சொல், முதுசொல், பழஞ்சொல் என்னும் ஆறு பொருள் கூறுகிறது"[4].

கி.பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த பிங்கல முனிவர் இயற்றிய பிங்கல நிகண்டு, ஐந்து சொற்கள் பழமொழியைக் குறிக்க வழங்கி வந்துள்ளதைக் குறிப்பிடுகிறது.

*'மொழிமை மூதுரை முன்சொல் பழஞ்சொல்*
*முதுசொல் லென்பர் பழமொழியுமாமே'*[5]

இதே போல் ஐந்து சொற்கள் பயன்பாட்டில் இருந்ததாக, அதாவது,

*'மொழிமை மூதுரை முன்சொல்லு முதுசொல்லும்*
*பழஞ்சொல்லும்பேர் பழமொழி முதுமையாகும்'*[6]

என்று கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த மண்டல புருடர் இயற்றிய சூடாமணி நிகண்டிலும் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

மேலும், இலக்கணங்களில் மட்டுமின்றி இலக்கியங்களிலும் பழமொழி என்னும் சொல்லுக்கு முதுமொழி, முதுசொல், பழமொழி, தொன்றுபடுகிளவி, வாய்மொழி, சொலவு, நெடுமொழி, பல்லவையோர் சொல், பழஞ்சொல், உலகமொழி, மூதுரை, வழக்கு போன்ற சொற்கள் வழங்கி வந்துள்ளதைக் கீழ்வருமாறு காணலாம்.

### 1.2.1 முதுமொழி

தமிழில் தோன்றிய இலக்கண நூல்களுள் முழுமையானதும் காலத்தினால் முற்பட்ட இலக்கணமாகவும் கருதப்படுகின்ற தொல்காப்பியம் பழமொழியை முதுமொழி என்று குறிப்பிட்டுள்ளது.

*'குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்*
*ஏது நுதலிய முதுமொழி என்ப'*[7]

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். கலித்தொகையில் முதுமொழி என்னும் சொல் வழங்கி வந்துள்ளது என்பதை,

*'முக்கோல் கொளந்தணர் முதுமொழி நினைவார் போ*
*வெக்கர்மே லிறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப'*[8]

என்ற பாடலடிகளின் மூலம் அறியலாம். மேலும் பரிபாடலில் முதுமொழி என்னும் சொல் வந்துள்ளது என்பதை,

*'ஆயிரம் விரித்த கைம்மாய மள்ள*
*பதினாயிரம் கை முதுமொழி முதல்வ'*[9]

எனும் பாடலடிகள் கூறுகின்றன.

### 1.2.2 முதுசொல்

பழமொழி முதுமொழி என்ற சொல்லால் மட்டுமின்றி முதுசொல் என்ற பெயராலும் அழைக்கப்பட்டது.

*'பாட்டுஉரை நூலே வாய்மொழி பிசியே*
*அங்கதம் முதுசொல்லோடு அவ்வேழ் நிலத்தும்'*[10]

என்னும் நூற்பாவின் மூலம் தொல்காப்பியர் காலத்திலேயே பழமொழியை முதுசொல் என்று சொல்லக்கூடிய வழக்கம் இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

## 1.2.3 பழமொழி

தொல்காப்பியர் காலத்தில் கூறப்பட்ட முதுமொழி, முதுசொல் என்ற சொற்கள் பழமொழி என்ற பெயருடன் அகநானூற்றில் வந்துள்ளது என்பதை அகநானூற்றுப் பாடல்களின் மூலம் அறியலாம்.

*'பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்*
*வாயே ஆகுதல் வாய்த்தனம் – தோழி'*[11]

எனும் அடிகள் மூலம் அறியமுடிகிறது. மேலும், பழமொழி நானூறிலும் பழமொழி என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர் முன்றுரையரையனார்.

*'பிண்டியின் நீழல் பெருமான் அடிவணங்கிப்*
*பண்டைப் பழமொழி நானூறும் கொண்டினிதா'*[12]

எனும் பாடலடிகள் மூலம் பழமொழி என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது. பழமொழி எனும் சொல்லானது பெருங்கதையிலும் வந்துள்ளது.

## 1.2.4 வாய்மொழி

பழமொழியை வாய்மொழி என்ற சொல்லாலும் கூறப்பட்டுள்ளதை புறநானூறு பாடலில் காணலாம்.

*'நண்ணூரல் தடக்கையின் நாமருப்பாக*
*வெல்லும் வாய்மொழிப் புல்லுடை விளைநிலம்'*[13]

வாய்மொழி என்ற சொல்லை பதிற்றுப்பத்தில்,

*'மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி*
*இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு'*[14]

என்ற அடியின் மூலம் பழமொழி வாய்மொழி எனும் சொல்லால் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### 1.2.5 தொன்றுபடுகிளவி

தொன்றுதொட்டு வழங்கி வருகின்ற காரணத்தினால் பழமொழிகள் தொன்றுபடுகிளவி, தொன்றுபடு பழமொழி என அழைக்கப்படுகின்றன. அகநானூற்றில் பழமொழிக்கு தொன்றுபடுகிளவி என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை,

*'.............................. அறந்தாறு*
*அன்று என மொழிந்த தொன்றுபடுகிளவி'*[15]

எனும் பாடலடிகளின் மூலம் அறியமுடிகின்றது.

### 1.2.6 சொலவு

மதுரைக் கூடலூர் கிழார் இயற்றிய முதுமொழிக்காஞ்சியில் பத்து தலைப்புகளின் கீழமைந்த பத்துப் பாடல்களிலும் முதுமொழிகளைத் தொகுத்தளித்துள்ளார். இவர் பழமொழியை சொலவு என்னும் பெயரால்,

*'சொல் செல்லாவழிச் சொலவு நல்கூர்ந்தன்று'*[16]

என்று குறிப்பிடுகின்றார்.

### 1.2.7 நெடுமொழி

ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்,

*'நீ அறிந்திலையோ நெடுமொழி அன்றோ*
*வல்லாடு ஆயத்து மண் அரசு இழந்து'*[17]

என்று பழமொழியை நெடுமொழி என்ற சொல்லால் குறிப்பிட்டுள்ளார்.

### 1.2.8 பல்லவையோர் சொல்

சிலப்பதிகாரத்திலேயே பழமொழிக்கு பல்லவையோர் சொல் என்ற சொல்லையும் இளங்கோவடிகள் பயன்படுத்தியுள்ளார் என்பதை,

*'அல்லவை செய்தார்க்கு அறங்கூற்ற மாமென்னும்*
*<u>பல்லவையோர் சொல்லும்</u> பழுதன்றே'*[18]

எனும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

### 1.2.9 பழஞ்சொல்

திருவாசகத்தின் ஆசிரியர் மாணிக்கவாசகர் பழமொழியை, பழஞ்சொல் என்ற சொல்லால் குறிப்பிடுவதைக் காணலாம்.

*'அங்கு <u>அப்பழஞ்சொல்</u> புதுக்கும் எம் அச்சத்தால்*
*எங்கள் பெருமான் உனக்கு ஒன்று உரைப்போம் கேள்'*[19]

மாணிக்கவாசகர் பயன்படுத்திய பழஞ்சொல் என்ற இச்சொல்லைத் தான் மலையாள மக்கள் பழமொழி என்ற தமிழ்ச்சொல்லுக்கு ஈடாக பழஞ்சொல் என்ற சொல்லினை பயன்படுத்துகின்றனர்.

### 1.2.10 உலகமொழி

குருபாததாசர் இயற்றிய குமரேச சதகத்தில் பழமொழியை உலகமொழி என்று கூறுகின்றார்.

*'உழவன்இல் லாமல்ஊர் அழியாதெனச் சொலும்*
*<u>உலகமொழி</u> நிசம் அல்லவோ'*[20]

என்னும் பாடலில், உலகமொழி என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒருவர் மட்டுமே வழங்காது உலகத்தவரால் ஏற்றுக் கொள்ளப்பட்டதும், வழங்கி வருவதுமான உலகமொழியாக பழமொழி திகழ்வதை குமரேச சதகத்தின் மூலம் அறிய முடிகிறது.

### 1.2.11 முதுரை, வழக்கு, பழமொழி

கம்பராமாயணத்தில் கம்பர் பழமொழியைக் குறிக்க மூதுரை, வழக்கு, பழமொழி போன்ற பல சொற்களைக் கையாண்டுள்ளார் என்பதை கீழ்வருமாறு காணலாம்.

*'ஏதி ஏந்திய தடக்கையர் பிறை எயிறு இலங்க*
*மூதுரைப் பெருங்கதைகளும் பிதிர்களும் மொழிவார்'*[21]

எனும் பாடலில் மூதுரை என்றும்,

*'தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம்*
*மருண்ட புன்மையை மாற்றுவர் எனும் இது வழக்கே'*[22]

எனும் பாடலில் வழக்கு என்றும்,

*'பாம்பு அறியும் பாம்பின் கால் என*
*மொழியும் பழமொழியும் பார்க்கிலீரோ'*[23]

எனும் பாடலில் பழமொழி என்றும் கம்பர் குறிப்பிட்டுள்ளார்.

மேலும், டாக்டர்.வ.பெருமாள் அவர்கள், "பழமொழியைக் குறிக்க முப்பத்தி நான்கு சொற்கள் இருப்பதாகக் கூறுகிறார். அவையாவன,

1. பழகுமொழி, 2. தொன்னெறி மொழி, 3. முதுமொழி, 4. முதுசொல், 5. தொன்றுபடுகிளவி, 6. தொன்றுபடு மொழி, 7. பழமொழி, 8. வாய்மொழி, 9. அறம், 10. நெடுமொழி, 11. பல்லவையோர் சொல், 12. பண்டையப் பழமொழி, 13. சொலவு, 14. மூதுரை, 15. பழஞ்சொல், 16. மூத்தோர் சொல் வார்த்தை, 17. வழக்கு, 18. உரை,

19. பழைய நெறியனாய் வரும் சொல், 20. பழவார்த்தை, 21. உலகமொழி, 22. உபகதை, 23. சொலவடை, 24. சுலோகம், 25. வசனம், 26. எழுதா வாக்கியம், 27. வாய்மொழி இலக்கியம், 28. எழுத்தாக்கிளவி, 29. கேள்வி, 30. சுருதி, 31. நீதிமொழி, 32. முதுமை, 33. மொழிமை, 34. முதுசொல் போன்ற சொற்கள் பழமொழியைக் குறிக்கக் கூடியவையாகும்"[24].

பழமொழிக்கு வழங்கி வரும் பல்வேறு சொற்கள் குறித்து தே. லூர்து அவர்கள் குறிப்பிடும் பொழுது,

"முதுசொல், முதுமொழி, பழமொழி, பழஞ்சொல், மூதுரை, என்னும் சொற்கள் பழமொழியைச் சுட்டும் இலக்கிய வழக்குகளாகும். நெல்லை மாவட்டத்தில் பழமொழியைச் 'சொலவடை' என்றும், பழைய இராமநாதபுரம் மாவட்டத்தில் 'ஒவகதை' என்றும், சேலம் மாவட்டத்தில் 'சொலவாந்தரம்' என்றும், கோவை மாவட்டத்தில் 'ஒப்புத்தட்டம்', 'ஒவகதை' என்றும் பழமொழியைப் பலவாறு குறிப்பிடுகின்றனர். இத்தொடர்கள் அவ்வப்பகுதியார் பழமொழியை எவ்வாறு கருத்தாக்கம் செய்கின்றனர் என்பதை உணர்த்தும்"[25] என்கிறார்.

"பழமொழியினை இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்த ஆச்சிமார்கள் 'நாட்டு வாக்கியம்', என்றும், சிற்சில இடங்களில் 'சந்தை வாக்கியம்' என்ற சொல்லாலும் கூறுகின்றனர்"[26]. மட்டுமின்றி, "மலையாளத்தில் பழமொழியைக் குறிக்க 'பழஞ்சொல்' என்றும், தெலுங்கில் 'தாதுடி' என்றும், கன்னடத்தில் நாண்ணுடி என்றும், ஆங்கிலத்தில் 'Proverb' என்றும் அழைக்கின்றார்"[27].

மதுரை விருதுநகர் பகுதிகளில் பழமொழியை 'சொலவடை' என்று கூறுகிறார்கள். சொலவடை என்பது அடைமொழியாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். கோவையில் பழமொழியை 'சுலோகம்' என்று கூறுகிறார்கள் என அறிய முடிகின்றது.

"முதுமொழி, தொல்கிளவி, மூதுரை, காட்டுவாக்கியம், வழக்குச் சொல், நீதிமொழி, பெரியவன் சொல், பெரியவன் பழமொழி, பழைய வாக்கு, வழக்குச்சொல்,

பழவார்த்தை, வையகத்தார் வழக்கு, முதுசொல், பழஞ்சொல், முன்சொல், உலகநீதி, வழக்கு என்பன தமிழில் பழமொழிக்கு உள்ள மறுபெயர்கள்"[28] என்கிறார் சௌந்தரபாண்டியன் அவர்கள்.

மேற்கூறப்பட்ட கருத்துக்களின் மூலம் தமிழ் நாட்டின் பல மாவட்டங்களில் பழமொழி என்ற சொல் எவ்வாறெல்லாம் வழங்கப்பட்டு வருகிறது என்பதை அறியமுடிகிறது. மட்டுமின்றி இலக்கண இலக்கியங்களில் பழமொழி என்ற சொல் பல்வேறு வடிவில் வழங்கி வந்துள்ளமையும், மக்கள் மத்தியில் அவை பெற்றுள்ள செல்வாக்கினையும் அறியமுடிகிறது. பழமொழி என்னும் சொல் பலவிதமாகக் கூறப்பட்டாலும் பழமொழி என்றே தான் புழக்கத்தில் அனைவராலும் பயன்படுத்தப்படுகின்றது என்பதை அறியமுடிகிறது.

## 1.3 பழமொழியின் தோற்றம்

பழமொழி யாரால், எப்பொழுது, எந்த சூழ்நிலையில் தோற்றம் பெற்றது என்று யாராலும் ஆராய்ந்து அறுதியிட்டு உறுதியாகக் கூற முடியாது. நம் முன்னோர்கள் அனுபவத்தால் தம் வாழ்வில் கண்ட அனுபவங்களை வைத்து பழமொழிகளை உருவாக்கியிருக்கலாம். அதன் மூலம் பல நல்ல பயன்களை பெற்றிருப்பார்கள். தவறுகள் நேராமல் இருக்கும் என்பதற்காகவும் பழமொழிகளைக் கூறியிருப்பார்கள். இவ்வாறு பல்வேறு இடங்களிலும், பல்வேறு சூழ்நிலைகளிலும், பல்வேறு காலங்களிலும் தோன்றியவையே பழமொழிகளாகும்.

பழமொழிகளின் தோற்றத்தைக் குறித்து மு.பொன்னுசாமி அவர்கள் குறிப்பிடுகையில், "பழமொழிகளின் தோற்றத்தை ஆய்வு செய்தால் வரலாற்றுக்கும் அப்பாற்பட்ட காலத்திலும் இம்மொழி வழங்கப்பட்டு வருகின்ற காரணத்தினால் இன்ன காலத்தில் இன்ன பகுதியில் தோன்றியது என உறுதியாகக் கூறமுடியாது"[29] என்கிறார்.

சில பழமொழிகளின் தோற்றத்தைக் குறித்து வ. பெருமாள் அவர்கள் குறிப்பிடும் பொழுது,

"நம் வரலாற்றறிவுக்கு உட்பட்ட பழமொழிகளின் தோற்றத்தை ஆராயுங்கால் அவை தோன்றிய இடம், காலம், சூழ்நிலை ஆகியவற்றை உறுதியாகக் கூறலாம். நம் வரலாற்றறிவுக்கு அப்பாற்பட்ட பழமொழிகளாக இருப்பின் அவற்றின் தோற்றம், வரலாறு ஆகியவை குறித்து முடிவுக்கு வருதல் கடினமாக இருக்கும். பழமொழியின் தோற்றத்தைக் காலம், இடம், சூழ்நிலை ஆகிய மூன்றின் அடிப்படையில் ஆராயலாம். சில பழமொழிகளுக்கு இம்மூன்றையும், சிலவற்றிற்கு இரண்டையும், இன்னும் சிலவற்றிற்கு ஒன்றையும் அறிந்து கொள்ளலாம். இம்மூன்றில் ஒன்றுகூட அறிய முடியாத பல பழமொழிகள் இருக்கின்றன"[30].

"பழமொழி தோன்றிய காலம் கூறுவது கடினமாக இருந்தாலும் கூட, குறிப்பிட்ட சில பழமொழிகளுக்கு காலம் கூற முடியும் என்பதை,

"சாராயம் குடிக்கையிலே ஒரு மாறாயமா?" இந்தப் பழமொழி சாராயம் உலகில் கண்டுபிடிக்கப்பட்ட காலத்துக்குப் பின் தான் வழங்கியிருக்க இயலும்.

*குண்டு பட்டுச் சாகாதவன் வண்டு கடித்துச் செத்தானாம்*

இந்தப் பழமொழி உலகில் வெடிமருந்து கண்டுபிடிக்கப்பட்டதன் பின் தானே தோன்றியிருக்க இயலும்"[31]. என்னும் கேள்வியினைக் கேட்டு பதிலையும் கூறி விளக்கிச் சென்றுள்ளார் வ.பெருமாள் அவர்கள்.

இவ்வாறு சில பழமொழிகளுக்கு மட்டுமே காலத்தை அறுதியிட்டுக் கூறமுடியும். ஆனால் பல பழமொழிகளுக்குக் காலத்தை அறுதியிட்டுக் கூற சான்றுகள் இல்லாததால், அவை எக்காலத்தில் தோன்றின என்று கூற இயலாது.

## 1.4 பழமொழியின் வளர்ச்சி

ஒருவர் தவறு செய்யும் பொழுது, அந்தத் தவறினை திருத்திக் கொள்வதற்காகக் கூறும் பழமொழியானது, அவர் எச்சூழ்நிலையில் முன்னோர்களின் மூலம் தன் தவறினைத் திருத்திக் கொள்ள பழமொழியினைச் செவிப்புலன் வழியாகக்

கேட்டாரோ, அதே சூழ்நிலையில் தான் பிறருக்கு அவர் கூறுவர். இவ்வாறு ஒவ்வொருவரின் மூலம் பழமொழிகள் பரவி பல இடங்களுக்குச் சென்று பழமொழி வளர்ச்சி பெறவும் செய்கின்றது என்பதை,

"ஒவ்வொரு பழமொழியும் அடுத்தடுத்த தலைமுறைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இதனால் ஒரு நிலையில் மட்டுமல்லாமல், ஓர் இடத்தில் மட்டுமின்றிப் பரவலாகப் பழமொழிகள் வளர்ச்சி பெறுகின்றன. பழமொழிகள் எதற்காக வளர்ச்சியடைகின்றன எனின் அடுத்த தலைமுறையின் வாழ்வியலைச் செம்மைப்படுத்தவே எனலாம்"[32] என்று பழமொழி வளர்ச்சியின் பயனை தெரிவிக்கிறார் பொன்னுசாமி அவர்கள்.

பழமொழிகளின் வளர்ச்சியின் வகையைக் குறித்து வ.பெருமாள் அவர்கள் குறிப்பிடும் பொழுது,

"வளர்ச்சி இருவகைப்படும். அவையாவன, எண்ணிக்கை வளர்ச்சி (Growth), பண்பு வளர்ச்சி (Development). முன்னையது புறவளர்ச்சி அல்லது அளவு வளர்ச்சியின் பாற்படும். பின்னையது அக வளர்ச்சி அல்லது குணவளர்ச்சியின் பாற்படும். பழமொழிகளை ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் இவ்விருவகை வளர்ச்சியையும் காணலாம்"[33] என்று வகைப்படுத்துகிறார்.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே பழமொழி பல வளர்ச்சி நிலைகளை அடைந்துள்ளது. பழமொழிக்கென்று தனியானதொரு துறையும், ஆய்வுகளும் உருவாகி வருகின்றன. "தற்பொழுது நாட்டார் வழக்காற்றியலின் ஒரு தனிப்பெரும் பிரிவாகப் பழமொழியியல் கிளைவிட்டுள்ளது. கிரேக்க மொழியில் பழமொழி என்ற சொல்லுக்கீடாக "Paroimiad" என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். இதனடிப்படையில் "Paroemiology" என்ற துறை உருவாக்கப்பட்டுள்ளது. இத்துறையை வளர்த்தவர்களில் எஃப்.சி. பார்ட்லட் (F.C. Bartlett) என்ற அமெரிக்கர் மிக முக்கியமானவர். இவர் 94 ஆண்டுகள் வாழ்ந்தார். வாழ்நாளின் இறுதிவரை பழமொழி ஆய்விலேயே ஈடுபட்டார். அடுத்துக் குறிப்பிடத்தக்கவர் காலஞ்சென்ற கலிஃபோர்னியா

பெர்க்லி பல்கலைக்கழக பேராசிரியர் ஆர்ச்சர் டேலர் (Archer Tayler) 82 ஆண்டுகள் பழமொழி ஆய்வில் ஈடுபட்டார். இவரின் தூண்டுதலால் Proverbium என்ற இதழ் பின்லாந்திலிருந்து வெளிவந்தது"[34] என தே. லூர்து அவர்கள் குறிப்பிடுவதிலிருந்து பழமொழிகள் பற்றிய ஆய்வுகள் தற்காலத்தில் பெருகி வருகின்றன என்பதனை அறியலாம். இது பழமொழிகளின் வளர்ச்சியைக் காட்டுகிறது.

## 1.5 தொல்காப்பியத்தில் பழமொழி

இலக்கியம் தோன்றுவதற்கு முன்பே பழமொழிகள் மக்களால் வழங்கப்பட்டு வந்திருக்கின்றன என்பதை தொல்காப்பியத்தின் வாயிலாக அறிய முடிகிறது. தொல்காப்பியர் பழமொழி என்ற சொல்லிற்குப் பதிலாக முதுசொல், முதுமொழி என்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளமையை முன்பு சுட்டப்பட்டது.

*'அங்கதம் முதுசொல்லோடு அவ்வேழ் நிலத்து*
*ஏது நுதலிய முதுமொழி என்ப'*[36]

எனக் கூறுகிறார். தமிழில் முன் முதலில் பழமொழிக்கு இலக்கணம் வகுத்தவர் தொல்காப்பியர் ஆவார். பழமொழி என்பது,

*'நுண்மையும் சுருக்கமும் ஒளியும் உடைமையும்*
*மென்மை என்றிவை விளங்கத் தோன்றிக்*
*குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ*
*ஏது நுதலிய முதுமொழி என்ப'*[36]

எனும் நூற்பாவின் மூலம் பழமொழிக்கான இலக்கணத்தைத் தொல்காப்பியர், பழமொழி என்பது ஒரு கருத்தை உணர்த்த வேண்டும். அக்கருத்து காரணத்துடன் பொருந்தியதாகவும் அறிவுக்கு ஏற்றதாகவும் அமைதல் வேண்டும். அதில் நுட்பம், சுருக்கம், விளக்கம், எளிமை ஆகிய நான்கு இயல்புகளும் பெற்றிருத்தல் வேண்டும் என விளக்கமளிக்கிறார். இதனை, தமிழில் பழமொழி

இலக்கியம் எனும் நூலை எழுதிய சௌந்தரபாண்டியன் அவர்கள் விளக்கும் போது, ஏழு கூறுகள் பழமொழியில் இருக்க வேண்டும் என்று தொல்காப்பியர் கூறுவதாக விளக்குகின்றார்[37].

1. நுண்மை
2. சுருக்கம்
3. ஒளி
4. உடைமை
5. எளிமை
6. குறித்த பொருளை முடித்தல்
7. ஏது நுதலுதல்

இவற்றில் "நான்காவதாக வந்த உடைமை என்பதைப் பேராசிரியர் உள்ளிட்ட உரையாசிரியர்கள் எவரும் தனிக்கூறாகக் கொள்ளவில்லை. அவர்கள், 'ஒளியுமுடைமையு' என்பதற்கு 'விழுமிய' என்ற ஒரே பொருளைக் கொண்டனர்.

அதேபோல, நூற்பாவில் 'மென்மையும்' என்றே உள்ளது. ஆனால் பேராசிரியர் உரையிலேயே 'எளிதாகி' என்ற ஒரு பொருள் உள்ளது. எனவே, மென்மை என்பது 'மெண்மை' எனப் பதிக்கப்படல் வேண்டும் எனக் கருதலாம். 'உடைமையும் எண்மையும்' என்று பிரிபடும்போது, எண்மை – எளிமை ஆதலால், பேராசிரியர் உரையும் பொருந்திடக் காணலாம்" என ஒளியுடைமைக்கும் மென்மைக்கு விளக்கமளித்துள்ளார்.

### 1.5.1 நுண்மை

நுண்மை என்பது கூர்மை என்றும் நுட்பமாகப் பொருளை உணர்த்துவது எனும் பொருளையும் குறிக்கும். பழமொழி என்பது அனைவரும் அறிந்த பொருளை மட்டும் கூறாது, நுட்பமான பொருளையும் எடுத்துக் கூறுவதாகவும் இருக்க வேண்டும்.

### 1.5.2 சுருக்கம்

ஒரு கருத்தைச் சொல்லும் பொழுது சுற்றி வளைத்துக் கூறாமல் சுருக்கமாகக் கூற வேண்டும். பழமொழியில் இச்சொல் தேவையற்றது என்று கூற முடியாதவாறு அடர்ந்த பொருளுடைய சொற்களைக் கொண்டு சுருக்கமாக அமைத்தல் வேண்டும்.

### 1.5.3 ஒளி

பழமொழியின் பொருளில் ஐயம் ஏற்படாதவாறு தெளிவாகவும் விளக்கமாகவும் அமைந்து அறியாமை இருளை நீக்கி, தெளிவு என்னும் ஒளியை ஏற்றக் கூடியதாகவும் இருக்க வேண்டும். இங்கு ஒளி என்பது தெளிவு என்னும் பொருளில் வந்துள்ளது.

### 1.5.4 உடைமை

உடைமை என்னும் சொல் பழமை என்பதனைக் குறிக்கும் சொல்லாகும். ஒருவர் கூறும் கருத்து பலரால் உரைக்கப்படும் பழமையாகி பலரது உடைமையாகி பின்பு பழமொழியாகின்றது. பழமொழி என்பதனைப் பண்புத்தொகையில் குறிப்பிடும் பொழுது பழமையான மொழி எனப் பொருள்படும். பலரது பயன்பாட்டில் உடைமையாகி பழமையாகி நின்ற மொழியே பழமொழி என்கிறார் தொல்காப்பியர்.

### 1.5.5 எளிமை

எளிமை என்பது மக்கள் மொழி. அது எளிதாக இருந்தால் தான் கூறிய உடனே பொருளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும். பழக்கமான சொற்களைக் கொண்டிருத்தல் வேண்டும். நிகண்டையும், அகராதியையும் புரட்டிப் பார்த்துப் பொருள் அறிந்து கொள்ளக் கூடிய கடுமையான, வழக்கிறந்த சொற்களைக் கொண்டதாக அமைதல் கூடாது என்பதையே எண்மை வேண்டும் என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

### 1.5.6 குறித்த பொருளை முடித்தல்

பழமொழி என்பது ஒரு குறிப்பிட்ட பொருளை மட்டும் நுட்பமாக எடுத்துக் கூறுவதாக அமைதல் வேண்டும். ஒரு குறிப்பிட்ட சூழலில் ஒரு பழமொழியைக் கூறும்போது, அப்பழமொழியானது சொல்லக் கருதியதைத் துல்லியமாக எடுத்துக் கூறுவதாக அமைதல் வேண்டும். குழப்பம் ஏற்படக் கூடாது.

### 1.5.7 ஏது நுதலுதல்

'ஏது' என்னும் சொல் 'ஆதாரம்' என்னும் பொருளைக் குறிப்பதாகும்.

ஒருவன் தான் சொல்லிய கருத்திற்கு ஆதாரமாக விளங்குவதற்கு பழமொழியைப் பயன்படுத்துகின்றான். பழமொழியைப் பயன்படுத்துவதனால் தான் கூறுகின்ற கருத்து உண்மை என்பதை உணர்த்துகின்றான். எனவே பழமொழிகள் கருத்துக்களுக்கு ஏதுவாக ஆதாரமாக நிற்கின்றன.

தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் பழமொழிகளுக்கென்று இலக்கணம் வகுத்திருப்பது, அவரது காலத்திற்கு முன்பே பழமொழிகள் வழங்கி வந்துள்ளதையும், வாய்மொழி இலக்கியமாகக் கருதப்படும் பழமொழி ஏட்டிலக்கியங்களில் இடம்பெற்று தொல்காப்பியர் இலக்கணம் படைக்கும் அளவிற்குச் சிறப்பு பெற்றிருந்துள்ளது என்பதையும் மேற்கூறப்பட்ட கருத்துக்களின் மூலம் அறியலாம்.

## 1.6 பழமொழி பற்றிய கருத்தாக்கங்கள்

பாமர மக்களின் இலக்கியம் என்று சொல்லக்கூடிய பழமொழியை வரையறுக்க முடியாததென்றும், அதற்கு வரையறை தேவையில்லை என்றும் சிலர் கூறுகின்றனர். இருப்பினும் பழமொழிக்கு என்று சில வரையறைகள் உள்ளன என்று சில அறிஞர் பெருமக்கள் வரையறையைக் கூறியுள்ளனர்.

- ரிச்சார்டு டார்சன் என்பவர் "பழமொழியானது எளிதில் கவனிக்கக் கூடிய, சேகரிக்கக் கூடிய. தொன்மை வாய்ந்ததாக இருப்பினும் எளிதில் புரிந்து கொள்ளக் கடினமானது"[38] என்கிறார்.

- பேராசிரியர் சாலை இளந்திரையன் என்பவர் "பழமொழி என்றால் என்ன என்பது எல்லோருக்கும் தெரியும். ஆயினும் இன்னது தான் பழமொழி என்று வரையறுத்து அதற்கு ஒர் இலக்கணம் கூறுவது மிகமிகக் கடினம்"[39] எனக் கூறுகிறார்.

- சான்சி. மெசஞ்சர் என்பவர் "பழமொழி என்பது ஆப்பிரிக்க மக்களிடையே வழக்குகளில் சட்டங்களைப் போல பயன்படுத்தப்படுகின்றன" என்கிறார்.

- இராவும் என்பவர் "ஆப்பிரிக்க நாட்டு மக்கள் பழமொழிக்குச் சிறப்பான ஓரிடம் நல்கியுள்ளனர். ஆப்பிரிக்காவிலுள்ள சாகா இனக்குழு மக்கள் நான்கு பெரும் உடைமைகளைக் கொண்டுள்ளனர். நிலம், ஆடு, மாடுகள், நீர் பழமொழிகள் என்பவையே அவை"[40] என்று ஒரு தகவலாளி தம்மிடம் தெரிவித்ததாகக் கூறுகிறார்.

- ஜான் லாசரஸ் என்பவர் "பழமொழி என்னும் சொல்லே பழமொழி பற்றிய சிறந்த வரையறையாக அமைந்துள்ளது என்கிறார். பழமொழி என்னும் சொல்லே மிகப் பழமையானவற்றை உணர்த்துவதாகும். பலரது அறிவையும் ஒருவரது நுண்ணுணர்வையும் அறிய முடியும் அறிவின் சுருக்கம்"[41] என்கிறார்.

- துர்கா பகவத் என்பவர் "பழமொழி என்பது உண்மையைச் சிறிய வாக்கியத்தின் மூலம் சுருக்கிக் கூறுவதாகும். அது முழுமையாக இல்லாவிடினும் அதை விளக்கிக் கூறும் போது முழுக்கருத்தும் வெளிப்படும்"[42] என்கிறார்.

- ரே. பிரௌன் என்பவர் "பழமொழிகள் மக்களது வாழ்வோடு வாழ்வாகப் பின்னிப் பிணைந்து விட்டன. பழமொழி மூலம் மக்களது பண்பாட்டையும் நாகரீகத்தையும் அறிந்து கொள்ளலாம். சமூகத்தின் அனைத்து நிலைகளிலும் உள்ள மக்களின் பண்பாட்டை அறியத் துணைபுரிகிறது"[43] என்கிறார்.

- ரோஜர் ஆபிரஹாம் என்பவர் "பழமொழிகள் நடைமுறையில் இருந்து வரும் சிக்கல்களை அணுகுவதற்கு முழுமையான அறிக்கைகள்"[44] என்கிறார்.
- மு.ஜோதிமணி என்பவர் "பழமொழியின் வடிவத்தையும் உள்ளீட்டையும் நோக்கும் போது 'சுருங்கை இலக்கியம்' என அழைத்தலும் இதற்குப் பொருத்தமே"[45] என்கிறார்.
- உளவியல் மேதையாகிய C.G.யங் என்பவர் "பழமொழியனைத்தும் அகமனதின் எதிரொலி எனவும், அது என்றும் மாறாத தன்மையினையுடையது"[46] என்றும் கூறுகிறார்.
- சுகி. என். சுப்ரமணியம் என்பவர் "ரோஜாவிலிருந்து அத்தர் பிறந்தது போன்று வாழ்வின் சிறப்பிலிருந்து துள்ளித் தெறித்த ரசம் தோய்ந்த மாதுளை முத்துக்கள் பழமொழிகள்"[47] என்கிறார்.
- "அறிவு வளர்ச்சியிலே பிறந்து சுருக்கம், தெளிவு, பொருத்தம் ஆகிய பண்புகளால் என்றும் இறவாமல் இவ்வுலகில் வாழ்கின்றன என்கிறார் அரிஸ்டாட்டில் எனும் பேரறிஞர். வாழ்க்கை அனுபவ அடிப்படையில் எழுந்த குறுகிய அமைப்புடையது என்கிறார் ஜெர்மன் நாட்டுப் பேரறிஞர் செல்வந்தே அவர்கள். டிரென்ச் (R.E. Trench) அவர்கள் "பழமொழிகளும் படிப்பினைகளும்" என்ற நூலில் பழமொழி ஒரே மூச்சில் சொல்லக்கூடியதாகவும் சுருக்கமாகவும் செறிவாகவும் கூர்மையாகவும் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தக்கூடியதாகவும் இருக்க வேண்டும் என்கிறார். இவர் கூறும் வரையறை ஏறத்தாழ தொல்காப்பியர் கூறும் வரையறை போன்று உள்ளது எனலாம். ஆலன் டண்டிஸ் (Alan Dundes) அவர்கள் அமைப்பியல் அடிப்படையில் வரையறை கூறுகிறார். ஒவ்வொரு பழமொழியும் விளக்கக்கூறு (Descriptive Element) ஒன்றினைப் பெற்றிருக்கும். அவ்விளக்கக்கூறு தலைப்பையும் (Topic), முடிவுரை (Comment)யையும் பெற்றிருக்கும். இவ்வரையறை மூலம் ஒரு சொல் பழமொழிக்கு (One Word Proverb) வாய்ப்பில்லை"[48] என்கிறார்.

பழமொழிகள் உண்மை, வரலாறு, அறிவியல், கற்பனை, நாகரிகம், பண்பாடு, பொருளாதாரம் போன்றவற்றின் கலவையாகும். ஒரு சமுதாயத்தின் சிறந்த சிந்தனைக்கும் பேச்சாற்றலுக்கும் எடுத்துக்காட்டாக பழமொழிகள் அமைகின்றன. கடுகைப் போன்ற காரமானதாக இருந்தாலும் புதுக்கவிதையைப் போல் மிளிர்கிறது. நாட்டுப்புற மக்கள் தங்கள் உரையாடலின் ஆற்றலை வெளிப்படுத்த பழமொழிகளைச் சேர்ப்பது போல், அறிஞர்கள் தங்கள் இலக்கியங்களில் ஆக்கத்தை வெளிப்படுத்தப் பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர்.

பழமொழி என்பது "ஒரு சமுதாயம் பின் வரும் சந்ததியினருக்கு அமைத்துச் சென்ற வழிகாட்டி நிலையங்கள் என்று குறிப்பிடலாம்"[49] என்கிறார் மு.அண்ணாமலை அவர்கள்.

வ.பெருமாள் அவர்கள், "பழமொழி என்பது தூய தமிழ்ச்சொல் என்பதை அதில் உள்ள சிறப்பு 'ழ' கரங்கள் உணர்த்துகின்றன. இரத்தின வியாபாரி இரத்தினத்தை எடுத்து துடைத்துப் பார்க்கும் போதெல்லாம் அதன் அழகும் ஒளியும் அவர் உள்ளத்தை ஊடுருவி மகிழ்விப்பது போல சில பழமொழிகள் படிக்கப் படிக்க மனத் தெளிவையும் இன்பத்தையும் தருகின்றன"[50].

கிளாரா என்பவர், "பழமொழிகள் சிந்தனைக்கு விருந்தளிக்கின்றன. படிக்கப் படிக்க மனத் தெளிவையும் இன்பத்தையும் தருகின்றன"[51] என்கிறார்.

வரலாற்று ஆராய்ச்சி நாணயங்களும், கல்வெட்டுக்களும் எவ்வளவு தூரம் இன்றியமையாததோ அந்த அளவிற்குப் பழமொழிகளும் முக்கியமானவை என்பதை நாம் நன்றாக உணர்ந்து கொள்ள வேண்டும். பழமொழிகள் சமூக வாழ்க்கையின் இருண்ட பகுதிகளை உணர்த்துவதோடு மட்டுமல்லாமல் பழமையான நம்பிக்கைகளையும், கொள்கைகளையும், வரலாற்றினையும் மனித உணர்வுகளையும் காட்டுவனவாக உள்ளன.

## 1.7 பழமொழி பற்றிய அகராதிகளின் கருத்துக்கள்

பழமொழியைப் பற்றி ஆசிரியர்களின் கருத்துக்கள் மட்டுமின்றி அகராதிகளும் பல்வேறு கருத்துக்களை முன் வைக்கின்றன.

"வாழ்வை ஊன்றி கவனித்து உணர்ந்த உண்மைகளின் துணுக்குகளே பழமொழிகள்"[52]

"பழஞ்சொல்லே பழமொழி"[53]

"மக்களிடையே நீண்ட காலமாக வழங்கி வருவதும் பேச்சில் ஆதாரமாகவோ, உதாரணமாகவோ காட்டப்படுவதுமான கருத்துத் தொடர்"[54]

"ஒரு நாட்டின் பழக்கவழக்கங்கள், சாதி சமயம், தொழில், அன்பு, பண்பு, காதல் முதலிய எல்லாவகை பாகுபாடுகளையும் கண்டறிந்தற்கேற்ற கருவி பழமொழி என்றால் மிகையாகாது"[55]

"பழைய மொழியே பழமொழி. எளிமையும், இனிமையும் நிறைந்தவை இவை. பழமொழிகளைக் கொண்டு மக்களின் நாகரிகத்தையும், பண்பாட்டையும் நன்கு அறியலாம்".[56]

"ஓர் உண்மையையோ அல்லது ஞானத்தையோ குறுகிய வாக்கியத்தில் கூறுவதாகும். நீண்ட காலம் மக்கள் பயன்படுத்தும் பழமொழிகள் தான் பழமொழி என்று அழைக்கப்படுகிறது."[57]

மேற்கூறப்பட்ட வரையறையைப் போன்று பல நாட்டிலுள்ள அறிஞர்களும் பழமொழிக்கான வரையறையைக் கூறியுள்ளனர். இக்கருத்துக்களின் அடிப்படையில் பழமொழியை ஒரு வரையறைக்குள் அடக்க முடியாது என்பதை உணர முடிகின்றது.

அறிஞர்களும், அகராதிகளும் பழமொழி பற்றிய பல கருத்துக்களை விளக்குவதைப் போல பிற நாட்டறிஞர்களும் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

இங்கிலாந்து நாட்டினர், "அறிவின் குழந்தைகள் பழமொழிகள்" என்றும், அயர்லாந்து நாட்டினர், "பழமொழிக்கு மேற்சொல் இல்லையாகையால் அதனை யாரும் மறுக்க முடியாது" என்றும், ஸ்காட்லாந்து நாட்டினர், "மக்கள் எப்படியோ அப்படியே பழமொழிகள்" என்றும், பிரான்சு நாட்டினர், "திருடனையும் அறிவாளியாக்க வல்லது" என்றும், இரஷ்யா நாட்டினர் "பழமொழி அறிவிலிருந்து வருகிறதென்றும் அவற்றை மக்கள் புழங்கும் நாணயங்கள் என்றும் பாராட்டுகிறது" என்றும், டச்சு நாட்டினர், "நாள்தோறும் அனுபவம் பெற்ற குழந்தைகளே" என்றும், ஸ்பெயின் நாட்டினர், "பழமொழிகளைக் குட்டிச் சுவிசேடம், இறைவனுடைய குரல் பழமொழி" என்றும், சீன நாட்டினர், "பொதுமக்களின் பேச்சு" என்றும், அரேபிய நாட்டினர், "உணவுக்கு உப்பு எப்படியோ பேச்சுக்குப் பழமொழி அப்படி" என்றும் கூறியுள்ளனர்"[58].

## 1.8 நாட்டுப்புற இலக்கியத்துள் பழமொழி

இலக்கியங்களை வாய்மொழி இலக்கியம், ஏட்டிலக்கியம் என இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். இதில் நாட்டுப்புறக் கலைகள், பாடல்கள், கதைகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், தெய்வங்கள், விழாக்கள், விளையாட்டுக்கள், மருத்துவம் போன்றவை வாய்மொழி இலக்கியம் என்பதில் அடங்கும்.

நாட்டுப்புற இலக்கியம் என்பது நாட்டுப்புறவியலாளரால்,

- ❖ நாட்டுப்புறப் பாடல்கள் (Folk Songs)
- ❖ நாட்டுப்புறக் கதைகள் (Folk - Tales)
- ❖ நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் (Ballads)
- ❖ நாட்டுப்புறப் பழமொழிகள் (Proverbs)
- ❖ நாட்டுப்புற விடுகதைகள் (Riddles)

என்று வகைப்படுத்தப்படுகின்றது. நாட்டுப்புற இலக்கியத்திற்கென்று சொல்லப்படும் தன்மைகளைப் பழமொழி பெற்றிருப்பதால் நாட்டுப்புற இலக்கிய வகையுள் வைக்கப்பட்டுள்ளது. மேலும், இலக்கிய ஆசிரியரான இராணி எலிசபெத் என்பவர், "நாட்டுப்புறப் பாடல்களுக்கான இயல்புகள் பழமொழிகளுக்கும் பொருந்தும் என்கிறார்.

1. ஆசிரியர் பெயரின்மை
2. வாய்மொழியாகப் பரவுவது
3. மரபு வழிப்பட்டது
4. திரிபடையக்கூடிய தன்மையது
5. வடிவ அமைப்புக்கு உட்படுவது

பழமொழிகள் இக்கூறுகளைக் கொண்டிருப்பதால் இது நாட்டுப்புற இலக்கியமே என்கிறார்"[59].

## 1.8.1 ஆசிரியர் பெயரின்மை

பழமொழி இலக்கியம் காலங்காலமாக மக்களால் வழங்கப்பட்டு வரும் வாய்மொழி இலக்கியம் ஆகும். பல்வேறு சூழல்களில், பல்வேறு மக்களால், பல காலத்தில் பல இடத்தில் பேசப்பட்டு வந்த இலக்கியமாதலால் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஆசிரியர் இல்லை. இந்தத் தன்மை நாட்டுப்புற இலக்கியத்திற்கே உரியது. ஆதலால் பழமொழி இலக்கியம் நாட்டுப்புற இலக்கியத்தின் ஓர் உட்பிரிவுதான் என்பதைத் தெளியலாம்.

## 1.8.2 வாய்மொழியாக பரவுவது

பழமொழி எழுத்து வடிவில் இல்லாமல் வாய்மொழி இலக்கியமாகவே பன்னெடுங்கலமாக முன்னோர்களால் வழங்கப்பட்டு வருகிறது. ஓரிடத்தில் இருந்து மற்றோரிடத்திற்குக் கேட்டவர் கூறுவதை வைத்தே பரவக் கூடியது. இவ்வியல்பு நாட்டுப்புற இலக்கியத்திற்கே உரித்தான இயல்பாகும்.

## 1.8.3 மரபு வழிப்பட்டது

மரபு வழிப்பட்ட தன்மையைக் கொண்டது பழமொழி. தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளமையைப் பார்க்கும் பொழுது பல்லாண்டுகளுக்கு முன்பே

முன்னோர்களால் வழங்கப்பட்ட வாய்ச்சொல் என்றும், வழிவழியாக சந்ததிகளுக்குத் தொடர்ந்து வந்து இன்றும் அனைவராலும் வழங்கப் பெறுவது பழமொழி. ஆதலால் மரபுத் தன்மை பழமொழிகளில் இயல்பாக அமைந்து விடுகின்றன.

### 1.8.4 திரிபடையக்கூடிய தன்மையது

காலமாற்றத்திற்கேற்ப வாய்மொழி இலக்கியமான பழமொழியும் திரிந்து கொண்டே வருகிறது. காலம், இடம், மக்கள், சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு சொல்லிலும் பொருளிலும் மாற்றம் ஏற்படுகிறது.

### 1.8.5 வடிவ அமைப்புக்கு உட்படுவது

சுருங்கிய வடிவமைப்பைக் கொண்ட பழமொழிகளின் வடிவமைப்பு ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் அமைந்திருக்கும். ஒரு தலைப்பையும், ஒரு முடிவுரையையும் கொண்டது பழமொழி என்று அமெரிக்க நாட்டுப்புறவியல் அறிஞர் ஆலன் டண்டிஸ் அமைப்பியல் அடிப்படையில் பழமொழிக்கு வரையறை கொடுத்துள்ளார். இதன் மூலம் ஒரு சொல் பழமொழி இல்லையென்றும், இரண்டு சொற்கள், மூன்று சொற்கள், நான்கு சொற்கள் கொண்டவையே பழமொழிகள். ஓரடி, இரண்டடி, மூன்றடி, நான்கடி வடிவம் பெற்றுப் பழமொழிகள் விளங்குகின்றன.

இந்த இயல்புகள் அனைத்தும் நாட்டுப்புறவியலுக்கான பொது இயல்புகள். இவை நாட்டுப்புற இலக்கியத்தின் ஒரு பகுதியான பழமொழிக்கும் பொருந்தக் கூடியனவாகும் என்கிறார்.

## 1.9 பழமொழியின் தனித்தன்மைகள்

பழமொழியில் கீழ்காணும் தன்மைகள் இடம் பெற்றிருத்தல் வேண்டும் என இராணி எலிசபெத் கூறுகிறார். அவையாவன,

- அளவில் சிறியதாக இருக்க வேண்டும்.

- எளியோர் நாவில் வழங்கத் தக்கதாய் இருக்க வேண்டும்.
- எளிதில் நினைவில் நிற்கக் கூடியதாக இருக்க வேண்டும்.
- பொருளுடையதாக இருக்க வேண்டும்.
- பொருள் எளிதாக விளங்கும்படி இருக்க வேண்டும்.
- எதுகையாலோ, மோனையாலோ, பிறவகையாலோ ஒருவகை ஓசை நயம் இருத்தல் வேண்டும்.
- சொற்கள் கூர்மையாக இருக்க வேண்டும்
- கருத்தை நேரடியாகக் குறிப்பிட வேண்டும்
- அன்றாட வாழ்வில் பயன்படுத்தக் கூடியதாக இருக்க வேண்டும்.
- பழமொழி கூறுகின்ற கருத்து பலராலும் பலமுறைக் கூறி அனுபவப்பட்டதாக இருக்க வேண்டும்.
- ஒரே மூச்சில் சொல்லக் கூடியதாக இருக்க வேண்டும்
- ஒழுக்கங்களை விரித்துரைப்பதாயிருக்க வேண்டும்
- உவமைகள் கண்ணால் காணத்தக்கனவாக இருக்க வேண்டும்
- சுருக்கமாக அமைய வேண்டும்
- சொற்களை எடுத்து விட்டு வேறு சொல்லைச் சேர்த்துக் கொள்ளத்தக்க நெகிழ்ச்சி வேண்டும்
- குறைந்தது இரு சொல் பழமொழியாக இருக்க வேண்டும்
- ஒரு அடி அல்லது இரண்டு அடி பழமொழியாக இருத்தல் வேண்டும்
- உணர்வு பொங்க அமைதல் வேண்டும்
- பொதுவான உண்மையின் அடிப்படையில் அமைதல் வேண்டும்
- எளிய சொற்களால் அமைதல் வேண்டும்
- தீர்மானமான அழுத்தமான நடை வேண்டும்
- புகழத்தக்க நடையையும், கவர்ச்சியையும் உடையதாக இருக்க வேண்டும்
- அறக்கோட்பாட்டை வலியுறுத்துவனவாக அமைதல் வேண்டும்

- ❖ பழமையானதாய் இருத்தல் வேண்டும்
- ❖ உணர்ந்து கூறக்கூடியக் கருத்தின் அடிப்படையில் அமைந்து இருத்தல் வேண்டும்.
- ❖ மக்கள் பண்பாட்டைப் பிரதிபலிப்பனவாகவும் இருக்க வேண்டும்.
- ❖ மக்களால் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவும் இருக்க வேண்டும்.
- ❖ அனுபவ உண்மைகளாக அமைய வேண்டும்.
- ❖ தெரியாத ஒருவரால் எழுதப்பட்டிருக்க வேண்டும்
- ❖ அகவற்பாவால் அமைந்திருத்தல் வேண்டும்
- ❖ வினா அமைப்பில் இருக்க வேண்டும்.
- ❖ நிலைத்த தொடரமைப்பு உடையதாக இருக்க வேண்டும்
- ❖ சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை வழங்கக் கூடிய புழக்கத்தில் இருக்கக் கூடிய பழமொழியாக அமைதல் வேண்டும்.

மேலும், "பழமொழியின் தன்மையானது சிக்கல்களைத் தீர்ப்பதற்கான வழியைக் கூறுவனவாகவும், நீதிக் கருத்துக்களை உள்ளடக்கியதாகவும், நெடுங்கதைகள் கூட சாறு பிழிந்து அறிவுரை கூறுபவைகளாகவும், கற்பனையைக் கண்முன் கொண்டு வந்து உண்மையை விளக்குபவைகளாகவும் இருக்க வேண்டும்."[60]

எல்லாப் பழமொழிகளும் மேற்கூறிய தன்மைகளை உடையனவாய் இருக்க வேண்டும் என்பதில்லை. ஆனால் சில தன்மைகளைப் பெற்றிருக்க வேண்டும் என்பர்.

## 1.10 பழமொழி வகைப்பாடு

பழமொழியின் வகைப்பாடுகளை ஆசிரியர்கள் பல முறையில் வகைப்படுத்தியுள்ளனர். அதில் "சுமித் என்பவர் ஏழு வகையாகவும், ஆப்ரஹாம் என்பவர் நான்கு வகைபாகவும், பிரெளனே என்பவர் இரண்டு வகையாகவும்,

சக்திவேல் என்பவர் ஐந்து வகையாகவும், க. சாந்தி அவர்கள் இரண்டு வகையாகவும் வகைப்படுத்தியுள்ளனர்".[61] இவர்களது வகைப்பாட்டினைக் கீழ்வருமாறு காணலாம்.

சுமித் என்பவர் பழமொழிகளை உவமைத் தன்மையன, கேலித் தன்மையன, சிலேடைத் தன்மையன, மரபுத் தெடர்கள், சொற்றொடர்கள், விடுகதைத் தன்மையன, ஒலி இயைபின என்பதன் அடிப்படையில் வகைப்படுத்தியுள்ளார்.

ஆப்ரஹாம் என்பவர் நேர்சம மதிப்பு, எதிர்மறை சமமதிப்பு, நேரடி காரண காரியத் தொடர்பு, எதிரிடை காரண காரியத் தொடர்பு என்பதன் அடிப்படையிலும், பிரௌனே என்பவர் இலக்கியப் பழமொழி இலக்கியமில்லாப் பழமொழி அல்லது மரபுப் பழமொழி என்பதன் அடிப்படையிலும் பழமொழியினை வகை செய்துள்ளனர்.

சக்திவேல் அவர்கள் அளவு அடிப்படை, பொருள் அடிப்படை, அகரவரிசை அடிப்படை, அமைப்பியல் அடிப்படை, பயன் அடிப்படை என்ற தன்மையில் பழமொழிகளை வகைப்படுத்தியுள்ளார்.

சாந்தி அவர்கள் உருவத்தை அடிப்படையாகக் கொண்ட பழமொழிகள், பொருளை அடிப்படையாகக் கொண்ட பழமொழிகள் என்று இரு பெரும் பிரிவுகளாகப் பழமொழிகளைப் பிரித்துள்ளார்.

உருவத்தை அடிப்படையாகக் கொண்ட பழமொழிகள் என்பவை வாக்கிய அமைப்புள்ள பழமொழிகள், மேற்கோள் பழமொழிகள், ஒலியியைபுப் பழமொழிகள், கேள்விப் பழமொழிகள், உவமைப் பழமொழி போன்றவையாகும்.

பொருளை அடிப்படையாகக் கொண்ட பழமொழிகள் என்பவை வேளாண்மைப் பழமொழிகள், மிருகங்கள் பற்றிய பழமொழிகள், பறவைகள் பற்றிய பழமொழிகள், வேடிக்கைப் பழமொழிகள், நெருப்புப் பழமொழிகள், வானவியல் பழமொழிகள், அறிவுரைப் பழமொழிகள், பொருளின் குணத்தை அடிப்படையாகக் கொண்ட பழமொழிகள், நம்பிக்கைப் பழமொழிகள், விலக்குப் பழமொழிகள், எதிரான

கருத்துப் பழமொழிகள், இரட்டைப் பொருள் பழமொழிகள், குறிப்புடன் கூடிய பழமொழிகள், திருமணம் பற்றிய பழமொழிகள், ஒரே பொருளைத் தரும் பழமொழிகள் போன்றவையாகும்.

வ.பெருமாள் அவர்கள் பழமொழிகளின் பாகுபாட்டை தெளிவாக விளக்குகிறார். "பொருள் அடிப்படை, தகுதி அடிப்படை, சமுதாய அடிப்படை, சமய அடிப்படை, கருத்தொருமை அடிப்படை, ஒரு கருத்துப் பல்துறை அடிப்படை, வட்டார அடிப்படை, நில எல்லை அடிப்படை, சொல் அடிப்படை, அளவு அடிப்படை, கருத்து எண்ணிக்கை அடிப்படை, அமைப்பு அடிப்படை, கதை அடிப்படை, நூல் அடிப்படை, இலக்கிய இலக்கண அடிப்படை, செவிப்புல அடிப்படை, அணியியல் அடிப்படை என்னும் பாகுபாட்டையும் எப்பாகுபாட்டிலும் அடங்காதவற்றை பொது அல்லது கதம்பப் பழமொழி என்ற தலைப்பில் பகுத்தறிவுப் பழமொழி, மரபுத் தொடர் பழமொழி, நகைச்சுவைப் பழமொழி, முரண் பழமொழி, நம்பிக்கைப் பழமொழி, குழந்தை அல்லது விளையாட்டுப் பழமொழி, ஆசைப் பழமொழி, வெறுப்புப் பழமொழி, சாபப் பழமொழி, தடைப் பழமொழி, ஊர்ப் பழமொழி, பேர்ப்பழமொழி, புதிர் பழமொழி முதலிய பாகுபாட்டையும், இடக்கர் பழமொழி என்னும் பாகுபாட்டையும் கொண்டவைகளாகப் பழமொழிகள் உள்ளன. மேற்கூறப்பட்ட வகைகள் மட்டுமே பழமொழியில் உள்ளன என்று கூற முடியாது. மேலும் ஆராய்ந்தால் வேறு சில முறைகளும் புலப்பட வாய்ப்புள்ளது என்பது அறிஞர்களின் கருத்தாகும்".[62]

## 1.11 பழமொழியும் பயன்பாடும்

நாட்டுப்புறக் கூறுகளில் ஒன்றான வாய்மொழி இலக்கியம் என்று சொல்லக்கூடிய பழமொழியினை அனைத்து இன, மனித சமூகத்தினரும் பயன்படுத்துகின்றனர். மக்களின் அனுபவத்தின் வெளிப்பாடாக விளங்கக் கூடிய சிறப்பினைப் பெற்றிருப்பது இப்பழமொழிகளாகும். இந்த உலகின் அனைத்து பகுதிகளிலும் படித்தவர்கள் மட்டுமல்லாது படிப்பறிவில்லாத பாமர மக்களும் பழமொழியைப் பயன்படுத்துகின்றனர். இருப்பினும் தம் அன்றாட வாழ்வில் அதிகமாகப்

பழமொழியைப் பயன்படுத்துபவர்கள் பாமர மக்களேயாவர் என்பதை, "நாகரிகத்தில் முன்னேறிய மக்கள் மட்டுமன்றி நாகரிகத்தில் முன்னேறாத பழங்குடியினரும் பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். நாகரிகத்திற்கும் பழமொழிகளின் தோற்றத்திற்கும் எவ்விதத் தொடர்புமில்லை. சாதாரணமாகப் பேசிக் கொண்டிருக்கும் போது பேச்சின் நடுவே பொருத்தமான இடத்தில் ஒருவர் பழமொழிகளைப் பயன்படுத்துவார் அல்லது எங்கெல்லாம் பழமொழிகளைப் பயன்படுத்தலாம் என்று சமுதாயச் சூழல் அனுமதிக்கிறதோ அங்கெல்லாம் அவை பயன்படுத்தப்படுகின்றன"[63] என்று லூர்து அவர்கள் கூறுகிறார்.

பழமொழி, மனிதனுடைய நல்லுணர்வுகளை மிக விரைவில் தட்டி எழுப்புகின்றன. அறிவுரை கூறவும், மறைமுகமாக எச்சரிக்கவும், கேலி செய்யவும் ஒன்றுடன் மற்றொன்றை தொடர்புபடுத்தி பேசவும், சண்டையிடும் பொழுது பழமொழியினைக் கூறி அவர்களை சமாதானம் பெறச் செய்யவும் எனப் பல சூழ்நிலைகளிலும் மக்களுக்கு சுருங்கச் சொல்லி விளங்க வைக்க பழமொழியினைப் பயன்படுத்துகின்றனர்.

மக்களின் சிந்தனையைத் தூண்டும் வகையிலும் பழமொழியைப் பயன்படுத்துகின்றனர். அன்றாட வாழ்க்கையில் பழமொழியினைப் பயன்படுத்துவது நன்மை தீமைகளைப் பிரித்தறிவதற்குப் பேருதவி புரிகின்றது. ஆதலால் பழமொழி என்பது முக்கியமான ஒன்றாக மக்கள் கருதுகின்றனர். மக்களினது பண்பாட்டினை மதிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் கருவிகளுள் ஒன்று பழமொழி என்று கூறலாம். அன்றாட பேச்சு வழக்கில் பழமொழிகள் பயன்படுத்தப்படுவதால், பழமொழிகள் சமுதாயத்தில் பெற்றிருக்கும் செல்வாக்கினை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

## 1.12 பழமொழியும் பயன்பாட்டுச் சூழல் அமைப்பும்

சமூகத்திலுள்ள மக்கள் அனைவரும் பழமொழியின் மூலம் நல்ல பயன்களைப் பெறுகின்றனர். ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் தான் பழமொழிகளை

மக்கள் பயன்படுத்துவர் அல்லது உருவாக்குவர் என்று முன்னதாகவே கற்பனை செய்யவோ, கூறவோ முடிவதில்லை. அவை எந்தெந்தச் சூழ்நிலையில் உருவாகும் என்று அந்தப் பழமொழியினுடைய பாட வேறுபாடுகளிலிருந்து தான் புரிந்து கொள்ள முடியும். அன்றாட வாழ்க்கையில் பாமர மக்கள் சரியான நேரத்தில் பழமொழிகள் கூறுவது, எதிர்பாராத விதத்தில் பொருளுடையதாக மாறுகிறது. "சூழ்நிலை தான் ஒரு பழமொழியின் உயிர்"[64] என்கிறார் ராகவன் பையனாடு. எனவே சூழலுக்கேற்றாற் போல பழமொழியைப் பயன்படுத்தும் போது மட்டுமே தெளிவான பொருள் நமக்குக் கிடைக்கும். பழமொழியைச் சூழ்நிலையிலிருந்து வேறுபடுத்தினால் உயிரற்ற ஒரு சாதாரண வாக்கியமாக மாறிவிடும். எனவே சூழ்நிலைக்கு ஏற்ப சரியான முறையில் பழமொழிகளைப் பயன்படுத்த வேண்டும். சான்றாக, "ஆடிப்பட்டம் தேடி விதை" என்ற இந்தப் பழமொழியை ஒருவர் பெற்ற அனுபவத்தின் மூலமாகவே சூழலுக்கேற்ப சமூகத்தில் அனைவராலும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

பழமொழிகளின் மூலம் மக்களின் பழக்கவழக்கங்களையும், நம்பிக்கைகளையும், பண்பாட்டினையும் வாழ்வியல் நெறிமுறைகளையும் அறிந்து கொள்ள முடிகின்றது. சிப்பிக்குள் முத்திருப்பதைப் போன்று, பாமர மக்களின் நாவிலே பிறக்கின்ற பழமொழிகள் யாவும் அவர்களின் தனித்தன்மைகளை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன. பாமர மக்களின் நாவிலே பிறந்த பழமொழிகள் இலக்கியங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பது பாமர மக்களுக்கே உரிய சிறப்புக் கூறாகிறது.

## தொகுப்புரை

- இவ்வியலில் நாட்டுப்புற வாய்மொழி இலக்கியங்களுள் ஒன்றான பழமொழி, தோன்றிய காலத்தைத் திட்டவட்டமாக அறுதியிட்டு கூறமுடியாது என்பது சுட்டப்பட்டுள்ளது.
- இலக்கண இலக்கியங்களில் பழமொழியைக் குறிக்கும் பல்வேறு சொற்களைக் காண்பதன் மூலம் பழமொழிகள் இலக்கியத்தில் நிலையானதொரு இடத்தை தக்க வைத்துள்ளமையை உணர முடிகின்றது.
- வாழ்க்கைக்குத் தேவையான கருத்தாக்கம் நிறைந்துள்ளமையால் மக்களால் பெரிதும் போற்றி வளர்க்கப்பட்டு வருவதை கவனத்தில் கொள்ள முடிகின்றது.
- தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளமையால் இதன் பழமை வெளிப்படுகிறது.
- வரையறைக்கு உட்படாததாக இருந்தாலும் இலக்கண இலக்கிய ஆசிரியர்களும் பேரகராதியும் ஒரு சில வரைமுறைகளை உருவாக்க முயன்றுள்ளனர்.
- பழமொழிகள் திரிபடையக் கூடியதாக இருந்தாலும் ஒரு சில தனித்தன்மைகளை இழந்து விடாமல் கட்டிக்காக்கப்பட்டுள்ளன.
- பாமர மக்களின் சொல்வளத்தால் விளைந்த பழமொழிகள் பொருண்மையடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- பழமையான மொழிகளே பழமொழிகளாகும். பலரது அறிவாலும் அனுபவத்தாலும் பழுத்துப்போன மொழியே பழமொழி.
- கேட்பவரின் மனதில் உணர்ச்சியை எழுப்பவல்ல ஆற்றல் பழமொழிக்கு உண்டு.
- பழமொழிகள் சொல்ல வந்ததை நேரடியாகக் கூறாது மறைத்துக் கூறும் தன்மையுடையன.
- கற்பனையை தூண்டிவிடும் திறன் பெற்றவை.
- இலக்கிய வடிவமைப்பில் சிறியனவாக இருந்தாலும், நாட்டுப்புற மக்களின் சொல்வளத்தாலும், பொருள் வளத்தாலும் கட்டமைக்கப்பட்டவை.

- நாட்டுப்புற மக்களின் வழக்காற்றுச் சொற்கள் பழமொழிகளில் உயிரோட்டம் பெற்றுள்ளன.
- ஒரு கருத்தை அழுத்தமாக உரைக்கும் தன்மையுடையது.
- பல வேளைகளில் ஒன்றுக்கு மேற்பட்ட உண்மைகளை உணர்த்துவதும் உண்டு.
- தங்கத்திற்கு மெருகூட்டுவதைப் போன்று காலந்தோறும் பழமொழிகள் பண்படுத்தப்பட்டு பட்டைத்தீட்டப்பட்டு மக்களால் பயன்படுத்தப்பட்டு வருகின்றமை புலனாகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. ஆ. கணேசன், இலக்கியத் தென்றல், ப.5.
2. தே. இராணி எலிசபெத், பழமொழிகளில் நீதிக் கருத்துக்கள், ப.14.
3. இரா. சுரேந்திரன், நாட்டுப்புற இலக்கியம் நலந்தரு விளக்கம், ப.19.
4. திவாகர முனிவர், சேந்தன் திவாகரம், 10வது ஒலி பற்றிய பெயர்த்தொகுதி, மூதுரையின் பெயர், ப.125.
5. பிங்கல முனிவர், பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, 7, பண்பிற் செயலின் பகுதி வகை, 4 வாய் வகை.2025.
6. மண்டல புருடர், சூடாமணி நிகண்டு, பத்தாவது ஒலி பற்றிய பெயர்த்தொகுதி, பத்தாவது செய்யுள்.
7. தொல்காப்பியம், செய்யுளியல், 175, ப.560.
8. கலித்தொகை, நெய்தல் கலி, ப.782.
9. பரிபாடல், பா.எ.3, ப.55.
10. தொல்காப்பியம், செய்யுளியல்–78, ப.528.
11. அகம், களி.நி.ப.43.
12. பழமொழி நானூறு, சிறப்புப் பாயிரம், ப.5.
13. புறநானூறு, பா.எ.8–9, ப.330.
14. பதிற்றுப்பத்து, இ.பத்து, பதிகம்.1.
15. அகம், பாலை, பா.எ.5.
16. முதுமொழிக்காஞ்சி, நல்கூர்ந்தபத்து, அடி.7.
17. சிலப்பதிகாரம், ம.கா.ப.241.
18. மேலது, ப.344.
19. திருவாசகம், திருவெம்பாவை, ப.149–150.
20. குமரேச சதகம், பா.எ.91, 1980.
21. கம்பராமாயணம், சுந்தரகாண்டம், பா.எ.139.
22. மேலது, பாலகாண்டம், பா.எ.

23. மேலது, சூர்ப்பணகைப்படலம், பா.எ.245.
24. வ. பெருமாள், பல நோக்கில் பழமொழிகள், ப.83–84.
25. தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.268–269.
26. ப. முருகன், புதிய நோக்கில் பழமொழி, ப.56.
27. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.103
28. எஸ். சௌந்தரபாண்டியன், தமிழில் பழமொழி இலக்கியம், ப.236.
29. மு. பொன்னுசாமி, பழமொழியும் பண்பாடும், ப.4.
30. வ. பெருமாள், பலநோக்கில் பழமொழிகள், ப.28.
31. எஸ். சௌந்திரபாண்டியன், தமிழில் பழமொழி இலக்கியம், ப.15.
32. மு. பொன்னுசாமி, பழமொழியும் பண்பாடும், ப.7.
33. வ. பெருமாள், பலநோக்கில் பழமொழிகள், ப.32.
34. இரா. கௌதமன், விவிலியமும் தமிழ்ப் பழமொழிகளும், ப.25.
35. தொல்காப்பியம், செய்யுளியல்–78, ப.528.
36. மேலது, செய்யுளியல்–177, ப.560.
37. எஸ். சௌந்தரபாண்டியன், தமிழில் பழமொழி இலக்கியம், ப.6.
38. Richard M. Dorson, Folklore and Folklife and Introduction, p.117.
39. சாலை இளந்திரையன், சமுதாய நோக்கில் பழமொழிகள், ப.22.
40. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி.12, ப.206–208.
41. Standard Dictionary of Folklore mythology and legend, pp.902-905.
42. Durga Bhagawat, An outline of Indian Folklore, p.46.
43. Ray B. Browne, The wisdom of many – The proverb and Proverbial expression, American Folklore, pp.217-218.
44. Roger D. Abraham, Folklore and Folklife An Introduction, p.110.
45. ஆ. கணேசன், இலக்கியத் தென்றல், ப.94–95.
46. ப. முருகன், புதிய நோக்கில் பழமொழி, ப.12.
47. இ. கிளாரா. தஞ்சாவூர் மாவட்டப் பழமொழிகள் ஓர் ஆய்வு, ப.47.
48. க.சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.105–106.

49. மு. அண்ணாமலை, நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், ப.167.

50. வ. பெருமாள், பல நோக்கில் பழமொழிகள், ப.51.

51. இ. கிளாரா, தஞ்சாவூர் மாவட்டப் பழமொழிகள் ஓர் ஆய்வு, ப.51.

52. A.S. Hornby, Oxford Advance, Learner's Dictionary of Current English, p.684.

53. தமிழ்ப் பேரகராதி, தொகுதி–4, ப.2547.

54. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.694.

55. கழகப் பழமொழி அகரவரிசை, ப.5.

56. கலைக்களஞ்சியம், தொகுதி–10, ப.367.

57. Thw World Book Encyclopaedia, p.Vol.15, p.741.

58. தே. இராணி எலிசபெத், பழமொழிகளில் நீதிக் கருத்துகள், ப.34.

59. மேலது, ப.17–19.

60. மேலது, ப.20.

61. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.108–109.

62. வ. பெருமாள், பல நோக்கில் பழமொழிகள், ப.45–69.

63. தே. லூர்து, நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள், ப.23.

64. ராகவன் பையனாடு, கேரள போக்லோர், ப.186.

# இயல் — 2

# தமிழ் மலையாளப் பழமொழிகளின் அமைப்பு

2.1 அமைப்பியல்

2.2 அமைப்பியல் பற்றிய கருத்தாக்கங்கள்

2.3 பழமொழிகளின் அமைப்பு

2.4 பழமொழிகளின் விளக்கவுரைக் கூறுகள்

2.5 டண்டிஸின் மூன்று வகைப்பாகுபாடு

2.6 உவமை உருபு வரக்கூடிய பழமொழிகள்

2.7 இல்லா என்று வரக்கூடிய மலையாளப் பழமொழிகள்

2.8 எதிர்நிலை அமைப்புப் பழமொழிகள்

தொகுப்புரை

# 2. தமிழ் மலையாளப் பழமொழிகளின் அமைப்பு

சூழலுக்குத் தக்கவாறு பாமர மக்கள் உரையாடலுக்கு இடையே பொருண்மைக்கு மெருகூட்ட பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். பட்டறிவால் பட்டைத் தீட்டப் பெற்று பாமர மக்களின் நாவில் நடனம் புரியும் இப்பழமொழிகளில் இலக்கிய நயம் இழையோடிக் கிடப்பதைக் காணமுடிகின்றது. படிப்பறிவு மிக்க சான்றோர்களின் கவனத்தைப் பெற்ற இப்பழமொழிகள் பல அமைப்புக்குள் அடக்கப்பட்டுள்ளன.

## 2.1 அமைப்பியல்

அமைப்பியல் என்பதனை அமைப்புவாதம், அமைப்பியல் வாதம், அமைப்பு மையவாதம், ஸ்ட்ரக்சுரலிசம், கட்டமைப்பு எனப் பல பெயர்களில் குறிப்பிடுகின்றனர். "அமைப்பியல் என்ற சொல் ஒரு முழுமையான இலக்கியப் படைப்பில் காணப்படும் பகுதிகளின் ஒட்டுமொத்த உறவைக் குறிக்கும் பொருளில் நீண்ட காலமாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது"[1] என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது. அமைப்பியலைப் பற்றி மேலை இலக்கியச் சொல்லகராதி "ஒரு முழுமையான இலக்கியப் படைப்பின் பகுதிகளுக்கிடையே நிலவும் உறவுகளின் திரட்டே கட்டமைப்பாகும்"[2] என்கிறது.

## 2.2 அமைப்பியல் பற்றிய கருத்தாக்கங்கள்

- அமைப்பியலைப் பற்றி தேவதைக் கதைகள் ஆய்வு செய்த அமைப்பியல் ஆய்வின் தந்தை எனப் போற்றப்படுகின்ற விளாடிமிர் பிராப் என்பவர் "ஒன்றின் உள்ளுறுப்புகளுக்கிடையே காணப்படும் உறவையும், அவ்வுறுப்புக்களின் ஒட்டுமொத்த முழுமையோடு கூடிய தொடர்பினையும் ஆராய்வது அமைப்பியலாகும்"[3] என்று கூறுகிறார்.

- பிரெஞ்சு அறிஞர் லெவிஸ்ட்ராஸ் என்பவர் "அமைப்பியல் என்பது வடிவயியல் சார்ந்தது என்றும், வடிவம் என்பது பொருளுக்கு மாறானது என்றும் வரையறுப்பர். ஆனால் அமைப்பு உள்ளடக்கத்திலிருந்தும் (Content–பொருளிலும்) தனிப்பட்டதல்ல அமைப்பே பொருளாகும்"[4] என்று குறிப்பிடுகிறார்.

- முக்கரோவ்ஸ்கி என்பவர் "அமைப்பு முழுமை என்பது அதன் ஒவ்வொரு பகுதியையும் உறுப்பையும் குறிக்கும் இந்த ஒவ்வொரு பகுதியும் அந்தக் குறிப்பிட்ட முழுமையையே குறிக்கும். ஒவ்வொரு கூறும் குறிப்பிட்ட வினை நிகழ்வைப் பெற்றுள்ளது. இதன் மூலமே அவை முழுமையுடன் இணைந்துள்ளன. இந்த வினை நிகழ்வுகளும் அவற்றிற்கிடையேயான உறவுகளும் வளர்நிலைப் பண்பு கொண்டது. இதன் விளைவாக அமைப்பு என்பது முழுமையும் நிரந்தரமான இயங்கு தன்மையும் கொண்டதாக விளங்குகிறது"[5] என்கிறார்.

- அ. ஆலிஸ் அவர்கள் "கவிஞனின் (பாடுபவர்) எண்ணங்களே கவிதை (பாடல்) என்ற வடிவத்தில் வெளிப்படுகின்றன. கவிதையின் (பாடலின்) கட்டமைப்பினைப் புலப்படுத்தும் கவிதையின் (பாடலின்) கூறுகளைக் கணக்கிடுதலும் அதன் அமைப்பினைக் கணிக்க உதவும்"[6] என்கிறார்.

- கு. முருகேசன் அவர்கள் "பண்பாடு, சமுதாய நடத்தை, இயற்பியல் சார்ந்த பொருள்களில் காணப்படும் இணைப்பாக்கம் என்னும் இவற்றுக்கிடையில் காணப்படும் அமைப்புக்கள், கட்டமைப்புக்களைப் பற்றி அறியும் அறிவியல் அணுகுமுறையாக அமைப்பியல் பயன்படுத்தப்பட்டு வருகின்றது"[7] என்கிறார்.

- சுதானந்தா அவர்கள் "அமைப்பியல் பற்றிய கருத்தாக்கம் மொழியிலிருந்தே தொடங்குகின்றது. அமைப்பியல் கோட்பாடு, அமைப்பு மொழியியல் கோட்பாடிலிருந்து உருவாக்கப்பட்டதாகும். அமைப்பு மொழியில் உயர்நிலைக்கு அப்பாலுள்ள மனித மனத்தின் அடியிலுள்ள மொழியிலக்கணத்தை ஆய்வு செய்வதற்கான வழிமுறைகளைக் கொண்டுள்ளதைப் போல, அமைப்பியல் உயர்நிலைக்கு அப்பாலுள்ள பண்பாட்டு இலக்கணத்தைக் காண முனைகின்றது"[8] என்கிறார்.

### 2.3 பழமொழிகளின் அமைப்பு

தமிழ் – மலையாள பழமொழிகளின் அமைப்பானது ஓரடி, ஈரடி, மூன்றடி என்ற தன்மையில் அமைந்துள்ளது. ஆலன்டண்டிஸ் பழமொழிகளை ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், பல விளக்கக் கூறுடைய பழமொழிகள் என்று பிரிக்கிறார். "ஒரு பழமொழி குறைந்தது ஒரு விளக்கக் கூறையும், அதற்கு மேற்பட்ட விளக்கவுரைக் கூறுகளையும் கொண்டமையும். பழமொழிகளின் அமைப்புக் குறித்து ஒரு கோட்பாட்டை உருவாக்க முனையும் டண்டிஸ் மிக எச்சரிக்கையுடனும், கவனத்துடனும், நிதானமாகவும் கூறுகிறார்"[9]. குறைந்த அளவு ஒரு விளக்கவுரைக் கூறு என்று குறிப்பிட்ட டண்டிஸ் மிக அதிகமான அளவு எத்தனை விளக்கவுரைக் கூறு என்று குறிப்பிடவில்லை. ஏனெனில், ஒவ்வொரு மொழியிலும் வெவ்வேறு அளவில், எண்ணிக்கையில் இவ்வலகுகள் அமையலாம் என்று ஆலன்டண்டிஸ் எண்ணியிருக்கலாம் என்று லூர்து அவர்கள் குறிப்பிடுகிறார். ஆனால் லூர்து அவர்கள் தமிழ்ப் பழமொழிகளின் அமைப்பினை ஒரு விளக்கக் கூறுடைப் பழமொழிகள், இரு விளக்கக் கூறுடைப் பழமொழிகள், மூன்று விளக்கக் கூறுடைப் பழமொழிகள் என்ற அடிப்படையில் முடிவுரை முதலிலும், தலைப்பு இறுதியிலும் வரும்படியாகக் கூறி விளக்கியுள்ளார். மேலும், டண்டிஸ் பழமொழிகள் முரணற்ற பழமொழிகள், முரணுடைய பழமொழிகள், முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் என்று மூன்று பெரும் பிரிவுகளிலும் அடக்குகிறார். இதனை அடிப்படையாகக் கொண்டே கோயம்புத்தூர்–பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் வகைப்படுத்தி விளக்கப்படுகின்றன.

இவ்விரு ஆசிரியர்களின் அமைப்புமுறை மட்டுமின்றி, தமிழ் மலையாளப் பழமொழிகளில் உவமையுடன் வரக்கூடிய பழமொழிகளையும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. மேலும் மலையாள பழமொழிகளில் 'இல்லா' என்ற சொற்றொடர் அதிகப்படியாக வருவதைக் காணமுடிகின்றது. இந்நிலையிலும் பழமொழிகள் கவனம் பெற்று ஆராய்ச்சிக்கு பயன்படுத்தப்பட்டுள்ளன. இறுதியாகத் தமிழ் மலையாளப் பழமொழிகளில் எதுகை, மோனை அடிப்படையில் அமைந்திருக்கக்கூடிய பழமொழிகளை இனங்கண்டு இவ்வியலில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

## 2.4 பழமொழிகளின் விளக்கவுரைக் கூறுகள்

பழமொழிகளின் அமைப்பை விளக்கப் பயன்படுத்;தப்படும் ஒரு கூறே விளக்கவுரைக் கூறு. அதாவது ஒரு பழமொழி தலைப்பு முடிவுரையைக் கொண்டிருக்கும். இதில் 'தலைப்பு' என்பது ஒரு விளக்கவுரைக் கூறு, 'முடிவுரை' என்பது வேறொரு விளக்கவுரைக் கூறாகும். ஒரு பழமொழியில் வரும் விளக்கவுரைக் கூறுகளின் அடிப்படையில் அப்பழமொழி வகைப்படுத்தப்படுகிறது. தமிழ் மலையாளப் பழமொழிகளை,

1. ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள்
2. இரு விளக்கக் கூறுடைய பழமொழிகள்
3. மூன்று விளக்கக் கூறுடைய பழமொழிகள்

என மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### 2.4.1 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள்

ஓரடிப் பழமொழியில் ஒரு தலைப்பும், ஒரு முடிவுரையும் சொல்லக் கூடிய முறையில் அமைந்திருக்கும். இது ஒரு விளக்கக் கூறுடைப் பழமொழியாகும். இவ்வகையைச் சார்ந்த பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன.

1. நோகாம நோம்பி கொண்டாடறது
2. நாயா இருந்தாலும் தாய்
3. அரசனும் ஆண்டியாவான்
4. ஊம கள்ளன் ஊர முடிக்கும்
5. கெடுவான் கேடு நினைப்பான்

மேற்கூறப்பட்ட பழமொழிகளில் தலைப்புகளும் முடிவுரைகளும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

| வ. எண் | தலைப்பு | முடிவுரை |
|---|---|---|
| 1 | நோகாம | நோம்பி கொண்டாடறது |
| 2 | நாயா | இருந்தாலும் தாய் |
| 3 | அரசனும் | ஆண்டியாவான் |
| 4 | ஊற கள்ளன் | ஊர முடிக்கும் |
| 5 | கெடுவான் | கேடு நினைப்பான் |

போன்ற ஒரு விளக்கக் கூறுடைய தமிழ்ப் பழமொழிகளில் தலைப்பு முதலிலும், முடிவுரை இறுதியிலும் வந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

*பதுக்கெ பரஞ்ஞாலும் பந்தளத்து கேள்க்காம்*

(மெதுவாக கூறினாலும் பந்தளத்தில் கேட்க முடியும்)

*கரயுந்த குஞ்ஞினெ பாலுள்ளு*

(அழுகின்ற குழந்தைக்குத் தான் பால் கிடைக்கும்)

*குளிப்பிச்சு குளிப்பிச்சு குட்டியில்லாதாயி*

(குளிக்க வைத்து குளிக்க வைத்து குழந்தையில்லாமல் ஆயிற்று)

*சுட்டயிலெ சீலம் சுடலவர*

(தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்)

*இரும்பு கட்டவன் துரும்பாயி போகும்*

(இரும்பு திருடினவன் துரும்பாக போய்விடுவான்)

மேலே கூறப்பட்ட பழமொழிகளில் தலைப்புகளும் முடிவுரைகளும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

| வ. எண் | தலைப்பு | முடிவுரை |
|---|---|---|
| 1 | பதுக்கெ பரஞ்ஞாலும் | பந்தளத்து கேள்க்காம் |
| 2 | கரயுந்த குஞ்ஞினெ | பாலுள்ளு |
| 3 | குளிப்பிச்சு குளிப்பிச்சு | குட்டியில்லாதாயி |
| 4 | சுட்டயிலெ சீலம் | சுடலவரெ |
| 5 | இரும்பு கட்டவன் | துரும்பாயி போகும் |

போன்ற ஒரு விளக்கக் கூறுடைய மலையாளப் பழமொழிகளில் தலைப்பு முதலிலும், முடிவுரை இறுதியிலும் வந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

மேலே பிரித்துள்ள தமிழ் மலையாளப் பழமொழியினை உச்சரித்துப் பார்த்தால் தலைப்பையடுத்து ஒரு இடை நிறுத்தம் ஏற்படுவதை நாம் உணரலாம். கள அய்வின் போது தமிழில் 687 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மலையாளத்தில் 421 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும் கிடைத்துள்ளன.

### 2.4.2 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகள்

பழமொழிகளில் இரண்டு தலைப்பும், இரண்டு முடிவுரையும் கூறும்படியான முறையில் அமைந்திருப்பது இரு விளக்கக் கூறுடைப் பழமொழிகளாகும். இவ்வகையைச் சார்ந்த பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன.

*பணியாரத்த திங்கச் சொன்னா*
*குழியவா எண்ண சொன்னாங்க*

*பாடுபட்டவனுக்கு பழைய சோறு*
*கூறு கெட்டவனுக்கு கறியுஞ் சோறு*

*தென்னைய வெச்சா எளநீரு*
*பிள்ளைய பெத்தா கண்ணீரு*

மேற்கண்ட தமிழ்ப் பழமொழிகளில் தலைப்புகளும் முடிவுரைகளும் கீழே விளக்கப்படுகின்றன. ஒவ்வொன்றிலும் இரண்டு தலைப்புகளும் இரண்டு முடிவுரைகளும் இருப்பதைக் காணலாம்.

| வ. எண் | தலைப்பு | முடிவுரை |
|---|---|---|
| 1 | பணியாரத்த<br>குழியவா | திங்கச் சொன்னா<br>எண்ண சொன்னாங்க |
| 2 | பாடுபட்டவனுக்கு<br>கூறு கெட்டவனுக்கு | பழைய சோறு<br>கறியுஞ் சோறு |
| 3 | தென்னைய<br>பிள்ளைய | வெச்சா எளநீரு<br>பெத்தா கண்ணீரு |

*மனுஷன் கொதிச்சால் நடக்கில்லா*
*தெய்வம் விதிச்சாலே நடக்கூ*
(மனிதன் ஆசைப்பட்டால் நடக்காது
தெய்வம் விதித்தால்தான் நடக்கும்)

*முரங்ஙயெ ஒடிச்சு வளர்த்தனம்*
*மக்களெ அடிச்சு வளர்த்தனம்*
(முருங்கையை ஒடித்து வளர்க்க வேண்டும்
குழந்தைகளை அடித்து வளர்க்க வேண்டும்)

*உத்தரத்திலிரிக்குன்னது எடுக்குகயும் வேணம்*
*கக்ஷத்திலிரிக்குன்னது களயாணும் பாடில்லா*
(மேற்கூரையிலிருப்பதை எடுக்கவும் வேண்டும்
அக்குலில் இருப்பது விழுந்து போகவும் கூடாது)

மேற்கண்ட மலையாளப் பழமொழிகளில் தலைப்புகளும் முடிவுரைகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொன்றிலும் இரண்டு தலைப்புகளும் இரண்டு முடிவுரைகளும் இருப்பதைக் காணலாம்.

| வ. எண் | தலைப்பு | முடிவுரை |
|---|---|---|
| 1 | மனுஷன்<br>தெய்வம் | கொதிச்சால் நடக்கில்லா<br>விதிச்சாலே நடக்கூ |
| 2 | முரங்ஙயெ<br>மக்களெ | ஒடிச்சு வளர்த்தனம்<br>அடிச்சு வளர்த்தனம் |
| 3 | உத்தரத்திலிரிக்குன்னது<br>கக்ஷத்திலிரிக்குன்னது | எடுக்குகயும் வேணம்<br>களயாணும் பாடில்லா |

போன்ற இரு விளக்கக் கூறுடையத் தமிழ் மலையாளப் பழமொழியில் தலைப்பு முதலிலும், முடிவுரை இறுதியிலும் வந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது. தமிழில் 480 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மலையாளத்தில் 83 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும் கள ஆய்வின் போது கிடைத்துள்ளன.

### 2.4.3 மூன்று விளக்கக் கூறுடைய பழமொழிகள்

மூன்றடிப் பழமொழியில் மூன்று தலைப்புகளும் மூன்று முடிவுரைகளும் கூறும்படியான முறையில் அமைந்திருப்பது மூன்று விளக்கக் கூறுடைப் பழமொழிகளாகும். இவ்வமைப்பில் அமைந்த பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன. இவை மூன்று தனித் தனிப் பழமொழிகள் என்று தோன்றவும் செய்யலாம். ஆனால் தமிழ் மலையாள மக்கள் ஒன்றை மட்டும் சொல்லாது மூன்றையும் சேர்த்தே சொல்கின்றனர்.

*தெரிந்து கொள்ளனும் பெண்ணே*
*அதைப் புரிந்து கொள்ளனும் பெண்ணே*
*மறுபேச்சு பேசக்கூடாது பெண்ணே*

மேற்கண்ட தமிழ்ப் பழமொழியில் மூன்று தலைப்புகளும் மூன்று முடிவுரைகளும் இருப்பதைக் காண்க.

| வ. எண் | தலைப்பு | முடிவுரை |
|---|---|---|
| 1 | தெரிந்து<br>அதைப் புரிந்து<br>மறுபேச்சு | கொள்ளணும் பெண்ணே<br>கொள்ளணும் பெண்ணே<br>பேசக்கூடாது பெண்ணே |

என்ற ஒரு தமிழ்ப் பழமொழி மட்டும் மூன்று விளக்கக் கூறுடைய பழமொழியாகக் கிடைத்துள்ளது.

*கொச்சி கண்டவனு அச்சி வேண்டா*
*கொல்லம் கண்டவனு இல்லம் வேண்டா*
*அம்பலப்புழ வேல கண்டவனு அம்மயும் வேண்டா*
(கொச்சி பார்த்தவனுக்கு மனைவி தேவையில்லை
கொல்லம் பார்த்தவனுக்கு வீடு தேவையில்லை
அம்பலப்புழை விழாவினைப் பார்த்தவனுக்கு அம்மாவும் தேவையில்லை)

மேற்கண்ட மலையாளப் பழமொழியில் மூன்று தலைப்புகளும் மூன்று முடிவுரைகளும் இருப்பதைக் காண்க.

| வ. எண் | தலைப்பு | முடிவுரை |
|---|---|---|
| 1 | கொச்சி கண்டவனு<br>கொல்லம் கண்டவனு<br>அம்பலப்புழ வேல கண்டவனு | அச்சி வேண்டா<br>இல்லம் வேண்டா<br>அம்மயும் வேண்டா |

போன்ற மூன்று விளக்கவுரைக் கூறுடைய தமிழ் மலையாளப் பழமொழிகளில் தலைப்பு முதலிலும், முடிவுரை இறுதியிலும் வந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

மேலும், ஒரு பழமொழியில் மூன்று விளக்கத்தைக் கூறி நான்காவது அடியில் முடிவைச் சொல்லுமாறு அமைந்திருக்கக் கூடிய தமிழ் மலையாளப் பழமொழியும் கிடைத்துள்ளது.

*கெண்ட பெருத்தவ*

*கூந்தலு பெருத்தவ*

*நெத்தி பெருத்தவ*

*கொண்டவனுக்கு ஆகாது*

மேற்கூறப்பட்ட தமிழ்ப் பழமொழியில் கெண்டைக்கால் பெருத்தல், கூந்தல் பெருத்தல், நெற்றி பெருத்தல் என்பவை தலைப்பாகவும், கொண்டவனுக்கு ஆகாது என்பது முடிவுரையாகவும் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மலையாளத்தில்,

*ஆன புறத்து கேரணம்*

*அங்ஙாடியில் கூட போகணம்*

*கொட்டும் மேளவும் வேணம்*

*ஆரும் காணான் பாடில்லா*

(யானை மீது ஏற வேண்டும்

அங்காடியின் வழியாக போக வேண்டும்

கொட்டும் வாத்தியங்களும் வேண்டும்

யாரும் பார்க்கவும் கூடாது)

எனும் பழமொழியில் ஒவ்வொரு அடியும் முற்றுப் பெற்றிருப்பதையும், இறுதியடி மூன்றடிக்கும் ஆன ஒரு முடிவுரையாக வந்துள்ள நிலையினையும் காணமுடிகின்றது.

மேலும் தமிழ் பழமொழிகளில் முடிவுரை முதலிலும், தலைப்பு இறுதியிலும் அமைந்திருக்கக் கூடிய பழமொழிகளையும் காணலாம்.

*ஊருக்கு உபதேசம் வீட்டுக்கல்ல*

*வாயால கெட்டான் கோணா*

இவற்றில் முடிவுரைகளும் தலைப்புகளும் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளன.

| வ. எண் | முடிவுரை | தலைப்பு |
|---|---|---|
| 1 | ஊருக்கு உபதேசம் | வீட்டுக்கல்ல |
| 2 | வாயால கெட்டான் | கோணா |

போன்ற தமிழ்ப் பழமொழிகளில் முடிவுரை முதலிலும் தலைப்பு இறுதியிலும் அமைந்துள்ளதைக் காணலாம். இது போன்ற அமைப்பு கள ஆய்வின் போது மலையாளத்தில் கிடைக்கவில்லை.

தமிழ் மலையாளப் பழமொழிகளில் மூன்று விளக்கவுரைக் கூறுகட்கு மேற்பட்ட அமைப்பினைக் கொண்ட பழமொழிகள் கிடைக்கவில்லை.

## 2.5 டண்டிஸின் மூவகைப் பாகுபாடு

டண்டிஸ் பழமொழிகளை அமைப்பின் அடிப்படையில் மூன்று பெரும் பிரிவில் அடக்கியுள்ளார். அவை,

1. முரணற்ற பழமொழிகள் (Non-Oppositional)
2. முரணுடைய பழமொழிகள்
3. முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் (Proverbs with Non – Oppositional and Oppositional Features)

என்பவையாகும். ஆனால் தே. லூர்து அவர்கள் அமைப்பின் அடிப்படையில் பழமொழிகள் இரண்டு பெரும் பிரிவுகளைக் கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகின்றார். அவை முரணற்ற பழமொழிகள், முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் என்பனவாகும். கிடைத்த பழமொழிகளை இவர்களது அமைப்பிற்கு உட்படுத்தி கீழ்வருமாறு விளக்கப்படவுள்ளன.

## 2.5.1 முரணற்ற பழமொழிகள்

தலைப்புக்கும் முடிவுரைக்கும் இடையே முரணின்றி அமையும் பழமொழிகள் முரணற்ற பழமொழிகள் எனப்படும். முரணற்ற பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன. இப்பழமொழிகளில் தலைப்பிற்கும் முடிவுரைக்கும் இடையே முரண் அமைவதில்லை.

*வேலக்கார புள்ளய பேலவிட்டுப் பாத்தா தெரியும்*

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் பொறந்தான்னு சொல்லி*
*கடப்பார எடுத்து காது குத்தினாங்களா*

*வண்ணான் ஆட்டுத்தலைக்குப் பறந்தாப்லெ*

போன்றவை முரணற்ற தமிழ்ப் பழமொழிகளாகும்.

*ஆயிரம் வருஷம் நாயின்றெ வாலு குழலிட்டாலும்*
*வளஞ்ஞேயிரிக்கூ*
(ஆயிரம் வருடம் நாயினுடைய வாலினை குழலில் போட்டாலும் வளைந்து தானிருக்கும்)

*சத்த குஞ்ஞின்றெ ஜாதகம் நோக்கீட்டெந்து காரியம்*
(செத்த குழந்தையின் ஜாதகம் பார்த்து என்ன செய்வது)

போன்ற முரணற்ற பழமொழிகள் மலையாளத்திலும் காணப்படுகின்றன.

### 2.5.1.1 சமனிலைப் பழமொழிகள்

முரணற்ற பழமொழிகளில் சமனிலைப் பழமொழிகள் (Equational Proverbs) என்ற ஒன்றினையும் டண்டிஸ் குறிப்பிடுகின்றார். பழமொழிகளின் ஒரு பகுதி ஒருமைத் தன்மையைக் குறிப்பிட, மற்றொரு பகுதி வேற்றுமைப் பகுதிகளைக்

குறிப்பிடுவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மேலும், சமனிலை வெளிப்படையாகவே அமையவும் செய்கின்றது.

1. பேரம் பேரந்தான், வியாபாரம் வியாபாரந்தான்
2. நடந்தவை நடந்தவையாகட்டும்
3. பையன்கள் பையன்களே
4. போதுமென்றால் போதும்

போன்ற பழமொழிகளில் சமநிலை அமைவது போல இருந்தால் வேற்றுமை அல்லது எதிர்மறைப் பண்புகள் அறவே இருப்பது இல்லை என்கிறார் டண்டிஸ்.

மேலும் சமனிலைப் பழமொழிகள் தமிழ் மலையாளப் பழமொழிகளில் காணப்பட்டாலும் இந்த வகைப் பழமொழிகள் மிகுதியாகக் கிடைக்கவில்லை.

*அரத்த அரத்தினாலேயும் வைரத்தை வைரத்தினாலேயும் தான்*
*அறுக்க வேண்டும்*

என்ற ஒரு பழமொழி மட்டுமே மேற்கூறப்பட்ட அமைப்பின் அடிப்படையில் கிடைத்துள்ளது.

| | | |
|---|---|---|
| அரத்த | = | அரத்தினால் |
| வைரத்த | = | வைரத்தினால் |

இப்பழமொழியில் 'ஆல்' என்ற உறுப்பு வகுப்பது என்ற பொருள் தரும். இருப்பினும் சமனிலை என்று இதைக் கொள்ளலாம். மேலும், ஒருமைத் தன்மையும், வேற்றுமைப் பண்புகளும் பழமொழியின் முதலில் வந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது. இவ்வமைப்பு தமிழில் மட்டுமே ஓரடி, ஈரடிப் பழமொழிகள் என்பதன் அடிப்படையில் அமைந்துள்ளது. அவற்றை கீழ்வருமாறு காணலாம்.

*ஆயி ஆயின்னு பாடுபட்டா அள்ளி விடவு சேரும்*

*தனக்குத் தனக்குன்னா தாச்சீல பதக்கு கொள்ளும்*

*கஞ்சி கஞ்சின்னா பான நெறையாது*
*முணு முணுன்னு இருந்திட்டு முண்ணூரு வீட்டுக்குத் தீவைப்பா*

*வேணும் வேணும்னா வெள்ளி கொடியையும் நூக்கலாம், வேண்டா வெட்டிக்கு நூத்தா என்னத்த நூத்தா வரும்*

போன்ற பழமொழிகள் டண்டிஸின் கருத்திற்கேற்பவும், சிறிது வேறுபாட்டுடனும் அமைந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது. மேலும், இவ்வமைப்பு மட்டுமின்றி இவள் இத்தகையவள், இதற்கு இது சமம், இப்படிப்பட்டவன் இவன், இது இதற்குச் சமமாக மாறிவிட்டது எனும் அமைப்பில் கீழ்கண்ட பழமொழிகள் அமைவதைக் காணலாம்.

*வேலைக்கு புள்ளயே சாக்காடு*

*ஜாடிக்கு ஏற்ற மூடி*

*வாயால கெட்டான் கோணா*

*வர வர மாமியா கழுத போல ஆனாளாமா*

| | | |
|---|---|---|
| வேலைக்கு | = | புள்ளயே சாக்காடு |
| ஜாடி | = | ஏற்ற மூடி |
| வாயால | = | கெட்டான் கோணா |
| மாமியா | = | கழுதை |

இங்குச் சமனிலை மிகப் பொருத்தமாக அமைவதைக் காண முடிகின்றது. இதே போன்று மலையாளத்தில்,

*சக்கிக் கொத்தொரு சங்கரன்*
*சக்கைக் கொத்தொரு பிச்சாத்தி*
(பெண்ணிற்கு ஏற்ற ஆண்
பலாப்பழத்திற்கு ஏற்ற கத்தி)

| | | |
|---|---|---|
| ஆண் | = | பெண் |
| சக்கி | = | சங்கரன் |
| பலாப்பழம் | = | கத்தி |

என்ற ஒரு பழமொழி மட்டும் இதற்கு இது சமம் என்னும் அமைப்பில் கிடைத்துள்ளது.

### 2.5.1.2 ஒரு, இரு விளக்கக் கூறுடைய சமனிலைப் பழமொழிகள்

தமிழ் மலையாளப் பழமொழிகள் பல இரட்டை இரட்டையாகக் காணப்படுகின்றன. இவற்றுள் சில சமனிலைப் பழமொழிகளாகும். இந்த வகைப் பழமொழியைக் குறிப்பிட்ட சூழலில் வழங்கும் ஒருவன் இரண்டையும் சேர்த்தே வழங்குவதைக் காணலாம். இத்தன்மையை இரண்டு விளக்கவுரைக் கூறுடையப் பழமொழியாகக் கொள்ளலாம் என்பதை கீழ்வருமாறு கூறப்படவுள்ளது.

*அறைக்கிறவன் அறச்சா குடிக்கிறவனுக்கு எங்க போச்சு*

*சட்டி சரக்குன்னுதான் சாடை எனக்குன்னுதான்*

*செட்டி செத்தா மயிரும் போச்சு எனக்கு நாலு காசுமாச்சு*

*சொன்னா சொட்டு சோத்த போட்டு கொட்டு*

எனும் பழமொழிகளில் முதல் விளக்கவுரைக் கூறு ஒரு பொருளைப் பற்றிக் கூறுகிறது. இரண்டாவது விளக்கவுரைக் கூறு மற்றொரு பொருளைப் பற்றிக் கூறுகின்றது. ஆனால் இரண்டுக்கும் இடையே ஒரு சமனிலைப் பண்பு வெளிப்படுதலைக் காணலாம். இதே போன்று மலையாளத்தில்,

*பணமில்லெங்கிலும் பத்தாளு வேணம்*
(பணம் இல்லாவிட்டாலும் பத்து ஆட்கள் வேண்டும்)

*பழம பறஞ்ஞு கொண்டிருந்நால் விசப்பு மாறுமோ?*
(பழமை பேசிக் கொண்டிருந்தால் பசி மாறிவிடுமா?)

*முற்றத்தெ முல்லைக்கு மணமில்லா*

(வாசலில் இருக்கின்ற மல்லிகைப் பூவிற்கு மணம் கிடையாது)

*காரியம் காணான் கழுதக்காலும் பிடிக்கணம்*

(காரியங்கள் நடக்க வேண்டுமெனில் கழுதையினுடைய கால்களையும் பிடிக்க வேண்டும்)

மேலும், பழமொழிகளில் தலைப்புகளுக்கிடையிலும், முடிவுரைகளுக்கிடையிலும் சமநிலை அமைவதைக் காணமுடிகின்றது.

*நல்ல மாட்டுக்கு ஒரு சூடு*
*நல்ல பிள்ளைக்கு ஒரு அடி*

இந்தப் பழமொழியில் நல்ல மாடு, நல்ல பிள்ளை இடையே ஒப்புமை காண்க. ஒரு சூடு, ஒரு அடி இரண்டும் மேற்கண்ட இருவேறுபட்ட சிறப்புகளுக்கு காரணமாய் இருப்பதையும் அறிய முடிகின்றது.

*முருங்ஙயெ ஒடிச்சு வளர்த்தனம்*
*மக்களெ அடிச்சு வளர்த்தனம்*
(முருங்கையை ஒடித்து வளர்க்க வேண்டும்
குழந்தைகளை அடித்து வளர்க்க வேண்டும்)

இந்த மலையாளப் பழமொழியில் முருங்ஙயெ, மக்களை என்பதன் இடையே ஒப்புமை இருப்பதைக் காணலாம். ஒடிச்சு வளர்த்தனம், அடிச்சு வளர்த்தனம் இரண்டும் மேற்கண்ட இருவேறுபட்ட சிறப்புகளுக்குக் காரணமாய் இருக்கின்றன என்பதையும் அறிய முடிகின்றது.

### 2.5.1.3 காரணச் சமநிலைப் பழமொழிகள்

டண்டிஸ் சமனிலைப் பழமொழிகளுள், காரணச் சமனிலைப் பழமொழிகள் என்ற ஒன்றினையும் குறிப்பிடுகின்றார். எங்கு A உள்ளதோ அங்கு B

இருக்கும் என்ற வாய்ப்பாட்டில் அமையும் பழமொழிகளிலெல்லாம் A = B என்ற அடிப்படைச் சமனிலை வாய்ப்பாட்டையே சார்ந்தமைந்திருக்கும் என்று கூறுகிறார். இத்தகைய சமனிலைப் பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன.

*தாங்கற பக்கந்தான் தளர்ச்ச வரும்*

*கோமணத்துல ரெண்டு காசிருந்தா கோழி கூப்பிடப் பாட்டு பாடுவான்*

*அல்பனுக்கு வாழ்வு வந்தா அர்த்த ராத்திரியும் கொட பிடிப்பான்*

*கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது*

*மண்டையிருந்தா மசுரு மொளைக்கும்*

இப்பழமொழிகளில் சமனிலை கீழ்க்கண்ட முறையில் A = B என்றவாறு அமைவதைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| தாங்கற பக்கம் | = | தளர்ச்ச வரும் |
| கோமணத்துல ரெண்டு காசு | = | கோழி கூப்பிடப் பாட்டு |
| அல்பனுக்கு வாழ்வு | = | அர்த்தராத்திரியில கொட |
| கடுகு சிறுத்தாலும் | = | காரம் குறையாது |
| மண்டை | = | மசுரு மொளைக்கும் |

இதே போன்று மலையாளத்தில்,

*தீயில்லாதெ புகையில்லா*
(தீயில்லாமல் புகை வராது)

*புகஞ்ஞ கொள்ளி புறத்து*
(புகைந்து கொண்டிருந்த விறகு வெளியில்)

சமனிலை கீழ்கண்ட முறையில் A = B என்றவாறு அமைந்துள்ளதைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| தீ இல்லாமல் | = | புகையில்லா |
| புகஞ்சு கொள்ளி | = | புறத்து |

இன்ன காரணத்தினால் இன்ன விளைவு ஏற்படும் என்ற மேற்கண்ட அமைப்புடைய பழமொழிகள் வேறொரு தன்மையில் தமிழில் அமைகின்றன.

*மேட்டுக்காட்ட ஓட்டுனவனும் கெட்டான்*
*மேனா மினுக்கியக் கட்டினவனும் கெட்டான்*

*நீசத் தண்ணியும் மொளகும் குடிச்சவன் பணக்காரனாயிட்டடான்*
*பாலும் பழமும் குடிச்சவன் ஏழையும் ஆயிட்டான்*

*பாம்பு கடிச்சு பொளச்சவனும் உண்டு*
*செருப்பு கடிச்சு செத்தவனும் உண்டு*

இதே போன்று மலையாளத்தில்,

*தலயில் வெச்சா பேனரிக்கும்*
*தரயில் வெச்சா உறும்பரிக்கும்*
(தலையில் வைத்தால் பேன் அரித்து விடும்
தரையில் வைத்தால் எறும்பு அரித்து விடும்)

*இறச்சிக்கு போயவன் விரச்சு சத்து*
*வீட்டிலிருன்னவன் கொதிச்சு சத்து*
(கறி வாங்கப் போனவன் வெரச்சுச் செத்தான்
காத்திருந்தவன் ஆசை வைத்து செத்தான்)

போன்றவை இன்ன காரணத்தினால் இன்ன விளைவு ஏற்படும் என்ற அமைப்புடைய மலையாளப் பழமொழிகளாக அமைந்துள்ளன.

வேறு சில பழமொழிகளில் இழைவுக்கூறு (Textural Feature) சிறிது மாறுபட்டிருப்பினும் மேற்கண்ட பழமொழிகளைப் போன்றே சமனிலைத் தன்மை அமைந்திருப்பதைக் காணலாம். விளைவினைச் சுட்டுகின்ற வினை ஒரே ஒரு இடத்தில் மட்டுமே இருக்கும். வினை இறுதியிலே அமைந்து விடுதல் குறிப்பிடுதற்குரியது.

*ஏரோட்டாத நெலமும்*
*அப்பன் திட்டாத புள்ளயும் – உருப்படாது*

*தென்னமரத்து நெழலும்*
*தேவடியா உறவும் – நெலைக்காது*

*இரும்பு புடிச்சவன் கையும்*
*சிரங்கு புடிச்சவன் கையும் – சும்மா இருக்காது*

இதே போன்ற அமைப்பு மலையாளத்தில்,

*எறிஞ்ஞ கல்லும்*
*பரஞ்ஞ வாக்கும் – திரிச் செடுக்கானாவில்லா*
(எறிந்த கல்லும்
சொன்ன சொல்லும் – திரும்ப எடுக்க முடியாது)

தமிழில் இருக்காது, முடியாது, இல்லை என்று கூறுவது போன்று மலையாளத்தில் இல்லா என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேற்கூறப்பட்ட தமிழ் மலையாளப் பழமொழிகளில் செய்யக்கூடாத செயலைச் செய்தால் விளைவு தீமை பயப்பதாக அமையும் என்ற கருத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது. இவ்வமைப்பில் மலையாளத்தில் ஒரு பழமொழி மட்டுமே கிடைத்துள்ளது.

மேலும் இரண்டு பழமொழிகள் இணைந்து சமனிலை பழமொழிகளாக அமைவதையும் காணலாம்.

*பயிரு பாக்காம கெட்டுது*

*மாடு மேய்க்காம கெட்டுது*

இப்பழமொழியில் பயிரும், மாடும் கெடுதற்கு காரணம் அவை கெடாமல் இருப்பதற்கு வேண்டியவற்றைச் செய்ய வேண்டும் என்பதாகும். இந்த அமைப்பில் ஒரு தமிழ்ப் பழமொழி மட்டுமே கிடைத்துள்ளது. மலையாளத்தில் இது போன்ற அமைப்புடன் இருக்கக் கூடிய பழமொழிகள் கள ஆய்வில் கிடைக்கவில்லை.

### 2.5.2 முரணுடைய பழமொழிகள்

பல்வேறுபட்ட முரண்களுடன் அமைந்திருக்கக் கூடிய பழமொழிகளை முரணுடைப் பழமொழிகள் என்கிறோம். சமனிலைப் பழமொழிகள் மட்டுமின்றி முரணுடைய பழமொழிகளும் தமிழிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன. முரணுடைய பழமொழிகளைப் பற்றி டண்டிஸ் குறிப்பிடுகையில் "பழமொழிகளில் பல்வேறுபட்ட முரணுடைய வடிவங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. மிக எளிமையாக அமையும் ஒன்று எதிர் மறுத்தல் (Negation) ஆகும் (எதிர்மறுத்தல் என்பது நேர்சமனிலையை மறுப்பது). இரண்டு தவறுகள் ஒரு நல்லது ஆவதில்லை (Two Wrongs Don't Make a Right). இங்கு அடிப்படை வாய்ப்பாடு $A \neq B$ என்பதாகும். இங்கு இரண்டு $\neq$ ஒன்று (இரண்டுக்கு ஒன்று சமமல்ல), தவறுகள் $\neq$ நல்லது (தவறுகள் நல்லது ஆகா) என்ற முறையில் எதிர்மறுத்தல் வலிமையாக அமைவதைக் காணலாம்"[10] என்கிறார்.

எதிர் மறுத்துச் சொல்லப்படும் எதிர்மறைகளைக் கொண்ட பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் கீழ்வருமாறு சுட்டப்படுகின்றன.

*கழுதையை கொண்டு வூட்டுல வெச்சாலும் கால் கால்ங்கற புத்தி போகாது*

*வளையாமாரி வேலைக்குப் போனாலும் கூலி கிடைக்காது*

*தோலப் பாத்து மாடு புடிச்சா தொழிலுக்கு ஆகாது*

மேற்கூறப்பட்ட பழமொழிகளிலும் போகாது, கிடைக்காது, ஆகாது போன்ற சொற்கள் எதிர் மறுத்து கூறுவதாக அமைந்துள்ளது என்பதை உணர முடிகின்றது. இதே போன்று மலையாளத்தில்,

*அழகுள்ள சக்கயில் சுளயில்லா*

(அழகாக இருக்கின்ற பலாப்பழத்தில் சுளைகள் இல்லை)

*கண்டது பரஞ்ஞா கஞ்ஞியில்லா*

(பார்த்ததைக் கூறினால் கஞ்சி இல்லை)

*கண்ணிரிக்கும்போ காழ்ச்சயறியில்லா*

(கண் இருக்கும் பொழுது காட்சி தெரியாது)

*நாலு தல சேரும் நாலு முல சேரில்லா*

(நான்கு தலைகள் சேர்ந்துவிடும் நான்கு முலைகள் சேராது)

*பறயன்டெ முற்றத்து பசு வாழுகயில்லா*

(பறையன் சாதியிலுள்ளவர்களின் வீட்டு முற்றத்தில் பசு வாழாது)

போன்ற பழமொழிகளில், தமிழில் இல்லை, முடியாது என்பதைக் குறிப்பிடுவதைப் போன்று, மலையாளத்தில் இல்லா என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகின்றது.

வெளிப்படையாக எதிர்மறையின்றித் தமிழ் மலையாளப் பழமொழிகளில் பல்வேறு முரண்கள் காணப்படுகின்றன. முரணுடைய பழமொழிகளே தமிழிலும் மலையாளத்திலும் மிகுதி என்று கூறலாம். கீழ்க்கண்ட பழமொழிகள் முரணுடைய பழமொழிகளுக்குச் சில சான்றுகளாக அமைகின்றன.

*ஒரு பொண்டாட்டி கட்டுனவனுக்கு உரியில சோறு*
*பத்து பொண்டாட்டி கட்டுனவனுக்கு தெருவுல சோறு*

*வீட்டுக்குப் பொண்டாட்டி வேம்பு*
*நாட்டுக்குப் பொண்டாட்டி கரும்பு*

*ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு*
*பெட்டியில இருக்கற மீனும் போச்சு*

மேற்கண்ட பழமொழிகளில் முதலிரண்டிலும் அமையும் எதிர் நிலைகளையும் தலைப்புக்களிலும் முடிவுரைகளிலும் முரண் அமைவதையும் காணமுடிகிறது.

| | | |
|---|---|---|
| ஒரு பொண்டாட்டி கட்டுனவன் | x | பத்து பொண்டாட்டி கட்டுனவன் (தலைப்பு) |
| உரியில சோறு | x | தெருவுல சோறு (முடிவுரை) |
| வீட்டு | x | நாட்டு (தலைப்பு) |
| வேம்பு | x | கரும்பு (முடிவுரை) |

இறுதியில் சொல்லப்பட்ட பழமொழியிலும் முரண் வெளிப்படையாக அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

இதே போன்று மலையாளத்தில்,

*நாலு தல சேரும்*
*நாலு முல சேரில்லா*
(நான்கு தலைகள் சேரும்
நான்கு முலைகள் சேராது)

மேற்கண்ட இப்பழமொழியில் எதிர் நிலையினையும், தலைப்பிலும் முடிவுரையிலும் முரண் அமைந்துள்ளதையும் காணமுடிகிறது.

| | | |
|---|---|---|
| நாலு தல | x | நாலு முல (தலைப்பு) |
| சேரும் | x | சேரில்லா (முடிவுரை) |

என்ற பழமொழியில் முரண் வெளிப்படையாக அமைந்தள்ள நிலையினைக் காணலாம்.

### 2.5.2.1 வேறுபடுத்திக் காட்டும் முரணுடைய பழமொழிகள்

"B யை விட A சிறிது

B யை விட A பெரிது

என்ற வாய்ப்பாட்டில் அமைவனவெல்லாம் சமனிலை என்று சொல்வதை விட வேறுபடுத்திக் காட்டும் பண்பினைக் கொண்டது என்பதால் முரணுடைய பழமொழிகள்"[11] என்கிறார் டண்டிஸ்.

டண்டிஸ் அவர்கள் கூறிய அமைப்பின்படி தமிழிலும் மலையாளத்திலும் பழமொழிகள் கிடைத்துள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

*அண்ணன் புள்ளய வளத்தறத விட*
*தென்னம் புள்ளய வளத்தறதே மேல்*

*அப்பன் வீட்ல யானைமேல உக்காந்து சோறுண்டாலும்*
*புருசன் வீட்ல பிச்சையெடுத்து உண்பது மேல்*

*தூரத்திலிருக்கிற சொந்தக்காரன விட*
*பக்கத்திலிருக்கிற அயலானே வாசி*

மேற்கண்ட பழமொழிகளில் முதல் விளக்கவுரை, இரண்டாவது விளக்கவுரைக்கு முரணாக அமைந்துள்ளது. இங்கு விட, மேல், வாசி போன்ற சொற்கள் வேற்றுமைப்படுத்தப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இதே போன்று மலையாளத்தில்,

*அம்மாயம்மா ஓடைக்கண சட்டிக்கு வெலயில்லா*
*மருமகள் ஓடைக்கண சட்டிக்கு வெலையுண்டு*
(மாமியா உடைத்தால் மண்கலம்
மருமகள் உடைத்தால் பொன்கலம்)

*கொதிச்சது கிட்டில்லா விதிச்சதே கிட்டூ*

ஆசைப்பட்டது கிடைக்காது விதித்ததுதான் கிடைக்கும்

போன்ற மலையாளப் பழமொழிகளில், விட மேல் என்பதற்கு மதிப்பில்லை, மதிப்பு உள்ளது என்ற அடிப்படையில் வெலயில்லா, வெலயுண்டு, கிடைக்காது, கிடைக்கும் போன்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளமைக் காணமுடிகின்றது.

மேற்கண்ட பழமொழிகளைப் போன்ற முரணுடைய பழமொழிகள் வேறொரு முறையிலும் விளக்கப்படவுள்ளன. இதற்கு இது பெரிது என்ற முறையிலும், இன்ன காரணத்தினால் இது இதற்குப் பெரிது, இவன் இவனுக்குப் பெரியவன் என்ற முறையிலும் முரண் அமையும். இவற்றைக் காரண முரணமை பழமொழிகள் எனலாம். தமிழ் – மலையாள பழமொழிகளில் இவ்வமைப்பு காணப்படுகின்றது.

*ஆட்டுக்குப் பஞ்சாயத்துப் பண்ணப் போயி*

*ஓநாய் வக்கீலா மாறுச்சாம்மா*

*யானைக்குச் சிட்டுக்குருவி மத்தியஸ்தம் செய்த மாதிரி*

மேற்கண்ட இரண்டு பழமொழிகளில் இதற்கு இது பெரிய அதாவது ஆடினை விட ஓநாய் பெரியதாகவும், யானையைவிட சிட்டுக்குருவி பெரியதாகவும் மாறிய நிலையினைக் காண முடிகின்றது.

*குதிரை இல்லாத நாட்டுல*

*கழுத அரசாண்ட மாதிரி*

குதிரை அரசாட்சி செய்ய வேண்டிய நாட்டில் குதிரை இல்லாததால் கழுதை அரசாட்சி செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது என்பது இன்ன காரணத்தினால் இது இதற்குப் பெரிது, இவன் இவனுக்கு பெரியவன் என்ற காரண முரணமை பழமொழியாக அமைந்துள்ள நிலையினையும் மேற்கண்ட பழமொழியின் மூலம் உணர முடிகிறது. மேலும்,

*நரிக்கு நாட்டாம குடுத்தா கெடைக்கு ரெண்டு வெள்ளாடு கேக்குமாமா*

எனும் பழமொழியும் மேற்கூறப்பட்ட கருத்திற்கிணங்க அமைந்துள்ளது.

மலையாளத்தில் இவன் இவனுக்குப் பெரியவன் என்ற அமைப்பில் இருக்கக் கூடிய பழமொழிகள் மட்டுமே கள ஆய்வின் போது கிடைத்துள்ளன.

*குருடன் நாட்டில் கோங்கண்ணன் ராஜாவு*
(குருடாக இருப்பவனுடைய ஊரில் மாருகண்ணுடன் இருப்பவன் ராஜாவாம்)

*மூக்கில்லா ராஜ்யத்து முரிமூக்கன் ராஜாவு*
(மூக்கு இல்லாத நாட்டில் மொண்ண மூக்கன் ராஜாவாம்)

போன்ற தமிழ் – மலையாள பழமொழிகளில் காரண முரணமை அமைந்துள்ளதை அறிய முடிகின்றது.

செயலைச் செய்தவர் ஒருவர், அதனுடைய பயனை அனுபவிப்பவர் வேறொருவர், அல்லது செயல் நடந்தது ஓரிடம், விளைவு வேறிடம், அல்லது செயல் நடந்தது ஓரிடம் சீற்றம் பிறந்தது வேறொரிடம் என்ற முறையில் முரண் அமைந்துள்ள தமிழ் மலையாளப் பழமொழிகளும் உள்ளன.

*பிச்சை எடுக்கறாரு பெருமாளு*
*அதைப் புடுங்கி திங்கறாரு அனுமாரு*

*நல்லவாயன் சம்பாதித்தத*
*நாரவாயன் தின்னுபாக்கறான்*

*சம்பா வௌஞ்சு சாஞ்சு கெடக்குது*
*உண்பாரில்லாம ஊர்க்குருவி மேயுது*

*கரையான் புத்தெடுத்து பாம்பு குடியிருந்த மாதிரி*

போன்ற பழமொழிகள் செயலைச் செய்தவர் ஒருவர் அதனுடைய பயனை அனுபவிப்பவர் வேறொருவர் என்ற தன்மையில் அமைந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

*வெல்லம் தின்னவன் ஓடிப்போயிட்டான்*
*வெரல சூப்பினவன் மாட்டிக்கிட்டான்*

*ஆடி மாசத்துல குத்துன குத்து ஆவணி மாசத்துல வலியெடுத்துச்சாமா*

எனும் பழமொழிகள் செயல் நடந்தது ஒரிடம், சீற்றம் பிறந்தது வேறொரிடம் என்ற முறையில் முரண் அமைந்துள்ளதை உணரமுடிகின்றது. இதே போன்ற அமைப்பு மலையாளத்தில்,

*முகம் நன்னாவாத்ததினு கண்ணாடி உடச்சிட்டு காரியமில்லா*
(முகம் நல்லா இல்லாததுக்கு கண்ணாடி உடைச்சுக் காரியமில்லை)

*அங்காடியில் தோற்றதினு அம்மயோடானோ கோவம் காணிக்கணு*
(அங்காடியில் தோல்வியடைந்ததற்கு அம்மாவிடமா கோபத்தைக் காண்பிப்பது).

எனும் மலையாளப் பழமொழிகள் செயல் நடந்தது ஒரிடம், சீற்றம் பிறந்தது வேறொரிடம் என்ற தன்மையில் அமைந்துள்ளன. தன்னுடைய முகம் நன்றாக இல்லை என்ற கோபத்தில் கண்ணாடியை உடைத்து விடுகின்றனர். அதே போன்று அங்காடியில் தோல்வியடைந்ததற்கு அங்குள்ளவர்களிடம் கோபத்தைக் காண்பிக்காமல் வீட்டிற்கு வந்து அக்கோபத்தை அம்மாவிடம் காண்பிக்கின்றார் என்பதைக் கூறும் விதமாக அமைந்துள்ளன.

செய்வது ஒன்று அதனுடைய விளைவு அதற்கு முற்றிலும் மாறான வேறொன்று என்ற முறையிலும் தமிழ் மலையாள பழமொழிகளில் முரண் அமைகின்றன.

*வெட்டீட்டு வான்னா வேரோட புடுங்கீட்டு வாரான்*

*அணலேறி மரம் சாயோ கொசுவு போயி முட்டுக்காலு குடுத்துது*

*தாகத்துக்குத் தண்ணி கேட்டா மேகத்துக்குப் போறான்*

*குளிக்கப் போயி சேறு பூசிக் கொள்ளலாமா?*

மேற்கூறப்பட்ட பழமொழிகளில், விறகினை வெட்டிக் கொண்டு வரக் கூறினால் மரத்தினை வேருடன் பறித்துக் கொண்டு வருகிறார் என்றும், அணில் ஏறியவுடன் மரம் சாய்ந்துவிட்டது. அதற்குக் கொசு சென்று அதனுடைய முட்டுக்கால் கொடுத்து மரத்தினை விழாமல் தடுத்து நிறுத்திவிட்டது என்றும், குடிப்பதற்கு தண்ணீர் கேட்டால் மேகத்திற்குச் சென்று வருகிறேன் என்றும், குளிக்கச் சென்று குளித்துவிட்டு வராமல் அங்குள்ள சேற்றினைப் பூசிக் கொண்டு வரலாமா? என்று கேட்பதாகவும் அமைந்துள்ளன. மலையாளத்தில்,

*நம்மளொன்னு விஜாரிக்கும்போ*
*தெய்வமொன்னு விஜாரிக்கும்*
(நாம் ஒன்று நினைக்கும் பொழுது
கடவுள் ஒன்று நினைப்பார்)

*மனுசன் கொதிச்சால் நடக்கில்லா*
*தெய்வம் விதிச்சாலே நடக்கு*
(மனிதன் ஆசைப்பட்டால் நடக்காது
கடவுள் விதித்தால் தான் நடக்கும்)

போன்ற பழமொழிகளில் மனிதர்கள் ஒன்று நினைத்தார்களெனில் அது நடைபெறாது. கடவுள் விதித்தது மட்டுமே நடக்கும் என்றும், நாம் ஒன்று நினைத்து

அதை செய்யலாம் என்று செய்வோம். ஆனால் அங்கு கடவுள் வேறொரு விதமாக நினைத்து செயல்படச் செய்வார். செய்வது ஒன்று அதனுடைய விளைவு அதற்கு முற்றிலும் மாறான வேறொன்று என்ற முறையில் ஓரடி, ஈரடி பழமொழிகள் அமைந்துள்ள முரண்களைக் காணமுடிகின்றன.

குறிப்பிட்ட ஒரு செயல் நடக்க வேண்டிய சமயத்தில் அதை செய்யாமல் வேறொன்றுக்குப் போய்விடுதலும் உண்டு என்ற முறையிலும் தமிழிலும் மலையாளத்திலும் பழமொழிகள் உள்ளன.

*காத்திருந்தவன் பொண்டாட்டியை நேத்து*
*வந்தவன் கொண்டு போயிட்டான்*

*வெண்ணை தெரண்டு வரும்போது தாழி ஒடஞ்ச கதையாயிருக்கு*

*கடையும் போது வராது வெண்ணெய்*
*குடையும் போதா வரப் போகுது*

*புண்ணியத்துக்கு வந்த மாட்டப் பல்லப்புடுங்கிப் பாத்தாங்களாமா*

மேற்கூறப்பட்ட கருத்திற்கிணங்க இருக்கக் கூடிய மலையாளப் பழமொழிகளைக் கீழ்வருமாறு காணலாம்.

*பிக்சய்க்கு வந்நவன் பெண்ணுங் கொண்டு போயி*
(பிச்சை எடுக்க வந்தவன் பொண்ணையும் கூட்டிச் சென்றுவிட்டான்)

*முயலு இளகும்போ நாய் தூரான் போயி*
(முயல் அசையும் பொழுது நாய் மலங்கழிக்கச் சென்றுவிட்டது)

*நிலா வெளிச்சம் உண்டெந்நு கருதி வெளுக்குவோளம் கக்கான் பாடில்லா*
(நிலா வெளிச்சம் இருக்கிறது என்று நினைத்து விடியும் வரை திருடக்கூடாது)

ஒன்றைச் செய்யச் சொல்ல அதற்கு முற்றிலும் மாறான வேறொன்றைச் செய்து விடுதலும் உண்டு என்பதை உணர்த்தும் முரணுடைய பழமொழிகளும் உள்ளன.

*ஆத்திரத்துக்கு ஆள் விட்டோனா*
*சாத்தரத்துக்கு வந்து சேருவான்*

*சாவுக்கு வான்னா ஏழுக்கு வாரான்*

*வந்த வேலையை விட்டுட்டு பந்தக்கால புடுச்ச கதையாயிருக்கு*

இதே போன்று மலையாளத்தில்,

*பாலு குடிச்சிட்டு கெடக்கீலு கிடக்காம் பரஞ்ஞா*
*கள்ளு குடிச்சிட்டு கட்டையிலே கெடக்கூனு*
(பால் குடித்துவிட்டு மெத்தையில் படுக்கச் சொன்னால்
கள்ளு குடித்துவிட்டு விறகு கட்டையில் படுக்கிறான்)

என்ற ஒரு மலையாளப் பழமொழி மட்டுமே ஒன்றைச் செய்யச் சொல்ல அதற்கு முற்றிலும் மாறான வேறொன்றைச் செய்து விடுதலும் உண்டு என்பதை உணர்த்தும் முரணுடைய பழமொழியாக கள ஆய்வின் போது கிடைத்துள்ளது.

எளிய சிறிய ஒரு செயலைச் செய்யாதவர் பெரிய ஒன்றைச் செய்வாரா என்ற முறையில் தமிழில் முரணுடைய பழமொழிகள் அமைவதைக் காணலாம்.

*எந்திரிச்சு நிக்கவே முடியல ஒம்பது பொண்டாட்டி கேக்குதாமா*

*குப்பமேடு ஏறி கோழி புடிக்காதவன்*
*வானம் ஏறி வைகுந்தமா போவான்*

*சோத்துக்குள்ள கிடக்கற ஈயை எடுக்காதவன்*
*சேத்துல கிடக்கற எருமைவயா தூக்குவான்*

மேற்கூறப்பட்ட அமைப்புடன் ஓரடி, ஈரடிப் பழமொழிகள் தமிழில் மட்டுமே காணப்படுகின்றன. மலையாளத்தில் இது போன்ற அமைப்புடன் இருக்கக்கூடிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைக்கவில்லை.

எளிய, சிறிய ஒன்றைச் செய்யாதவன் அரிய பெரிய ஒன்றைச் செய்வானா என்ற மேற்கண்ட முரண் அமைப்புடைய பழமொழிகளுக்கு மாறாகப் பெரிய ஒரு செயலுக்கே ஒத்துவராதவன், சிறிய ஒன்றுக்கு ஒத்து வருவானா என்ற முரணமைப்பிலும் பழமொழிகள் உள்ளன. இந்தக் கருத்திற்கேற்றாற் போல அமைந்திருக்கக் கூடிய ஒரு பழமொழி மட்டுமே தமிழில் கிடைத்துள்ளது. மலையாளத்தில் இந்த அமைப்புடன் இருக்கக் கூடிய பழமொழி இடம்பெறவில்லை.

*கையப் புடிச்சு இழுத்தே வராதவ*
*கண்ணக் காட்டுனா வருவாளா*

உண்மை நிலை ஒன்றாயிருக்கும் பொழுது அதற்கு மாறான நிலையையும் சுட்டி முரண் அமைப்பது உண்டு. ஒருவன் துன்புறும் பொழுது மற்றவன் இன்பத்திலிருப்பதும், ஒருவன் வறுமையிலிருக்கும் போது மற்றொருவன் அரிய ஒன்றை விரும்புவதும், ஒருவன் எளிய ஒன்றுக்கு கவலைப்படும் போது மற்றொருவன் விலையுயர்ந்த ஒன்றை நாடுவதும், தன்னவன் துயருறும் போது அயலவனுக்கு உதவுவதும் அவற்றில் காணப்படும் முரண். இத்தகைய பழமொழிகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. அவற்றில் சில பழமொழிகள் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளன.

*ஊரு ரெண்டானா கூத்தாடிக்குக் கொண்டாட்டம்*

*தாய் தவிட்டுக்கு அலைகிறபோது புள்ள இஞ்சிப் பச்சடி கேட்டு அழுதுச்சா*

*குடிக்கறது கூழு கனா காணறது மச்சு மாளிகை*

*எனக்கே இஞ்சிப் பச்சடி இல்ல*
*உனக்கு தக்காளிப் பச்சடி கேக்குதா*

*அப்பனுக்கே ஒட்டுக் கோவணம் மகன இழுத்துப் போத்தூனுரான்*

ஒருவன் துன்புறும் பொழுது மற்றவன் இன்பத்திலிருப்பான் என்ற முரண் அமைப்புடன் இருக்கின்ற ஒரு மலையாளப் பழமொழி மட்டுமே கிடைத்துள்ளது.

*ஆரான்றெ அம்மய்க்கு பிராந்து பிடிச்சா காணான் நல்ல சேலு*

(பிறருடைய அம்மாவிற்கு பைத்தியம் பிடித்தால் பார்ப்பதற்கு நன்றாக இருக்கும்)

போன்ற ஓரடி, ஈரடி தமிழ் – மலையாளப் பழமொழிகள் மேற்கூறப்பட்ட கருத்திற்கிணங்க வந்துள்ளதைக் காணமுடிகின்றது.

பழமொழிகளில் முரண்கள் பல்வேறு முறைகளில் அமைகின்றன. அவற்றுள் ஒன்று ஒப்பீட்டு முறையில் அமைவதாகும். இவ்வமைப்பிற்கு முன்பாக ஒன்றைவிட மற்றொன்று நல்லது, உயர்ந்தது என்ற முறையில் அமையும் பழமொழிகளைக் கண்டோம். இங்கு ஒன்று போனாலும் மற்றொன்று போகாது, ஒன்று கிடைத்தாலும் மற்றொன்று கிடைக்காது, ஒருவர் கொடுத்தாலும் மற்றொருவர் கொடுக்க மாட்டார் என்ற முறையில் அமையக் கூடிய பழமொழிகளைக் கீழ்வருமாறு காணலாம்.

*அடிச்சவனோட பின்னால போனாலும் போகலாம்*
*நடிச்சவனோட பின்னால போகக்கூடாது*

*சாறு இல்லாம சோறு தின்னாலும்*
*சண்டையில்லாம சோறு திங்கமாட்டான்*

*எமனுக்கு ஒரு புள்ளய குடுத்தாலும்*
*உத்தாருக்கு ஒரு புள்ளயும் குடுக்கமாட்டான்*

*சாமி வரங்கொடுத்தாலும்*

*பூசாரி வரங்கொடுக்க மாட்டான்*

இதே போன்ற அமைப்புடன் இருக்கக் கூடிய மலையாளப் பழமொழிகள் கள ஆய்வில் கிடைக்கவில்லை.

### 2.5.2.2 வினா நிலையில் அமையும் முரணுடைய பழமொழிகள்

தமிழ் – மலையாளப் பழமொழிகளில் சில பழமொழிகள் வினாவை இறுதியில் கொண்டு முடிகின்றன. அல்லது இறுதியில் அமைந்துள்ள ஒலியழுத்தும் வினா நிலையை உணர்த்துகின்றன. இந்த வினாக்களுக்கு விடை எதிர்மறையாகவே முடியும். முடியுமா என்று முடிந்தால், முடியாது என்பதே விடை. இன்ன காரணத்தினால் ஒன்று மற்றொன்று ஆகுமா என்ற வாய்ப்பாட்டில் அமையும்.

*தங்கம் போட்டு உரசினாலும்*
*எருமை நிறம் வெளுக்குமா?*

*களுதப் பாலு குடிச்சா பொளச்சுக்கலாம்*
*நாய்ப்பாலு குடிச்சா பொளைக்க முடியுமா?*

*பாக்க மடியில மறைக்க முடியும்*
*தோப்ப தொப்பையில மறைக்க முடியுமா?*

*கேக்கறவன் கேனையா இருந்தா*
*கேப்பையில நெய் வடியுமா?*

மேற்கூறப்பட்ட பழமொழிகளில் முதல் விளக்கவுரைக் கூறுகள் (முதல் வரிகள்) காரணங்களாக அமைந்துள்ளன.

எருமை நிறம் வெளுக்குமா?
நாய்ப்பாலு குடிச்சா பொளைக்க முடியுமா?
தோப்ப தொப்பையில மறைக்க முடியுமா?

கேப்பையில நெய் வடியுமா?

போன்ற விளக்கவுரைக் கூறுகள் ஒன்று மற்றொன்றாகாது என்ற முரணமைப்பில் அமைகின்றன. இதே போன்று மலையாளத்தில்,

*கோழி சவுட்டி குஞ்ஞு சாகுமோ?*

(கோழி மிதித்து குஞ்சு சாகுமா?)

*உருளுண்ண கல்லில் பாயலு பிடிக்குமோ?*

(உருண்டு கொண்டிருக்கின்ற கல்லில் பாசி பிடிக்குமா?)

போன்ற பழமொழிகள் வந்துள்ளன.

வினா நிலையில் அமையும் பழமொழிகள் முரண் அமைப்புடையவை. இன்ன காரணத்தினால் ஒன்று மற்றொன்றாகுமா என்ற அமைப்பில் வரக்கூடிய பழமொழிகளை மேற்கூறப்பட்ட பழமொழிகளின் மூலம் வழங்குவதைக் கண்டோம். அடுத்தப்படியாக காரணம் சுட்டாமல் ஒன்று மற்றொன்றாகுமா, இதற்கு இது தெரியுமா? என்ற அமைப்பிலும் பழமொழிகள் இருப்பதைக் காணலாம்.

*மேகத்துத் தண்ணி தாகத்துக்கு உதவுமா?*

*யானை காணாம போனா குண்டு சட்டில தேடுனா கிடைக்குமா?*

*விதையொன்னு போட்டு சொறயொன்னு மொளைக்குமா?*

*பசு வேறு நிறமானாலும் பால் வேறு நிறமாகுமா?*

*பூ வித்த காசு மணக்குமா, புலால் வித்த காசு என்ன நாறுமா?*

இதே போன்று அமைப்புடன் இருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகள் கீழ்வருமாறு கூறப்படுகின்றன.

*തനിക്കു പറ്റാത്ത കലം ഉടഞ്ഞാലെന്തു? ഇരുന്നാലെന്തു?*

(தனக்கு பயன்படாத பானை உடைந்தால் என்ன? இருந்தால் என்ன?)

*കൈപ്പ കുത്തിയാ കുമ്പിളങ്ങാ മുളെക്കുമോ?*

(பாகற்காய் விதைத்தால் பூசனிக்காய் முளைக்குமா?)

*വേഗോളം ഇരിക്കാവേ ആരോളം ഇരിക്കാൻ പറ്റില്ലേ*

(ஆக்கப் பொறுத்தவனுக்கு ஆறப் பொறுக்க முடியாதா?)

*പൊന്നിൻ കുടത്തിനു പൊട്ടെന്തിനു*

*പൊട്ടക്കുടത്തിനു വക്കെന്തിനു*

(தங்கக் குடத்திற்கு பொட்டு எதற்கு?

ஓட்டைக் குடத்திற்கு வக்கு எதற்கு?)

உண்மை நிலை ஒன்றாக இருக்க நினைப்பு வேறொன்றாக இருப்பதனாலும் முரண் அமையும். நிலையும் நினைப்பும் மாறுபட்டிருப்பது உலகியல்பு. இந்த நிலையும் நினைப்பும் மாறுபட்டிருப்பதை பழமொழிகள் முரண் நயத்துடன் கூறுகின்றன.

*குடிக்கிறது கூழ் கொப்பளிக்கிறதென்ன பன்னீரா*

*குடிக்கிறது கூழ் கனா காணறது மச்சு மாளிகை*

*ஒருத்தனுக்கு எந்திரிச்சு நிக்கவே வழியில்லை*

*அவனுக்கு ஏழு பொண்டாட்டி கேக்குதாம்*

மேற்கூறப்பட்ட கருத்திற்கேற்றாற் போன்று அமைந்திருக்கக் கூடிய மலையாளப் பழமொழிகள் கிடைக்கவில்லை.

### 2.5.2.3 ஒரு விளக்கக் கூறுடைய முரணமைப்புப் பழமொழிகள்

"ஒரு விளக்கவுரைக் கூறைக் கொண்டமைந்த பழமொழிகள் முரணற்றவை"[12] (Non - Oppositional) என்று குறிப்பிடுகிறார் டண்டிஸ். தமிழ்

மக்களிடையில் வழங்கும் பழமொழிகளிலும் ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள் பல, முரணற்றவையாக அமைகின்றன. இவற்றிற்கு மாறாக ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள் தமிழில் முரணுடையவையாகவும் அமைகின்றன. கீழே கூறப்படுகின்ற பழமொழி ஒரு விளக்கக் கூறுடன் ஒரு தலைப்பையும் ஒரு முடிவுரையையும் கொண்டு அமைவதைக் காணலாம்.

*ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது*

இங்கு 'ஏட்டுச் சுரைக்காய்' என்பது தலைப்பு ஆகும். 'கறிக்கு உதவாது' என்பது முடிவுரையாகும். இந்தப் பழமொழி ஒரு விளக்கவுரைக் கூறுடையது. ஏட்டுச் சுரைக்காய் என்பதை ஒரு விளக்கவுரைக் கூறாகவும், கறிக்கு உதவாது என்பதனை மற்றொரு விளக்கவுரைக் கூறாகவும் கொள்ள முடியாது. 'ஏட்டுச் சுரைக்காய்' என்பதை ஒரு விளக்கவுரைக் கூறாகக் கொண்டால் 'ஏடு' என்பதனைத் தலைப்பாகவும், 'சுரைக்காய்' என்பதனை முடிவுரையாகவும் கொள்ள வேண்டும். இவ்வாறு கொள்வது பொருத்தமற்றது. 'ஏட்டுச் சுரைக்காய்' என்பதனை ஒரே அலகாகத் தான் கொள்ள வேண்டும். 'சுரைக்காய்' என்பதனைத் தழுவும் தொடரே 'ஏடு' என்பது 'கறிக்கு உதவுவது' என்பதனை முடிவுரையாகக் கொள்வதே பொருத்தமாகும். மேற்கூறப்பட்ட கருத்திற்கேற்றாற் போன்று ஒரு தமிழ்ப் பழமொழி மட்டுமே இவ்வாறாக வந்துள்ளது. இது போன்ற மலையாளப் பழமொழிகள் கிடைக்கவில்லை.

### 2.5.2.4 நேர் எதிர் முரண் அமைப்புப் பழமொழிகள் (Antithetical Contradiction)

நேர் எதிர் முரண் அமைப்புடைய பழமொழிகள் என்று ஒரு வகைப் பழமொழிகளின் அமைப்பை டண்டிஸ் குறிப்பிடுகின்றார் நேர் முரண் (Antithesis) என்பது ஒரு வாக்கியத்தில் ஒரு பகுதியின் மொழியமைப்பு அல்லது சிந்தனை ஒன்றுக்கொன்று முரணாக அமையலாம். மொழியியல் கோட்பாட்டில் துணைவழக்கு என்பதற்குச் சமமான ஒப்புமை (Analogous) வாய்ந்தது. இந்த நேர் எதிர் முரணமைப்புடைய பழமொழிகள் உன்னிடம் A இருந்தால் B இருக்க முடியாது. B இருந்தால் A இருக்க முடியாது என்பது போன்றது என்கிறார் டண்டிஸ்.

"இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட ஒலிகள், ஒன்று வரும் சூழ்நிலையில் மற்றையது வராமல், அதனால் அவை ஒரே ஒலியனின் மாற்றொலிகள் என்றாகுமாயின், அச்சூழ்நிலையைத் துணைநிலை வழக்கு என்கிறோம்"[13]. ஆங்கிலத்தில் P என்ற ஒலியை எடுத்துச் சொல் முறையில் P யை அடுத்து உயிர் வருமாயின், அதனை மூச்சொலியாக உச்சரிக்கின்றனர். Pit என்ற சொல்லை Pit என்று உச்சரிக்கின்றனர். ஆனால் S என்ற ஒலியனை அடுத்து வரும்பொழுது, சாதாரண அடைப்பானாக (Spit) உச்சரிக்கின்றனர். (Spit) ஆங்கிலேயர் இவ்விரு ஒலிகளையும் வேறாகக் கருதுவதில்லை. இரண்டும் P என்ற ஒலியாகவே கருதுகின்றனர். P வரும் இடத்தில் P வருவதில்லை. இவை இரண்டும் ஒரே ஒலியனின் இருவேறு மாற்றொலிகள் என்கிறார் முத்துச்சண்முகன் அவர்கள்.

ஒன்று வரும் சூழலில் மற்றொன்று வராது என்ற அளவில் இங்குப் பழமொழிகளின் அமைப்பு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

*நகம் நனையாம நத்தை எடுக்க முடியுமா?*

நகமும் நனையக்கூடாது நத்தையை எடுக்கவும் வேண்டும். இரண்டும் நடைபெறுவது இயலாது. இத்தகைய பழமொழிகள் தமிழ் மக்களிடையிலும் வழக்கில் உள்ளன. இதே போன்றுதான் மலையாளத்தில்,

*உத்தரத்திலிரிக்குன்னது எடுக்குகயும் வேணம்*
*கக்ஷத்திலிரிக்குன்னது களயானும் பாடில்லா*
(மேற்கூரையில் இருப்பது எடுக்கவும் வேண்டும்
அக்குலில் இருப்பது விழுந்து போகவும் கூடாது)

எனும் மலையாளப் பழமொழியானது, வீட்டின் மேற்பகுதியில் வைத்திருக்கின்ற பொருளை எடுக்கவும் வேண்டும். அக்குல் பகுதியில் வைத்திருக்கின்ற பொருள் விழவும் கூடாது. இந்த இரண்டும் நடைபெறுவது இயலாது. இத்தகைய பழமொழிகள் மலையாள மக்களிடையிலும் வழக்கில் உள்ளன.

*கூழுக்கும் ஆசை மீசையும் நனையக் கூடாது*

கூழ் குடிக்க வேண்டும் என்றால் மீசையை எடுத்து விட வேண்டும். மீசை நனையக் கூடாது. மீசை வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையிருந்தால் கூழ் குடிப்பதை நிறுத்த வேண்டும். இதே போன்று அமைப்புடன் இருக்கக் கூடிய மலையாளப் பழமொழிகள் கள ஆய்வில் கிடைக்கவில்லை.

### 2.5.3 முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள்

முரணுடனும் முரணின்றியும் சமனிலையுடன் வரக்கூடிய பழமொழிகளை முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் எனலாம். டண்டிஸ் அவர்கள் "சமநிலைப் பண்பும் முரணும் ஒரே பழமொழியில் அமையலாம். இணைப் பண்பும் முரணும் ஒரே பழமொழியில் ஒரே சமயத்தில் அமைதல் பழமொழிகளின் இயல்பாகும். பழமொழிகள் காணப்படும் எல்லாப் பண்பாட்டிற்கும் இது பொதுவாகும் §u) என்பதே ஊகமாகும்"[14] என்கிறார்.

மேற்கூறப்பட்ட கருத்திற்கிணங்க டண்டிஸின் ஒரு பழமொழியை சான்றாகக் கீழ்வருமாறு காணலாம்.

'ஒருவனுக்கு உணவு மற்றவனுக்கு நஞ்சு' (One Man's Meat is Another Man's Poison) இங்கு உணவு (வாழ்வு) – நஞ்சு (சாவு) இவற்றிற்கிடையே சமனிலையையும் முரணையும் காண்க என்கிறார் டண்டிஸ்.

மேற்கூறிய கருத்திற்கிணங்க தமிழ்ப் பழமொழிகளிலும், மலையாளப் பழமொழிகளிலும் சமனிலைப் பண்பும் எதிர்நிலைப் பண்பும் கொண்ட பழமொழிகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

*கூத்தாடி கிழக்கே பார்ப்பான் கூலிக்காரன் மேற்கே பார்ப்பான்*

*பத்துப் பேருக்குப் பல்லுக்குச்சி ஒருத்தனுக்குத் தலைசுமை*

*துளுக்கன் உண்டு கெட்டான் பார்ப்பான் உடுத்திக் கெட்டான்*

*பொறுத்தவன் பூமியாள்வான் பொங்கினவன் காடாள்வான்*

மேற்கூறப்பட்ட பழமொழிகளில் முரண் வேறுபாடு அமைவதைத் தெளிவாகப் பிரித்து ஒப்பிட்டு கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| கூத்தாடி | x | கூலிக்காரன் |
| கிழக்கே | x | மேற்கே |
| பத்துபேருக்கு | x | ஒருத்தனுக்கு |
| பல்லுக்குச்சி | x | தலச்சுமை |
| துளுக்கன் | x | பார்ப்பான் |
| உண்டு | x | உடுத்தி |
| பொறுத்தவன் | x | பொங்கினவன் |
| பூமியாள்வான் | x | காடாள்வான் |

இதே போன்று மலையாளத்தில்,

*வேணமெங்கில் வேலியில் காய்க்கும்*
*வேண்டங்கில் கொம்பத்தும் காய்க்கில்லா*
(வேணும் என்றால் வேலியிலும் காய்கள் காய்க்கும்
வேண்டாம் என்றால் மரத்தின் உச்சியிலும் காய்கள் காய்க்காது)

*பாலம் கடக்குவோளம் நாராயணா*
*பாலம் கடந்நால் கூராயணா*
(பாலத்தைக் கடந்து செல்லும் வரை நாராயணா
பாலத்தைக் கடந்து சென்று முடிந்துவிட்டால் கூராயணா)

போன்ற மலையாளப் பழமொழிகளில் வரக்கூடிய முரண் வேறுபாடு அமைவதைத் தெளிவாகப் புரிந்து ஒப்பிட்டுக் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| வேணமெங்கில் | x | வேண்டங்கில் |
| காய்க்கும் | x | காய்க்கில்லா |
| கடக்குவோளம் | x | கடந்நால் |
| நாராயணா | x | கூராயணா |

போன்ற தமிழ் மலையாளப் பழமொழிகள் எதிர்நிலை அமைப்புடன் வந்திருக்கக் கூடிய நிலையினை மேற்கூறப்பட்ட பழமொழிகளின் மூலம் உணர முடிகின்றது.

## 2.6 உவம உருபு வரக்கூடிய பழமொழிகள்

தொல்காப்பியர் உவமை உருபுகள் முப்பத்தாறு என்று பொருளதிகாரம் உவமயியலில் (நூற்பா.11) கூறியுள்ளார். அந்த முப்பத்தாறு உவமை உருபுகளில் ஒன்று 'போல'. இந்த போல என்ற உவமை உருபை வைத்துக் கொண்டு அமைந்திருக்கக் கூடிய பழமொழிகள் தமிழிலும் மலையாளத்திலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. மலையாள மொழியில் போல என்பதற்கு பதிலாக போலே அதாவது ல் + ஏ = லே என்ற நெடில் ஏகாரம் சேர்ந்த நிலையினைக் காணமுடிகிறது. முதலில் போல என்ற அமைப்புடன் வரக்கூடிய தமிழ்ப் பழமொழிகளை கீழ்வருமாறு காணலாம்.

*'ஓ'ன்னு கத்தவே முடியல கழுத போல கத்தவா*

*உலக்கையை முழுங்கிவிட்டு உப்பில்லாப் பத்தியம் இருப்பது போல*

*வெயிலில் வாடிப் போன கீரை தண்டு போல*

*செத்தவன் கையில வெத்தல பாக்கு கொடுத்தது போல*

*உள்ளங்கை நெல்லிக்கனிபோல*

*நகமும் சதையும் போல*

*வயிறு குடலைக் காட்டினாலும் வாழை நார் என்பது போல*

*நெறஞ்ச ஆத்துல பெருங்காயம் கரச்சது போல*

*ஆளப் பாத்தா அழகு போல*
*வேலையைப் பாத்தா எழவு போல*

*அரசனோட குடுமியைப் பிடிக்கலாமென்னு*
*அம்பட்டன் வேலையை விரும்பினது போல*

இதே போன்று மலையாளத்தில்,

*குந்தம் விழுங்கிய போலே நிக்கணு*
(வேல் விழுங்கியது போன்று நிக்கற)

*வலியச்சன் வரும்போ கொச்சச்சன் படிக்கு புறத்தாய போலே*
(பெரியப்பா வரும்போது சித்தப்பா வீட்டுப் படியின் வெளியில் போனது போல)

*அவிடெ மண்ணு திரிக்குன்னது ஆரானு நோக்கண்டா எந்நு பரஞ்ஞு போலே*
(அங்கு மண்ணினைப் புரட்டுவது யார் என்று பார்க்க வேண்டாம் என்று கூறினது போல)

*புத்தனச்சி படிப்புரம் தூத்த போலே*
(புதுப்பெண் வாசல் பெருக்கினது போல)

*பெற்றொனங்கிய பெண்ணும் நட்டொனங்கிய நாறும் போலே*
(பிரசவித்து வாடிப்போன பெண்ணும் நட்டு வைத்து காய்ந்து போன நாற்றும் போல)

போன்றவை உவமை உருபான போல என்று வரக்கூடிய தமிழ் – மலையாளப் பழமொழிகளாகும்.

மேலும், தமிழ்ப் பழமொழியில் மாதிரி என்று வரக்கூடிய ஓரடிப் பழமொழிகளும், ஈரடிப் பழமொழிகளும் காணப்படுகின்றன. இருப்பினும் ஓரடி பழமொழிகளே மிக அதிகமாக உள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

*அறிவிருக்கற பறவ தனக்கு புடிச்ச மரத்தை தானே தேடிக் கொள்ற மாதிரி*

*பொறுக்கித் திங்கற கோழிக்கு மூக்குத் தறிச்ச மாதிரி*

*எறும்புக்கு கொட்டாங்கச்சி தண்ணி சமுத்திரம் மாதிரி*

*மூட்டப்பூச்சிக்கு பயந்து வீட்டக் காலி பண்ணின மாதிரி*

*மிஞ்ச வெச்ச சாறு சுண்ட வெச்ச மாதிரி*

*கம்புக்கு கள வெட்டினாப்பலயும் ஆச்சு*
*தம்பிக்கு பொண்ணு பாத்தது மாதிரியுமாச்சு*

*உழுகிற காலத்துல ஊர்ச்சுற்றி விட்டு*
*அறுக்கற காலத்துல அரிவா எடுத்துட்டுப் போன மாதிரி*

மலையாளத்தில் இதே போன்ற அமைப்பு இல்லை என்று மலையாள மக்கள் கூறுகின்றனர்.

## 2.7 இல்லா என்று வரக்கூடிய மலையாளப் பழமொழிகள்

மேலும், மலையாளப் பழமொழியினை ஆராய்ந்த போது, தமிழ்ப் பழமொழிகளின் இறுதியில் மாதிரி என்று வருவதைப் போன்று மலையாளப் பழமொழிகளின் இறுதியில் 'இல்லா' அதாவது இல்லை என்ற பொருள் தரக்கூடிய பழமொழிகளைக் காண முடிந்தன. அவை ஓரடி, ஈரடி, மூன்றடி என்ற அமைப்பில் அமைந்திருக்கக்கூடிய பழமொழிகளாக வந்துள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

*ஆளேறியால் பாம்பு சாவில்லா*

(ஆட்கள் அதிகமானால் பாம்பு சாகாது)

*ஈப் பருப்பொன்னும் இவிடெ வேகில்லா*

(இந்தப் பருப்பு இங்கு வேகாது)

*கதிரின்மேல் கொண்டு வளமிட்டிட்டு காரியமில்லா*

(நெற்கதிரின் மீது வளம் வைத்தால் ஒரு பயனுமில்லை)

*கெடயானெங்கில் வலிய கெடா*

*கெடயில் ஒட்டும் வெள்ளமில்லா*

(அணைக்கட்டு பெரிதாக இருக்கும்

கட்டுல கொஞ்சம்கூட தண்ணீர் இருக்காது)

*மரம் கோணியால் செத்தி நிவர்த்தாம்*

*மனசு கெட்டால் ஒன்னும் செய்யான் பற்றில்லா*

(மரம் வளைந்தால் செதுக்கி நிமிர்த்தி விடலாம்

மனது கெட்டுவிட்டால் ஒன்றும் செய்ய முடியாது)

*ஆன புறத்து கேரணம்*

*அங்ஙாடியில் கூடி போகணம்*

*கொட்டும் மேளவும் வேணம்*

*ஆரும் காணான் பாடில்லா*

(யானைமீது ஏற வேண்டும்

அங்காடியின் வழியாக போக வேண்டும்

கொட்டும் வாத்யங்களும் வேண்டும்

யாரும் பார்க்கவும் கூடாது)

மேலும் தமிழ் மலையாளப் பழமொழிகளில் எதுகை மோனை அமைப்புடன் இருக்கக் கூடிய பழமொழிகளும் காணப்படுகின்றன. அவை கீழ்வருமாறு அடிக்கோடிட்டு காட்டப்பட்டுள்ளன.

அடிதோறும் முதலெழுத்து ஒன்றி வரத்தொடுப்பது மோனைத் தொடை எனப்படும்.

*அடுத்த வீட்டுக்காரி புள்ள பெத்தான்னு சொல்லி*
*அம்மிக் கொளவி எடுத்து இடித்துக் கொண்டாளாமா*

*குட்டத்தண்ணடி வத்திப் போச்சு*
*குண்டெடுத்தவன் செத்துப் போனான்*

*தனக்குன்னு ஒருத்தி இருந்தா*
*தலமாட்டுல உக்காந்து அழுவா*

இதே போன்று அமைப்புடன் இருக்கக் கூடிய மலையாளப் பழமொழிகளைக் கீழ்வருமாறு காணலாம்.

*அம்மன்டெ பாலும் குடிக்கணம்*
*அப்பன்டெ கூடயும் கிடக்கணும்*
(அம்மாவினுடைய பாலினைக் குடிக்க வேண்டும்
அப்பாவினுடன் படுக்கவும் வேண்டும்)

*பொன்னின் குடத்தினு பொட்டெந்தினு*
*பொட்டக் குடத்தினு வக்கெந்தினு*
(துங்கக் குடத்திற்கு பொட்டு எதற்கு
ஓட்டக் குடத்திற்கு வக்கு எதற்கு)

*மரம் கோணியால் செத்தி நிவர்த்தாம்*
*மனசு கெட்டால் ஒன்னும் செய்யான் பட்டில்லா*
(மரம் வளைந்தால் செதுக்கி நிமிர்த்த முடியும்
மனது கெட்டுவிட்டால் ஒன்றும் செய்ய முடியாது)

போன்றவை மோனைத் தொடையாக வரக்கூடிய மலையாளப் பழமொழிகளாகும்.

அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது எதுகைத் தொடை எனப்படும். அவை கீழ்வருமாறு அடிக்கோடிட்டு காட்டப்பட்டுள்ளன.

*அண்ணன் எப்ப சாவான்*
*திண்ண எப்ப காலியாகும்*

*கண்டத தின்னவன் குண்டனாவான்*
*கண்டத படிச்சவன் பண்டிதனாவான்*

*நெல்லுக்குப் பாயர தண்ணி*
*புல்லுக்கும் பாஞ்சா என்ன?*

இதே போன்று மலையாளத்தில்,

*அருதாத்தது செய்தவன்*
*கருதாத்தது கேல்க்கும்*
(தேவையில்லாத வேலைகளைச் செய்தவன்
தேவையில்லாத வார்த்தைகளையும் கேட்க வேண்டும்)

*இரும்பு கட்டவன்*
*துரும்பாயி போகும்*
(இரும்பினைத் திருடியவன்
துரும்பாகப் போய்விடுவான்)

*அறியாத்த பிள்ள*
*சொறியும் போழறியும்*
(தெரியாத பிள்ளை
சொறிந்து கொள்ளும் போது புரிந்து கொள்வான்)

போன்றவை எதுகையுடன் அமைந்திருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகளாகும்.

## 2.8 எதிர்நிலை அமைப்புப் பழமொழிகள்

தமிழ் மலையாளம் ஈரடியாக அமைந்துள்ள பழமொழிகளில் தலைப்பு, இடை, முடிவுரை என்ற நிலையில் எதிர்நிலை அமைப்பு காணப்படுகின்றது. அவை கீழ்வருமாறு அடிக்கோடிட்டு கூறப்பட்டுள்ளன.

*ஒரு பொண்டாட்டி கட்டுனவனுக்கு உரியில சோறு*
*பத்து பொண்டாட்டி கட்டுனவனுக்கு தெருவுல சோறு*

*பள்ளத்துல இருந்தா பொண்டாட்டி*
*மேட்டுல இருந்தா அக்கா*

*பாம்பு கடிச்சு பொளச்சவனும் உண்டு*
*செருப்பு கடிச்சு செத்தவனும் உண்டு*

*கிளியாட்டமா ஒரு பொண்டாட்டி இருந்தாலும்*
*கொரங்காட்டமா ஒரு வெப்பாட்டி வேணும்*

*பாடுபட்டவனுக்கு பழைய சோறு*
*கூறுகெட்டவனுக்குக் கறியுஞ்சோறு*

போன்ற பழமொழிகளில் தலைப்பு, இடை, முடிவுரை என்ற தன்மையில் எதிர்நிலை அமைப்பைக் காணமுடிகின்றது. இதே போன்று மலையாளத்தில்,

*துடக்கம் நன்னாயால்*
*ஒடுக்கவும் நன்னாயிரிக்கும்*
(தொடக்கம் நன்றாக இருந்தால்
இறுதியும் நன்றாக இருக்கும்)

*தூரத்தே பந்து வினேக்கால்*
*அடுத்துள்ள சத்ரு வானுநல்லது*
(தூரத்தில் இருக்கின்ற சொந்தக்காரரை விட
பக்கத்தில் இருக்கின்ற எதிரியே நல்லது)

*வண்ணம் <u>குறஞ்ஞாலும்</u>*

*எண்ணம் <u>குறஞ்ஞிட்டில்லா</u>*

(குடி குறைந்தாலும்

எண்ணிக்கை குறையவில்லை)

*<u>கைச்சிட்டு</u> துப்பானும் வய்யா*

*<u>மதுரிச்சிட்டு</u> இறக்கானும் வய்யா*

(கசப்பாக இருப்பதால் துப்பவும் முடியவில்லை

இனிப்பாக இருப்பதால் இறக்கவும் முடியவில்லை)

*கொதிச்சது <u>கிட்டில்லா</u>*

*விதிச்சதே <u>கிட்டு</u>*

(கொதித்தது கிடைக்காது

விதித்தது தான் கிடைக்கும்)

போன்ற மலையாளப் பழமொழிகளில் தலைப்பு, இடை, முடிவுரை போன்றவை அடிக்கோடிட்டு காட்டப்பட்டுள்ளன.

## தொகுப்புரை

- தமிழ் மலையாளப் பழமொழிகள் லூர்து அவர்கள் வழங்கிய அமைப்பின்படி ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், இரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், மூன்று விளக்கக் கூறுடைய பழமொழிகள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- தமிழில் 687 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், 480 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மூன்று விளக்கக் கூறுடைய ஒரு பழமொழியும் கள ஆய்வில் கிடைத்தன. இவை உதாரணங்களுடன் விளக்கப்பட்டுள்ளன.
- மலையாளத்தில் 421 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், 83 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மூன்று விளக்கக் கூறுடைய ஒரு பழமொழியும் கள ஆய்வில் கிடைத்தன. இவை எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.
- லூர்து அவர்கள் வழங்காத ஒரு புதிய அமைப்பு ஒரு தமிழ் பழமொழியிலும் ஒரு மலையாளப் பழமொழியிலும் காணப்படுகிறது. அதாவது மூன்று அடியில் மூன்று விளக்கங்களைக் கூறி நான்காவது அடியில் ஒரு முடிவினைச் சொல்லக் கூடிய முறை புதிதாகக் கண்டறியப்பட்டது.
- தமிழ்ப் பழமொழியில் முடிவுரை முதலில், தலைப்பு இறுதியிலும் வரக்கூடிய இரண்டு பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்துள்ளது. அப்பழமொழிகளும் விளக்கப்பட்டுள்ளன.
- டண்டிஸின் மூவகைப் பாகுபாடு எனும் அமைப்பின்படி பழமொழிகள் முரணற்ற பழமொழிகள், முரணுடைய பழமொழிகள், முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- முதலாவதாக முரணற்ற பழமொழிகள் எனும் தலைப்பின் கீழ் தலைப்பு, முடிவுரை இரண்டிற்கும் இடையே முரணின்றி அமையக் கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள் கூறி விளக்கப்பட்டன. அதே போன்று A எங்குள்ளதோ அங்கு B

இருக்கும் என்ற அமைப்பில் இருக்கக் கூடிய காரணச் சமநிலைப் பழமொழிகளும் விரிவாக விளக்கிச் சுட்டப்பட்டுள்ளன.

❖ பல்வேறுபட்ட முரண்களுடன் அமைந்திருக்கக் கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகளை முரணுடைய பழமொழிகள் எனும் தலைப்பிற்குள் அடக்கி வகைப்படுத்தி விளக்கப்பட்டுள்ளன. அதே போன்று இதற்கு இது பெரிது, இன்ன காரணத்தில் இது இதற்குப் பெரிது என்ற முறையிலும் அமைந்துள்ள தமிழ் மலையாளப் பழமொழிகள் சுட்டப்பட்டுள்ளன. வினா நிலையில் அமையும் முரணுடைய பழமொழிகளில் உண்மை நிலை ஒன்றாக இருக்க, எதிர்பார்ப்பு வேறொன்றாக இருக்கும் பழமொழிகள் விளக்கப்பட்டன.

❖ எளிய சிறிய ஒரு செயலைச் செய்யாதவர் பெரிய ஒன்றைச் செய்வாரா, பெரிய ஒரு செயலுக்கு ஒத்துவராதவன் சிறிய ஒன்றுக்கு ஒத்துவருவானா என்ற அமைப்பில் வரக்கூடிய பழமொழிகள் ஆராயப்பட்டுள்ளன.

❖ ஒருவன் வறுமையிலிருக்கும் போது மற்றொருவன் ஒன்றை விரும்புவது, எளிய ஒன்றிற்காக கவலைப்படும் போது மற்றொருவன் விலையுயர்ந்த ஒன்றை நாடுவது, தன்னுடன் இருக்கின்ற ஒருவன் துன்பப்படும் போது வேறொருவனுக்கு உதவுவது போன்ற அமைப்புடன் வரக்கூடிய பழமொழிகளும் இங்கு தொகுக்கப்பட்டுள்ளன.

❖ முரணுடைய முரணற்ற கூறுகளைக் கொண்ட பழமொழிகள் எனும் தலைப்பில் முரணுடனும் முரணின்றியும் சமநிலையுடன் வரக்கூடிய பழமொழிகளும் இனங்காணப்பட்டுள்ளன.

❖ மலையாளத்தில் இல்லா (இல்லை) என்ற அமைப்பில் இருக்கக்கூடிய பழமொழிகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. ஆனால் தமிழில் இல்லை என்ற சொல் வரக்கூடிய பழமொழிகள் அதிகமாகக் காணப்படவில்லை.

❖ உவமை உருபு (போல) வரக்கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. அவற்றை சில பழமொழிகளின் ஊடாக விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

- எதுகை, மோனையுடன் அமைந்திருக்கக் கூடிய பழமொழிகளையும், ஒரு பழமொழியின் முதல், இடை, இறுதி என்ற எதிர்நிலை அமைப்பில் அமைந்திருக்கக் கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகளை அடிக்கோடிட்டு விளக்கிச் சுட்டப்பட்டுள்ளன.
- தமிழ் பழமொழிகளில் உள்ள சில அமைப்புகள் கள ஆய்வின் போது திரட்டிய மலையாளப் பழமொழிகளில் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

fio ^ewLnuiSleb

## அடிக்குறிப்புகள்

1. Alex Preminger (Ed.), Pinceyton Encylcopaedia of Poetry and Poetics, p.812.
2. வை. சச்சிதானந்தன், மேலை இலக்கியச் சொல்லகராதி, ப.181–182.
3. V. Propp, Morphology of the Folktale, p.19.
4. Claude Levi – Strauss, Structural Anthrophology, Vol.III, p.115.
5. ந. அறிவுராஜ், அமைப்பியல் நோக்கில் நாட்டுப்புறப் பாடல்கள், ப.8.
6. அ. ஆலிஸ், கட்டமைப்பு நோக்கில் அகநானூறும் புறநானூறும், ப.3.
7. கு. முருகேசன், அமைப்பியல் நோக்கில் நாட்டுப்புற நடனங்கள், ப.5.
8. சுதானந்தா, ஆட்டமும் அமைப்பும், ப.19.
9. தே. லூர்து, தமிழ் பழமொழிகள், அமைப்பு, பொருண்மை, செயல்பாடு, ப.132.
10. மேலது, ப.142.
11. மேலது, ப.143–144.
12. மேலது, ப.152.
13. மேலது, ப.154.
14. மேலது, ப.160.

# இயல் – 3

# கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

3.1 கோயம்புத்தூர் மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

3.1.1 கோயம்புத்தூர் மாவட்டத்தின் அமைப்பு

3.1.2 சமூக உறவு முறைகள் தொடர்பான பழமொழிகள்

3.1.3 புழங்கு பொருள் சார் பண்பாடு

3.1.4 தொழில் தொடர்பான பழமொழிகள்

3.1.6 நம்பிக்கை தொடர்பான பழமொழிகள்

3.1.6 உயிரினங்கள் தொடர்பான பழமொழிகள்

3.1.7 பிற பழமொழிகள்

3.1.8 வட்டார மொழிச் சொற்கள்

3.1.9 தகாத சொற்கள் வரக்கூடிய பழமொழிகள்

3.1.10 ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல தமிழ்ப் பழமொழிகள்

3.1.11 சில வேறுபாடுடன் இருக்கக்கூடிய தமிழ்ப் பழமொழிகள்

3.1.12 தமிழ்ப் பழமொழிகளின் பாடவேறுபாடு

3.2 பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

3.2.1 பாலக்காடு மாவட்டத்தின் அமைப்பு

3.2.2 சமூக உறவு முறைகள் தொடர்பான பழமொழிகள்

3.2.3 புழங்கு பொருள்சார் பண்பாடு

3.2.4 தொழில்கள் தொடர்பான பழமொழிகள்

3.2.5 நம்பிக்கை தொடர்பான பழமொழிகள்

3.2.6 உயிரினங்கள் தொடர்பான பழமொழிகள்

3.2.7 பிற பழமொழிகள்

3.2.8 வட்டார மொழிச் சொற்கள்

3.2.9 தகாத சொற்கள் வரக்கூடிய பழமொழிகள்

3.2.10 ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல மலையாளப் பழமொழிகள்

3.2.11 சில வேறுபாடுடன் இருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகள்

3.2.12 மலையாளப் பழமொழிகளின் பாடவேறுபாடு

3.2.13 மலையாளப் பழமொழிகளின் இன்றைய வளர்ச்சித்தன்மை

தொகுப்புரை

# 3. கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

பழமொழி என்பது ஆன்றோர் தம் பட்டறிவால் தோன்றிய அனுபவமொழி. இது புதியனவாகக் கூறாது வழிவழியாக மக்களிடையே வழங்கி வரும் மரபுகளாகும். இவற்றில் மக்களின் வாழ்வியல் செய்திகள் அமைந்திருக்கக் காணலாம். அந்த வகையில் கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமுதாயக் கூறுகள் பற்றி இவ்வியிலில் ஆய்வு செய்யப்படுகிறது.

மனிதர்களின் குழு வாழ்க்கை முறையின் தொடர்ச்சியே சமூகம் தோன்றக் காரணமாய் அமைந்தன. பல்வேறு குழுக்களின் இணைப்பே சமூகம் ஆகும். சமூகம் என்கிற அமைப்புத் தோன்ற மக்களின் வாழ்க்கை முறையே அடிப்படைக் காரணம். மனித சமூகம் தன்னை வளர்த்துக் கொள்ளவே சில விதிகளை வகுத்துக் கொண்டது. காலத்திற்குக் காலம் தன்னுள் அடைந்து வரும் உருமாற்றத்தின் வளர்ச்சியே சமூகம் ஆகும். சமூகம் என்பது கனமுற்றுக் கொண்டே இருக்கிற மாறிக் கொண்டே இருக்கிற ஒரு திரவ அமைப்பாகும். மேலும், சமூக நிறுவனங்களைப் பற்றியும், மனித மனப்பாங்கு மனித பழக்கவழக்கங்களின் முறைகள் பற்றியும் பேசுவது சமூகம் எனப்படும் என்கிறார் அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள்.

“ஆணும் பெண்ணும் ஒற்றுமையுடன் இணைந்தும் பல குடும்பங்கள் ஒன்றாக ஒற்றுமையுடனும், பாசத்துடனும், அன்புடனும், போட்டி, பொறாமை கடந்து மனித நேயத்தோடு வாழ்வது தான் சமூகம் ஆகும். மக்கள் எல்லோரும் சமமாக வாழும் ஒரு கூட்டமைப்பு தான் சமூகம் என்று தொடக்கத்தில் பொருள் கொள்ளப்பட்டது. வழக்காற்றிலும் பயிலப்பெற்றது”[1] என்கிறார் வே. இராதா.

தமிழ்ச் சமூகம் பழம் பெருமை வாய்ந்தது என்பது உலகோர் ஏற்றுக் கொண்ட பேருண்மை. மிகப் பழமை வாய்ந்த சமூகங்களின் பண்பாட்டினை, நாகரிகத்தை, வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்வதற்கு உதவும் காரணிகளுள் பழமொழிகளும் முக்கிய இடம் பெறுகின்றன. மனிதன் பலருடன் இணைந்து ஒரு குழுவாக வாழத் தொடங்கிய காலத்தில் சமுதாய வாழ்வு மலர்ந்தது என்கிறார் இராணி எலிசபெத் அவர்கள்.

இவ்வாறு மிகவும் பழமை வாய்ந்த சமூகங்களின் வாழ்வியற் சார்ந்த செய்திகளெல்லாம் தமிழ் – மலையாளப் பழமொழிகளில் அடங்கியுள்ளன. இவ்வாறு சமூகம் சார்ந்த செய்திகள்,

1. கோயம்புத்தூர் மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்
2. பாலக்காடு மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

என இருநிலைகளில் வகை செய்யப்பட்டுள்ளன. இத்தலைப்புக்களின் கீழ் மிக விரிவாக சமூகம் சார்ந்த செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## 3.1 கோயம்புத்தூர் மாவட்டப் பழமொழிகளில் காணப்படும் சமூகக்கூறுகள்

### 3.1.1 கோயம்புத்தூர் மாவட்டத்தின் அமைப்பு

கோயம்புத்தூர் மாவட்டம் தமிழகத்தின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. வடக்கு அட்சரேகை $11^{0}1'6$க்கும் கிழக்கு தீர்க்கரேகை $76^{0}58'21$க்கும் இடையில் இம்மாவட்டம் நிலைபெற்றுள்ளது. மேற்குத்தொடர்ச்சி மலை இம்மாவட்டத்தைச் சுற்றி அரணாக அமைந்துள்ளது. கோயம்புத்தூர் மாவட்டத்தின் மேற்கு எல்லையில் பாலக்காடு மாவட்டம் அமைந்துள்ளது. மேற்குத் தெற்குப் பகுதிகளில் மேற்குத் தொடர்ச்சி மலையும், வடக்குப் பகுதியில் நீலகிரி மலைத்தொடரும் சூழ்ந்துள்ளன. இம்மாவட்டத்தின் முக்கிய நதியான நொய்யல் ஆறு தெற்கு எல்லையில் ஓடிக் கொண்டிருக்கிறது.

இப்பகுதியில், கோயம்புத்தூர் மாவட்டப் பகுதிகளிலிருந்து சேகரித்த தமிழ் பழமொழிகள் தொகுக்கப்பட்டு, அவற்றை பல தலைப்புக்களில் வகைசெய்து, அதில் காணும் சமூகம் சார்ந்த செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

1. சமூக உறவு முறைகள் தொடர்பான பழமொழிகள்
2. புழங்கு பொருள் சார் பண்பாடு
3. தொழில்கள் தொடர்பான பழமொழிகள்
4. நம்பிக்கை தொடர்பான பழமொழிகள்
5. உயிரினங்கள் தொடர்பான பழமொழிகள்
6. பிற பழமொழிகள்

### 3.1.2 சமூக உறவுமுறைகள் தொடர்பான பழமொழிகள்

#### 3.1.2.1 குடும்ப உறவுகள்

தொல்பழங்கால மனிதன் வேட்டையாடி உணவு சேகரித்து வாழ்க்கையை நாடோடியாக வாழ்ந்து வந்தான். நாகரீக வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டமும் குடும்பம் என்னும் அமைப்பு நிலைக்கு அடிகோலியது எனலாம். இதன் தொடர்ச்சி வேட்டையாடல் – உணவு சேகரித்தல் – குழுவாகத் திரிதல் – வேளாண்மையைக் கண்டறிதல் என்பனவாகத் தொடர்ந்தன. வேளாண்மையில் பெண்கள் தான் முதன்மையானவர்கள். உலகின் முதல் விவசாயி பெண் தான் என்பது மானிடவியலர்கள் பலரும் ஒப்புக் கொள்ளக் கூடிய செய்தியாக உள்ளது.

இத்தகைய பெண்கள் பேறுகாலம் மற்றும் மாதவிடாய் காலங்களில் பெரும் சக்தியினை இழப்பதனால் அவர்களுக்கு ஓய்வு என்பது தேவைப்பட்டது. குறிப்பாக பேறுகாலத்தில் அவர்களின் ஓய்வு நீண்டு செல்வதால் அவள் நிலத்தில் இருந்து பிரித்து எடுக்கப்பட்டதாகவே கருத முடிகிறது. அது மட்டுமல்லாமல், உணவு உற்பத்திக் காலகட்டத்தில் தனிமனிதனுடைய உற்பத்திப் பொருட்கள் அல்லது சொத்துக்கள் தனது சொந்தக் குழந்தைக்குப் போக வேண்டும் என்று கருதியதன்

அடிப்படையே கற்புக் கொள்கையின் தொடக்கம் எனலாம். இதுவே பிற்காலத்தில் விரிவடைந்து குடும்பமாக உருவம் கொண்டிருக்க வேண்டும்.

ஜெ. நாராயணன் அவர்கள் குடும்பத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில், "குடும்பம் என்பதை ஆங்கிலத்தில் ஃபாமிலி என்ற சொல்லால் குறிப்பிடுகிறோம். அச்சொல் ஃபாமுலஸ் என்ற சொல்லிலிருந்து வருகிறது. வேலைக்காரன் என்பது அச்சொல்லின் பொருளாகும். இந்தியாவில் காணப்படுகின்ற கூட்டுக் குடும்பம், பலதாரக் குடும்பம் போன்ற பல்வேறு சிக்கலான வகைகளிலும் குடும்பம் காணப்படும். ஒரு மனிதன் எந்தக் குடும்பத்தில் தோன்றினானோ, அது 'பிறந்த குடும்பம்' (Family of Orientation) எனப்படும். எந்தக் குடும்பத்தில் மணம் புரிந்து கொள்கிறானோ, அக்குடும்பம் 'புகுந்த குடும்பம்' (Family of Procreation) எனப்படும்"[2] என்கிறார்.

மேலும், "ஒரு ஆணும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வார்களேயானால் அது ஒரு தாரக் குடும்பம் எனப்படும் (Monogamous Family). ஒரு ஆண் பல பெண்களுடன் கூடி வாழ்ந்தால் அது பல்லரிவைக் குடும்பம் எனப்படும் (Polygamy Family). ஒரு பெண் பல ஆடவருடன் சேர்ந்து வாழ்ந்தால் அது பல்லாண் குடும்பம் (Polyandry Family) எனப்படும். பல்லாண் குடும்பத்தையும், பல்லரிவைக் குடும்பத்தையும் பொதுவாகக் குறிக்கின்ற சொல் பலதாரக் குடும்பம் ஆகும் என்கிறார்"[3].

மாலினோவ்ஸ்கி அவர்கள், "தாய், தந்தை, மகவுகள் ஆகியோரை உள்ளடக்கிய குடும்பம் எனும் அமைப்புப் பழங்குடிகளிடையும், நாகரிகத்தில் முற்பட்டவர்களிடையும் மற்றும் எல்லாச் சமுதாயங்களிலும் காணப்படுகிறது. எல்லா இடங்களிலுமே, சமூக நிலையமைப்பையும் பண்பாட்டையும் பாதிக்கின்ற முக்கியமான பங்கையும் செல்வாக்கையும் அது பெற்றுத் திகழ்கிறது. எந்த இனத்திலும், நிறுவனம் என்ற முறையில் குடும்பம் காணப்படவில்லை என்று கூறி விட முடியாது. மனித வர்க்கத்தில் பரிணாமத்தில் முன்னே தோன்றிய கிளையை (Clan)விட, குடும்பம்

சமூகவியல் கண்ணோட்டத்தில் மிக முக்கியமானது ஆகும். குடும்பம், அங்கிங்கெனாதபடி எங்கும் காணப்படுகின்ற ஒரு நிறுவனம் ஆகும்"[4] என்கிறார்.

குடும்பம் என்ற அமைப்பில் பல உறுப்பினர்கள் காணப்படுவார்கள். தந்தை, தாய், அண்ணன், தங்கை, சித்தப்பா, சித்தி, தாத்தா, பாட்டி என உறுப்பினர்கள் நிறைந்து ஒரு கூட்டு வாழ்க்கை மேற்கொள்ளப்படுகிறது. பொதுவாக இவ் உறவுகள் அனைத்தும் தந்தை மற்றும் தாய் வழிச் சமூகத்தின் எச்சங்களாகவே கருதமுடிகிறது.

கோவை மாவட்ட மக்களின் குடும்ப வாழ்வு முறை மேற்கூறிய உறவுகளை அடிப்படையாகக் கொண்டே இயங்குகிறது. குடும்பத்தில் ஒவ்வொரு உறவுக்கும் தனித்தனியான கடமைகளும் ஒழுக்கங்களும் அவர்களை அறியாமலேயே பின்னப்பட்டுள்ளது. அதனைப் புரிந்து அவர்கள் வினையாற்ற வேண்டிய தேவையும் உள்ளது.

*ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே*
*சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே*

என்கிறது புறநானூறு. இங்கு தந்தையின் கடமை என்பது பிள்ளைகளை நன்முறையில் வளர்த்து உயர்ந்த நிலைக்கு கொண்டு செல்வதாகும். இவ்வாறு நன்முறையில் வளர்க்க வேண்டும் என்பது இலக்கியங்களோடு நின்றுவிடாமல் கோவை மாவட்ட மக்களிடையே வழங்கக் கூடிய பழமொழிகளிலும் காணப்படுகின்றன.

*ஏறோட்டாத நெலமும் அப்பன் திட்டாத புள்ளயும் உருப்படாது*

*முருங்கையை ஒடிச்சு வளக்கணும்*
*புள்ளையை அடிச்சு வளக்கணும்*

போன்ற பழமொழிகள் தந்தை என்பவர் பிள்ளைகளை எவ்வாறு வளர்க்க வேண்டும் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது. இப்பழமொழிகளில் முருங்கையும், நன்றாக

உழவு செய்யாமல் இருக்கக் கூடிய நிலத்தையும் பிள்ளைகளுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளமையைக் காணலாம்.

குழந்தையினைப் பெற்றெடுப்பதோடு மட்டுமின்றி ஒரு தாயின் கடமை முடிவதில்லை. அக்குழந்தையினை வளர்க்கக் கூடியவளாகவும், அவர்களுடைய குணநலன்களைப் புரிந்து கொண்டு நடக்கக் கூடியவளாகவும் தாயானவள் காட்சியளிக்கிறாள். மேலும், "தாயப் போல புள்ள நூலப் போல சேல" என்ற பழமொழிக்கு ஏற்றாற் போன்று பிள்ளைகள் தாயின் குணநலன்கள் போன்ற அனைத்தையும் பெற்றிருந்தாலும் சில சூழலில் அப்பிள்ளைகள் தாயிடம் சில தவறுகளைக் காண்பித்தும் விடுகின்றனர். இதனை, "பெத்தவகிட்டயே உன்னோட வித்தயக் காணிக்கறயே" என்று தாயானவள் அதட்டவும் செய்கிறாள். இருப்பினும் சில நொடிகளுக்குப் பிறகு "பேயோட புள்ளையானாலும் தாய் தள்ளி விடுவாளா" என்பதற்கிணங்க "பெத்த மனசு பித்து" என்பதைப் போன்று தாயானவள் தன் பிள்ளைகளை நினைத்து கலங்கவும் செய்கிறாள் என்று பழமொழிகள் பதிவு செய்கின்றன.

குடும்ப உறவில் அண்ணன் தம்பி உறவினைப் பற்றிக் குறிப்பிடுகையில், சுயநலமாக வாழக் கூடிய நிலையினையும், தம்பியானவன் அண்ணனுடைய சொத்துக்களை அபகரிக்க வேண்டும் என்ற மனநிலையில் இருக்கக் கூடியவனாகவும் இருக்கிறான். இதனை,

*அண்ணன் பொளச்சாலென்ன ஆனகட்டி வாழ்ந்தாலென்ன*
*தம்பி பொளச்சாலென்ன தாழம்பூ பூத்தாலென்ன*

எனும் பழமொழியும்,

*அண்ணன் எப்ப சாவான்*
*திண்ண எப்ப காலியாகும்*

எனும் பழமொழியாலும் அறியமுடிகிறது. தந்தை வழி சமூகத்தில் சொத்துக்கள் ஆண்களுக்கு இடையே பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. எனவே சகோதரர்கள்

பங்காளிகளாகின்றனர். இந்த பங்காளி உறவு பிரச்சினை உடையதாகவே சமூகத்தில் காணப்படுகிறது. எனவே அண்ணன் தம்பி சார்ந்த பழமொழிகள் வெறுப்பை உணர்த்துவதாக அமைந்துள்ளன எனலாம்.

குடும்ப உறவில் அக்கா, தங்கை உறவினைப் பற்றிக் குறிப்பிடுகையில், வீட்டிலுள்ள வேலைகளையெல்லாம் முடித்துவிட்டு சோர்வினைப் போக்குவதற்காக அக்கா வீட்டிற்குச் செல்கிறாள். ஆனால் அக்கா தன்னுடைய வீட்டிலுள்ள அனைத்து பொறுப்புக்களையும் தங்கையிடம் கொடுத்து விடுகிறாள். இதனை,

*அலுத்து செலுத்து அக்கா வீட்டுக்குப் போனா*
*அக்கா தூக்கி மச்சா மடியில போட்டாளா*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். இப்பழமொழியானது அக்கா தங்கை உறவு மட்டுமின்றி தகாத உறவினைப் பற்றிக் கூறுவதாகவும் அமைந்துள்ளது எனலாம். இந்நிலையில் தங்கையானவள், “ஏழையாப் பொறந்தாலும் தாளையாப் பொறக்கக் கூடாது” என்று அலுப்படையவும் செய்கின்ற நிலையினையும் இப்பழமொழியின் ஊடாக காண முடிகின்றது. குடும்ப உறவில் கணவனுடைய நிலையினைக் குறிப்பிடுகையில்,

*ஒரு பொண்டாட்டி கட்டுனவனுக்கு உரியில சோறு*
*பத்து பொண்டாட்டி கட்டுனவனுக்கு தெருவுல சோறு*

*கிளியாட்டமா ஒரு பொண்டாட்டி இருந்தாலும்*
*கொரங்காட்டமா ஒரு வெப்பாட்டி வேணும்*

என்று கணவனின் இழிநிலையினைக் கூறுவதாகத் தான் பழமொழிகள் அமைந்துள்ளன. இப்பழமொழிகளில் ஒருவளை மட்டும் மணந்து கொண்டு அவளுடன் மட்டும் வாழ்க்கை நடத்திச் செல்லக் கூடிய அன்பு நிலையினையும், பத்து பெண்களுடன் தொடர்பு வைத்து கூத்து நடத்திக் கொண்டிருப்பவனிடம் வெறுப்பு ஏற்படுகின்ற நிலையினையும் வெளிப்படுத்துமாறு முதற் பழமொழி

G38350

அமைந்துள்ளது. இரண்டாவது பழமொழி கணவன் சொல்லும் சொற்களையெல்லாம் கேட்டு நடந்து கொண்டிருக்கின்ற மனைவிக்கு நம்பிக்கைத் துரோகம் அதாவது ஒரே மனநிலையிலின்றி, குரங்கினைப் போன்று அனைத்து பெண்களுடன் தொடர்பு வைத்திருக்கின்ற கணவனின் இழி தன்மையினைக் கூறுவதாகவும் அமைந்துள்ளது.

இவை மட்டுமின்றி மனைவியின் நிலையினைப் பற்றிக் கூறும் பொழுது,

*அப்பன் வீட்ல யானைமேல உக்காந்து சோறுண்டாலும்*
*புருசன் வீட்ல பிச்சையெடுத்து உண்பது மேல்*

இப்பழமொழி, மனைவி என்பவள் தன் கணவன் எவ்வளவு ஏழையாக இருந்தாலும் அவனுடன் வாழ்வதே சிறந்தது என்று கூறுவதாக அமைந்துள்ளது. அவ்வாறு இருப்பதுதான் ஒரு மனைவிக்கு அழகு. மனைவி என்பவள் தன் கணவனது மனநிலைகளை நன்கு அறிந்து நடக்கக் கூடியவளாக இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு பழமொழிகளில் பிரதிபலிக்கின்றன. புதிதாக திருமணம் முடிந்திருக்கக் கூடிய நேரத்தில்,

*ஆசை அறுபது நாள்*
*மோகம் முப்பது நாள்*

*கோயிலுக்கு நேந்து விட்ட மாடு மாதிரி சுத்தி சுத்தி வர்றான்*

*புதுசுக்கு வண்ணான் கடுசுக்கு வெளுத்தான்*
*பழசுக்கு வண்ணான் சோத்துக்கு வெளுத்தான்*

*புதுப் பொண்டாட்டி மோகம் தலைக்கு ஏறிப் போச்சு*

எனும் பழமொழிகள் திருமணம் ஆனவுடன் பெண்ணுக்கு அளவிற்கு அதிகமாக முக்கியத்துவம் கொடுப்பதும், சிறிது காலம் முடிந்தவுடன் மதிக்காத நிலையினையும் கூறுவதாக அமைந்துள்ளதை உணர முடிகின்றது.

மனைவி என்பவள் கணவன் வீட்டில் அனைத்து வேலைகளையும் செய்து விட்ட பின்பு காலையில் விரைவில் எழுந்திருக்க வேண்டும். இதனை,

*பின்ன படுத்து முன்ன எந்திரிக்கணும்*

எனும் பழமொழி உணர்த்துகிறது.

*வாயக் கட்டினவளுக்குப் புள்ள*
*வயித்தக் கட்டினவளுக்குப் புருஷன்*

எனும் பழமொழி மனைவி என்பவள் குடும்பத்தில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது.

*அழுதாலும் புள்ளைய அவதான் பெற வேண்டும்*

*கொமரிப்புள்ள சடக்சடக்*
*ஒரு குட்டியப் போட்டா லொடக் லொடக்*

எனும் பழமொழிகள் பெண்களின் உடல் பலவீனத்தைக் குறிப்பதாக அமைகிறது. பெண்ணின் உடல்நிலையில் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்பதும் அவர்களின் ஆரோக்கியம் பேண வேண்டும் என்பதும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

மேலும், பெண் அதிகமாக உணவு உண்டால் அக்குடும்பமே நாசமாகி விடும் என்பதை,

*அன்னத்தை அரங்கப் புடுச்சா*
*மன்னங்குடி மலந்து போகும்*

எனும் பழமொழியின் மூலம் கூறப்படுகிறது. பெண் என்பவள் மனதினை ஒருநிலைப்படுத்தாது இருக்கக் கூடியவள் என்றும், எப்போது வேண்டுமானாலும் அவள் தவறிழைக்க நேரிடலாம். எனவே அவளை கணவன் கண்காணிக்க வேண்டும் என்றும் நம்பப்படுகிறது. இதனை,

*தாலி கட்டினாப் பத்தாது*
*வேலியும் கட்டணும்*

என்று இழிவாகக் காட்டப்படுகிறது. பெண் என்பவள் திருமணத்திற்கு முன்பும் திருமணத்திற்குப் பின்பும் அவளது வாழ்க்கையினை அடுப்பங்கரையில் அர்ப்பணித்து விடக் கூடியவளாக இருக்க வேண்டும் என்பதை,

*பான புடிச்சவ பாக்கியசாலி*

எனும் பழமொழியின் மூலம் கூறி பெண்ணினை அடிமைப்படுத்தி வைத்திருக்கின்றனர். மட்டுமின்றி பெண் என்பவள் வீட்டிலுள்ள முழுப் பொறுப்பினையும் எடுத்தல் கூடாது என்பதை,

*ஆணிருக்கும் போது பெண் காரியம் பாத்தா*
*தூணிருக்கக் கூரை காத்துல போகும்*

எனும் பழமொழி விளக்குகிறது. அது மட்டுமின்றி, பெண்களை அதிகமாகப் பேச விடாமல் அவளுடைய வாயிற்கு பூட்டினையிட்டு பூட்டி வைக்கின்ற நிலையினையும் பழமொழியில் காணமுடிகின்றது. இதனை,

*நல்ல பாம்புக்குப் பல்லுல விஷம்*
*பொம்பளைக்கு நாக்கே விஷம்*

என்ற பழமொழியின் மூலம் உணரலாம். மேலும், கணவன் இறந்ததன் பின்பு பெண் வாழ்க்கை முழுவதும் விதவையாக இருக்க வேண்டிய சூழலுக்குத் தள்ளப்படுகிறாள். ஆனால் ஆண் விடுதலை உணர்வோடு மகிழ்ச்சியாக இருக்கிறான் என்பதை,

*புருசன் செத்தா பொண்டாட்டி வாழவெட்டி*
*பொண்டாட்டி செத்தா புருசனுக்குக் கொண்டாட்டம்*

எனும் பழமொழி விளக்குகிறது.

மச்சினன் உறவினைப் பற்றிக் குறிப்பிடுகையில், மச்சினன் என்பவன் மனைவியின் சகோதரன். திருமணம் செய்து கொடுத்த சகோதரியின் குடும்பங்களில் ஏதேனும் பிரச்சினை ஏற்படின் அவர்களுக்கு ஆறுதலாகவும், உறுதுணையாகவும் நிற்கக் கூடியவன். மக்கள் தாய முறையில் திருமணம் செய்து கொடுத்த பெண்களுக்கு ஒன்றும் கொடுப்பதில்லை. ஆதலால் சகோதரியின் குடும்பங்களில் ஏதேனும் நிகழ்வுகள் நடக்கக்கூடிய சூழ்நிலையில் சகோதரிக்கும், தாய்மாமன் எனும் முறையில் குழந்தைகளுக்கும் சடங்குகள் சீர்வரிசை போன்றவற்றை செய்யக் கூடியவனாகவும் மச்சினன் என்பவன் இருக்கிறான். மக்கள் இதனையெல்லாம் மனதிற் கொண்டு பெண் பார்க்கச் செல்லும் பொழுது முதலில் பெண்ணிற்கு சகோதரன் இருக்கிறானா? என்பதை அறிந்ததன் பின்பு தான் பெண் பார்க்கச் செல்கின்றனர். இதனை,

*மச்சினன் இருக்கற எடத்துல பெண் பார்த்தோன்னா*
*மலையேறியும் பொளைக்கலாம்*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

சமுதாயத்தில் மாமியார் என்பவள் மருமகளை கொடுமைப்படுத்தக் கூடியவளாகவே காட்சியளிக்கிறாள். இதனை,

*மகன் செத்தாலும் சாகட்டும் மருமக கொட்டம் அடங்கினாசரி*

எனும் பழமொழியால் அறிய முடிகின்றது. மாமியார் என்பவள் இவ்வாறு ஒரு புறமிருக்க மருகள் என்பவள்,

*மேச்சா மாமியார மேப்பேன் இல்லாட்டி பரதேசம் போவேன்*

என்று மறுபுறம் மருமகளும் இவ்வாறு காட்சியளிக்கிறாள். இறுதியாக சமுதாயத்தில் மாமியார் மருமகள் உறவு, "மாமியா மெச்சின மருமகளுமில்ல, மருமக மெச்சின மாமியாருமில்ல" என்ற போராட்டக் களமாகவே பழமொழிகளில் காட்சியளிக்கின்றது.

குடும்ப உறவில் தகாத உறவுகள் இருப்பதையும் பழமொழிகள் பதிவு செய்துள்ளன.

*அருப்புக் கோட்டையில உங்காத்தா செருப்பு தெச்சாலும்*
*நானுமில்லாட்டி உங்காத்தா நாறிப் போயிடுவா*

*பள்ளத்துல இருந்தா பொண்டாட்டி மேட்டுல இருந்தா அக்கா*

*அரிக்கிற அரிசிய விட்டுப்போட்டு சிரிக்கற சித்தப்பனோட*
*போனாளாமா*

எனும் பழமொழிகள் மருமகன் – மாமியார் தகாத உறவு, அக்கா – தம்பி தகாத உறவு, சித்தப்பன் – மகள் போன்ற தகாத உறவுகளைக் காட்டுவதாக அமைந்துள்ளன.

மேலும், பெண் குழந்தை பிறந்தாலே வெறுக்கக் கூடிய இச்சமுதாயத்தில் பெண்குழந்தைப் பிறப்பதை,

*அஞ்சாறு பெண் பிறந்தா*
*அரசனும் ஆண்டியாவான்*

*வாழற வீட்டுக்கு ஒரு பொண்ணு*
*வைக்கோல் போருக்கு ஒரு கண்ணு*

எனும் பழமொழிகளின் மூலமும் உணர்ந்து கொள்ள முடிகின்றன. அவ்வாறு பெண்குழந்தை பிறந்துவிட்டால்,

*மண்ணை கூட்டி வைக்கணும்*
*பெண்ணை பூட்டி வைக்கணும்*

*ஓடக்கா போனா எதுவரைக்கும் போகும்? வேலி வரைக்கும் தான்*

என்று பெண்குழந்தைகள் வீட்டிலும், வீட்டைச் சார்ந்திருக்கக் கூடிய பகுதிகளில் மட்டும் புழங்கி வருவதைக் காணமுடிகின்றது. அவ்வாறு பெண் என்பவள்

வீட்டிற்குள் மட்டும் இருந்தாலும் திறம்படைத்தவளாக காட்சியளிப்பாள். இருப்பினும் இச்சமுதாயம் பெண்ணை கேலி செய்கிறது. இதனை,

*அவ மரமேறான்னு சொல்லி இவளப் பாத்தா இவ பனையேறரா*

எனும் பழமொழியால் உணர்ந்து கொள்ள முடிகின்றது. பெற்றோர்கள் மட்டும் பிள்ளைகளை பூட்டி வளர்க்கவில்லை. பெண் என்பவளும் தன்னுடைய மனதை அடக்கி கட்டுப்பாட்டுடன் இருக்கக் கூடியவளாக வாழ்ந்து வருகிறாள் என்பதை,

*கையப் புடிச்சு இழுத்தே வராதவ கண்ணக் காட்டுனா*
*வருவாளா?*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு இருக்கக் கூடிய பெண்ணினை சமுதாயத்திலுள்ள பெண்கள் பெருமையாக பேசிக் கொள்ளவும் செய்கின்றனர். என்பதை,

*அவளோட அழகுக்கு ஆயிரம் பேர் வருவாங்க*
*கண்ணச் சிமிட்டினா கால் லட்சம் பேர் மயங்குவாங்க*

எனும் பழமொழி விளக்குகிறது. பெண் என்பவள் எவ்வளவு தான் தன் கட்டுப்பாட்டிற்குள் இருந்து திறமையாகவும், பலருடைய பாரட்டினைப் பெற்றாலும் ஒரு ஆணிற்கு நிகராக முடியாது என்று கூறும் விதமாக,

*உயர உயரப் பறந்தாலும்*
*ஊர்க்குருவி பருந்தாகாது*

எனும் பழமொழி பெண்களை உதாசீனப்படுத்துகிறது. மேலும்,

*பனமரம் மாதிரி நட்டமா நிக்காதே*

*ஐநா சபைக் குதிரை மாதிரி அங்கயும் இங்கயும் நிக்காதே*

*பொம்பள சிரிச்சாப் போச்சு*
*பொகையில விரிச்சாப் போச்சு*

*முள்ளுமேல சீல பட்டாலும் சீலை மேல முள்ளு பட்டாலும்*
*சீலைக்குத் தான் சேதம்*

எனும் பழமொழிகள் பெண் என்பவள் அடக்கமாக இருக்க வேண்டும் என்றும், பொது இடங்களில் அடக்கமின்றி சிரித்தல் கூடாது என்றும், யார் என்ன பிரச்சனை செய்தாலும் இறுதியில் அதன் மூலம் பெண் தான் பாதிக்க நேரிடும் என்றும் எச்சரிப்பனவாக அமைந்துள்ளன.

மேலும், பெண் என்பவள் தன்னை அழகுபடுத்திக் கொள்வதை இச்சமூகம் அங்கீகரிக்கவில்லை என்பதை,

*மேலா மினுக்கியக் கட்டுனவனும் கெட்டான்*
*மேட்டாங்காட்டை உழுதவனும் கெட்டான்*

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். மேலும் பெண்ணின் பிறந்த வீடு என்பது அவளது தாய் உயிருடன் இருக்கும் வரை தான். அவளுக்கு தாயானவள் உறவாக இருப்பாள் என்பதை,

*தேரோட போச்சு திருநாளு*
*தாயோட போச்சு பொறந்த வீடு*

எனும் பழமொழி சுட்டிச் செல்வதைக் காணலாம். பெண் என்பவள் ஆக்கப்பூர்வமான கருத்துக்களைக் கூறினாலும் கூட அதை ஏற்றுக் கொள்ளாத சமூக நிராகரிப்பை,

*பொட்டக் கோழி கூவிப் பொழுது விடியறப் போறதில்லை*

எனும் பழமொழியின் மூலம் அறியமுடிகிறது.

தமிழகத்தில் பலதார மணம் மிகச் சாதாரணமாக இருந்தது. ஒரு குடும்பத்திலுள்ள அக்காள் தங்கையினை ஒருவரே மணந்து கொள்ளும் முறை நம் மூதாதையர் காலந்தொட்டு இருந்து வருகிறது. அவ்வழக்கம் இன்றும் கோவை மாவட்டத்தில் உள்ளது என்பதை மெய்ப்பிக்கும் வகையில்,

*அலுத்து செலுத்து அக்கா வீட்டுக்குப் போனா*
*அக்கா தூக்கி மச்சான் மடியில போட்டாளா*

எனும் பழமொழி உணர்த்தி நிற்பதைக் காணலாம்.

### 3.1.2.2 சாதி

இந்நாட்டு சமுதாயம் சாதியாலும் தொழில் உறவாலும் பின்னிப் பிணைந்திருக்கிறது. சாதி என்பது சமுதாய அமைப்பில் இயங்கும் ஒரு தனிப்பட்ட குழுவைக் குறிக்கும். சாதி என்ற தமிழ்ச் சொல்லிற்குப் பிறப்பினம் என்பது பொருளாகும்.

*'நீர்வாழ் சாதியுள் அறு பிறப்பு உரிய*
*நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே'*[5]

எனத் தொல்காப்பியர் சாதி என்னும் சொல்லைக் குறிப்பிடுகிறார்.

சங்க காலத்தில் இருந்த அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் பிரிவினர் வடவரின் நால்வருன முறையோடு ஒப்பிட்டுப் பேசப்பட்டனர். இவர்களுடன் சமூகத்தில் சிறப்புடையவர்களாகப் பல்வேறு தொழில் பிரிவினர் இருந்துள்ளனர். (தச்சர், கொல்லர், குயவர், பாணர் போன்றோர்) அந்தந்த தொழில் பிரிவினரும் தமக்குள்ளே மட்டும் மண உறவு கொண்டு பிறரோடு மணவுறவைத் தவிர்த்திருந்தனர். அதனால் தான் தனித்தனி சாதிகள் தோன்றியிருக்க வேண்டும் எனக் கருதலாம். மேலும் தொழிலை அடிப்படையாகக் கொண்டு உருவாகிய

(வர்ணப்பாகுபாடு) சாதிப்பாகுபாடு, பிறப்பின் அடிப்படையில் மாறி, பின்னர் பல்வேறு சாதிகளை உருவாக்கிவிட்டது எனக் கருதவும் முடிகிறது.

பிறப்பின் அடிப்படையில் தோன்றிய உறுப்பினர்களையும், ஒரு பொதுவான பெயரைக் கொண்ட ஒரு அகமனக் குழுவோ, அல்லது அகமனக் குழுக்களின் தொகுதியோ சாதி எனப்படும் (Sir Edward Stunt).

ஆறு. இராமநாதன் அவர்கள், "இந்தியாவில் சுமார் மூவாயிரம் சாதிகள் உள்ளன் என்றும் ஆரம்ப காலத்தில் நான்கு வர்ணங்களும் பிறகு எண்ணற்ற சாதிகளும் உட்சாதிகளும் உருவாக ஆரியர்களே காரணம் என்றும் கூறுவர். எம்.எஸ்.நம்பூதிரிபாட் இன்றும் சாதியமைப்பு முறையே சமுதாயத்தை ஆட்டிப்படைக்கிறது. சாதி ஏற்றத் தாழ்வுகள் அதனால் ஏற்படும் சமூகப் பூசல்கள் இன்னும் மிகுதியாகக் காணப்படுகின்றன"[6] என்கிறார்.

சாதியினைப் பற்றி ஜெ. நாராயணன் அவர்கள், "சமூகத்தின் சாதியமைப்பு தரவரிசையில் உருப்பெற்றது. அதாவது ஒன்றின் மேல் ஒன்றாகப் பல படிவங்கள் அல்லது தரங்கள் சாதியமைப்பில் காணப்படுகின்றன. உச்சியில் உள்ள தரத்தினர் பிராமணர்கள் என அழைக்கப்படுகிறார்கள். ஏனைய சாதியினருடைய உயர்வும், தாழ்வும் அவர்கள் பிராமணர்களுடன் கொண்டிருக்கின்ற உறவைப் பொறுத்தே அமைகிறது. சமூகத்தினர் அவரவர் வர்ணங்களுக்கு ஏற்ப நான்கு வர்ணாசிரமப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டனர். அதுதான் பிறகு நான்கு சாதியாக ஆயிற்று என்று புருஷஸீக்தம் என்ற நூல் கூறுகிறது"[7] என்கிறார்.

மானிடவியலார் சாதியினை, "எளிய சாதி முறை (Simple Caste System) என்றும், சிக்கல் வாய்ந்த கலப்புச் சாதிமுறை (Complex Caste System) என்றும் இருவகையாகப் பிரித்துக் கூறுகின்றனர். எளிய சாதிமுறை என்பது இரண்டு அல்லது மூன்று சாதிகளைக் கொண்ட சமுதாய முறையாகும். சிக்கல் வாய்ந்த சாதி முறையில் மிகுந்த எண்ணிக்கையுடைய சாதிகள் இடம்பெறும் என்று கூறுகிறார்"[8] சீ. பக்தவத்சல பாரதி.

சாதியினை, "சாதியில் உயர்ந்தவர், சாதியில் இழிந்தவர் என்று பொருள் கொண்டு அந்தணர், அரசர், வணிகர் ஆகியோரை உயர்ந்தோராகவும், வேளாளரைத் தாழ்ந்தோராகவும் கட்டிக் காட்டுகின்றனர்"[9].

சித்தர்கள் சமுதாயத்தை முன்னிலைப்படுத்தியே தம் கருத்துக்களைக் கூறுவர். எனவே அவர்கள் சாதி வேறுபாடுகளை எதிர்த்தனர்.

*'சாதி பேதந் தனைக் குறித்துத்*
*தயங்கி மயங்கித் தளராதே*
*சாதி யாவ தெவர றிவார்*
*சருவ வுடலு மொன்றாச்சே'*[10]

என்றும்,

*'பறச்சி யாவ தேதடா*
*பணத்தி யாவ தேதடா'*[11]

என்று சிவவாக்கியரும்,

*'சாதி பேத மென்பதொன்று சற்றுமில்லை இல்லையே*
*சாதி குலமில்லை சற்குரு வறிந்தால்'*[12]

என்றும் வருகின்ற சித்தர் பாடல்கள் சான்றுகளாய் அமைகின்றன.

மேலும், இச்சாதியமைப்பு மக்களிடையே தொல்காப்பியத்தில் தொடங்கி தமிழ் இலக்கியங்கள் பலவற்றிலும் காலங்காலமாக இருந்து வருகின்றது. தொல்காப்பியர் காலத்தில் சாதியானது தொழில் அடிப்படையில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நான்கு சாதிகள் மட்டுமே இருந்தன. மக்கள் வழங்கும் பழமொழிகளில் சாதி பற்றிய கருத்துக்கள் ஒவ்வொரு சாதியினரிடமும் உள்ள குறைகளை மட்டுமே படம் பிடித்துக் காட்டுபவைகளாக அமைந்திருப்பதைக்

காணலாம். அதுமட்டுமின்றி சாதிகளுக்கிடையேயுள்ள வேற்றுமைகளையும் வெறுப்புணர்ச்சிகளையும் வெளிப்படையாக கூறுவதையும் காண முடிகிறது. இங்கு கோயம்புத்தூர் மாவட்டக் கள ஆய்வின் போது கவுண்டர், செட்டியார், முஸ்லீம், தட்டான், வண்ணான், இடையன், பறையன், பறச்சி, பள்ளன், குறவன், சக்கிலியன் போன்ற சாதிகளைப் பற்றிய பழமொழிகள் கிடைத்துள்ளன. இப்பழமொழிகளில் உயர் சாதியிலுள்ள மக்கள் அவரவர்களுடைய சாதியினைப் புகழ்வதாகவும், அவர்களே உழைத்து அவ்வுழைப்பின் மூலம் உயர்ந்த நிலைக்கு சென்று விடுவதாகவும் கூறப்பட்டுள்ளன. மட்டுமின்றி பிறர் இவர்களிடம் உதவியைக் கேட்டு வருவதாகவும் பழமொழிகள் அமைந்துள்ளன. கீழ் சாதியிலுள்ள மக்கள் பிற சாதியிலுள்ள மக்களின் பொருட்களுக்கு ஆசைப்படுபவர்களாகக் காட்டப்பட்டள்ளனர். இவர்களது தொழில், ஆடை, உணவு முறைகள் போன்றவற்றைப் பற்றிக் கூறும் விதமாகவும் பழமொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ள நிலையினைக் காணமுடிகின்றது. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

இங்கு கவுண்டர் இன மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், இவர்கள் தங்களைப் பற்றி தாங்களே உயர்வாகக் கூறுகின்ற நிலையினை பழமொழியில் பிரதிபலிப்பதைக் காணமுடிகின்றது. இவர்கள் தன்மானத்துடனும், பிறரிடம் உதவி கேட்டு செல்லாமல் இருப்பார்கள். இதனை,

*காட்ட வித்து கள்ளு குடிச்சாலும் கவுண்டன் கவுண்டன் தான்*

எனும் பழமொழி உணர்த்துவதைக் காணலாம். செட்டியார் இன மக்கள் ஒரு செயலைச் செய்யும் பொழுது ஒரு முறைக்கு பலமுறை யோசித்து செயல்படக் கூடியவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய காரியத்தில் கண்ணியமாகவும், பொருளாதாரத்தில் உயர்ந்த நிலைக்கு வரவேண்டும் என்ற எண்ணத்துடனும் லாபம் தரக்கூடிய செயல்களை மட்டும் செய்யக் கூடியவர்களாகவும் இருக்கின்றனர். இவர்கள் எதிர்பாராத நிலையில் தங்களுடைய செல்வங்களை இழந்தாலும் கூட விரைவில் அதை பெற்றுவிடுவார்கள். இதனை,

*செட்டி கெட்டாலும் எட்டு நாளுல பொளச்சிடுவான்*

எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணமுடிகின்றது. இங்கு தங்கள் இழந்த செல்வங்களை எட்டு நாட்களுக்குள் பெற்றுவிடுவார்கள். அந்த அளவிற்கு திறமைபடைத்தவர்களாக செட்டியார் இன மக்கள் காணப்படுகின்றனர். மட்டுமின்றி உணவிற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் வயிற்றைக்கட்டி சம்பாதிக்கக் கூடியவர்களாகவும் உள்ளனர் என்பதை,

*பசிச்ச செட்டி பாக்க தின்னானாமா*

எனும் பழமொழியின் மூலம் அறிய முடிகிறது.

மேலும், நம்மால் விற்க முடியாத பொருட்களை செட்டியாரின மக்களிடம் கொடுத்தோமென்றால் அப்பொருளினை விற்று அதற்கான பணத்தையும் பெற்றுவிடக் கூடிய ஆற்றல் படைத்தவராகவும் இருப்பார்கள் என்பதை,

*செல்லும் செல்லாததற்கு செட்டியிருக்கிறானே*

*செட்டிக்கு தொட்டதெல்லாம் துட்டு*

எனும் பழமொழியின் மூலம் இவர்களது திறமையினைப் பற்றி உணர்ந்து கொள்ள முடிகின்றது. தங்களை அலங்காரம் செய்து கொள்வதற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுப்பர் என்பதைக் குறிப்பிட,

*செட்டி சிங்காரிக்கறதுக்குள்ள பட்டணம் பறிபோயிடுமாமா*

எனும் பழமொழி சான்றாக நிற்பதைக் காணலாம்.

முஸ்லீம் இன மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், கிறித்தவர்களின் ஜபமாலையைப் போன்று இவர்களிடமும் தஸ்மணி என்று சொல்லக்கூடிய ஒரு மாலை உள்ளது. அம்மாலையானது நூறு பாசிகளைக் கொண்டமைந்துள்ளது.

அம்மாலையிலுள்ள பாசிகளை மூன்று முறை அதாவது முண்ணூறு முறை இவர்களுடைய வேதங்களைக் கூறி ஓதினார்களெனில், அவர்களது புனித நூலான குர்ஆன் முழுமையாக ஒரு முறை படித்ததற்கு சமமாகக் கருதப்படுகின்றது. இவ்வாறு ஓதும் பொழுது எதற்காக ஓதுகிறோம் என்று மனதில் நினைத்து ஐம்புலன்களையும் அடக்கி ஓதுதல் வேண்டும். அப்பொழுது அதை இறைவன் ஏற்றுக் கொள்வார் என்றும் கூறுவதைக் காண முடிகின்றது. இக்கருத்திற்கு சான்று பகரும் விதமாக,

*முண்ணூறு உருட்டி மௌளக்கு*
*ஈமான் கொண்டவன் சீரேத்தி*
*கலிமா கொண்டவன் ஹைராக்கி*

எனும் பழமொழி அமைந்துள்ளதைக் காணலாம். இப்பழமொழியில் 'ஈமான்' என்பது ஐம்புலன்களையும் அடக்க வேண்டும் என்ற பொருளினையும், 'சீரேத்தி' என்பது இறைவனது புகழினைப் பாடுதல் என்ற பொருளினையும், 'கலிமா' என்பது முஸ்லீம் இன மக்களினுடைய வேதங்களின் ஒரு பகுதி கலிமா அதை படிக்க வேண்டும் என்ற பொருளினையும், 'ஹைராக்கி' என்பது ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற பொருளினைக் கூறுவதாகவும் அமைந்துள்ளது.

மேலும்,

*எவன் பொண்டாட்டி எவங்கூட போனாலும் லப்பைக்கு ரெண்டு பணம்*

எனும் பழமொழியினைக் கூறுகிறார். முஸ்லீம் இன மக்களில் லப்பை என்று கூறக்கூடிய ஒரு பிரிவினர் (இப்பகுதியில்) உள்ளனர். அப்பிரிவில் உள்ள ஒருவரை பள்ளிவாசலில் தலைவர் பதவியில் இருக்கச் செய்துள்ளனர். அவரது முன்னிலையில் தான் திருமணம் போன்ற விழாக்கள் நடைபெற்று வருகிறது. இங்கு ஒருவனுடைய மனைவி முஸ்லீம் இன ஆடவனுடன் சென்றுவிட்டால் அந்த இடத்திலுள்ள பள்ளி

வாசலின் பகுதியிலுள்ள மக்களும், தலைவரும் ஒன்று சேர்ந்து திருமணம் செய்து வைப்பார்கள். அதன் மூலம் தலைவருக்கு பணம் கிடைக்கும் என்று கூறுகிறது பழமொழி. இங்கு முஸ்லீம் இன மக்கள் வேறு சாதியிலுள்ள பெண்களை மட்டும் தங்களுடைய மதத்தில் சேர்த்து கொள்வார்கள். ஆனால் முஸ்லீம் இனத்திலுள்ள ஒரு பெண் வேறொரு மதத்திலுள்ள ஆடவனுடன் சென்றுவிட்டாள் எனில் அப்பெண்ணினை ஒரு போதும் முஸ்லீம் இன மக்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள் என்றொரு கருத்தும் இப்பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

பிறருடைய பொருள்களுக்கு ஆசைப்படக்கூடிய குணம் கொண்ட சாதியிலுள்ள மக்களும் உள்ளனர். பிராமணர் இனத்தைச் சார்ந்த மக்கள் ஆடைகளுக்கு நன்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர். இவர்கள் பூசை செய்யும் பொழுதும், விழாவின் போது சுத்தமான ஆடைகளை மட்டும் பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் இருக்கின்றனர். மட்டுமின்றி ஆண்கள் தூய வெண்மை நிற ஆடைகளையும், பெண்கள் வெளியிடங்களுக்கு செல்லும் பொழுது மட்டுமல்லாமல் வீட்டினுள் இருக்கும் பொழுதும் பட்டு சேலைகளை உடுத்தியிருப்பதைக் காணலாம். இவ்வாறு ஆடைகளுக்கு என பணத்தை செலவு செய்கின்றனர். கவுண்டர் இன மக்கள் எந்தவொரு விழாவாக இருப்பினும் கடாவெட்டி பொங்கல் வைத்து உண்கிற வழக்கம் இம்மக்களிடம் காணப்படுகிறது என்பதை,

*உடுத்திக்கெட்டான் பார்ப்பான்*
*உண்டு கெட்டான் வெள்ளாளன்*

எனும் பழமொழி மூலம் அறிய முடிகின்றது.

மேலும், தட்டான் இன மக்களை கோவை மாவட்ட மக்கள் குறிப்பிடுகையில், இவர்களுடைய வேலை என்பது தீயின் மூலமாக தங்கத்தினை மெருகூட்டுவதும், ஒட்டவைத்தல் போன்றவையாகும். இத்தொழிலைச் செய்து அதனால் கிடைக்கக் கூடிய வருமானத்தை, அத்தொழிலை மீண்டும்

மேன்மைப்படுத்துவதற்காக தேவையான பொருட்களைப் பெற்று பணத்தினை முழுவதுமாக செலவு செய்துவிடுவார்கள். இதனை,

*தட்டானோட பணம் கரியும் பொறியுமாத்தா போகும்*

எனும் பழமொழியின் மூலம் கூறுகின்றனர்.

வண்ணான் இன மக்களுக்கு உதவியாக இருப்பது கழுதை. இக்கழுதைக்கு அழுக்குத் துணிகளை சுமந்து செல்லவும், சுத்தமான துணிகளை திரும்ப எடுத்து வந்த பிறகு சுவர்களின் அருகினில் சென்று நிற்கவும் மட்டும் தான் தெரியும் என்பதை,

*கழுதை கெட்டா குட்டிச்சுவர்*

எனும் பழமொழி மூலம் உணரலாம். இங்கு 'கெட்டா' என்பது கழுதையினுடைய வேலை முடிந்து விட்டால் எனும் பொருளினைத் தருவதாக அமைந்துள்ள நிலையினைக் காணலாம்.

*வெளுப்பானுக்கு வெளுப்பான் சாதி வண்ணான்*

எனும் பழமொழி சாதிகளுக்குள் இருக்கின்ற ஒற்றுமையினை கூறுவதாக அமைந்துள்ளது.

ஏதேனும் விழாக்களின் போது கருப்பராயன் போன்ற சிறு தெய்வங்களுக்கு கடா வெட்டி பொங்க வைத்தல் என்பது கவுண்டர் இன மக்களது வழக்கம். இக்கடாயினை வெட்டுபவர் நாசுவன். நாசுவனுக்கு உதவியாக இருப்பவன் வண்ணான். இறுதியில் நாசுவன் என்பவன் ஆட்டினுடைய தோலினையும், வண்ணான் என்பவன் தலையினைப் பெற்றுச் செல்வான் என்பதை,

*வண்ணான் ஆட்டுத் தலைக்கு பறந்தாப்லெ*

எனும் பழமொழியால் அறிய முடிகிறது. மட்டுமின்றி சாதி உறவுகளுக்கிடையே இருக்கின்ற வழக்கத்தினை உணர்த்துவதாகவும் இப்பழமொழி அமைந்துள்ளது எனலாம்.

பள்ளன், பறையன் இவர்களுக்குள் உயர்வு தாழ்வினை வைத்துக் கொண்டு கூறக்கூடிய பழமொழிகள் கோவை மாவட்ட மக்களிடையே வழங்கப்பட்டு வருவதைக் காணமுடிகின்றன. பறையன் இன மக்கள் அனைத்து சாதிகளிலிருந்து தாழ்த்தப்பட்டவர்களாக இருந்தாலும், உயர்ந்த நிலைக்கு வரவேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களாக இருக்கின்றனர். அவ்வாறு வந்துவிட்டார்களெனில் தான் எச்சாதியினைச் சார்ந்தவன் என்றும், கடந்த காலத்தில் எந்த மாதிரியான துன்பங்களிலிருந்து இப்பொழுது உயர்ந்த நிலைக்கு வந்துள்ளோம் என்பதையெல்லாம் மறந்து செயல்படக்கூடியவர்களாக இருப்பார்கள் என்கின்றனர். தாழ்த்தப்பட்ட சாதியிலுள்ளவர்கள் உயர்ந்த நிலைக்கு வந்தாலும் அவர்களை உயரவிடாமல், சாதியின் பெயரினைக் கூறி இச்சமுதாயத்திலுள்ள மக்கள் அவர்களை தாழ்த்தப்பட்ட சாதியிலுள்ளவன் என்ற கண்ணோட்டத்தில் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. மட்டுமின்றி அவன் உயர்ந்துவிட்டான் எனில்,

*பறையன் கொளுத்தா பாயில படுக்கமாட்டான்*

என்ற பழமொழியினைக் கூறி உயர் சாதியிலுள்ள மக்கள் அவனைக் கேலி செய்வதையும் காணலாம். இவர்கள் உயர்ந்த நிலைக்குச் சென்று ஆடம்பரமாக வாழ்ந்தாலும் இவர்களின் சாதியின் பெயர் ஒரு போதும் மாறாது என்பதை,

*பட்டை உடுத்தி ரோட்டுல போனாலும் பறச்சி பறச்சி தான்*

எனும் பழமொழியின் மூலம் கூறுகின்றனர். இங்குப் பெண்களை உயர்ந்த நிலைக்கு வரவிடாமல் தடுத்து தாழ்ந்த சாதியிலுள்ள பெண் தாழ்ந்த நிலையில் தான் இருக்க வேண்டும் என்று அடிமைப்படுத்துகின்ற நிலையினை இப்பழமொழியில் காணமுடிகின்றது.

கவுண்டர், செட்டியார் இன மக்கள் பள்ளர் இன மக்களைப் பற்றிக் கூறுகையில், இவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் இவர்களுக்கு என்றிருக்கக் கூடிய ஒரு ஒலியானது அடிக்கடி எழுப்புவதைக் காணலாம் என்பதை,

*பள்ளப் புள்ளய பள்ளிக்கூடத்துல படிக்க வெச்சாலும் அனேங்கற புத்தி போகாது*

எனும் பழமொழியின் மூலம் கூறுகின்றனர். இப்பழமொழியில் 'அனே' என்ற சொல்லினைத் தான் இவர்கள் அடிக்கடி பயன்படுத்துகின்றனர் என்பதை அறிய முடிகிறது.

குறவர்கள் தங்களது பிள்ளைகள் தம்மைப் போன்றில்லாமல் நல்ல முறையில் முன்னேற வேண்டும் எனக் கருதி அதற்கான அடிப்படை வசதிகள் செய்து கொடுக்கின்றனர். இருப்பினும், தான் எந்த பண்பாட்டினை மேற்கொண்டு வாழக்கூடியவன் என்று பிறருக்கு காண்பித்து விடக்கூடியவனாக குறவன் மகன் காட்சியளிப்பான் என்று,

*குறவன் மகன டைக்கட்டி பள்ளிக்கூடத்துல அனுப்பினாலும் டைகழட்டி கோமணம் கட்டிட்டு வருவான்*

எனும் பழமொழி உணர்த்துகிறது.

சக்கிலிய சாதியில் இருக்கக் கூடியவர் செருப்பு தைய்க்கும் தொழிலைச் செய்யக்கூடியவர்களாக இருப்பார்கள் என்பதை,

*சலூச்சு முடிச்சு சக்கிலியன் வூட்டுக்குப் போனா செருப்பு தையீனு சொல்றான்*

எனும் பழமொழியால் அறியலாம்.

### 3.1.3 புழங்கு பொருள் சார் பண்பாடு

நம் வாழ்வு என்பது பொருளுடன் இணைந்த வாழ்வு. பொருளின் இன்றியமையாமையை குறித்து பல்வேறு இலக்கியங்கள் எடுத்தோதுகின்றன.

“பொருள் இல்லார்க்கு இவ்வுலகமில்லை” இன்று இக்கருத்து வலுப்பெற்று வருகிறது. அத்தகைய பொருளின் செயல்பாடுகள் பலநிலையில் தொடர்ச்சியாக பயன்படுத்துவதன் காரணமாக அவை நம் பண்பாட்டின் கூறாக அல்லது வாழ்வியல் கூறுடன் இணைந்ததாக மாறுகிறது. இப்பொருள் அந்நிலைக்கு உயரும் போது அது நம் பண்பாட்டை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

### 3.1.3.1 புழங்கு பொருள்

புழங்கு பொருள் என்பது மனிதன் அன்றாடம் பயன்படுத்தக்கூடிய, கைவினை மற்றும் கலைப் பொருட்களை உள்ளடக்கியது ஆகும். இதனைக் குறித்து கருத்து தெரிவிக்கும் பக்தவத்சல பாரதி,

“புழங்கு பொருள் பண்பாட்டில் குறிப்பிட்ட சில வகையான பொருட்கள் அன்றாட வாழ்க்கை சார்ந்த சமூக பொருளாதாரச் செயல்பாடுகளுக்கு நேரடியாக உதவக் கூடியவையாக உள்ளவற்றை Craft என்று வகைப்படுத்திக் கொண்டனர். மற்றொரு பிரிவானது அழகியல் சார்ந்த, மகிழ்ச்சி தருகிற, அலங்காரத் தன்மை கொண்டதாக இனங்கண்டு அதனை art என்று வகைப்படுத்திக் கொண்டனர் என்கிறார் ஹென்றி கிளாசி”[13]. இத்தகைய புழங்கு பொருள்களை பயன்படுத்தும் மக்களின் வாழ்வியல் வழக்காறுகள் அப்பொருட்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. பழமொழி, பாடல், கதை, கதைப்பாடல், விடுகதை, தொன்மம், சடங்கு நிகழ்வுகள், நிகழ்த்து கலைகள் என பல பரிமாணங்களில் இவை எடுத்தாளப்பட்டன. இவற்றைத் தொகுத்து மீட்டுருவாக்கம் செய்யும் நிலையில் அவர்களுக்கான வரலாற்றினை உருவாக்க முடியும்.

இங்கு அய்வுப் பொருளான பழமொழியில் பல்வேறு விதமான புழங்கு பொருள்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

### 3.1.3.2 புழங்கு பொருள் பண்பாட்டில் பெண் பற்றிய பதிவுகள்

தந்தைவழி சமூகத்தின் பொது மனநிலையில் பெண் மென்மையானவள், அவளால் வலிமையுடைய செயல்களைச் செய்ய இயலாது என்பது ஆழமாக வேரூன்றியுள்ளது. பெண்கள் பொதுவாக வீட்டிலும் வீட்டு அயலகப் பகுதிகளில் வேலை செய்பவர்களாகவும், ஆண்களுடன் ஒப்பிடும் போது எளிமையான வேலை செய்பவர்களாகவும் உள்ளனர். இவை நாட்டார் வழக்காற்றில் தெளிவுபட பதிவு செய்யப்பெற்றுள்ளது. பெண்கள் பயன்படுத்தும் பொருட்களும், அவர்கள் புழங்கு வெளியும் அதனால் கட்டமைக்கப்படுகின்ற ஆண் மைய அரசியலையும் ஆய்வுப் பொருளான பழமொழியின் ஊடாக ஆராயலாம்.

**களையெடுத்தல்**

*கம்புக்கு கள வெட்டினாப்லயும் ஆச்சு*
*தம்பிக்கு பொண்ணு பாத்தாப்லயும் ஆச்சு*

**அம்மி அரைத்தல்**

*அடுத்த வீட்டுக்காரி புள்ள பெத்தான்னு சொல்லி*
*அம்மிக்கொளவி எடுத்து இடித்துக் கொண்டாளாமா*

**பலகாரம் சுடுதல்**

*இந்திரனுக்கு கொட புடிச்சு எமனுக்கு பலகாரம்*
*சுட்டுப் போட்டவ*

**பொம்மை கொலு**

*உங்கம்மா உன்னை கொலுவிலயா பெத்தா*
*எங்கம்மா என்னை தெருவிலயா பெத்தா*

**கோலம் போடுதல்**

*கோலம் போடு கோலம் போடுன்னு*
*கோலம் போட நேரமில்லைன்னு அள்ளிப் போட்டாளாம*
*அது மாதிரி.*

**சும்மாடு சட்டிபானை**

*சும்மா இருந்தவளோட சும்மாட்டப்பாரு*
*சட்டிப்பான வித்தவளோட தமாசப்பாரு*

**பழைய சீலையைக் கொடுத்தல்**

*பாவம்னு பழைய சீலையை கொடுத்தா அவ*
*வீட்டுக்குப் பின்னால போயி மொளம் போட்டு பாத்தாளாமா*

**மோர் வாங்கச் செல்லுதல்**

*மோருக்குப் போறவ சொம்ப ஒளிக்காட்டி என்ன*

**விரகுக்குச் செல்லுதல்**

*வித்தாரக் கள்ளி வெரகுக்குப் போயி*
*கத்தாள முள்ளு கொத்தோட ஏறுச்சாமா*

**அரிசி அரித்தல்**

*அரிக்கிற அரிசிய  விட்டுட்டு சிரிக்கற*
*சித்தப்பனோட போனாளாமா*

**ஈச்சம்பாய் சுற்றுதல்**

*அரிசி வாங்கலாம்னு அக்கா வீட்டுக்குப்*

*போனா அக்காக்காரி ஈச்சம்பாயை இடுப்பிலே*
*சுற்றிக்கிட்டு எதுக்கா வந்தாளாமா*

**உரலில் இடித்தல்**

*எள்ளுமா வேண்டாம்னு உரலுக்குள்ள தலவிட்ட மாதிரி.*

**மஞ்சள் அரைத்தல்**

*மானங்கெட்ட முண்டை மஞ்சள் அரைக்கப் போயி*
*ஈனங்கெட்ட பையன் எட்டிப் பார்த்தானாமா*

**மோரில் வெண்ணை எடுத்தல்**

*கடஞ்ச மோர்ல வெண்ணெய் எடுக்கறவ உங்க அக்காக்காரி*

**மிளகாய் அரைத்தல்**

*தலையில் ஏறி மொளகா அரச்சிடுவா*

**அறுவடை செய்தல்**

*அறுக்க மாட்டாதவளுக்கு ஆயிரம் அறுவாள்*
*ஆடத் தெரியாதவளுக்கு தெருவெல்லாம் கோணலு*

**தூற்றுதல், பிள்ளைப் பெறுதல்**

*பீத்த மொறம் கையிலே பிள்ளைக ரெண்டு இடுப்புல*

போன்ற சொற்களை ஆராய்ந்து பார்க்கின்ற போது பெண்களின் புழங்கு வெளியை உருவாக்குவதிலும், அவர்கள் எத்தகைய தொழில்களிலும், செயல்பாடுகளிலும் அனுதினம் ஈடுபடுத்தப்பட்டனர் என்பதையும் அனுமானிக்க முடிகிறது.

### 3.1.3.3 புழங்கு பொருள் பண்பாட்டில் ஆண் பற்றிய பழமொழிகள்

பாலின அடிப்படையில் ஆண்களே நம் சமூகத்தை ஆள்பவராகவும், பெண்கள் அவர்களுக்குப் பணிந்து வாழ்ந்து வருபவர்களாகவும் உருவாக்கப்பட்டுள்ளார்கள். இத்தகைய செயல்பாடு வீடு என்னும் அமைப்பில் மட்டுமின்றி பிற அனைத்து செயல்பாடுகளிலும் விரிந்து காணப்படுகின்றன. ஆண்களின் புகழ், வலிமை, தொழில், நட்பு, பகை போன்ற செயல்களை வெளிப்படுத்தும் விதமாக கோவை மாவட்டத்தில் வழங்கி வரும் பழமொழிகளைக் காணமுடிகின்றது.

ஆண்களின் தொழிலை விளக்குவதன் ஊடாக கட்டமைக்கப்பட்டள்ள ஆண் மைய வாத அரசியலை வெளிக்காட்ட முடியும். கோவை மாவட்ட ஆண்கள் பல தொழில்களைச் செய்பவர்களாகக் காட்டப்படுகிறார்கள். அத்தொழில்கள், தொழில் செய்வதற்கு பயன்படுத்தக்கூடிய கருவிகளால் உணர்த்தப்படுகின்றன. சான்றாக,

**ஏர் ஓட்டுதல்**

*ஏரோட்டாத நெலமும் அப்பன் திட்டாத மகனும் உருப்படாது.*

**அச்சு உருவாக்குதல்**

*அச்சு இல்லாம தேரோடுமா?*
*ஆம்பளை இல்லாம புள்ள பெறமுடியுமா?*

**கடப்பாரை குத்துதல்**

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன்*
*புறந்திருக்கானு சொல்லி கடப்பார எடுத்து காது*
*குத்தினாங்களாமா?*

**பன்னி மேய்த்தல்**

*ஆசை தான் தாசில்தார் வேலைக்கு*

*அம்சம் போட்டுகுது பன்னி மேய்க்கறதுக்கு*

**கள்ளு வித்தல்**

*உன்னோட பசியைப் பத்தி கள்ளு*

*விக்கறவன் கவல படமாட்டான்*

**சங்கு ஊதுதல்**

*சும்மா இருந்த சங்க ஊதிக் கெடுத்தானாம் தாசன்*

**தண்டல் வேலை**

*தடியெடுத்தவனெல்லாம் தண்டல்காரனாக முடியுமா?*

**தேன் எடுத்தல்**

*தேன் எடுத்தவன் புறங்கையை நக்குனது மாதிரி*

**இரும்பு அடித்தல்**

*இரும்பு அடிக்கற எடத்துல ஈக்கென்ன வேலை*

**எண்ணையெடுத்தல்**

*எள்ளுண்ணா எண்ணையா நிக்கறான்*

**உழுதல்**

*உழுகிறவன் கேணையா இருந்தா*

*எருது மச்சானே மச்சானேனு சொல்லுமாமா*

*காடு அறியாதவன் கல்லாங்காட்ட உழவேண்டும்*

போன்ற சொற்கள் ஆண்கள் செய்யக் கூடியத் தொழிலை உணர்த்தக் கூடியதாக பழமொழிகளில் அமைந்துள்ளன. ஆண் செய்யும் தொழில்களை பெண் செய்யும் தொழில்களுடன் ஒப்பிடுகையில் ஆண்கள் செய்யும் தொழில்கள் வீட்டிற்கு வெளியே அமைந்ததாகக் காணப்படுகின்றன.

### 3.1.3.4 உணவுப் பொருட்கள்

மனிதனின் அடிப்படைகளான உணவு, உடை, இருப்பிடம் என்பதில் உணவு என்பது முதன்மை உடையதாகிறது. தனித்தனியாக வேட்டையாடி வாழ்ந்த மனிதன் இனக்குழுச் சமூகமாக மாறுவதற்கு உணவு சேகரித்தல் என்னும் செயல்பாடு பல்வேறு படிநிலைகளை நமது வரலாறுகள் எடுத்தாளுகின்றன. ஒவ்வொரு சமூகத்திற்கும் உணவுப் பொருள் சார்ந்த தனித்த வரையறைகள் காணப்படுகின்றன. இவ்வரையறைகள் என்பது அம்மக்களின் வாழ்விடம் சார்ந்த பகுதிகளைச் சுற்றியுள்ள உணவுப் பொருட்களாகவே காணப்படுகின்றன. மனிதன் அதிகமாக உட்கொள்ளும் உணவுப் பொருட்கள் அவனது வழக்காறுகளில் அதிகமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவ்வழக்காறுகளின் அடிப்படையில் அவர்களின் உணவுப் பொருள் குறித்த பதிவுகள் அனைத்தும் வரையறை செய்ய முடியும் எனக் கருத முடிகிறது. அவ்வகையில் கோவை மாவட்டப் பகுதிகளில் வழங்கிவரும் பழமொழிகளில் உணவுப் பொருள் பற்றிய பதிவுகள் எவ்வாறு காணப்படுகின்றன என்பதை உணரலாம்.

#### 3.1.3.4.1 அரிசி

'அரிசி' என்பது நமது பண்டைய உணவாகவே அடையாளப்படுத்தப்படுகிறது. அரிசியைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில்

அதிகம் காணப்படுகின்றன. அரிசி உணவு என்பது ஒரு காலம் வரை செல்வம் வளம் கொழிக்கும் பெரியோரின் உணவுப் பொருளாக இருந்தது என்பது வரலாறு. அரிசில், அடிசில், பெருஞ்சோறு என்ற பதங்கள் சங்க இலக்கியங்களில் புலவர்கள் விருந்தினராக சென்ற போது அரசன் உணவளித்தலில் முதல் உணவுப் பொருளாக அமைந்துள்ளது. புலவர்களின் வறுமையினை எடுத்துக் கூறும் பாடல்களில் அரிசி பற்றிய குறிப்புகள் காணப்பட்டுள்ளதா? என்பது கேள்வியாக உள்ளது.

நெல்லிலிருந்து அரிசி உருவாக்கப்படுகிறது. நெல் உற்பத்தி என்பது உழவுத் தொழில் சார்ந்தது. உழவுத் தொழிலுக்குரிய நிலம் மருதம். இந்நிலத்தில் உழவுத் தொழில் செய்து நெல் விளைவித்து உழவர்கள் உண்டு வாழ்ந்தனர். தேவைக்கு அதிகமான நெல்களை விற்பனை செய்யவும், உபரி நெற்களைத் தேக்கி வைக்கும் பழக்கமும் உருவானது.

அரிசியை உணவுக்குப் பயன்படுத்திய முறையை இளம்பூரணர் சொல்லதிகாரத்தில் சொல் பற்றி விளக்கும் போது நெல் உமி, கற்களை களைந்து நல்ல அரிசி உருவாக்குவது போல சொற்களைத் தேர்வு செய்ததாக குறிப்பிடுகிறார். இதனை எடுத்தோதும் விதமாக சேகரிக்கப்பட்ட பழமொழி ஒன்று உள்ளது. அது வருமாறு,

*அரிக்கிற அரிசிய விட்டுவிட்டுச்*
*சிரிக்கற சித்தப்பனோட போனாளாமா?*

இப்பழமொழியில் 'அரிக்கிற அரிசிய' என்ற சொற்கள் மேலே காட்டப்பட்டுள்ள இளம்பூரணர் கருத்துடன் ஒப்பிட்டு பார்க்க முடிகிறது.

கி.பி. 17, 18, 19–ஆம் நூற்றாண்டில் உழைக்கும் மக்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் முகமாக 'உழத்திப்பாட்டு' என்னும் பள்ளு இலக்கியம் உருவானது. இதனில் கூறும் நம்முடைய வேளாண்மை முறையைத் தகுந்த முறையில் பதிவு செய்யப்பட்டுள்ளது. நெல்லுவகை, வித்துவகை, நிலம்

பதப்படுத்தல் தொடங்கி அறுவடை பருவ நிலைகள் அனைத்தும் நிரல்பட எடுத்துக் கூறுகிறது. இத்தகைய சிறப்பு மிக்க அரிசியை கடன் பெற்றும் உணவாக்கி வந்தனா். இதனை,

*அரிசி வாங்கலாமுன்னு அக்கா வீட்டுக்குப் போனா*
*அக்கா தூக்கி மச்சா மடியில போட்டாளாமா*

என விளக்குகிறது.

### 3.1.3.4.2 கஞ்சி

'கஞ்சி' என்பது அரிசியை மை போல வேகவைத்தெடுப்பது. இது குடிக்கக் கூடிய பொருளாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இது நல்ல உணவுப் பொருளாகவும் நீராகாரமாகவும் இருக்கிறது. 'வடிநீர், வடிச்ச கஞ்சி' என்ற சொற்கள் இதன் வேறு பெயர்களாகும். வறுமையில் வாடுபவர்கள் பிறரிடம் சென்று கஞ்சி வாங்கி அருந்தும் வழக்கம் காணப்படுகிறது. இது இருநிலையில் அமைகிறது. சுடுகஞ்சி என்றும் பழங்கஞ்சி என்றும் இதனை,

*ஓசுக்கு கஞ்சி கொடுத்தா மசுரு மசுருன்னாமா*

என்ற பழமொழி விளக்குகிறது. மேலும், வறுமையைப் பற்றிக் குறிப்பிடும் போது,

*கஞ்சி கஞ்சின்னா வயிறு நிறையாது*

என்ற பழமொழி எடுத்துக்காட்டுகிறது. வறுமையினைப் போக்குவதற்கு அரிசியின் வடிநீராக இருந்தால் மட்டும் போதும் என்பதை,

*காணாதவ கஞ்சியைப் பாத்தா ஓயாம துவையல் அரப்பாளாமா*

எனும் பழமொழி சுட்டுகிறது. கஞ்சி உணவிற்கு ஏற்ற கூட்டுப் பொருளாக 'துவையல்' பயன்படுத்தப்பட்டள்ளது. துவையல் என்பது தேங்காய், மாங்காய்,

கடலை, கொத்தமல்லி முதலியவை உண்டாக்கும் உணவுப் பொருளைக் குறிப்பதாகும். மேலும்,

*நீசத்தண்ணியும் மொளகும் குடிச்சவன் பணக்காரனுமாயிட்டான்*
*பாலும் பழமும் குடிச்சவன் ஏழைக்காரனுமாயிட்டான்*

எனும் பழமொழி கஞ்சி பயன்படுத்தியுள்ளனர் என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளது.

### 3.1.3.4.3 பொங்கல்

கோவை மாவட்டத்தில் 'பொங்கல்' இரண்டு வகையில் காணப்படுகின்றது. ஒன்று 'வெண்பொங்கல்' மற்றது 'சக்கரைப் பொங்கல்'. 'வெண்பொங்கல்' என்பது அரிசியுடன் அவை தரும் பல உணவுப் பொருட்களை சேர்த்து செய்யப்படுவதாகும். இது பெரிதும் வீடுகளில் உண்டாக்கப்படும் உணவுப் பொருள். அதனை பதிவு செய்யும் விதமாக,

*தாகத்துக்கு தண்ணி கேட்டானு கொடுத்தா*
*பசிக்கு பொங்கல் போடுன்னு சொன்னானாம்*

என்ற பழமொழி கூறுகிறது.

வேறொரு பொங்கலான, 'சக்கரைப் பொங்கல்' அல்லது 'சீனிப் பொங்கல்' என்பது விழாக்காலங்களில் கோயில்களிலும் வீடுகளிலும் வைக்கக் கூடியது. இது அரிசியுடன் சக்கரை அல்லது வெல்லம் சேர்த்து வைப்பதாகும். இப்பொங்கல் சிறப்பு கருதி எப்பொழுதாக நடைபெறக் கூடியது. இதனை மறைமுகமாக ஒரு பழமொழி எடுத்தக்காட்டுகிறது. அது வருமாறு,

*போக்கிரிகளுக்கு பொங்கல் வெச்ச மாதிரி*

கடவுளை வைத்து சிறப்பித்து கடவுளுக்கு பொங்கல் வைப்பது மக்களின் மரபு. ஆனால் இங்கு சட்டத்துக்கு புறம்பாக நடக்கக் கூடியவர்களுக்கு கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது.

### 3.1.3.4.4 பால்

'பால்' என்பது உணவுப் பொருள். கோவை மாவட்ட மக்கள் பால் என்பதை உணவுப் பொருளாக மட்டுமின்றி பல பொருண்மைகள் அடங்கிய சொல்லாக பல இடங்களில் பயன்படுத்துகிறார்கள். பாலின் தனித்தன்மைகளுக்கு ஏற்ப அதன் பொருள் விரிவடைகிறது. பொதுவாக பால், உணவுப் பொருள் என்ற பொருளை இழந்து, தூய்மை, மானம், வெண்மை, நிறம், குணம் என்ற பொருள்களில் வழங்கி வருகின்றன.

*ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி ஒர*

இது குணப் பொருளில் வந்துள்ளது.

*கறந்த பாலு கலயம் ஏறவா போகுது*

*கறந்த பாலு மடி ஏறாது*

*கொட்டின பாலை நினைத்து குமுறி அழாதே*

என்ற பழமொழிகளில் பால் என்பது மானம் என்ற பொருளில் வந்துள்ளன.

*மாடு வேறு நிறமானாலும் பால் வேறு நிறமாகுமா?*

என்ற பழமொழி ஒற்றுமையை வலியுறுத்தும் விதமாக பலவிடங்களில் பேசப்படுகின்றன.

*இன்னைக்கு செத்தா நாளைக்கு பால்*

என்ற பழமொழியில் பால் என்பது இறப்பு நிகழ்வில் முக்கிய இடம் வகிக்கிறது.

இறந்தவனுக்கும் அவனது வீட்டிற்கும் பால் வழியான உறவு முறிந்ததின் அடையாளமாக பாலூற்றுவதாக எண்ண முடிகிறது.

### 3.1.3.4.5 தயிறு

*மத்து போட்ட தயிறு மாதிரி புத்தி குழம்பி போச்சு*

பாலில் உறை ஊற்றி வைக்கப்பட்டு தயிறு எடுக்கப்படுகிறது. மத்து என்பது தயிரைக் கடையக் கூடிய மரத்தினால் ஆன பொருள். மத்தினை தயிருள் இட்டு சுருளச் செய்து வெண்ணெயை எடுப்பர். இதனில் சுருளுதல் என்ற சொல் ‘மனக்குழப்பம்’ என்னும் பொருளைத் தருவதாக பழமொழியில் வந்துள்ளது.

செயலை எதிர்பார்த்து காத்திருந்து பொய்த்துப் போன நிகழ்வுகளை கோவை மாவட்ட மக்கள் வெண்ணெய்யுடன் ஒப்பிட்டு பழமொழியாக வழங்கியுள்ளனர்.

*கடையும் போது வராத வெண்ணெய்*
*குடையும் போதா வரப் போகுது*

என்றும், ஒரு செயல் செய்யும் போது எத்தகைய கவனப்பாடுகள் தேவை என்பதும் அவ்வாறு இல்லாத நிலையில் அச்செயல் நல்ல முறையில் முடிவிற்கு செல்லாது என்னும் பொருளில் வரும் பழமொழி (கொட்டின பாலை நினைத்து குமுறி அழாதே) ஒன்று கூறப்படுகிறது.

மேலும்,

*கடஞ்ச மோர்ல வெண்ணெய் எடுக்கற மாதிரி*

எனும் பழமொழி வெண்ணெப் எடுத்தல் என்ற விடாமுயற்சியைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

பிறரிடம் மோரினை வாங்கச் செல்லக் கூடிய நிலையும் கோவை மாவட்ட மக்களிடம் உள்ளது என்பதை,

*மோர வாங்கப் போறவ சொப்ப ஒளிக்காட்டி என்னோ*

எனும் பழமொழி சுட்டுகிறது.

பொதுவாக பாலும், பாலினால் உருவாகக் கூடிய பொருட்கள் யாவும், கோவை மாவட்டங்களில் பயன்படுத்திய விதம் குறித்து இங்கு தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. இவையாவும் கோவை மாவட்டப் பகுதிகளில் கால்நடை வளர்ப்பின் தேவையையும், மரபையும் பெரிதும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன.

### 3.1.3.4.6 உப்பு

உணவுப் பொருட்களை பதப்படுத்துவதற்கும், சுவைப்படுத்துவதற்கும் 'உப்பு' பயன்படுகிறது. ஆகையால் உப்பு சமூகத்தில் முதன்மை பொருளாக கவனிக்கப்படுகிறது. உணவுப் பொருளில் உப்பு தேவை என்பதை "உப்பில்லாத பண்டம் குப்பையில்" என்ற பழமொழி தெளிவுபடுத்துகிறது. உப்பினை வெறுமனமே உண்ண முடியாது. அதனுடன் பிற பொருட்கள் சேர்க்கும் போதே உண்ண முடியும் என்பதை,

*உப்பு திண்ணவன் தண்ணி குடிக்க வேண்டும்*

என்றும், அதுவே விஷமாக மாறும் போது அதனை சரியாக கடைபிடிக்க வேண்டும் என்பதை,

*உலக்கையை விழுங்கிவிட்டு உப்பில்லா பத்தியம் இருப்பது*
*போல*

என்னும் பழமொழி விளக்குகிறது. உப்பில்லாமல் இருக்கும் பொழுது உப்பினுடைய தேவையை நம்மால் உணர்ந்து கொள்ள முடியும் என்பதை,

*அப்பன் அருமை அப்பன் செத்தாத் தெரியும்*

*உப்போட அரும உப்பில்லாட்டாத் தெரியும்*

எனும் பழமொழி கட்டுகிறது. ஒரு குடும்பத்தில் அப்பா என்பவரும், உணவிற்கு உப்பு என்ற பொருளும் முதன்மை இடத்தில் நிற்கிறது என்பதை இப்பழமொழியில் ஊடாக அறிந்து கொள்ளலாம்.

### 3.1.3.4.7 காய்கறிகள்

மேற்குத் தொடர்ச்சி மலைச்சாரலில் கோவை மாவட்டம் அமைந்துள்ளது. மலையோர நிலப்பகுதிகளை நல்ல நிலமாக மாற்றி மக்கள் வேளாண்மை செய்து சந்தை செய்து வந்துள்ளனர். குறிப்பாக அங்கு விளையும் பயிர்கள் பிற பகுதிகளில் ஏற்றுமதி செய்யும் அளவிற்கு விளைச்சல் பெருகியுள்ளது எனலாம். அங்கு பயிர் செய்யும் பொருட்களாவன, கத்தரிக்காய், வெண்டைக்காய், கீரை, கருவேப்பிலை, சுரக்காய், தக்காளி, நெல்லிக்காய், முருங்கைக்காய், மாங்காய், பூசணிக்காய் என்பனவாகும். இப்பொருள் அனைத்தும் உற்பத்தி செய்வதுடன் விவசாயிகளே நேரிடையாக வியாபாரம் செய்கின்றனர். இக்காய்கறிகள் அனைத்தும் மக்கள் வழங்கும் வழக்காறுகளில் காணப்படுகிறது. அவை அதன் வடிவம் சார்ந்தும், சுவை சார்ந்தும், உணவில் பயன்படுத்தப்படும் முறை சார்ந்தும், வாழ்க்கை சடங்குகள் சார்ந்தும், மருத்துவம் சார்ந்தும் பயன்படுத்தப்படுகின்றன. வேறு நிலையிலும் இதனை பொருள் கொள்ள ஏதுவாகிறது. பழமொழிகளின் அமைப்பு முறையில் உவமப் பொருளாக இக்காய்கறிகள் நிற்க, உவமிக்கப்படும் பொருள்கள் அம்மக்களின் வாழ்வியல் விழுமியங்களையும், மக்களின் உருவ ஒற்றுமைகளையும் எடுத்துக்காட்டுவதாக உள்ளது.

பிள்ளைகளை நன்முறையில் வளர்த்தால் தான் அவன் சமூகத்திற்கு பயன் உடையதாக இருப்பான் என்பதை,

*முருங்கையை ஒடிச்சு வளக்கணும்*

*பிள்ளைகளை அடிச்சு வளக்கணும்*

என்ற பழமொழியில் முருங்கையை ஒடித்துவிட்டு நன்முறையில் நீர்விட்டு வளர்க்கும் போதே அது செழிப்புற்று வளரும். அதுபோலவே தன் மகனை அல்லது மகளை அடித்து வளர்த்தல் வேண்டும் என்பதை எடுத்துக்கூறுகிறது. அதுபோல,

*பத்தியத்துக்கு முருங்கைக் கீரை கொண்டு வரச் சொன்னா*

*பால் தெளிக்க அகத்திக்கீரை கொண்டு வருவான்*

எனும் பழமொழியில் மருத்துவம் செய்கின்ற நிலையினையும், சடங்குகள் செய்யக்கூடிய நிலையினையும் கூறுவதாக அமைந்துள்ளதைக் காணலாம். மேலும் 'கத்தரிக்காய்க்கு கையும் காலும் முளச்ச மாதிரி' எனும் பழமொழியில் கத்தரிக்காய் என்பது உருவத்தில் சிறிபது என்றும், அதை உயரத்தில் சிறியவர்களாக இருக்கக்கூடிய மனிதர்களின் உருவத்தினை (தோற்றத்தினை) ஒப்பிட்டுக் கூறி உவமிக்கப்பட்டுள்ள நிலையினையும் காண முடிகிறது.

### 3.1.3.4.8 மேலும் சில உணவுப் பொருட்கள்

ஊறுகாய் (மப்புக்கு ஊறுகாய் மாதிரி), எள் (எள்ளுண்ணா எண்ணையா நிக்கறான்), கரும்பு (கரும்பு திங்க கூலி வேணுமா), கொத்தமல்லி (நீ இருக்கறயே பச்ச கொத்தமல்லி), வெல்லம் சக்கரை (வெல்லம் இனிக்குதுன்னு சொல்லி சக்கரை கசக்கவொன்னும் செய்யாது) போன்ற உணவுப் பொருள் சார்ந்த பழமொழிகளும் கோவை மாவட்ட மக்களிடம் வழங்கப்படுகிறது.

காய்கறி உணவுப் பொருட்கள் மட்டுமல்லாது மாமிச உணவுப் பொருட்களான நண்டு (ஓட்டப்பானைக்குள்ள நண்டு), மீன் (ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு பெட்டியில இருக்கற மீனும் போச்சு), கோழிக்கறி (கோழி குருடானா கொழம்பு மனமில்லாமலா போகும்), ஆட்டு இறைச்சி (ஆட்ட

அறுபதையும் திம்பா, வெள்ளாட்டப் பாத்தா விடுக்குன்னு துள்ளுவா) பாம்புகறி, பன்னிக்கறி போன்ற பழமொழிகளையும் இம்மக்களிடம் வழங்கப்பட்டு வருவதை காண இயலுகிறது.

பொதுநிலையில் உற்று நோக்கும் போது உணவு பற்றிய பழமொழிகளும், காய்கறிகள், மாமிசம் பற்றி பழமொழிகளும் மக்கள் புழங்கு வெளி சார்ந்தும் நிலத்துக்கு தக பொருட்களை உற்பத்தி செய்தும் வந்துள்ளனர்.

### 3.1.3.5 கட்டிடம்

மனிதனின் வாழ்வில் இன்றியமையாத அடிப்படைத் தேவைகள் மூன்று. அவை உணவு, உடை, உறையுள் என்பனவாகும். இதில் நாடோடி வாழ்க்கை முறையினைக் கொண்டிருந்த ஆதி மனிதன் உணவிற்காக ஓர் இடத்தில் தங்கி வாழும் நிலை ஏற்பட்டது. “இதன் விளைவே கட்டுமானங்கள். அக்கட்டுமானங்கள் காலத்தை வென்று மனித நாகரிக வரலாற்றை நின்று காட்டும் சான்றாதாரங்களாக விளங்குகின்றன. இயற்கையாக அமைந்த ஒரு வெற்றிடத்தை, மலை குகைகளை, மரப்பொந்தினை மனிதன் தன் தேவைக்கேற்ப, ஆற்றலுக்கேற்பத் தனது அழகுணர்ச்சிக்கேற்ப வடிவாக்கம் செய்து வாழிடமாக அமைத்துக் கொண்ட உறைவிடங்களே கட்டிடங்கள் கட்டிடக்கலைச் சின்னங்கள்”[14] என்கிறார் கோ.தெய்வநாயகம் அவர்கள்.

இக்கட்டிடக்கலை நாகரிகத்தின் பிறப்பிடம் அல்லது கருப்பை என மேனாட்டார் கருதி வருவது மிகவும் பொருத்தமுடையதே என செ. வைத்தியலிங்கம் அவர்கள் கூறுகிறார். கட்டு இடம் என்ற சொல் அமைப்பு கட்டப்பெற்ற இடம் என்ற பொருளைத் தருகின்றது. இங்கு கோவை மாவட்ட வீடுகள் எத்தகைய அமைப்புக்களுடன் இருக்கின்றன என்பதை கீழ்வருமாறு காணலாம்.

கோவை மாவட்ட மக்கள் கூரைவீடு, நடுத்தர வீடு, மச்சுவீடு, கண்ணாடி வீடு போன்ற வீடுகளில் வசித்து வருகின்றனர். இவர்கள் ‘வீடு’ என்பதை

வீடு, மனை என்ற சொற்களால் கூறிவருகின்றனர். இம்மாவட்டத்தில் வசதியின்றி இருக்கக் கூடிய மக்கள் உள்ளனர். இவர்கள் தங்களுக்கு என்றொரு தனியான வீடு வேண்டும் என்பதை உணர்ந்து கூரை வீடு, சாளை வீடு போன்ற வீடுகளில் வாழ்ந்து வந்துள்ளனர். இதனை,

*கூரை மேல் ஏறி கோழி பிடிக்கத் தெரியாதவன்*
*வானம் ஏறி வைகுண்டம் போனானாம்*

*எலிச்சாளையானாலும் தனிச்சாளை வேணும்*

எனும் பழமொழிகள் உணர்த்தி நிற்கின்றன. சிறிது வசதியுடன் இருக்கக்கூடிய மக்கள் திண்ணை, அட்டானி, பொடக்காளி போன்ற அமைப்புடன் இருக்கக்கூடிய வீடுகளில் வசித்து வருகின்றனர்.

*திண்ணையில் இருந்தவனுக்கு திடீர்னு கல்யாணம்*

*ஆடு கடிக்குதுன்னு அட்டானி மேல ஏறி உக்காந்திட்டான்*

*அரிச்சந்திரன் வீட்டு பொடக்காளியில பொறந்தது மாதிரி பேசுவா*

எனும் பழமொழிகளின் ஊடாக நடுத்தர மக்கள் வாழக்கூடிய வீட்டின் அமைப்பினை உணர்ந்து கொள்ளலாம். இதில் 'அட்டானி' என்பது வீட்டில் மேற்கூரைப் பகுதியின் கீழ் அமைந்திருக்கக் கூடிய பகுதியினைக் கூறுவர். இந்த அட்டானியினை சில இடங்களில் 'மச்சு' எனும் சொல்லால் கூறி வருகின்றனர். இதை,

*குடிக்கறது கூழு கனா காண்பது மச்சு மாளிகை*

எனும் பழமொழி விளக்குகிறது. வீட்டிற்குப் பின்புறமாக இருக்கக்கூடிய பகுதியினை 'பொடக்காளி' என்றும் கூறி வருகின்றனர். ஆனால் சில இடங்களில் பொடக்காளி என்பது குளியலறையைக் குறிக்கக் கூடிய சொல்லாகவும் வழங்கி வருவதைக் காண முடிகின்றது. வயதானவர்களின் வசதிக்காக திண்ணைப் பகுதியினைப்

பயன்படுத்தி வருகின்றனர். சிறிய வீடாக இருப்பினும், 'குட்டி போட்ட நாய்க்கு குப்ப மேடும் கோபுரம் தான்' எனும் பழமொழிக்கு ஏற்ப அவ்வீடுகளில் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருவதைக் காணலாம். நாகரீகம் வளர்ச்சியடைந்த இக்காலகட்டத்தில் நன்கு வசதியுடன் இருக்கக் கூடிய மக்கள் கண்ணாடிகளைப் பயன்படுத்தி வீடுகளை அமைத்து வாழ்ந்து வருகின்றனர். இதனை,

*கண்ணாடி வீட்டுல இருந்திட்டு கல்ல எறியாதே*

எனும் பழமொழி விளக்குகிறது.

இந்த வீடுகளின் பாதுகாப்பிற்காக சுற்றிலும் மதில்களை வளைத்து கட்டக்கூடிய நிலையினையும் இம்மாவட்ட மக்களிடம் காணப்படுகிறது. இதை,

*வேலி உறுதியா இருந்துச்சுன்னா நாய் நுளையாது*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றன.

### 3.1.3.6 ஆடை அணிகலன்கள்

முற்காலத்திலுள்ள மனிதர்கள் தங்களுடைய உடற்பகுதிகளை இலைகளாலும், தளைகளாலும் மறைத்து வந்தனர். அதுவே பின்னாளில் ஆண்களுக்கு உரிய ஆடைகள், பெண்களுக்கு உரிய ஆடைகள் என உருப்பெறத் தொடங்கிற்று. கோவை மாவட்டத்திலுள்ள ஆண்கள் டிரவுசர், வேட்டி, கோமணம், தலைப்பாகை போன்ற ஆடைகளை அணிந்து வருகின்றனர். பெண்கள் சீலை, வண்ணப்புடவை, பட்டுச்சீலை, முக்காடு போன்ற தமிழர் பண்பாட்டிற்கேயுரிய ஆடைகளை அணிந்து வருகின்றனர். ஆண், பெண் என்று இருவருக்கும் பொதுவாக இருக்கக்கூடிய கம்பிளியினையும் பயன்படுத்தி வந்துள்ளனர். அவை கீழ்வருமாறு விளக்கப்படவுள்ளன.

*அப்பனுக்கு ஒட்டுக்கோமணம் மகன இழுத்து போத்தூனுரான்*

*கோமணம் கட்டர ஊர்ல நீ ஏன் வேட்டி கட்டற*

*கட்டுன வேட்டியையும் நம்பாதவங்க*

*நீ போட்டிருக்கறதே ஓட்ட டவுசரு*

*அப்புறம் அவனோட குண்டிய நீ எதுக்குப் பாக்கற*

*தலைக்கு வந்தது தலப்பாவோட போச்சு*

போன்ற பழமொழிகளில் ஆண்கள் அணியக்கூடிய ஆடைகளைப் பற்றி அறிந்து கொள்ளலாம். இதில் முதல் பழமொழியானது, தாய் மகன் உறவினையும் இரண்டாம் பழமொழியில் ஊரோடு ஒட்டிப் பழகாது வேறுபட்டிருக்கக் கூடிய நிலையினைக் கூறுவதாகவும் அமைந்துள்ளது. மட்டுமின்றி முற்காலத்தில் படிப்பறிவின்றி விவசாயம் செய்யக்கூடிய மக்கள் கோமணம் என்ற ஆடையினை மட்டும் அணிந்து விவசாயம் செய்து வந்தனர் என்பதைக் கூறுகிறது. மூன்றாம் பழமொழியானது, நம்பிக்கையில்லா தன்மையினை உணர்த்துவதாக அமைந்துள்ளது. நான்காவது பழமொழி அவரவர்களிடமே பல குறைகள் இருக்கும் பொழுது பிறரை குறைகூறுதல் கூடாது என்ற கருத்தினைக் கூறுவதாகவும் சிறு குழந்தைகள் டிரவுசர் என்ற ஆடையினை அணிந்து சிறு பிள்ளைத்தனத்துடன் இருந்த நிலையினைக் கூறுவதாகவும் அமைந்துள்ளன. இறுதியாக ஆண்கள் வேட்டி மட்டும் உடுக்காது தலைப்பாகை என்று கூறக்கூடிய தலையில் ஒரு துண்டினையும் கட்டத் தொடங்கினர்.

*மச்சான் செத்தா மயிராச்சு எனக்கு நாளு கம்பளியுமாச்சு*

என்று தங்களுடைய உடலை குளிர்ச்சியிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காக இம்மக்கள் கம்பிளியினைப் பயன்படுத்தினர்.

பெண்கள் ‘உடுக்காத புடவை செல்லரிக்கும்’ எனும் பழமொழியினைப் போன்று, பெண்கள் புடவையினை அணிந்து வந்துள்ளனர். இதனை,

*அவ அம்பது சீலைய கட்டீட்டு அக்கா வீட்டுக்குப் போக*
*அவ எம்பது சீலைய கட்டீட்டு எதுக்கா வந்தாளா*

எனும் பழமொழி விளக்குகிறது.

*கையாலாகாத சிறுக்கி வண்ணப்புடவைக்கு ஆசைப்பட்டாளாமா*

எனும் பழமொழி மூலம் வண்ணப்புடவை பற்றி அறியமுடிகிறது. திருமணம், திருவிழா போன்ற இடங்களுக்குச் செல்லும் பொழுது பட்டுப்புடவையினை உடுத்து வந்துள்ளனர். இதனை,

*கெட்டாலும் செட்டி செட்டிதான்*
*கிளிஞ்சாலும் பட்டு பட்டுதான்*

எனும் பழமொழியின் மூலம் பட்டுப்புடவையின் மகிமையினைப் பற்றி உணர்ந்து கொள்ளலாம். இதில் செட்டியார் இன மக்கள் தான் அதிகமாக பட்டுப்புடவையினை பயன்படுத்தி வருகின்றனர் என்று எண்ணத் தோன்றுகிறது. 'முழுசா நெனஞ்ச பெறகு முக்காடு எதுக்கு' என்று பெண்கள் முக்காடினையும் அணிந்துள்ளனர் என்பது தெரிய வருகிறது. இதுவே பின்னாளில் ஒரு மதத்தின் அடையாளத்தினை வெளிப்படுத்துவதாக ஆயிற்று எனலாம்.

பெண்கள் தங்களை அலங்கரித்துக் கொள்வதில் மிகுந்த ஆர்வம் காட்டுபவர்களாக விளங்குகின்றனர். தமது தலை முதல் கால் விரல் வரை அணிகலன்களை அணிந்து தங்களை அழகாகக் காட்டிக் கொள்வதில் வல்லவராகத் திகழ்கின்றனர். கோவை மாவட்ட பெண்கள் தங்களை அலங்காரம் செய்து கொள்வதற்காக எந்த வகையானப் பொருட்களையெல்லாம் பயன்படுத்தி வந்துள்ளனர் என்பதை பழமொழிகளில் காணலாம்.

*தலைக்கு வேற தாடிக்கு வேற சீவக்காயா*

எனும் பழமொழியானது பெண்கள் தங்களுடைய கூந்தலை எவ்வாறு சுத்தமாக

பேணி வளர்த்து வந்தனர் என்பதை உணரலாம். இவ்வாறு சீவக்காயினைப் பயன்படுத்தி சுத்தம் செய்த முடியினை பலவிதமான அலங்காரத்துடன் முடிந்து கொள்கிறாள். இதனை, 'முடியிருக்கற சீமாட்டி சாச்சும் கட்டுவா சரிச்சும் கட்டுவா' எனும் பழமொழி பதிவு செய்திருக்கின்ற நிலையினைக் காணமுடிகின்றது. இத்தகைய அமைப்புடன் கட்டியிருக்கின்ற முடியில் பட்டுக்குஞ்சம், தாழம்பூ போன்றவற்றினை வைத்து அழகிற்கு அழகு சேர்க்கும் வகையில் வனைந்துள்ளனர். இதனை,

*வௌக்குமாத்து கட்டைக்கு பட்டுக் குஞ்சமா?*

*ஒய்யாரமா இருக்கா தாழம்பூவு*
*உள்ள இருக்குதான் ஈறும் பேனும்*

எனும் பழமொழி விளக்குகிறது. மேலும், பெண் என்பவள் கழுத்தில் ஏதேனும் ஒரு மாலையினை அணிய வேண்டும் என்று வாழை நாரினையும், கால்களில் செருப்பு, பொருளாதார வசதியுடன் இருப்பவர்கள் இடுப்பில் வெள்ளியினால் ஆன அரஞ்ஞானம் போன்றவற்றையும் அணிந்து வந்துள்ளனர். இதனை,

*காலுக்காகாத செருப்ப கழட்டி தூர எறியணும்*

*வேணும் வேணும்னு கோத்தா வெள்ளி கொடிபோலும்*
*நூக்கலாம் வேண்டா வெட்டிக்கு நூத்தா என்னத்த நூத்தாவரும்*

எனும் பழமொழியால் உணர்ந்து கொள்ள முடிகிறது.

### 3.1.4 தொழில்கள் தொடர்பான பழமொழிகள்

சமுதாயத்தில் மனிதன் பல்வேறு தொழில்கள் செய்து வாழ்ந்து வருகிறான். தொழில் முறையின் அடிப்படையில் மனிதன் வேறுபட்டிருந்தான். செய்யும் தொழில் மனிதனுக்கு உயர்வையும், தாழ்வையும் கற்பித்துக் கொடுத்தன. குறிப்பிட்ட சாதிக்கு குறிப்பிட்ட தொழில்கள் இருந்தன. இவை குலத் தொழில்கள்

என அடையாளப்படுத்தப்படுகின்றன. கோவை மாவட்டத்தில் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்ட போது பல்வேறு தொழில் சார்ந்த பழமொழிகளைச் சேகரிக்க முடிந்தது. அவ்வகையில் அங்கு பழமொழியில் காணப்படக்கூடிய தொழில்களாக,

**நாசுவன்**

*நாசுவன் குப்பைய கிளறனா மயிரு மயிராட்டம் வரும்*

**செருப்பு தைய்த்தல்**

*அருப்புக் கோட்டையில உங்கப்பா செருப்பு தெச்சாலும்*
*நானுமில்லாட்டி உங்கம்மா நாறிப் போயிடுவா*

**மருத்துவம்**

*ஒரு புள்ளத்தாச்சி ஏழு புள்ளத்தாச்சிக்கு மருத்துவம்*
*பாத்தாளாமா*

**பன்னிமேய்த்தல், தாசில்தார்**

*ஆசைதா தாசில்தார் வேலைக்கு*
*அம்சம் போட்டிருக்குது பன்னி மேய்க்கறதுக்கு*

**இடையன்**

*ஆடு இருக்க இடையன விழுங்குமா?*

**கொசவன்**

*கொசவன் ஓட்டச் சட்டியில சோறு வைக்கற மாதிரி*

**ஒட்டன்**

*ஒட்டன கவுண்டன்னா ஒரு காலக் குந்துவானா*

**வண்ணான்**

*வண்ணான் ஆட்டுத் தலைக்குப் பறந்தாப்லெ*

**கூத்து**

*கூத்தாடி கிழக்கே பார்ப்பான்*
*கூலிக்காரன் மேற்கே பார்ப்பான்*

**வாத்தியார், போலீஸ்**

*வாக்கத்தவனுக்கு வாத்தியார் வேலை*
*போக்கத்தவனுக்கு போலீஸ் வேலை*

**கொல்லன்**

*கொல்லன் உலைக்களத்துல கொசுவுக்கு என்ன வேலை*

**சாணான் (மரமேறுதல் / கள்ளுகட்டுதல்)**

*சாணானுக்கு ஏறும் போது ஒரு புத்தி*
*எறங்கும் போது ஒரு புத்தி*

**கள்ளு விற்றல்**

*உன்னோட பசியப் பத்தி கள்ளு விக்கறவன் கவலப்படமாட்டான்*

**வேளாண்மை**

*புதுசா புதுசா வெள்ளாம செய்து மசுரா மசுரா மொளச்சுதாமா*

**தோட்டக்காரன்**

*தோட்டக்காரன் வீட்ல கோட்டுப் படுக்க பாயில்லை*

**ஊசி விற்றல்**

*கொல்லன் தெருவுல ஊசி வித்தாப்லே*

**நெசவுத் தொழில்**

*காஞ்சிபுரம் போனா காலாட்டி சாப்பிடலாம்*

**மீன் பிடித்தல்**

*சின்ன மீனைப் போட்டாத்தான் பெரிய மீன் புடிக்க முடியும்.*

**பொன் வேலை**

*தட்டானோட பணம் கரியும் பொறியுமாத்தா போகும்*

**வியாபாரம்**

*மீனை ஏறிக்கரையில விக்கவும் மாட்டாங்க*
*வெறக காட்டுல விக்கவும் மாட்டாங்க*

**வேட்டைத்தொழில்**

*மானுக்கு வெச்ச வலையில மொசலுக்குட்டி மாட்டிடுச்சா*

எனப் பல தொழில்களைப் பற்றிய குறிப்புகளை பழமொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ள நிலையினைக் காணலாம்.

### 3.1.4.1 விவசாயம்

பண்டைய காலத்தில் மக்கள் வேளாண்மைத் தொழிலையே உயிர் நாடியாகக் கொண்டிருந்தனர். "காந்தியடிகளும் வேளாண்மையே இந்தியாவின் முதுகெலும்பு"[15] என்றார். திருக்குறளில்,

*சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்*
*உழந்தும் உழவே தலை*

என்றும்,

*உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது*
*எழுவாரை எல்லாம் பொறுத்தது*

என்றும்,

*உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்*
*தொழுதுண்டு பின்செல் பவர்*

எனும் குறள்கள் உழவுத் தொழிலின் சிறப்பையும், உழவுத் தொழிலில் செய்யக் கூடிய மக்களின் மேம்பாட்டையும் சிறப்புற உணர்த்துகின்றன. கோவை மாவட்டத்தில் வேளாண்மைத் தொழிலை செய்து வந்துள்ளனர் என்பதை நிரூபிக்கும் வகையில் சில பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்துள்ளன.

வேளாண்மைத் தொழில் செய்யக் கூடிய மக்கள் நிலத்தை உழுவதற்கு முன்பாக அந்நிலத்திலுள்ள மண்ணை வளம்பெறச் செய்கின்றனர். 'ஆட்டான் புளுக்கையிலிருந்து அடிப்புளுக்க வர நாந்தான் பாக்கணும்' எனும் பழமொழியானது வயல்களில் ஆட்டுச்சானியினைப் பயன்படுத்தக் கூடிய வழக்கம் உள்ளது என்று உணர முடிகிறது.

*உழுகிற காலத்துல ஊர்சுற்றி விட்டு அறுக்கற காலத்துல*
*அறுவா எடுத்திட்டு போனது மாதிரி*

என்பதைப் போலன்றி இருக்காமல், சரியான நேரத்தில் சரியான முறையில் உழவுத் தொழிலினைச் செய்ய வேண்டும் என்றும் கூறுவதைக் காணலாம். ஆதலால் நிலங்களில் வளங்கள் இடச் செய்ததன் பின்பு, அடியில் இருக்கக்கூடிய மண் மேற்பாகத்தில் வரும்படி ஏரினை வைத்து உழுகின்றனர். இதனை,

*ஏரோட்டாத நெலமும் அப்பன் திட்டாத பிள்ளயும் உருப்படாது*

*கூள குடியக் கெடுக்கும் குட்டக் கலப்ப ஒலவக் கெடுக்கும்*

போன்ற பழமொழிகள் வயல்கள் எவ்வாறு உழவேண்டும், எந்த மாதிரியான பொருட்களை வைத்து உழவேண்டும் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளன.

இவ்வாறு வயல்களை உழுதபின்னர், 'புதுசா புதுசா வெள்ளாம செய்து மகரா மகரா மொளச்சுதாமா' என்பதைப் போன்று ஆகிவிடாமல் இருப்பதற்காக,

*ஆடிப்பட்டம் தேடி விதை*

*பட்டங்கண்டு பயிரிடு*
*பருவங்கண்டு பெண்ணெடு*

*புரட்டாசி விதைக்கக்கூடாது ஐப்பசி நடக்கூடாது*

*ஐப்பசி அடமழ*

என்பதையெல்லாம் உணர்ந்து காலச் சூழலுக்கு ஏற்ப நெற்பயிர்களை விதைக்கின்றனர்.

*வேளாளன் புத்தி வேலிக்குள்ள*

எனும் பழமொழியானது, நெற்பயிர்களை விதைத்ததன் பின்னர் விவசாய மக்கள், தங்களது கவனம் முழுவதும் வயல்களிலேயே சிதறிக் கிடக்கின்றது. பின்னர் 'நெல்லுக்குப் பாயுற தண்ணி புல்லுக்கும் பாஞ்சா என்ன?' என்ற பழமொழிக்கு ஏற்றாற் போன்று நெற்பயிர்களுக்கு தண்ணீர் பாய்ச்சவும் செய்கின்றனர். அந்நெற்பயிர்கள் சிறிய செடிகளாக வளர்ந்த பின்னர் அதை 'கையிலேயே வெதச்சு நாவுலயே கோத்து' வேறு இடத்தில் நடச் செய்கின்றனர். சில நாட்களுக்குப் பின்னர் நெற்பயிர்களை அறுவடை செய்வதற்கான பருவம் வந்தவுடன் நெற்கள்

அனைத்தும் கீழே சரிந்து விழக்கூடிய நிலையிலாகி இருப்பதைக் காணலாம். இதனை,

*சம்பா வெளஞ்சு சாஞ்சு கெடக்குது*
*உண்பாறில்லாம ஊர்க்குருவி மேயுது*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

பின்னர் நெற்பயிர்களை அறுவடை செய்யக்கூடிய மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அறுவடை செய்கின்றனர். சூழலுக்கு ஏற்றவாறு அறுவடை செய்த நெற்களையும் பதர்களையும் தனித்தனியாகப் பிரித்தெடுக்கின்றனர். இச்சமயத்தில் 'அறுப்புக்காலத்தில் எலிக்கு அஞ்சு பொஞ்சாதி' என்பதைப் போல விவசாய மக்களது வீடுகளில் எதிரியாக இருக்கக் கூடிய எலிகள் வந்து விடவும் செய்கின்றன. அறுவடை செய்து வந்த வைக்கோல் புல்லினை, மாடுகளுக்கு கொடுப்பதற்காக பாதுகாப்புடன் எடுத்து வைக்கவும் செய்கின்றனர்.

*வாழற வீட்டுக்கு ஒரு பொண்ணு*
*வைக்கோல் போருக்கு ஒரு கண்ணு*

என்ற பழமொழி உணர்த்துகிறது.

கோயம்புத்தூர் மாவட்டத்தில் நெற்பயிர் மட்டுமின்றி கம்பு, சோளம் போன்றவற்றையும் விவசாயம் செய்து வருகின்றனர். நெற்பயிர் நடவு செய்துள்ள வயல்களில் களையெடுப்பதைப் போன்று, கம்பு நடவு செய்துள்ள இடங்களிலும் களையெடுக்கும் தொழில் செய்கின்றனர். என்பதை,

*கம்புக்கு களவெட்டினாப்லயும் ஆச்சு*
*தம்பிக்கு பொண்ணு பாத்தது மாதிரியுமாச்சு*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். அதேபோன்று சோளத்தினையும் விவசாயம் செய்கின்றனர் என்பதை,

*ஆளப்பாரு சோள காட்டு பொம்ப மாதிரி*

எனும் பழமொழி விளக்குகிறது. சோளக் காட்டில் பொம்மையினைக் கட்டி வைக்கக் கூடிய வழக்கம் உள்ளது.

இப்பழமொழிகளை அனைத்தையும் பார்க்கும் பொழுது இங்குள்ள மக்கள் விவசாயத் தொழிலுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர் என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது. மட்டுமின்றி இவர்கள் தங்களது வாழ்க்கையோடு தொடர்புபடுத்தி பழமொழிகளைக் கூறியுள்ளனர் என்பதையும் அறியமுடிகிறது.

### 3.1.4.2 பொருளாதாரம்

பொருளாதாரத்திற்கு வெவ்வேறு நாட்டு அறிஞர்கள் பல்வேறு வரையறைகளை வழங்கியுள்ளனர். எல்லா வரையறைகளும் தமக்குள் வேறுபட்டிருந்தாலும், அவற்றிடையே ஒற்றுமையுண்டு என்பதை உணர்தல் வேண்டும். “பொருளாரம் என்பது செவ்வியல்” என்கிறார் ஆடம் ஸ்மித். மார்சல் என்பவர் “பொருளாதாரம் ஒரு புறத்தில் செல்வத்தையும் மறுபுறத்தில் இன்றியமையாத பகுதியாக மனிதனையும் ஆய்கின்றது”[16] என்கிறார் இராணி எலிசபெத் அவர்கள்.

கோயம்புத்தூர் மாவட்டத்தில் கள ஆய்வின் போது பொருளாதாரம் சார்ந்த பழமொழிகள் கிடைத்துள்ளன. அவை கீழ்வருமாறு கூறப்படவுள்ளது.

கோவை மாவட்ட மக்கள் அனைவரும் விவசாயம் சார்ந்த வாழ்க்கையில் வாழ்பவர்களாக உள்ளனர். சேமித்து வைக்கக்கூடிய அளவிற்கு உயர்ந்தவர்களாகக் காணப்படுவதில்லை. வரவிற்கு ஏற்ப செலவு செய்து மக்கள் வறுமையில் தான் வாழ்ந்து வந்துள்ளனர். இதனை,

*ஆடு கறக்க பூன நக்க*

*உழுதவனுக்கு உழவுக் கோலுங்கூட மிஞ்சாது*

*பறக்க பறக்க பாடுபட்டு படுக்க பாயில்ல*

எனும் பழமொழி வெளிப்படையாக கூறுவதை உணர்ந்து கொள்ள முடிகின்றது. ஆனால் தொழில் துறையில் இருப்பவர்கள் உயர்வான நிலையில் வாழ்ந்து வருகின்றனர்.

## 3.1.5 நம்பிக்கை தொடர்பான பழமொழிகள்

நம்பிக்கையை மனிதனின் மூன்றாவது கை என்பர். அறிவு நிலைக்கு அப்பாற்பட்ட எண்ணங்களை நம்பிககைகள் எனலாம். அந்நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு, அம்மக்கள் சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்துவருகின்றன. மனித மனத்தின் அச்சத்தின் காரணமாகவும், அனுபவத்தின் விளைவாகவும் நம்பிக்கைகள் தோன்றுகின்றன.

நம்பிக்கையைப் பற்றி த.விஜயலட்சுமி அவர்கள் குறிப்பிடுகையில், "மனிதன் தன் உணவிற்காக வாழ்ந்த காலத்தில் உணவைச் சேகரிக்க வேண்டும் என்ற ஓர் எண்ணத்தை மட்டும் உடையவனாக இருந்தான். அவ்வாறு உணவைச் சேகரிக்கும் போது குறுக்கிட்ட சக்திகளிடம் போராடி வெற்றி பெற்றான். அதற்குத் தேவையான ஆயுதங்களைத் தன் வசம் வைத்திருந்தான். ஆனால் அவ்வாறு தங்களாலும் கட்டுப்படுத்த முடியாத இயற்கையின் மாபெரும் சக்திகளைக் கண்டு மனிதன் அச்சமுற்றான். தனக்கு அப்பாற்பட்ட அச்சத்திற்குரிய காரணம் என்னவென்று சிந்திக்கத் தொடங்கினான். அதற்குச் சரியான காரணம் கிடைக்காத பொழுது, தன்னைவிடப் பெரிய ஒரு சக்தி உள்ளது என்றும், அது தான் உலக இயக்கங்களுக்கெல்லாம் மூல காரணம் என்றும் நம்பத்தொடங்கினான். இது காலப்போக்கில் பல நம்பிக்கைகள் உருவாக்கக் காரணமாயிற்று"[17] என்கிறார்.

நம்பிக்கையைப் பற்றி சு.சக்திவேல் அவர்கள் குறிப்பிடுகையில், "படிப்பறிவில்லாத பாமர மக்களிடையே வழங்கி வரும் நம்பிக்கைகளானது படிப்பாற்றல் நிறைந்த நகரத்தில் வாழும் மக்களிடையே மூடநம்பிக்கைகளாக எண்ணப்படுகின்றன. நம்பிக்கைகளுக்குச் சில அடிப்படைக் காரணங்கள் உண்டு. ஆனால் மூடநம்பிக்கைகளுக்கு அடிப்படைக் காரணம் இருப்பதில்லை. இருப்பினும் நம்பிக்கைகளையும், மூடநம்பிக்கைகளையும் பிரித்துக் காண்பது மிகவும் கடினமாகும். மக்களின் எண்ணங்களும் கருத்துக்களும் உண்மை என்று நம்பும் நேரத்தில் நம்பிக்கை என்கிறோம். அதே மக்களின் எண்ணங்களும் கருத்துக்களும் உண்மையில்லை என்று நம்பும் போது மூடநம்பிக்கையாகத் தோற்றமளிக்கும்"[18] என்று விளக்கமளிக்கிறார்.

ஆங்கில அகராதி "நம்பிக்கையைச் சுட்ட 'Belief' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றது. "ஜெர்மன் மொழியில் 'Aborglabube' என்ற சொல்லும், டச்சு மொழியில் 'Overgeloof' என்ற சொல்லும், டேனிஷ் மொழியில் 'Overtosijgeloof' என்ற சொல்லும் நம்பிக்கை என்னும் பொருளில் வழங்கப்படுகின்றன"[19].

தீமைகளிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள மனிதன் மேற்கொள்ளும் முயற்சியும், நன்மையை அடைய வேண்டும் என்ற எண்ணமுமே நம்பிக்கையை நிலைநிறுத்துகின்றன என்றும் கூறலாம்.

இங்கு கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள மக்கள் தங்கள் வாழ்க்கையில் பல நம்பிக்கைகளைக் கடைபிடித்து வருகின்றனர். பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து நிகழ்வுகளிலும் பல்வேறு நம்பிக்கைகள் இடம்பெற்றுள்ளன. இவர்களிடம் காணப்படுகின்ற நம்பிக்கைகள் பெண் நம்பிக்கை, பெண்களின் உடலுறுப்பு நம்பிக்கை, பேய் நம்பிக்கை, இயற்கை நம்பிக்கை, மாதம் நாள் பற்றிய நம்பிக்கை எனப் பலவாறு வகை செய்யப்பட்டுள்ளன. அவை கீழ்வருமாறு விளக்கப்படவுள்ளன.

பழங்கால மக்கள் பெண்களின் அங்க அடையாளங்களை வைத்து, அப்பெண்ணானவள் எத்தன்மை வாய்ந்தவள் என்பதை,

*கணுக்கால் பெருத்தவ கணவனத்திம்பா*

*கெண்ட பெருத்தவ கொண்டவனுக்காகாது*

எனும் பழமொழிகள் மூலம் அறிந்து வைத்துள்ளனர். இப்பழமொழிகள் பெண்களின் உடலமைப்பானது எத்தன்மையில் இருக்க வேண்டும் என்பதை கட்டமைக்கின்றன.

*பறச்சி முலை அழகு*
*பாப்பாத்தி குண்டி அழகு*
*செட்டிச்சி குறி அழகு*

எனும் பழமொழியின் மூலம் நம்பிக்கை வைத்துள்ளனர். கற்புடைய பெண்களிடம் சாபம் பெற்றுக் கொண்டால் உடனுக்குடன் தீங்கினை ஏற்படுத்தி விடும் என்பதை,

*பத்தினி சாபம் போட்டா பச்ச மரமும் பத்திக்கிட்டு எறியும்*

எனும் நம்பிக்கை மக்கள் மனதில் வேரூன்றி இருந்து வந்துள்ள நிலையினை உணர முடிகின்றது. மட்டுமின்றி சுருட்டை முடியுடன் இருக்கக்கூடிய பெண்களுடைய வீட்டில் உணவிற்கு எந்தவிதமான பஞ்சமும் ஏற்படாது என்பதை 'சுருட்டை முடி சோறு போடும்' எனும் பழமொழியால் மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். அதே நேரத்தில், 'கோர முடி குடியக் கெடுக்கும்' என்று மக்கள் நம்பிக்கை வைத்துள்ள நிலையினையும் காணமுடிகிறது. இப்பழமொழியானது முடிக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் இருந்துள்ளனர் என்பதை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

கிராமப்புற மக்கள், பெண்கள், உடலுறுப்பு போன்றவற்றின் மீது நம்பிக்கை கொண்டிருப்பதோடு மட்டுமின்றி பேய், பிசாசு என்பனவற்றின் மீதும் மக்கள் மிகுதியான நம்பிக்கை கொண்டவர்களாக இருந்துள்ளனர் என்பதை,

*கறுப்ப பாக்காம நாய் ஓலைக்காது*

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். மனிதர்களால் பார்க்கமுடியாத சில உருவங்களை நாயினால் பார்க்க முடியும். நாயானது அதைக் காண்பித்து விடும். ஆனால் அவை நம்முடைய கண்களுக்கு புலப்படாது என்று பேயின் மீது மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர்.

இயற்கையின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையினை பழமொழிகளில் காணமுடிகின்றது. மழை பொழியக்கூடிய காலங்களில் காற்றடித்து மழை பொழிவதைக் காணலாம். இதனை,

*கொம்பு சுத்தி காத்தடிச்சா மழவரும்*

எனும் பழமொழியின் மூலம் உணரலாம். இவை மட்டுமின்றி பட்டாம்பூச்சி, ஈசல் போன்ற பூச்சிகள் பறந்தாலும் தவளைகள் குரல் எழுப்பினாலும் மழை வரும் என்று மக்கள் நம்பி வருகின்றனர். மேலும் மாலை நேரத்தில் பெய்யும் மழையானது இரவு முழுவதும் பெய்து கொண்டே இருக்கும். பின்னர் விடியும் நேரத்தில் மழை நின்று விடும் என்றும் மக்கள் மழையின் மீது அளவு கடந்த நம்பிக்கை கொண்டுள்ளனர்.

*அடி வயித்துல இடி விழுந்த மாதிரி*

*மழை வரும்போது கொடபிடிக்காம இடி வரும் போது*
*கொடபிடிக்கற மாதிரி*

எனும் பழமொழிகள் மழை பெய்வதற்கு முன்பாகவும் மழை பெய்து கொண்டிருக்கும் பொழுதும் இடி இடிக்கும் என்ற கருத்தினை முன் வைப்பதாக அமைந்துள்ளது எனலாம். காற்றானது மிகவும் சக்தி வாய்ந்ததாகக் காணப்படும். இதனை,

*காத்தடிக்குது தூள் பறக்குது கதவு இல்லாத்த சங்கட்டம்*
*கதவடியே நாய் கெடக்குது தடியில்லாத்த சங்கட்டம்*

*காத்து மழகூட்டும் சினேகம் பகையைக் கூட்டும்*

*காத்துல பறந்து வந்த குப்ப நீ அட்டானீல ஒட்டிக்கிட்டியா*

*மொட்ட மரம் காத்துக்கு அஞ்சாது*

எனும் பழமொழிகளின் மூலம் காற்றடிப்பதன் காரணமாக ஏற்படுகின்ற விளைவுகளைப் பற்றி உணர்ந்து கொள்ள முடிகின்றன. மேலும்,

*ஐப்பசி அட மழ*

*கார்த்திகை சரசரன்னு வரும்*

*கார்த்திகை மாசோ மழ பேஞ்சா கல்லுக்கு கீழ*
*இருக்கற புல்லும் கதிர்விடும்*

போன்ற பழமொழிகள் ஐப்பசி, கார்த்திகை போன்ற மாதங்களில் நன்கு மழை பொழியக் கூடிய மாதங்களாகும் என்று நம்பிக்கை கொண்டுள்ளனர். பெரிய மழை பெய்து கொண்டிருப்பது நின்றாலும், சிறிய மழையானது நிற்காது தூரல் போட்டுக் கொண்டே இருக்கும் என்பதை,

*அடமழ ஓஞ்சாலும் செடி மழ ஓயாது*

எனும் பழமொழியின் மூலம் உணரலாம். மேலும் 'ஊரெல்லாம் வாடுதுன்னு வீடெல்லாம் அழுது புரண்டாலும் வருமா?' என்று வெப்பம் அதிகரித்துக் காணப்படக்கூடிய நிலையினையும் பழமொழியில் காணமுடிகின்றன. வெப்பம் அதிகரித்து இருக்கக்கூடிய நேரத்தில் சிறிது மழை பொழியும் என்பதை,

*கோடை மழையில மரத்தடியில் ஒண்டக்கூடாது*

எனும் பழமொழியால் அறியலாம். மார்கழி மாதத்தின் பொழுது நன்கு பனி பெய்து கொண்டும் குளிர்ச்சியாகவும் இருக்கும் என்பதை,

*மார்கழி மாசோ மாபெரும் குளிரு*

எனும் பழமொழியின் மூலம் மக்கள் நம்பிக்கை வைத்திருப்பதை அறியமுடிகிறது. அதே போன்று பங்குனி மாதத்தின் பொழுது மழையின்றி காணப்படும் என்பதை,

*பங்குனி மாசத்துல மழ பேஞ்சா*
*பசு குடிக்கக் கூட தண்ணி கெடைக்காது*

எனும் பழமொழியின் மூலம் அறியலாம்.

மேலும் சித்திரை மாதத்தின் போது பிறக்கக்கூடிய குழந்தை பற்றிய நம்பிக்கையினை,

*சித்திரை மாசோ அப்பனுக்காகாது*

எனும் பழமொழியின் மூலம் அறியமுடிகிறது. அனைத்து நாட்களும் நல்ல நாட்கள் என்று இருந்தாலும், வெள்ளிக்கிழமை அதிகாலையில் வீட்டிலிருந்து இறங்கி வேறு எந்த இடத்திற்கும் செல்லக்கூடாது என்கின்றனர். அவ்வாறு சென்றால் வீட்டிலுள்ள அனைத்து செல்வங்களும் இழந்துவிட நேரிடும் என்று மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். அவ்வாறு போய் தான் ஆக வேண்டுமெனில் நண்பகலுக்கு பின்னர் செல்லலாம் என்கின்றனர். இறந்தவர்களுக்கு கொள்ளி வைத்துவிட்டு வருவார்கள். அவர்களை எதிர்த்து செல்லலாமே ஒழிய வெள்ளிக்கிழமையை எதிர்த்து நாம் எங்கும் செல்லுதல் கூடாது. இதனை,

*கொள்ளிக்கு எதிரே போனாலும்*
*வெள்ளிக்கு எதிரே போகக்கூடாது*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகிறது. அதே போன்று வெள்ளிக்கிழமையன்று கடன் கொடுத்தல், தயிர் கொடுத்தல் போன்றவை கூடாது என்றும் மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். ஏனெனில் கொடுத்து உதவக்

கூடியவர்களின் வீட்டிலுள்ள செல்வங்கள் அனைத்தும் அவர்களுடனே போய்விடும் என்று மக்கள் கூறுவதையும் காணமுடிகின்றன.

### 3.1.5.1 சடங்குகள்

முற்காலத்தில் காரண காரியத்தோடு செய்யப்பட்ட செயல்களைப் பிற்காலத்தவர் அர்த்தம் புரியாமல் மரபாகப் பின்பற்றுகின்றனர். இவற்றைச் சடங்குகள் என்று கூறலாம். இன்றும் நாம் செய்யும் திருமணம், இறப்பு போன்ற சடங்குகளிலும் கூட எண்ணற்ற காரணம் புரியாத செயல்கள் உள்ளன. அவற்றிற்கு இன்று நாம் வலிந்து பொருள் கூறுகிறோம். உண்மையிலேயே நாம் இன்று கொள்ளும் பொருளில் தான் முற்காலத்தவர்களும் பொருள் கொண்டனரா என்பது விவாதத்திற்குரியதாகும்.

சடங்குகள் செய்வதன் நோக்கம் "சமூக அனுமதி பெறல்" என்பதையே குறிக்கோளாகக் கொண்டதாகும். பிறப்புச் சடங்கினால் அக்குழந்தை பிறந்ததை ஊருக்கு அறிவிப்பதே அதன் நோக்கமாகும். அது போலவே பூப்புச்சடங்கு, ஒரு பெண் திருமண வயதை எட்டிவிட்டாள் என்பதைச் சமூகத்திற்கு அறிவிப்பதற்காகவே செய்யப்படுகிறது. திருமணச் சடங்குகளும் இவ்வமைப்புடையவைதான்

சடங்குகளில் செய்யப்படும் அல்லது இடம்பெறும் நிகழ்ச்சிகள் இனத்திற்கு இனம் ஜாதிக்குச் ஜாதி மாறுபடுகின்றன. சடங்குகள் மனித வாழ்க்கையில் பெரும்பங்கு பெறுகின்றன. மதம், மொழி, இனம் என வேறுபாடின்றி எல்லா மக்களாலும் சடங்குகள் பின்பற்றப்படுகின்றன. நாகரிகமடைந்த மக்களை விட நாகரிகமடைந்து கொண்டிருக்கும் மக்களிடம் தான் சடங்குகள் பெரும் பங்கு வகிக்கின்றன என்கிறார் த. விஜயலட்சுமி அவர்கள்.

இங்கு கோயம்புத்தூர் மக்களது வாழ்வில் சடங்குகள் பல உள்ளன. அவற்றுள் காதுகுத்துதல், திருமணம், இறப்பு ஆகிய மூன்று நிகழ்ச்சிகளுக்குச்

செய்யும் சடங்குகள் பழமொழிகளில் பதிவாகியுள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் பொறந்தான்னு சொல்லி*

*கடப்பார எடுத்து காதுகுத்தினாங்களமா?*

இதன் மூலம் ஆண்களுக்கு காதுகுத்துகின்ற வழக்கம் கோவை மாவட்டத்தில் உள்ளது என்பதை உணர்ந்து கொள்ளலாம். காது குத்துவது மட்டுமின்றி கடுக்கான் என்று கூறக்கூடிய கம்மலினை அணியும் வழக்கமும் இம்மக்களிடையே காணப்படுகிறது என்பதை,

*காது குத்தறது கடுக்கான் போடறதெல்லாம் எங்கிட்ட வேண்டாம்*

எனும் பழமொழி உணர்த்துகிறது.

'திண்ணையில் இருந்தவனுக்கு திடீர்னு கல்யாணம்' என்பார்கள். இந்த திருமணத்தின் போது வருபவர்களை வரவேற்பதற்காக சந்தனம், பன்னீர் தெளித்தல் போன்ற சடங்குகள் இம்மக்களிடையே காணப்படுகிறது என்பதை,

*ஊர்ல கல்யாணம் மார்ல சந்தனம்*

*குடிக்கிறது கூழு கொப்பளிக்கிறதென்ன பன்னீரா*

*எச்சிய பன்னீரா நினைக்கறவ*

எனும் பழமொழிகளின் மூலம் திருமணத்தின் போது பயன்படுத்தப்படுகின்ற பொருட்களைப் பற்றி அறிந்து கொள்ள முடிகின்றன. திருமணத்தின் போது பெண், ஆண் இருவரும் அனைவரையும் போன்று இல்லாமல் சிறிது வேறுபாட்டுடன் இருக்க வேண்டும் என்பதற்காக பூமாலை அணிகின்ற வழக்கமும் காணப்படுகிறது. அதேபோன்று திருமணத்தின் போது ஆண் பெண்ணின் கழுத்தில் ஒவ்வொரு ஜாதியினரும் ஒவ்வொரு விதமான தாலியினைக் கட்டக்கூடிய வழக்கம் உள்ளன என்பதை,

*கட்டருக்கே கருகமணியில்லைன்னாலும் பேரு பொன்னம்மா*

எனும் பழமொழி உணர்த்துகிறது. கருகமணியை முஸ்லீம் இன மக்களும் சில இடங்களில் இந்து மத மக்களும் தாலியாக அணிவதைக் காணமுடிகின்றது. திருமணம் முடித்து கொடுத்த பெண்ணினை ஆடி மாதத்தின் பொழுது வீட்டிற்கு அழைத்து வரக்கூடிய நிலையும் இம்மக்களிடம் காணப்படுகின்றன. இதனை,

*ஆடி நோம்பிக்கு அலையாத மாமியார சந்தக் கடைல தேடி*
*அலையோனமாமா*

எனும் பழமொழி விளக்குகிறது.

ஒரு மனிதனுக்கு செய்யப்படும் இறுதிச் சடங்கு இறப்புச் சடங்காகும். இச்சடங்கின் போது பல விதமான சாத்திரங்கள் சம்பிரதாயங்கள் போன்றவற்றையெல்லாம் கடைபிடித்து விருகின்றனர். ஒருவர் இறந்து விட்டார் எனில் அவரை எரிப்பதற்கு அல்லது புதைப்பதற்கு எடுத்துச் செல்லும் பொழுது பலவிதமான அலங்காரத்துடன் கொண்டு செல்வதைக் காணலாம். இதனை,

*செத்தவன் கையில வெத்தல பாக்கு கொடுத்தது போல*

எனும் பழமொழி விளக்குகிறது. அதாவது இறந்தவருக்கு மறுநாள் பால் ஊற்றும் வழக்கம் மக்களிடையே காணப்படுகிறது. இதனை,

*இன்னைக்கு செத்தா நாளைக்குப் பால்*

எனும் பழமொழியின் மூலம் உணர்த்துவதைக் காணலாம். சாவிற்கு வரமுடியாதவர்கள் ஏழாவது நாள் சடங்கில் வந்து கலந்து கொள்வார்கள் என்பதை,

*சாவுக்கு வான்னா ஏழுக்கு வாரான்*

எனும் பழமொழியின் மூலம் விளக்குகிறது. கணவன் இறந்து விட்டால் மனைவிக்கு தாலி அறுக்கக் கூடிய வழக்கம் அனைத்து இன மக்களிடமும் உள்ளது. இதனை,

*ஒன்னும் தெரியாதவனுக்கு வாழ்க்கைப்பட்டு அறுபது வருசம்*
*வாழறதவிட நல்லவனுக்கு வாழ்க்கைப்பட்டு சட்டுனு*
*தாலியறுப்பது நல்லது*

எனும் பழமொழியின் மூலம் தாலி அறுக்கும் சடங்கினைப் பற்றி அறிந்து கொள்ள முடிகின்றன.

### 3.1.5.2 விழாக்கள்

தங்கள் சொந்தக் கவலைகளை எல்லாம் மறந்து ஊரிலுள்ள அனைத்து மக்களும் கூடிக்களித்து மகிழும் ஒரு நிகழ்ச்சியே திருவிழாவாகும். இத்திருவிழா என்பது தெய்வ வழிபாட்டின் ஒரு பாகமாகக் கொள்ளப்படுகின்றது. தங்கள் ஊரிலுள்ள தெய்வத்திற்கு வருடந்தோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் விழா எடுக்கப்படுவதைத் தமிழகத்தில் மட்டும் அல்லாமல் இந்தியாவின் பல இடங்களிலும் காணலாம். கோவை மாவட்டத்தில் தேர்த்திருவிழா நடைபெறுகின்றது என்பதை பழமொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ள நிலையைக் காணமுடிகின்றது. தேரினைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*அச்சில்லாம தேரோடுமா? ஆம்பள இல்லாம புள்ள பெறமுடியுமா?*

எனும் பழமொழியானது தேரிற்கு மிகவும் முக்கியமான பகுதி அச்சு. இந்த அச்சு இல்லாமல் இருந்தால் தேரினை இழுத்து செல்ல முடியாது. அதே போன்று ஒரு பெண்ணிற்கு குழந்தைப் பேறு கிடைக்க வேண்டுமெனில் அது ஒரு ஆணினால் மட்டுமே முடியும் என்கிறது. திருவிழா என்றாலே அங்கு தேரிற்குத் தான் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருகிறது என்று இப்பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். அதே போன்று தேர் என்பது மிகவும் மெதுவாகத் தான் இழுத்து வருவர் என்பதை,

*எதுக்கு திருவாரூர் தேர் மாதிரி அசஞ்சு அசஞ்சு வர்ற*

எனும் பழமொழி விளக்குகிறது.

திருவிழாவின் போது தேர் போய்விட்டது எனில் திருவிழாவும் அத்தோடு நிறைவு பெற்றுவிடும். அதேபோன்று தாய் இருக்கும் வரையில் தாயினைப் பார்க்கச் சென்று வருவதாகக் கூறி திருமணம் செய்து கொடுத்த பெண்கள் தாய்வீட்டிற்கு வந்து போவார்கள் என்பதை,

*தேரோட போச்சு திருநாளு தாயோட போச்சு பொறந்த வீடு*

எனும் பழமொழி குறிப்பிடுகிறது.

### 3.1.5.3 இறைவழிபாடு

மக்கள் தங்கள் இன்ப துன்பங்கள், நோய் நொடிகள், நல்லவை தீயவைகள் அனைத்தும் தெய்வத்தால் தான் நடக்கின்றன என்று நம்பினார்கள். அனைத்திற்கும் மேலான ஓர் அசைக்க முடியாத சக்தி இருக்கிறது. கெட்டவை செய்தால் தண்டனை கிடைக்கும் என்ற அச்ச உணர்வு மனிதனைத் தீய செயல்களில் ஈடுபடாமல் தடுத்து நிறுத்துகிறது. எல்லா நம்பிக்கைகளுக்கும் காரணமான மூல நம்பிக்கை இறை நம்பிக்கையாகும். இறை நம்பிக்கை இல்லாதவர்கள் உலகில் மிகச் சிலரே.

கோவை மாவட்டம் என்பது கோயில்களால் நிறைந்திருக்கக் கூடிய ஒரு இடமாகும். இங்குள்ள மக்கள் பெருந்தெய்வங்களான பிள்ளையார், பெருமாள் போன்ற தெய்வங்களை வழிபடுபவர்களாக உள்ளனர் என்பதை பழமொழிகளின் மூலம் அறியமுடிகிறது.

*கோயில் எதுக்கடி கட்டி வெச்சிருக்குது வௌவாலுக்கும்*
*நெறிஞ்சி முள்ளுக்குமா?*

எனும் பழமொழி மூலம் கோயில்கள் நல்ல முறையில் பராமரிக்கப்பட வில்லை என்றும் அதனை தகுந்த முறையில் பாதுகாக்க வேண்டும் என்பதனையும் இப்பழமொழி உணர்த்துகிறது. நாம் பயன்படுத்தாத இடங்களில் வௌவால் குடி கொண்டு விடும் என்று வெளிப்படுத்திக் கூறும் விதமாக அமைந்துள்ளது.

*கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தது போல*

*பிடிச்சு வெச்ச பிள்ளையார் மாதிரி*

*பிள்ளையார் கோயிலை இடித்து பெருமாள் கோயிலைக் கட்டலாமா?*

*பிச்சை எடுக்கறாரு பெருமாளு அதைப் புடுங்கி திங்கறாரு அனுமாரு*

*பெரியவங்க சொன்னா பெருமாள் சொன்னது மாதிரி*

*கூரப் பேனாக்கி பேன பெருமாள் ஆக்கிட்டா*

*அக்கர அரகரானுச்சாம் அதில் ஒரு முடி சிவ சிவானுச்சாம்*

இப்பழமொழிகளில் வரக்கூடிய பிள்ளையார், பெருமாள், அனுமன், சிவன் போன்ற கோயில்கள் கோவை மாவட்டத்தில் உள்ளன. இக்கோயில்களில் சென்று மக்கள் வழிபட்டு வருகின்றனர் என்ற கருத்தினைக் கூறுவதாக பழமொழிகள் அமைந்துள்ளன. மட்டுமின்றி இம்மக்கள் பிள்ளையாரின் மீது அளவு கடந்த நம்பிக்கை வைத்துள்ளனர். அதன் பொருட்டு பிள்ளையாருக்கு பலவிதமான வழிபாடுகள் நடத்தி வருகின்றனர் என்பதையும் அறியமுடிகின்றது.

இம்மாவட்டத்திலுள்ள மக்கள் மனதில் நினைத்த காரியங்கள் யாவும் நடைபெற்று விட்டதெனில் எருமை, மாடு, கிடாய் போன்ற விலங்கினை கடவுளுக்காக பலி கொடுக்கவும் செய்கின்றனர். இதை

*மூக்கு மயிறப் புடுங்காத சாமி எருமக்கடா பலி கேட்டுதாமா*

*புண்ணியத்துக்கு கொடுத்த மாட்ட பல்லப் புடுங்கிப் பாத்தாங்களாமா*

எனும் பழமொழிகளின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். மேலும், மக்கள் தங்களுடைய மன அமைதியினைப் பெறுவதற்காக கோயிலுக்குச் சென்று வழிபட்டு வரக்கூடிய நிலையினையும் பழமொழியில் பதிவாகியுள்ளன. இதனை,

*கொடு கொடுமன்னு கோயிலுக்குப் போனா அங்கொரு*
*கொடும தலவிரிச்சு போட்டு ஆடுச்சாமா*

எனும் பழமொழி விளக்குகிறது. இதில் 'தலவிரிச்சு போட்டு ஆடுச்சாம்மா' என்பது, சில மனிதர்களின் உடம்பில் சாமி ஏறிவிட்டால் தலைமுடியினை விரித்துப் போட்டு ஆடச் செய்யும் என்பதைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

உள்ளூரிற்குள் இருக்கின்ற கோயில்களுக்குச் சென்று பாவங்களைக் களைந்தும், பலி கொடுத்தும், மன அமைதி பெறுதல் மட்டுமின்றி வெளியூரில் இருக்கின்ற கோயில்களுக்கும் மக்கள் சென்று வருவதைக் காணலாம். இந்து மக்கள் 'காசி', 'திருப்பதி', 'இராமேஸ்வரம்' என்று செல்வார்கள். கிறித்தவ மக்கள் 'வேளாங்கண்ணி' போன்ற இடங்களுக்குச் சென்று வருவர். முஸ்லீம் இன மக்கள் 'மக்கா' போன்ற இடங்களுக்குச் சென்று வருவதையும் காணலாம். இங்கு காசி, திருப்பதி, மக்கா போன்ற இடங்களுக்கு சென்று வருவதாக பழமொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

கோவை மாவட்ட முஸ்லீம் இன மக்கள் கடவுளுக்கு பயந்து வாழக்கூடியவர்களாக இருக்கின்றனர். இதற்கு காரணம் கோவை மாவட்டத்தில் ஏற்பட்ட பிரச்சனைகள் தான் என்று கூட கூறலாம். இதன் மூலம் இவர்கள் கடவுள் மீது மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இம்மக்கள், இவர்களுக்கு உரிய கடமைகள் யாவும் முடிந்து விட்டதெனில் அல்லது பாவங்களைப் போக்குவதற்காக 'மக்கா' என்ற புண்ணிய இடத்திற்குச் சென்று வருகின்றனர். மதக்காழ்ப்புணர்வைத் தூண்டும்படியான பழமொழிகள் சில கள ஆய்வின் போது கிடைத்தன.

*பெம்பேச்சு கேட்ட பேய்பெருமாளே மக்கத்துக்குப் போய் தொப்பியிடு*

இப்பழமொழி இந்து மதக் கடவுளான பெருமாளைக் கேலி செய்யும் விதமாக அமைந்துள்ளது.

*காசிக்குப் போயி பரதேசி காலுல விழுந்த கதையாச்சு*

*திருப்பதியில மொட்டத்தலையனை தேடின மாதிரி*

எனும் பழமொழிகள் இந்து மக்கள் காசிக்கு செல்லக்கூடியவர்கள் என்றும், திருப்பதியில் சென்று முடிகளைக் களைந்து தங்களுடைய வழிபாடுகளை நிறைவு செய்து கொள்ளக் கூடியவர்களாகவும் இருக்கின்றனர் என்பதையும் கூறுவதாக உள்ளன. கணபதி கோயிலில் கணபதிக்கு கருகப்புல் என்ற மாலையினை பூசாரி அணியச் செய்வார். இதனை,

*கருகப்புல்லை விக்க போனாலும் நம்ம கெரகப்புல்லு சரியா இருக்கணுமல்ல*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். அதன் பின்னர் கடவுளுக்கு பூசை செய்து, கோயிலுக்கு வரக்கூடிய பக்தர்களுக்கு, பூசை செய்த பொருட்களான தீர்த்தம், சந்தனம் போன்றவற்றை கொடுக்கின்றனர். இதனை,

*சங்குல வார்த்தா தீர்த்தம் சட்டியில வார்த்தா தண்ணீரா*

*சாணியோட சேர்ந்து சந்தனமும் நாறும்*

எனும் பழமொழிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

### 3.1.5.4 பழக்கவழக்கங்கள்

கோவை மாவட்ட கிராமப்புற இடங்களில் தங்களது பொழுது போக்கிற்காக 'கோழிச்சண்டை', கலைநிகழ்ச்சியான 'கூத்து' போன்றவை நடத்தி வருகின்றனர்.

ஆண்கள் மிகவும் முக்கியத்துவம் கொடுத்து பொழுது போக்கிற்காக விளையாடும் விளையாட்டு கோழிச்சண்டையாகும். இதனை,

*நக்கவிட்ட நாயும் கொத்த விட்ட கோழியும் சும்மா இருக்காது*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது. கூத்து நிகழ்ச்சி நடைபெற்று வருகிறது என்பதற்குச் சான்றாக,

*குடுக்க மாட்டாதவன் கூத்தப் பழிக்கிறான்*

*கூத்தாடி கிழக்கே பார்ப்பான் கூலிக்காரன் மேற்கே பார்ப்பான்*

*ஊரு ரெண்டானா கூத்தாடிக்குக் கொண்டாட்டம்*

போன்ற பழமொழிகளின் மூலம் உணர்ந்து கொள்ளலாம். இதன் மூலம் கோவை மாவட்ட மக்களினுடைய பழக்கவழக்கங்களைப் பற்றி அறிய முடிகின்றன.

## 3.1.6 உயிரினங்கள்

### 3.1.6.1 கால்நடைகள்

மனிதன் ஒரு சமூக விலங்கு என்கிறது அறிவியல். மனிதனுக்கும் விலங்குகளுக்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதை வரலாறுகள் தெளிவுபடுத்துகின்றன. மனிதன் வேட்டைக்கு விலங்குகள் பயன்படுத்தத் தொடங்கி, விலங்குகளை தன் கட்டுப்பாட்டில் அடக்கி ஆளுமை செய்து, வீட்டுடனே செல்லப் பிராணிகளாக வளர்த்து வருகிறான்.

பொதுவாக இவ்விலங்குகள் காடு என்ற வாழ்விடம் விட்டு அகன்று மனிதன் புழங்கு வெளிக்குள் ஒன்றாக இணைக்கப்படுகின்றன. இவ்விலங்குகள் வெளிப்படையாக மனிதனுக்கு உதவும் நிலையில் தான் அவனால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அல்லாத நிலையில் அவைகளை கொல்லவோ அல்லது வேறு இடத்திற்குக் கொண்டு செல்லவோ செய்யப்படுகின்றன.

பாதுகாக்கப்படும் விலங்குகளின் ஒரு சில தனித்தன்மையின் அடிப்படையில் மக்களின் பண்பாட்டுத் தொடர் கண்ணிகளான வழக்காறுகளுக்குள் கலந்துள்ளன. கோயம்புத்தூர் மாவட்டத்தில் ஐந்தறிவு படைத்த விலங்குகளான ஆடு,

மாடு, குரங்கு, நாய், எருமை, குதிரை, கழுதை, பூனை, பன்றி, யானை போன்றவைகள் காணப்படுகின்றன.

இவற்றில் ஆடு, மாடு, பூனை, கழுதை, குரங்கு, நாய், பன்றி, யானை போன்ற விலங்குகளை வீடுகளிலும் அயலகப் பகுதிகளிலும் வளர்த்து வருகின்றனர். இவ்விலங்குகள் ஏதேனும் ஒரு வகையில் மனிதனுக்கு உறுதுணையாக செயல்பட்டு வந்துள்ளன என்பது பழமொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

மனிதர்களுக்குப் பால் என்ற உணவுப் பொருளினைத் தரக்கூடிய கால்நடைகளுள் ஒன்று ஆடு. இந்த ஆட்டினுடைய உருவமானது எத்தன்மை உடையதாக இருக்கும் என்பதை பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

*ஆட்டுக்கு வால ஆண்டவன் அளந்து தான் படச்சிருக்கான்*

*செத்தாடு கண்ணு முழிச்சது மாதிரி*

*ஆடு பொளச்சுதுன்னா மயிர் கூட குடுக்க மாட்டான்*

*ஆடு அறுப்பதற்கு முன்னால் புடுக்குக்கு முந்தாதே*

போன்ற பழமொழிகளில் வால், கண், முடி, புடுக்கு போன்ற அமைப்புக்களுடன் இருக்கக்கூடிய ஒரு விலங்கு ஆடு என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது. இந்த ஆடுகளை குறிஞ்சி நிலமாக இருக்கக்கூடிய மலைகளில் சென்று மேய்த்து வந்துள்ளனர் என்பதை, 'ஆட்டுக்காரன் ஆட்டத் தோளுல போட்டு ஆட்டக் காணமெனு மலைலையும் மந்தைலையும் தேடினது மாதிரி' எனும் பழமொழி விளக்குகின்றது. ஆடுகள் கூட்டமாக இருக்கக் கூடிய இடத்தினை 'மந்தை' எனும் பெயரால் அழைத்து வந்துள்ளனர். ஆட்டினுடைய கழிவுப் பொருட்களை புளுக்கை (ஆட்டான் புளுக்கையிலிருந்து அடிப்புளுக்க வர நாந்தான் பாக்கனும்) எனும் பெயரால் கூறப்பட்டு வந்துள்ளது என்று பழமொழியில் பதிவாகியுள்ளது.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அடையாளம் வைத்திருப்பர் அவ்வகையில் ஆட்டிற்கு அடையாளமாக கழுத்தில் மணிகளை கட்டி வைக்கக் கூடிய வழக்கம் கோவை மாவட்ட மக்களிடம் காணப்படுகின்றது என்பதை,

*திருட்டாடு மணியோட போன மாதிரி*

எனும் பழமொழி சான்றாக நிற்பதைக் காணலாம். அடையாளமாக மட்டுமின்றி ஆடுகள் எங்கு மேய்ந்து கொண்டிருக்கிறது என்பதை மணியின் ஒலியின் மூலம் உணர்ந்து கொள்வதற்காகவும் கட்டப்பட்டிருக்கலாம் என்று கூட கூறலாம். இப்பழமொழி ஆடுகளை மனிதர்களுக்கு ஒப்பிட்டு அவர்களினுடைய அறியாமை குணத்தினை வெளிப்படுத்திக் கூறுவதாக அமைக்கப்பட்டுள்ளது எனலாம்.

'பசு' என்பது இலக்கியங்களில் சூரியன் மறைவதற்கு சற்று முன்பு இருக்கக் கூடிய பச்சை நிற வெயில் என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் இன்று நம் வழக்காறுகளில் பசு என்பதை 'மாடு' எனும் சொல்லால் பயன்படுத்தி வருவதைக் காணலாம். இம்மாடு என்பது கட்டுப்பாடின்றி நிலையில்லாமல் நடந்து கொண்டிருக்கக் கூடிய ஒரு விலங்கு. இதனை, 'மாடு மாதிரி வேலை செய்யறான்' எனும் பழமொழியின் மூலம் உணரலாம். இது மாட்டினுடைய குணத்தினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. இம்மாடுகளின் உருவத்தினை,

*மாடு எளச்சாலும் கொம்பு எளைக்காது*

*மாட்ல கறந்த பால் மறுபடியும் மடி ஏறுமா?*

*புண்ணியத்துக்கு வந்த மாட்ட பல்லப் புடுங்கிப் பாத்தாங்களாமா*

என மாட்டினுடைய அமைப்பினைப் பற்றிக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இம்மாடுகளை 'தொளு' (தொளுவத்துல மாடு கட்டின மாதிரி) என்னும் இடத்தில் பாதுகாத்து வருகின்றனர் என்பதை பழமொழியின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. ஆடுகளைப் போன்று தான் மாடுகளும் மலைப்பகுதியில் மேய்ந்து

வருகின்றன. மாடுகளின் உணவுப் பொருட்கள் கம்பு, புல் போன்றவையாகும். இதனை,

*காஞ்ச மாடு கம்புல பூந்த மாதிரி*

*கூறு கெட்ட மாடு ஏழு கட்டு பிள்ள தின்னுச்சாமா*

*போரோட திங்கற மாட்டுக்கு புடுங்கிப் போட்டா கட்டுபடியாகுமா?*

*மாடு செத்தா கண்ணுகுட்டிக்கு புல் புடுங்கி வெச்சிட்டா சாகுது*

போன்ற பழமொழிகளால் அறியலாம்.

எருமை என்பது சொரணையின்றியும், பொறுமையுடனும் இருக்கக்கூடிய குணத்தினைக் கொண்ட ஒரு விலங்காகும். இது கருமை நிறத்துடன் இருக்கும் என்பதை, 'தங்கம் போட்டு உரசினாலும் எருமை நிறம் வெளுக்குமா?' எனும் பழமொழி விளக்குகிறது.

*சோத்துக்குள்ள கிடக்கற ஈயை எடுக்காதவன்*
*சேத்துல கிடக்கற எருமையையா தூக்குவான்*

எனும் பழமொழி எருமையினுடைய குணம் அதாவது சேற்றினுள் உழன்று கொண்டிருக்கும் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது. மட்டுமின்றி சோம்பேறித்தனத்துடன் இருக்கக் கூடிய மக்களை எருமையுடன் ஒப்பிட்டு கூறியுள்ள நிலையினையும் இப்பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

நாய் என்பது நன்றியுள்ள விலங்கு. ஆதலால் வீட்டினுடைய பாதுகாப்பிற்காகவும் நாயினை வளர்த்துகின்றனர். இந்நாயினுடைய உருவத்தினைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*நாய் ஏவுனா நாய் வால ஏவுச்சாமா*

*நாய்க்கு நாலு காலு இருந்தாலும் கால் மேல காலு போட்டு இருக்க முடியல*

*என்ன பண்ணினாலும் நாய் வாலு நிமிராது*

போன்ற பழமொழிகள் நாய்க்கு நான்கு கால்கள் உள்ளன. நாயினுடைய வாலானது வளைந்து இருக்கும் என்று நாயின் உருவத்தினை விளக்குவதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

*காவிரியாறு கஞ்சியாப் போனாலும் நாய்க்கு நக்கித்தான் குடிக்கணும்*

*நாய் வால மட்ட வெச்சு கட்டினாலும் நிமுத்த முடியாது*

*நாய் வேசம் போட்டா கொறச்சுத்தான் ஆகணும்*

*நாயக் கழுவி கட்டிலில் போட்டாலும் அது குப்பையில தான் படுக்கும்*

போன்ற பழமொழிகள் நாயின் குணத்தினைப் பற்றிக் கூறுவதோடு மட்டுமின்றி மனிதர்களின் குணத்தினை நாய் என்ற விலங்கு மூலம் கூறுவதாகவும் அமைந்துள்ளன. நாயானது எச்சில் இலையில் இருக்கக் கூடிய உணவினையும், மலம், கருவாடு போன்றவற்றை உணவாக உட்கொண்டு வருகிறது என்பதை,

*நாய்க்கு எச்சிலை*
*பேய்க்கு வேப்பிலை*

*களவாடறவன பாத்து நாய் போனா கருப்பட்டி கிடைக்கும்*
*கருவாட்டப் பாத்து நாய் போனா கல்லடி தான் கிடைக்கும்*

எனும் பழமொழிகளால் உணர்ந்து கொள்ள முடிகின்றன.

கழுதை என்பது அறிவில்லாத் தன்மை வாய்ந்ததாக இருக்கக் கூடிய ஒரு விலங்காகும். இவ்விலங்கினை வண்ணான் இனத்தைச் சார்ந்த மக்கள் பயன்படுத்தி வருகின்றனர். இக்கழுதை எப்பொழுதும் உயரமின்றி இருக்கக் கூடிய சுவர்களின் அருகினில், மூக்கில் வியர்வையுடன் நிற்பதைக் காணலாம் என்பதை,

*கழுதை கெட்டா குட்டிச்சுவர்*

*கழுதைக்கு மூக்குல வேர்க்கற மாதிரி*

எனும் பழமொழிகளால் அறியலாம். இங்கு 'கெட்டா' என்பது வேலை முடிந்து விட்டால் எனும் பொருளை உணர்த்துவதாக அமைந்துள்ளது.

இங்கு மாடு, எருமை, நாய், கழுதை போன்ற விலங்குகளின் ஒரு சில குறிப்பிட்ட குணங்களை அடையாளப்படுத்தியும், அவற்றின் உருவத்தினைப் பற்றியும் மேற்கூறப்பட்ட பழமொழிகளின் மூலம் உணர்ந்து கொள்ள முடிந்தன.

### 3.1.6.2 பறவைகள்

கோவை மாவட்டத்தில் விலங்குகள் மட்டுமின்றி "காக்கை குருவி எங்கள் ஜாதி" என்று கூறியதைப் போன்று பறவைகளும் காணப்படுகின்றன. இங்கு காக்கை, கழுகு, கிளி, குருவி, கோழி, மயில், வௌவால் போன்றவற்றை பதிவு செய்யும் நிலையில் கள ஆய்வின் போது பழமொழிகள் கிடைத்துள்ளன.

காக்கையின் நிறத்தினையும், புத்திக் கூர்மையினையும் பற்றிக் குறிப்பிடுகையில்,

*காக்கா குளிச்சு கொக்காகுமா?*

*காக்கா குஞ்சு கருங்குஞ்சானாலும் தன் குஞ்சு பொன்குஞ்சு*

போன்ற பழமொழிகள் மூலம் உணர்ந்து கொள்ளலாம். இப்பழமொழிகள் மக்களினுடைய வாழ்வியலோடு தொடர்பு படுத்திக் கூறியிருப்பதைக் காணலாம்.

*பொணந்திண்ணி கழுகு வட்டமிடற மாதிரி எதுக்கு வட்டமிடற*

இப்பழமொழியில் கழுகின் குணத்தினைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. கழுகு, இறந்த உடலை தன் உணவாக உட்கொள்ளும் வரையிலும் அந்த இடத்தை விட்டு நீங்காது சுற்றிக் கொண்டிருப்பதைக் காணலாம். அதே போன்று மனிதனுடைய குணமும் இருக்கும் என்று மனிதனை கழுகுடன் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

கிளி என்பது அழகு வாய்ந்ததாகவும், நாம் சொல்பவை எல்லாம் கேட்டு திரும்ப சொல்லக் கூடிய ஒரு பறவையாகும். இக் கிளியினை,

*கிளியாட்டமா ஒரு பொண்டாட்டி இருந்தாலும்*
*கொரங்காட்டமா ஒரு வெப்பாட்டி வேணும்*

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். இங்கு மனைவி என்பவள் கிளியினைப் போன்று இருக்கக் கூடியவள் என்று கிளிக்கு ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளது. மேலும், உயரமாகப் பறக்கக் கூடிய ஒரே பறவை பருந்து. இதனை,

*உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது*

எனும் பழமொழி விளக்குகின்றது. அதே போன்று,

*கழுத கத்தியே பொழுது விடியப் போறதில்லை*
*பொட்டிக் கோழி கூவினாலா பொழுது விடியப் போகுது*

*கோழியோட காலுல கச்சயக் கட்டுனாலும் அது குப்பையைத் தான் கிளறும்*

*பொறுக்கித் திங்கற கோழிக்கு மூக்குத் தறிச்ச மாதிரி*

எனும் பழமொழிகள் கோழியின் குணத்தினை வெளிப்படுத்திக் கூறுவதாக அமைந்துள்ளது.

*மயிலு காலு பாத்து உரங்கர மாதிரி உரங்கணும்*

*வெளவாலாத் தொங்கினாலும் நடக்காத காரியம் நடக்காது*

*வெளவாலுக்கு வாக்கப்பட்டா நீயும் தொங்கணும் நானும் தொங்கணும்*

எனும் பழமொழிகள் மயில், வெளவால் போன்றவற்றின் குணத்தினைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன.

### 3.1.6.3 பூச்சிகள்

விலங்குகள், பறவைகள் மட்டுமின்றி ஈ, குழவி, விட்டில் போன்ற பூச்சிகளின் குணத்தினைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகளும் காணப்படுகின்றன.

*தேன் இருக்கற இடத்துல தானே ஈ மொய்க்கும்*

*கொளவிக் கூண்டுல கை வெச்சா அது கொட்டியே சாகடிச்சிடும்*

*விட்டில் பூச்சி வெளக்கச் சுற்றிப் பறந்து தன்னையே சாகடித்துக் கொண்ணு விடற மாதிரி*

எனும் பழமொழியின் மூலம் பறப்பனவற்றின் குணத்தினைப் பற்றி உணர்ந்து கொள்ளலாம். இப்பூச்சிகளின் மூலம் மனிதனுடைய அன்பு, பகை, தன் வாயால் தானே கெட்டு விடுதல் போன்றவை வெளிப்பட்டுள்ள நிலையினைக் காணலாம்.

மேலும் அட்டை, அணில், எறும்பு, எலி, ஓந்து (ஓடக்கா), சுண்டெலி, தேள், நண்டு, பாம்பு, பெருச்சாளி, மீன், மூட்டப்பூச்சி போன்ற ஊர்வனவற்றைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகளையும் காணமுடிகின்றன.

*காட்ல கெடக்கர அட்டைய எடுத்து தொட்டில்ல போட்ட கெடக்குமா?*

*அணில் ஏ கெட்டுச்சுன்னா தன் வாயால கெட்டுச்சு*

*அணலேறி மரம் சாயோ கொசுவு போயி முட்டுக்காலு குடுத்துது*

*அறுப்புக்காலத்துல எலிக்கு அஞ்சு பொஞ்சாதி*

எனும் பழமொழிகள் அட்டை, அணில், எலி போன்றவற்றின் குணத்தைப்பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது.

ஓந்து என்பது வேலியினையே தன்னுடைய வாழ்விடமாகக் கொண்டு வாழக்கூடிய ஒரு உயிரி. இதனை,

*ஓடக்கா போனா ஏது வரைக்கும் போகும் வேலி வரைக்கும் தான் போகும்*

*வேலிக்கு ஓணான் சாட்சி*

*வேலியில் போற ஓணானைப் பிடிச்சு வீட்டுக்குள்ள விட்டு கொடையுது கொடையுதுன்னு சொல்வாங்க*

போன்ற பழமொழிகளில் ஓந்தின் (ஓடக்காயின்) குணத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன. இங்கு ஓந்து (ஓடக்கா) என்பது வீடு தான் தன்னுடைய உலகம் என்றிருக்கக் கூடிய பெண்களை கூறுவதாக அமைந்துள்ளது.

மேலும், வெவ்வேறு குணத்தினைக் கொண்டிருக்கக் கூடியவர்களை பழமொழி இவ்வாறு கூறுகிறது.

*தவள தண்ணிக்கு இழுக்க ஓணான் மேட்டுக்கு இழுத்த மாதிரி*

இப்பழமொழி மனிதர்களாக இருக்கக் கூடிய அனைவருடைய குணமும் ஒரே போன்று இருக்காது என்ற கருத்தினைக் கூறுவதாக அமைந்துள்ளது.

*சுண்டெலி பொரி மூட்டைய தொட்ட மாதிரி*

*திருடன தேள் கொட்டுன மாதிரி*

*நண்டு கொளுத்தா வங்குல நிக்காது*

*நத்தை வகுத்தலயும் முத்து பொறக்கும்*

போன்ற பழமொழிகள் சுண்டெலி, தேள், நண்டு, நத்தை போன்ற ஊர்வனவற்றின் குணத்தினைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளன. இதில் சுண்டெலி பொரி மூட்டையினை ஓட்டை செய்து விட்டதெனில், அந்த பொரி முழுவதும் கீழே விழுந்து விடும். அதே போன்று கள்ளங்கபடமற்ற குழந்தைகளிடம் யாரேனும் ஏதேனும் கேட்டார்களெனில், அக்குழந்தை அனைத்து விஷயங்களையும் கூறிவிடும். இங்கு சிறுபிள்ளைத்தனத்தினை கூறுவதற்காக சுண்டெலியினை பயன்படுத்தியுள்ள நிலையினைக் காணலாம். திருடச் செல்லக்கூடிய ஒருவனை தேள் கொட்டிவிட்டது எனில், அவனால் கத்தவும் முடியாமல், திருடவும் முடியாமல் இருதலைக் கொள்ளி எறும்பினைப் போன்று இருக்கக் கூடிய நிலையினைக் கூறுவதாக பழமொழி தேளினுடைய குணத்தினை திருடனுக்கு ஒப்பீடு செய்து கூறுகிறது. மேலும், 'காலச்சுத்தன பாம்பு கடிக்காம விடாது', 'ஊம ஊரக் கெடுக்கும் பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும்', 'மீன் இரையைப் பிடிக்குமே தவிர தூண்டிலப் பாக்காது' போன்ற பழமொழிகள் இவற்றின் குணத்தினைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளன.

கோவை மாவட்டம் மிகவும் மித வெப்பம் காணப்படக்கூடிய ஒரு இடமாகும். அதனால் இங்கு அதிகப்படியான மூட்டைப்பூச்சிகள் இருப்பதைக் காணலாம். இதனை,

*மூட்டப்பூச்சிக்கு பயந்து*
*வீட்டக் காலி பண்ணின மாதிரி*

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

### 3.1.7 பிற பழமொழிகள்

#### 3.1.7.1 தத்துவம்

பழங்காலந்தொட்டு இன்று வரை இதுதான் உண்மை என்று உலகத்திலுள்ளவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு என்றும் அழியாமல் நிலைத்து நிற்கக் கூடிய செய்தியினைத் தத்துவம் என்கிறோம்.

சமுதாயத்தில் அனைத்து வசதிகளும் பெற்றிருக்கக் கூடியவர்கள் திடீரென்று சில காரணங்களால் வசதிகள் குன்றிய நிலைக்கு ஆளாகிவிடுவதைக் காணலாம். இருப்பினும் அவர்களுக்கு என்றிருக்கக் கூடிய புகழானது எப்பொழுதும் மாறாத தன்மை வாய்ந்ததாக இருக்கும். இதனை,

*தேஞ்சாலும் சந்தனக்கட்ட மணம் போகாது*

எனும் பழமொழியின் மூலம் உணரலாம். மனிதர்களாகப் பிறந்தவர்கள் இந்த உணவினை உண்டு தான் உயிர்வாழ வேண்டும் என்ற கட்டாயமில்லை. எந்த உணவு வகைகளைச் சாப்பிட்டாலும் உயிர் வாழலாம் என்ற தத்துவார்ந்த உண்மையினை,

*கூழானாலும் குப்பயானாலும் குடிக்கிறவன் பொளப்பான்*

எனும் பழமொழியால் உணரலாம். இம்மனிதன் இவ்வாறு இருக்கிறான் என்று யாரும் குறை கூறமாட்டார்கள். அவனுடைய குணம் அப்படித்தான் இருக்கும். இதனை,

*கோழியோட காலுல கச்சயக் கட்டுனாலும் அது*
*குப்பையைத் தான் கிளரும்*

எனும் பழமொழி உணர்த்துகிறது. துன்பப்பட்டு உழைப்பின் மூலம் கிடைக்கக் கூடிய பணத்தின் மதிப்பினைப் பற்றி உழைப்பவர்களுக்குத் தான் தெரியும் என்ற உண்மையான நிலையினையும் பழமொழிகள் சுட்டிச் செல்வதைக் காணமுடிகின்றன.

*நோயாளிக்குத் தான் நோயோட வருத்தம் தெரியும்*

மேலும் கடவுள் என்பவர் எப்படி வாழ வேண்டும், உழைக்க வேண்டும் என்பதற்கான வழிமுறைகளைக் காண்பித்துத் தரக்கூடியவராக இருப்பார். அதை நாம் சரியான முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற நிலையான உண்மையினைக் கூறுவதாகவும் பழமொழி சுட்டிச் செல்கிறது. பின்னர் அனைத்தும் நம்முடைய தலைவிதியைப் பொறுத்துத்தான் அமையும். இதனை,

*கோட்டையில பொறந்தாலும் போட்ட விதி தப்பாது*

என்பதற்கேற்ப வல்லவர்களிடம் வைத்திருக்கக் கூடிய நட்பு கூட சில நேரங்களில் தீமை பயப்பதரக மாறிவிடும் என்ற தத்துவார்ந்த உண்மையினையும் பழமொழியில் காணலாம்.

*சுடுகாடு போன பொனம் திரும்பாது*

அதனால்,

*வெந்தத திங்க வேண்டியது*
*விதி வந்தா சாகவேண்டியது*

எனும் உண்மை நிலையினை வேறுபடுத்தக்கூடிய பழமொழிக்கு ஏற்றவாறு (சந்தோஷத்துடன்) வாழ வேண்டும் என்ற உள்ளார்ந்த கருத்தினை பழமொழிகளில் காணலாம்.

மேலும், எந்தெந்த பொருட்கள் எங்கெங்கு இருக்கும் என்ற தத்துவார்ந்த உண்மைகளையும் பழமொழிகள் சுட்டிச் செல்வதையும் காண முடிகின்றது. சான்றாக,

*சந்தனக்கட்ட தேஞ்சா பெட்டிக்குள்ள தான் போகும்*
*துடப்பக்கட்ட தேஞ்சா குப்பைக்குத்தான் போகும்*

மட்டுமின்றி,

*தங்கச் செருப்பானாலும் அதைக் காலுக்குத் தான் போட வேண்டும்*

போன்ற பழமொழிகளில் எந்தெந்து பொருட்களை எந்தெந்த இடத்தில் போடுதல் வேண்டும் என்ற நிலையான உண்மையினை வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளதைக் காணலாம். அதேபோன்று பெரிய பொருளாக இருப்பினும், சிறிய பொருளாக இருப்பினும் சிலவற்றின் தன்மையானது மாறாமல் ஒரே குணம் வாய்க்கப் பெற்றுள்ளதைக் காணலாம் என்பதற்கு சான்றாக,

*கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது*

எனும் பழமொழியினைக் கூறுவதைக் காணலாம்.

மேலும், தீமையான குணங்களுடன் இருப்பவர்களுடன் நல்லவர்கள் சேர்ந்து விட்டார்கள் எனில் இவர்களும் தீமையான குணம் கொண்டவர்களாக மாறிவிடுவார்கள் என்பதற்குச் சான்றாக,

*சானியோட சேந்து சந்தனமும் நாறும்*

எனும் பழமொழியினைக் கூறலாம்.

சிறிய குழந்தையாக இருப்பவர்களுக்கு ஒரு பொருள் கிடைத்து விட்டதெனில் அதை பெரிதாக எண்ணி மிகவும் மகிழ்ச்சியடைவதைக் காணலாம்.

*எறும்புக்கு கொட்டாங்கச்சி தண்ணி சமுத்திரம் மாதிரி*

என்ற நிலையாக இருக்கக் கூடிய கருத்தினை எடுத்தியம்புவதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது.

ஒரு செயலைச் செய்ய வேண்டுமெனில் அதற்கான ஆர்வம் இருக்க வேண்டும். அவ்வாறு ஆர்வம் இருந்தால் மட்டுமே அச்செயலினை முழுமையாகச் செய்து அதில் வெற்றி காண இயலும் என்ற நிலையான உண்மையினை,

*மாவிடிக்க மனசு வேணும்*

எனும் பழமொழியின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

மேலும், வசதி வாய்ப்பு இன்றி இருப்பவர்களுக்கு ஒரு சிறு வசதி கிடைத்து விட்டால் அதை பெரிதாக எண்ணி வாழக் கூடியவர்களாக இருப்பார்கள் என்பதற்கு சான்றாக,

*குட்டி போட்ட நாய்க்கு குப்ப மேடும் கோபுரம் தான்*

எனும் பழமொழி கூறுவதைக் காணலாம். மட்டுமின்றி பொருளாதாரமின்றி இருக்கக் கூடியவர்களும் எந்தவொரு சூழ்நிலையிலும் பயப்படாமல் இருப்பார்கள் என்பதற்குச் சான்றாக,

*மொட்டமரம் காத்துக்கு அஞ்சாது*

என்ற நிலையான உண்மையினை பழமொழி கூறி நிற்பதைக் காணலாம்.

இச்சமுதாயத்தில் சிலருடைய அன்பானது செல்வம் இருக்கும் பொழுது ஒரு நட்பும், செல்வம் இல்லாத போது ஏற்படுகின்ற நட்பும் வேறொரு விதமாகவும் இருப்பதைக் காணலாம். அவ்வாறு இருக்கக் கூடியவர்களின் உறவானது என்றைக்கும் நிலையில்லாததாகும். இங்கு சில மனிதர்களின் உறவானது என்றும் நிலையில்லா தன்மை வாய்ந்ததாக இருக்கும் என்பதற்குச் சான்றாக,

*தென்னமரத்து நெழலும் தேவடியா உறவும் நெலைக்காது*

என்ற பழமொழியினைக் கூறலாம்.

மேலும் இச்சமுதாபத்தில் பிறருக்கு தீமை செய்ய வேண்டும் என்று நினைத்து அவர்களுக்கு வேண்டிய சதி திட்டங்களை தீட்டக்கூடிய மனிதர்களும் உள்ளனர். ஆனால் அச்சதி குழியில் சதி திட்டங்களை தீட்டியவர்களே விழுந்து விடுவார்கள் என்ற உண்மை நிலையினை 'தான் வெட்டின குழியில் தானே

விழுவான்' எனும் பழமொழி நிரூபிப்பதைக் காணலாம். மட்டுமின்றி ஒருவரை அல்லது ஒரு பொருளை பிடிக்கவில்லையெனில், அது நன்றாக இருப்பினும் நன்றாக இல்லை என்று பலவாறான குற்றங்களைக் கூறுவர். இது மனித இயல்பு என்பதற்குச் சான்று கூறும் விதமாக,

*வேண்டாம்னா சீனி கூட கசக்கும்*

என்ற உண்மையான கருத்தினையும் நிலையாக இருக்கக் கூடிய உண்மையினையும் பழமொழியால் உணர்ந்து கொள்ளலாம்.

மேலும், 'பசி வந்தா பத்தும் பறக்கும்' என்பதைப் போல ஒருவருக்கு பசி வந்து விட்டதெனில் பிடிக்காத பொருளும் கூட பிடித்து விடும். சாப்பிடவும் செய்வார்கள் என்ற நிலையான உண்மையினை,

*குண்டி காஞ்சா குதர வைக்கப் புல்லு திண்ணும்*

என்ற தத்துவார்ந்த நிலையினைக் காணமுடிகிறது.

நன்கு உழைக்கக் கூடியவர்கள் நோயின்றி, ஆரோக்கியத்துடன் இருப்பதைக் காணலாம். உழைப்பின்றி எந்த வேலைகளையும் செய்யாமல் சோம்பேறித்தனத்துடன் இருப்பவர்கள் நோயுடன் காணப்படுவார்கள் என்பதையும் பழமொழியில் காணமுடிகிறது. ஒரு செயலைச் செய்யக் கூடியவர்கள் அதற்கான அடிப்படை வசதிகள் இருந்தால் மட்டுமே செய்வேன் என்று இருப்பவர்கள் ஒரு போதும் செய்யமாட்டார்கள், முன்னேறவும் மாட்டார்கள் என்பதை,

*காத்தப் பாக்கறவன் தூத்தமாட்டான்*
*வானத்த பாக்கறவன் விதைக்கமாட்டான்*

என்ற உண்மையினை பழமொழியில் காணலாம். ஆனால் அதற்கு நேர் எதிர்மாறாக அடிப்படை வசதியுடன் செய்து வந்தால் அதற்கான பலன் கண்டிப்பாக இருக்கும் என்பதை,

*அஸ்திவாரம் பலமா இருந்தா*
*கட்டிடம் பலமா இருக்கும்*

என்ற தத்துவப்பூர்வமான நிலையினை பழமொழி உணர்த்தி நிற்பதைக் காணலாம்.

மேலும், ஒரு பிரச்சினை நடந்து கொண்டிருக்கும் பொழுது அதற்கு காரணமாக இருக்கக் கூடியவர்களை அவ்விடத்திலிருந்து மாற்றி நிறுத்தினால் அப்பிரச்சினையை விரைவில் சமாதானம் செய்து முடித்து விடலாம் என்பதற்குச் சான்றாக,

*எறியறது புடுங்கினா கொதிக்கறது தானே அடங்கும்*

எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணலாம். ஆனால் தவறினைச் செய்யக் கூடியவர்கள் தண்டனையை அனுபவிப்பார்கள் என்பதை,

*உப்பு தின்னவன் தண்ணி குடிப்பான்*

என்ற உண்மை நிலையினை மேற்கூறப்பட்ட பழமொழியின் மூலம் அறியலாம்.

எந்தவொரு பொருளையும் பயன்படுத்தாமல் பாதுகாப்புடன் எடுத்து வைத்தல் கூடாது. அவ்வாறு எடுத்து வைத்தால் இறுதியில் யாருக்கும் பயன்படுத்த முடியாமல் போய் விடும் என்ற உண்மை நிலையினை,

*உடுக்காத புடவை செல்லரிக்கும்*

எனும் பழமொழி மேற்கூறிய கருத்திற்குச் சான்று கூறும் விதமாக அமைந்துள்ளதைக் காணலாம்.

சிலருடைய குணமானது மாறா தன்மை வாய்ந்ததாக இருப்பதைக் காணலாம். சுயமான புத்தி இல்லையெனில் சொல் புத்தியின் மூலம் அவர்களுடைய கெட்ட குணங்களையெல்லாம் மாற்றிவிடலாம். ஆனால் சிலர் சொல் புத்தியின்

மூலமும், சுய புத்தியின் மூலமும் மாறாமல் தங்களுடைய விருப்பப்படி தீமைகளை மட்டும் செய்யக் கூடியவர்களாக நடந்து கொண்டிருப்பார்கள். அவ்வாறு இருப்பவர்களை,

*விபசாரம் செய்யறவன் சுட்டாலும் விடமாட்டான்*

எனும் தத்துவார்ந்த உண்மையினை பழமொழியின் மூலம் காணமுடிகிறது.

மேற்கூறப்பட் அனைத்து செய்திகளும் நிலையாக இருக்கக்கூடிய கருத்தினை வெளிப்படுத்தும் விதமாகத் தான் அமைந்துள்ளன என்பதை பழமொழிகளின் மூலம் அறிய முடிகின்றது.

### 3.1.7.2 அறிவுரை

சுயபுத்தி இல்லாதவர்களுக்கு சொல் புத்தி மூலமாக பெரியவர்கள் முதல் சிறியவர்கள் வரை அறிவுரை கூறுவர். பெரியவர்கள் மட்டும் அறிவுரை கூற வேண்டும் என்ற வரையறை இல்லை. மக்களுக்கு ஒரு கருத்தை எளிதில் புரிய வைப்பதற்காக அறிவுரையைப் பயன்படுத்துவர். மட்டுமின்றி தீயவழியில் செல்பவர்களை நல்வழியில் செல்ல வேண்டும் என்பதைக் கூறுவதற்காகவும் அறிவுரை புகட்டுவர். கள ஆய்வின் போது ஏராளமான அறிவுரை சார்ந்த பழமொழிகள் கிடைத்துள்ளன. அவை கீழ்வருமாறு கூறப்படவுள்ளன.

எந்தவொரு பொருளையும் அதற்குத் தகுதியாக இருக்கக் கூடிய இடத்தில் தான் வைத்துப் பார்க்க வேண்டும். அன்றி தகுதியில்லாத இடத்தில் வைக்கக் கூடாது என்பதற்குச் சான்றாக,

*பட்டக்காட்டுல தென்னமரம் வெச்சுப் பாக்க ஆசப்படாதே*

எனும் பழமொழி அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளது. எந்த பொருளை எந்த இடத்தில் வைத்தால் பலன் கிடைக்குமோ அந்த இடத்தில் தான் வைக்க வேண்டும்

என்ற கருத்தினை இச்சமுதாயத்திற்கு உணர்த்தும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது.

மேலும், எந்தவொரு பொருளை வாங்கும் பொழுதும் ஒரு முறைக்கு பல முறை யோசித்து வாங்குவதைக் காணலாம். பின்னர் இறுதியில் அப்பொருள் யாருக்கும் எவ்வித உபயோகமின்றி இருக்கின்ற நிலையில் இருப்பதைக் காணலாம்.

*பசாரிச்சு பசாரிச்சு பச்சக்கிளி வாங்கி*
*விசாரணை இல்லாம வீதியில கெடக்குது*

எனும் பழமொழியால் உணரலாம்.

ஒருவர் நல்லவராக இருப்பினும் அவர் நிற்கக்கூடாத இடத்தில் நின்று ஏதேனும் நல்ல விஷயங்களை செய்தார் எனில் நல்லவைகள் யாவும் கெட்டவையாகத் தான் இவ்வுலகத்திலுள்ள மக்களுக்கு தென்படும் என்பதற்குச் சான்றாக,

*பனைமரத்து அடியில் நின்னு பால் குடிச்சாலும் கள்ளு*
*குடிக்கிறான் என்பாங்க அதுமாதிரி*

எனும் பழமொழி எந்தவொரு செயலையும் செய்யக்கூடாத இடத்தில் நின்று செய்தல் கூடாது என்ற அறிவுரை சார்ந்த கருத்தினை இச்சமுதாயத்திற்கு கூறுவதாக அமைந்துள்ளது. மட்டுமின்றி நாம் எந்த வேலையைச் செய்கிறோமோ அதற்கான பலனைத் தான் பெறமுடியும். அன்றி வேறு எந்த பலனும் கிடைக்காது என்பதற்குச் சான்றாக,

*விதையொன்னு போட்டு சொறயொன்னு மொளைக்குமா?*

எனும் பழமொழி அமைந்துள்ளதைக் காணலாம். செய்த வேலைக்கு மட்டுமே பலன்களை எதிர்பார்க்க வேண்டும் என்ற கருத்தினைக் கூறுவதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது.

அவரவர்களுக்கு என்று வரக்கூடிய பிரச்சினைகள் யாவும் அவரவர்களுக்கு வந்தே தீரும். அப்பிரச்சினைகள் வராமல் தடுக்க முடியாது. அதற்காக பயந்து வேறு எங்கும் செல்லவும் முடியாது என்பதை,

*வீட்ட முழுங்குகிற பேய் வந்தா வீட்டை சாத்தினால் சரியாவா போகும்*

எனும் பழமொழியால் உணரலாம். அவரவர்களுடைய தலைவிதிப்படியே நடக்க வேண்டியவைகள் யாவும் நடந்தே தீரும். அதை யாராலும் தடுக்கவும் மாற்றவும் முடியாது என்ற அறிவுரையினை இச்சமுதாயத்திற்கு கூறும் விதமாக அமைந்துள்ளது.

மேலும், அவரவர்களுடைய வேலைகளில் அவரவர்களே கவனம் செலுத்தி இருக்க வேண்டும். பின்னர் தனக்கு வேலைகள் ஒன்றும் இல்லை என நினைத்து,

*வேலியில போற ஓணானைப் பிடிச்சு வீட்டுக்குள்ள விட்டு கொடையுது கொடையுதுன்னு சொல்வாங்க*

அதே மாதிரியான குணம் கொண்டவர்களாக இருக்கக்கூடாது. பின்னர் அதன் மூலம் பலவிதமான பிரச்சினைகள் ஏற்படுவதற்கான சூழலும் ஏற்படும். நம்மை நாமே தரம் தாழ்த்தி விடக்கூடாது என்ற அறிவுரையினைக் கூறும் விதமாக பழமொழி அமைந்துள்ளதைக் காணலாம். மட்டுமின்றி வீட்டினுள் நல்ல குணம் கொண்டவர்கள் இருப்பின் அவசியமின்றி பேச்சுக்களை பேசி இருக்கக் கூடியவர்கள் வரமாட்டார்கள் என்பதை,

*வேலி உறுதியா இருந்துச்சுன்னா நாய் நுளையாது*

எனும் அறிவுரை சார்ந்த பழமொழியினைக் கூறுவதைக் காணலாம். பிறருடைய காரியத்தில் மிகுந்த ஈடுபாட்டுடன் இருத்தல் கூடாது என்பது சமுதாயத்திற்கு கூறும்

கருத்தாக அமைந்துள்ளது எனலாம். மட்டுமின்றி, பிறர் என்ன கூறினாலும் அதைப் பொருட்படுத்தாது இருக்க வேண்டும்.

*நாய் சூரியனைப் பாத்து கொலச்சா கொலச்சிட்டு போகுது*

என்று நம்முடைய காரியத்தை மட்டும் நாம் கவனித்து வர வேண்டும். நமக்குத் தேவையான வேலைகளை நாமே விரைவில் செய்து முடிக்க வேண்டும் என்பதற்குச் சான்றாக,

*நாய் கூப்பிடற நேரம் பீய வழி*

எனும் பழமொழி சான்று பகர்ந்து அறிவுரை கூறும் விதமாக அமைந்துள்ளதைக் காணலாம்.

யார் யாரிடம் என்னென்ன பொருட்களை வாங்க வேண்டும், நமக்கு கிடைக்காத பொருட்களை நினைத்து வருத்தப்படக்கூடாது என்ற முறையில் அறிவுரை கூறும்படியான பழமொழிகளும் காணப்படுகின்றன.

நாம் புதிதாக எந்த நாட்டிற்குச் சென்றாலும், அந்த நாட்டிலுள்ள மக்களைப் போன்று தான் அதாவது 'ஊரோடு ஒட்டிப் பழகணும்' என்பதைப் போன்று நாமும் இருக்க வேண்டும். அன்றி நம் ஊரிலுள்ள பழக்கங்களைப் போன்று இருந்தால் நாம் தனிமையாக வாழ வேண்டிய சூழல் ஏற்பட்டு விடும். மட்டுமின்றி 'பாம்பு திங்கற ஊர்ல போனா நடுத்துண்டத்தான் சாப்பிடணும்' என்பார்கள். இப்பழமொழிக்கு ஏற்ப வாழ்ந்து கொள்ள வேண்டும். அவ்வாறு வாழ்ந்தால் நம்முடைய லட்சியங்களைக் கூட நிறைவேற்றி விடலாம் என்ற அறிவுரையைக் கூறும் விதமாக பழமொழி அமைந்துள்ளது.

மேலும், வசதி படைத்து இருக்கக் கூடியவர்கள் எப்படி வேண்டுமானாலும் தங்களுடைய வாழ்க்கையை நடத்திச் செல்வார்கள் என்பதற்குச் சான்றாக,

*மயிர் உள்ள சீமாட்டி எப்படி முடிஞ்சா என்ன*

எனும் பழமொழியைக் காணலாம். மட்டுமின்றி வசதிகுன்றி இருப்பவர்கள் நன்கு உழைத்து முன்னேற வேண்டும் என்ற எழுச்சியை தூண்டுவதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது எனலாம். 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்பதற்கிணங்க இருக்க வேண்டும். கெட்டவர்களுடன் வைத்திருக்கக் கூடிய நல்லவர்களின் நட்பானது இறுதியில்,

*பன்னிக்குட்டி கூட சேந்தா கன்னுக்குட்டியும் பீயத் தின்னும்*

என்பதற்கு ஏற்றவாறு ஆகிவிடும். அதனால் நல்லவர்களிடம் மட்டும் நட்பு வைக்க வேண்டும். அன்றி கெட்டவர்களிடம் வைத்திருக்கக் கூடிய நட்பை அறவே ஒழித்து விட வேண்டும் என்ற அறிவுரையினைக் கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது எனலாம். மேலும், பெண் என்பவள் வீட்டிற்குள்ளேயே முடங்கி இருக்கக் கூடாது. நன்றாக பேசக் கற்றுக் கொண்டவளாக இருக்க வேண்டும். இல்லையெனில் எப்படி பேச வேண்டும் என்பதை பேசுபவர்களின் மத்தியில் சென்று பார்த்து கற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்குச் சான்றாக,

*வாயிருந்தா வாழச் சொன்னா இல்லைன்னா வாழவாடி*
*சந்தமேல வந்தரச் சொன்னான்*

எனும் பழமொழியினைக் கூறுவதைக் காணமுடிகின்றது.

சிலர் உயர்ந்த நிலையில் இருந்தாலும் கூட சில சூழ்நிலையில் 5l6u அவர்களால் தான் உயர்ந்தவன் என்று இயல்பாக காட்டிக் கொள்ள முடியாது என்பதற்குச் சான்றாக,

*நாய்க்கு நாலு காலு இருந்தாலும் கால் மேல காலு போட்டு*
*இருக்க முடியாது*

எனும் பழமொழி கூறுவதைக் காணலாம். மட்டுமின்றி யாரிடம் எப்படி நடந்து

கொள்ள வேண்டும் என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும். அவ்வாறு யாரிடம் எப்படி பேச வேண்டும் என்பதை தெரியாமல் பேசுபவர்களை குறிப்பிட,

*நாய்க்கும் நாட்டாமைக்கும் வித்தியாசம் தெரியாம பேசாதே*

எனும் பழமொழியானது அவர்களை நல்வழிப்படுத்த வேண்டும் என்பதை கூறுவதற்காக எழுந்த அறிவுரை சார்ந்த பழமொழியாக அமைந்துள்ளது எனலாம்.

தாய் பிள்ளை உறவு என்பது தொப்புள் கொடி உறவாகும். இருப்பினும் அவர்களுக்குள் சில வேற்றுமைகள் இருப்பதையும் காணலாம். இங்கு,

*தாயும் புள்ளயும் ஒன்னா இருந்தாலும் வாயும் வயிறும்*
*வேறு வேறு*

எனும் பழமொழியின் மூலம் தாய் சேய் உறவினைப் பற்றிக் கூறுவதைக் காணலாம். இங்கு பொருளாதாரம் என்று வரும் பொழுது தாய் பிள்ளை உறவென்பது வேறு வேறு என்ற தன்மையில் ஆகிவிடும் தாயைக் காப்பாற்ற வேண்டியது பிள்ளைகளின் கடமை. அதனால் தாய் என்பவளை ஒரு போதும் தனியாகப் பிரித்து வைத்து பார்க்கக் கூடாது என்ற அறிவுரையைக் கூறும் விதமாக பழமொழி அமைந்துள்ளது எனலாம். மேலும் நான் அதைச் செய்வேன் இதைச் செய்து முடித்து விடுவேன் என்று வீம்பான வார்த்தைகளைக் கூறக்கூடியவர்கள் ஒரு வேலையையும் செய்யமாட்டார்கள் என்பதற்குச் சான்றாக,

*துள்ளற மாடு பொதி சுமக்காது*

எனும் பழமொழியினைக் கூறுவதைக் காணலாம். வீணாக வீம்பு வார்த்தைகளைக் கூறாது செயல்படுதல் வேண்டும் என்ற அறிவுரையை இச்சமுதாயத்திற்கு உணர்த்திக் கூறும் விதமாக அமைந்துள்ளது. அதே போன்று எந்தத் தொழிலைச் செய்யும் பொழுதும் அதிலுள்ள குற்றங்குறைகளை கண்டுபிடித்த பிறகு தான் அத்தொழிலைச் செய்யத் தொடங்குவது மனித இயல்பு. ஆனால் அதில்

அதிகப்படியான குற்றங்குறைகளைக் கண்டுபிடித்தால் ஒரு தொழிலையும் செய்து முன்னேற முடியாது என்பதற்குச் சான்றாக,

*தோலப்பாத்து மாடு பிடிச்சா தொழிலுக்கு ஆகாது*

எனும் பழமொழியை காணலாம்.

சிலர் வீட்டில் சில நல்ல காரியங்கள் நடக்கும் பொழுது முட்டாள் தனத்துடன் செயல்பட்டு வருகின்ற நிலையினையும் பழமொழிகள் கட்டிச் செல்வதைக் காணமுடிகின்றன. மனிதர்களாக பிறந்த அனைவரும் நன்கு உழைக்க வேண்டும். அவ்வாறு நன்கு உழைத்தால் மட்டுமே அதற்கான பலன்களை பெற முடியும் என்பதற்குச் சான்றாக,

*ஆய் ஆயின்னு பாடுபட்டா அல்லி விடவு சேரும்*

எனும் பழமொழியைக் காணலாம்.

மேலும் பெற்றோர்களின் ஆதரவுடனும் உதவியுடனும் நம்முடைய ஊரில் நல்ல முறையில் வாழ்ந்து விட்டு, வேறொரு ஊரில் வசதிகளின்றி வாழக்கூடிய மக்களும் இச்சமுதாயத்தில் உள்ளனர். இருப்பினும் வேறொரு ஊரிற்குச் சென்று அவரவர்களுடைய சொந்தமான உழைப்பில் கிடைக்கக்கூடிய வருமானம் என்பது மிகவும் பெரியது என்பதற்குச் சான்றாக,

*அப்பன் வீட்ல யானை மேல் உக்காந்து சோறு உண்டாலும்*
*புருசன் வீட்ல பிச்சையெடுத்து உண்பது மேல்*

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். மேலும், நாம் எந்த முறையில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதை நம் பெற்றோர்களிடம் கூறாமலும் தெரியப்படுத்தாமலும் இருக்க வேண்டும் என்ற அறிவுரை சார்ந்த கருத்தினைக் கூறும் விதமாகவும் மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது எனலாம்.

### 3.1.7.3 துன்பம்

எவ்விடத்திற்குச் சென்றாலும் மனதினில் நினைத்திருக்கக் கூடிய காரியங்கள் யாவும் வெற்றியடையாமல் பல விதமான தடைகள் ஏற்பட்டு மன அமைதியின்றி இருக்கக் கூடிய நிலையினைத் துன்பம் என்கிறோம். அனைத்து மனிதர்களின் வாழ்க்கையில் ஒவ்வொரு விதமான துன்பங்கள் இருப்பதைக் காணலாம். அது பழமொழிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

ஒரு செயலானது நல்ல முறையில் நடந்து கொண்டிருக்கும் வேளையில் திடீரென்று அச்செயலானது நடைபெறாமல் அனைவரும் துன்பப்படும்படி நின்று விடுவதை பழமொழியில் காணமுடிகின்றது. இதனை,

*வெண்ணெ தெரண்டு வரும்போது தாழி ஒடஞ்ச மாதிரி*

எனும் பழமொழியில் காணலாம். இச்சமுதாயத்திலுள்ள மக்களுக்கு ஒரு விஷயம் கிடைத்து விட்டதெனில் அதைப் பற்றி வேதனைப்படுத்தக் கூடியவர்களாகத் தான் இருப்பார்கள் என்பதை,

*எரியற தீயில எண்ணெ ஊத்தனாப்லே*

எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணலாம். மட்டுமின்றி இவ்வாறு குணம் படைத்தவர்களின் முன்னிலையில் இருக்க வேதனைப்பட்டு தனக்கு அமைதி கிடைக்கக் கூடிய இடத்திற்குச் செல்வர். ஆனால் அங்கு இருப்பவர்கள் இவர்களைப் பார்த்ததும் அவர்களுடைய துன்பங்களையெல்லாம் இவர்களிடம் கூறி மேலும் வேதைனைப்படுத்தக் கூடிய நிலையில்தான் உள்ளனர் என்பதை,

*சலுச்சு முடிச்சு சக்கிலியன் வூட்டுக்குப் போனா செருப்பு*
*தையீனு சொல்றான்*

எனும் பழமொழியால் அறியலாம்.

தன்னுடைய ஊரில் தான் தனக்கு அமைதி கிடைக்காது என்று எண்ணி மன அமைதியைப் பெற வேறொரு இடத்திற்குச் செல்கின்றனர். ஆனால் அங்கும் இவர்களுக்கு நேர் எதிர்மாறாகத் தான் சில செயல்கள் நடக்கின்றன. இதனை,

*ஆசாரப் பார்ப்பான் காசிக்குப் போனானாம்*
*பறையன் கேசம் தலையிலடி பட்டுச்சாமா*

எனும் பழமொழியின் மூலம் அறியமுடிகின்றது. மட்டுமின்றி நாம் எங்கு செல்லினும் அவரவர்களுக்கு வரக்கூடிய துன்பமானது வந்தே தீரும். அதனால் எங்கு சென்றாலும் ஒரு பயனுமில்லை என்ற கருத்தினை வலியுறுத்திக் கூறுவதாக பழமொழி அமைந்துள்ளது.

இவை மட்டுமின்றி பொருளாதார பிரச்சினையின் காரணமாகவும் துன்பங்கள் ஏற்படுகின்றன. நல்ல வழியில் சென்று பிழைப்பதற்கு வழியின்றி இருக்கக் கூடிய மக்கள் தீமையான வழிகளில் சென்று பிழைக்கக் கூடிய நிலையினையும் பழமொழியில் காணமுடிகிறது. 'மெல்லவும் முடியல துப்பவும் முடியல' என்பதற்குத்தக்க சில துன்பங்கள் ஏற்பட்டு விடும் என்பதை,

*திருடன தேள் கொட்டுன மாதிரி*

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். மட்டுமின்றி சிறிய பொருள் கிடைப்பதற்கு வழியின்றி இருக்கக் கூடிய நிலையில் பெரிய பொருள் வேண்டுமென்று கேட்டு துன்பப்படுகின்ற நிலையினை,

*எனக்கே இஞ்சிப் பச்சடி இல்ல*
*உனக்கு தக்காளிப் பச்சடி கேக்குதா*

எனும் பழமொழியில் காணலாம். மேலும், 'விடிஞ்சா மூஞ்சிக்கு வேல கெடச்சாலும் கூலி கெடைக்காது' என்றில்லாமல் சிரித்த முகத்துடன் இருக்க வேண்டும் என்று கூறுவதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளதைக் காணலாம்.

### 3.1.7.4 தற்பெருமை

இச்சமுதாயத்தில் தற்பெருமை பேசாத மனிதர்களே இல்லை என்று கூறலாம். மனிதர்கள் மட்டுமின்றி பழமொழிகளும் தற்பெருமைகளைப் பற்றிக் கூறுவதைக் காணமுடிகின்றன.

சிலர் சிறிய நிலையில் அதாவது வசதி குன்றிய நிலையில் தங்களுடைய வாழ்க்கையை நடத்திச் செல்வார்கள். இருப்பினும் சிலருடைய முன்னிலையில் சில செயல்களின் மூலம் தங்களை மிகவும் வசதி படைத்த நிலையில் இருப்பவர்கள் என்று காட்டிக் கொள்வார்கள் என்பதற்குச் சான்றாக,

*வெறுங்கஞ்சியைக் குடிச்சிட்டு மீசையில நெய்யைத் தடவிக்*
*கொள்ற மாதிரி*

எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணலாம்.

உணவு உண்ணாமல் வயிறானது ஒட்டிய நிலையில் குடலை பிறருக்கு காண்பித்துக் கொடுத்தாலும் அது வாழை நார் என்று தான் கூறுவார்கள் என்பதை,

*வயிறு குடலைக் காட்டினாலும் வாழை நார் என்பது போல*

சிலர் பேசக்கூடிய பேச்சில் திறமை படைத்து வல்லவராகத் திகழ்வார்கள் என்பதற்குச் சான்றாக,

*நீங்க தண்ணில கூளி போட்டா*
*நாங்க பாறைலயே கூளி போடுவோம்*

எனும் பழமொழியின் மூலம் அறியமுடிகிறது.

### 3.1.8 வட்டார மொழிச் சொற்கள்

பழமொழிகள் சாதாரணமான பேச்சு வழக்கில் அமைந்துள்ளது. ஊருக்கு ஊர், இடத்திற்கு இடம், வட்டாரத்திற்கு வட்டாரம் ஒரே பழமொழி மாறி

மாறி வந்துள்ளது என்பதை கள ஆய்வில் சேகரித்த பழமொழிகளின் மூலம் அறிய முடிகின்றது. மட்டுமின்றி இந்த இடத்திற்கு மட்டுமே இந்த வார்த்தை உரியது என்ற வட்டார மொழிச் சொற்களையும் பழமொழிகளில் காண முடிகின்றன. சாதி மத வேறுபாடின்றி ஒரு பகுதியிலுள்ள மக்களனைவரும் ஒரு வார்த்தையை அவர்களது பயன்பாட்டில் பயன்படுத்தி வருகின்றனர் என்பதையும் உணர முடிகின்றது. இப்பகுதியில் ஒவ்வொரு வட்டாரத்தில் மக்கள் கூறுகின்ற தமிழ்ப் பழமொழிகளிலுள்ள வட்டார மொழிச் சொற்களைக் காணலாம்.

*மகன் செத்தாலும் சாகட்டும் மருமக கொட்டம் அடங்கினா சரி*

*அகராதிக்கு அறுவாமணை மேல நின்னா அறுக்கத்தான் செய்யும்*

*அவங்கடக்கறான் குடிகாரன் எனக்கு ரெண்டு சொப்பூத்து*

*மோருக்கு போறவ சொப்ப ஏ மறச்சிக்கிட்டு போறா.*

*வேலையில்லாம வெறகுக்கு போனவக கொடியெல்லாம் குக்கீட்ட அழுதாங்களாமா*

*கூடப் பிறந்தவன் குக்கி அழுகிறான் அசவீட்டு காக்கா அறிஞ்சு அறிஞ்சு அழுகுது*

*கம்பங்காட்டுல உங்காத்தா புள்ள பெத்தால*
*நாணுமில்லாட்டி உங்காத்தா நாறிப் போயிடுவா*

*ஒட்டறது ஒரு ஏரு அது வொளவுல புடி*

*களவு போய் மூணாநாளு கதவு முக்கரணம் போட்டுச்சான்*

இப்பழமொழிகளில் ‘கொட்டம்’, ‘அகராதி’ என்ற சொற்கள் திமிர் என்ற பொருளைக் குறிக்கக் கூடிய சொற்களாகும். ‘சொப்பு’ என்ற சொல்லானது

சொம்பு, பானை என்ற பொருளைக் குறிக்கக் கூடிய சொல்லாகும். 'குக்கி', 'குக்கீட்டு' என்ற சொற்கள் அமருதல் என்ற பொருளைக் குறிக்கக் கூடிய சொற்களாக அமைந்துள்ளன.

*சாறு இல்லாம சோறு தின்னாலும்*
*சண்டையில்லாம சோறு திங்கமாட்டான்*

*தூரத்திலிருக்கிற சொந்தக்காரனை விட*
*பக்கத்திலிருக்கிற அயலானே வாசி*

*பக்கத்துல இருக்கிற உறவுக்காரனோட காலில் விழுகிறதவிட*
*பொறத்தையன் காலில் விழுவதே மேல்*

*மனசுல கனமிருந்தா மையித்துக்கு கனம்*

*நீங்க தண்ணில கூளி போட்டா*
*நாங்க பாறைலயே கூளி போடுவோம்*

போன்ற பழமொழிகளில் வரக்கூடிய குழம்பு என்ற பொருளைக் குறிக்கக் கூடிய 'சாறு' என்ற சொல்லும், சிறந்தவன் என்ற பொருளைக் குறிக்கக் கூடிய 'வாசி' என்ற சொல்லும், சடலம் என்பதைக் குறிக்கக் கூடிய 'மையித்து', குட்டிக்கரணம் என்பதைக் குறிக்கக்கூடிய 'கூளி' போன்ற சொற்கள் போன்ற சொற்கள் பிஸ்மிநகர் என்ற இடத்தில் வசிக்கக் கூடிய முஸ்லீம் இனமக்களால் கூறப்பட்டு வருவதை அறியமுடிகிறது. மட்டுமின்றி பாலக்காடு மாவட்டத்தில் வசிக்கக்கூடிய முஸ்லீம் இன மக்களும் பொறத்தையன், வாசி என்ற சொற்களை கவுண்டர் இன மக்களும் வழங்கி வருவதைக் காணமுடிகின்றது.

*அரிச்சந்திரன் வீட்டு மொடக்காளியில பொறந்தது மாதிரி பேசுவா*

*கழுவி கழுவி ஊத்தினாலும் கவிச்சி நாத்தம் போகாது*

*ஊரான் புள்ளைய உருவத்தைக் கொலைச்சா தன் புள்ள தானே கொலைக்கும்*

போன்ற இப்பழமொழிகளில் குளியலறையைக் குறிக்கக் கூடிய சொல்லான பொடக்காளி, வாடையைக் குறிக்கக் கூடிய சொல்லான கவிச்சி, இல்லாமல் செய்வது என்ற சொல்லைக் குறிக்கக் கூடிய கொலைச்சா என்ற சொற்களை அம்பராம்பாளையம், புதூர் போன்ற இடங்களில் வசிக்கக் கூடிய கவுண்டர், முஸ்லீம் இன மக்கள் வழங்கி வருவதைக் காணமுடிகின்றது.

### 3.1.9 தகாத சொற்கள் வரக்கூடிய பழமொழிகள்

தமிழ்ப் பழமொழிகளில் தகாத வார்த்தைகளைப் பயன்படுத்தக் கூடிய பழமொழிகளும் காணப்படுகின்றன. அவ்வாறு பயன்படுத்தக்கூடிய பழமொழிகளில் உள்ளார்ந்த பொருள் பொதிந்துள்ள தன்மையினையும் காணமுடிகின்றது. அவ்வகையிலான பழமொழிகள் கள ஆய்வின் போது குறைவாகத்தான் கிடைத்துள்ளன. அதில் குறிப்பாக பெண்குறி, ஆண்குறி பற்றி கூறக்கூடிய பழமொழிகள் தான் கிடைத்துள்ளன. அவை கீழ்வருமாறு காணலாம்.

*எரிகிறவ பொச்சுள சுக்கு வெச்சு ஊதாதே*

*துச்சனக்காரிக்கு பொச்சுள காயம்*

*வாழ்ந்தாலும் வயித்தெரிச்சலு*
*பொளச்சாலும் பொச்சொரிப்பு*

போன்ற பழமொழிகளில் 'பொச்சு' என்பது பெண்குறியைக் குறிக்கக் கூடிய சொல்லாக அமைந்துள்ளதை அறியமுடிகின்றது. இதே போன்று ஆண்குறியினை,

*ஆனா புடுக்க அறுப்பாங்க இல்லைன்னா முலை அறுப்பாங்க*

*இடுக்கு சந்துல புடுக்கு சிக்கி வைக்கிறது*

*குமிஞ்சு நின்னா புடுக்க அறுத்திட்டு போவாங்க*

*தனக்குத் தனக்குன்னா புடுக்கும் களையெடுக்கும்*

*தனக்குத் தனக்குன்ன புடுக்கும் சேந்து வேலை செய்யும்*

போன்ற பழமொழிகளில் ஆண்குறியைக் குறிக்கக் கூடிய 'புடுக்கு' என்ற சொல் வந்துள்ள நிலையினைக் காணமுடிகின்றது. இச்சொல்லினை அதிகமாக அம்பராம்பாளையம் கெட்டிமன்னம்புதூர் போன்ற பகுதிகளில் வசிக்கக்கூடிய மக்கள் பயன்படுத்தி வருகின்றனர் என்பதை கள ஆய்வின்போது உணரமுடிந்தது.

### 3.1.10 ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல தமிழ்ப் பழமொழிகள்

பழமொழிகள் கூறும் பொழுது ஒரு சூழலில் ஒரு பழமொழியை மட்டும்தான் பயன்படுத்த வேண்டும் என்ற கட்டாயமில்லை. ஒரு சூழலில் எத்தனை பழமொழிகள் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம் என்பதை கோயம்புத்தூர் மாவட்ட பழமொழிகளின் மூலம் அறிய முடிந்தது. அவ்வகையில் ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல தமிழ்ப் பழமொழிகள் கோயம்புத்தூர் மாவட்ட கள ஆய்வின் போது கிடைத்துள்ளன. அப்பழமொழிகள் கீழ்வருமாறு விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

பழமொழிகளுக்கு சூழல் என்பது மிக மிக இன்றியமையாதது. ஒரே சூழலில் பல மனிதர்கள், வேறு வேறு பழமொழிகளைக் கூறுவதைக் காணலாம். ஏன் அவ்வாறு அவர்கள் பழமொழிகளைப் பயன்படுத்தினர் என்று ஆராயும் போது, அப்பழமொழிகள் அனைத்தும் அவர்களுடைய வாழ்க்கைச் சூழலிலிருந்து சொற்தேர்வு பெற்று வந்துள்ள நிலைதான் காரணம் என்று புலனாகிறது. சில மனிதர்கள் அல்லது சில பொருட்களின் குணமானது ஒரு போதும் மாறாது என்ற சூழலில் ஏறக்குறைய ஒன்பது பழமொழிகள் ஒன்பது விதமான தகவலாளிகளிடமிருந்து கிடைத்தன. கன்றுகாளிகள் மேய்த்துக் கொண்டிருக்கின்ற

ஒருவரிடம் தகவல்களைச் சேகரிக்கச் சென்ற போது அவர் அவருடைய வாழ்க்கைச் சூழலை வைத்து,

*தங்கம் போட்டு உரசினாலும் எருமை நிறம் வெளுக்குமா?*

எனும் பழமொழியினைக் கூறினார். அதே போன்று மீன் பிடித்து விற்கும் தொழிலைச் செய்து கொண்டிருக்கின்ற ஒருவரிடம் தகவல்கள் திரட்ட சென்ற போது அவர்,

*கழுவி கழுவி ஊத்தினாலும் கவிச்சி நாத்தம் போகாது*

என்று அவருடைய சூழலை வைத்து பழமொழியினைக் கூறினார். இங்கு நாற்றம் என்ற பொருளைக் குறிக்கக்கூடிய கவிச்சி என்ற சொல்லினை முஸ்லீம் இன மக்கள் அதிகமாக இவர்களுடைய வழக்காறுகளில் பயன்படுத்தி வருகின்றனர். இதை கள ஆய்வின் போது அறிந்து கொள்ள முடிந்தது. இதே சூழலில் ஆசாரித் தொழிலைச் செய்யக்கூடிய தகவலாளி ஒருவர்,

*எத்தனை வெளக்கினாலும் பித்தளை தன் குணம் மாறாது*

என்று அவர்களுடைய சூழலுக்குத் தக்கவாறு பழமொழியினைக் கூறினார். உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் கீழ்த்தர மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*ஜென்மகுணம் செருப்புல அடிச்சாலும் போகாது*

*பள்ளப்புள்ளய பள்ளிக்கூடத்துல படிக்க வெச்சாலும் அனேங்கற புத்தி போகாது*

என்று சாதியினை வைத்து ஒரே சூழலில் இப்பழமொழிகளைக் கூறுகின்றனர். இதே சூழலில் கொல்லர் தொழிலைச் செய்யக்கூடிய ஒருவர்,

*ஊது குழலில் போட்டு நிமித்தினாலும் நாய் வாலு நிமிராது*

என்று அவருடைய சூழலுக்குத் தக்கவாறு கூறுவதை இப்பழமொழியின் மூலம் உணர முடிகிறது. பொதுவாகக் கூறும் போது,

*நாயைக்கழுவி நடுக்கட்டிலில் போட்டாலும் அது குப்பையில*

*தான் படுக்கும்*

என்று எல்லோரும் கூறுகின்றனர்.

மிகவும் உயர்ந்த நிலையில் செல்வச் செழிப்புடன் இருக்கக்கூடிய மக்கள் அச்செல்வத்தினை எப்படி வேண்டுமானாலும் பயன்படுத்தவோ, செலவு செய்யவோ செய்வார்கள். அதைப் பார்த்து செல்வச் செழிப்பின்றி இருக்கக்கூடிய மக்கள் தங்களுடைய வேதனையின் காரணமாக பொறாமைப் படுகின்றனர் என்ற சூழலில் கூறப்படும் பழமொழிகள் பின்வருமாறு,

*இருக்கறவ கட்டிக்கறா இல்லாதவ நீ எதுக்கு குத்திக்கற*

*முடி இருக்கறவ சாச்சும் கெட்டுவா சரிச்சும் கட்டுவா*

*முடி இருக்கறவ ஜட போட்டுக்கலாம்*

*இல்லாதவ நீ சுண்டி போடக்கூட ஆசப்படக்கூடாது*

எனும் பழமொழிகள் மேற்கூறப்பட்ட ஒரே சூழலில் கூறப்படுகின்றன.

எந்தவொரு செயலைச் செய்ய வேண்டுமானாலும் அதற்கான அடிப்படை வசதிகள் இருந்தால் தான் செய்ய முடியும். இதனை,

*மண்டையிருந்தா மசுரு மொளைக்கும்*

*முடியிருந்தா தான் கோத முடியும்*

*முடியுள்ள பொம்பளைக்குத் தானே கொண்ட போடமுடியும்*

என்ற பழமொழிகளை ஒரே சூழலில் கூறுகின்றனர்.

மனிதர்களாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு துன்பம் இருக்கும். அத்துன்பத்தைப் பிறரிடம் கூறி மன ஆறுதல் பெறுவர். இது மனித இயல்பாகும். அதே போன்று தான் சிலர் தன்னுடைய துன்பங்களையும்

கஷ்டங்களையும் போக்கி மன ஆறுதலைப் பெறுவதற்காக பக்கத்து வீடுகளுக்கும் கோயில்களுக்கும் செல்கின்றனர். ஆனால் அவ்விடத்தில் இருப்பவர்கள், இவர்களிடம் தங்களுடைய துன்பங்களைக் கூறி புலம்புகின்றனர் என்பதை,

*அலுத்து செலுத்து அக்கா வீட்டுக்குப் போனா*
*அக்கா தூக்கி மச்சா மடியில போட்டாளா*

*சலுச்சு முலுச்சு சக்கிலியன் வீட்டுக்குப் போனா*
*அவன் இழுத்து புடிச்சு செருப்பு குத்தச் சொன்னானா*

*அலுத்து செலுத்து அம்பட்டன் வீட்டுக்குப் போனா*
*அவன் இழுத்து புடிச்சு செறச்சானா*

*கொடும கொடுமன்னு கோயிலுக்குப் போனா*
*அங்க ரெண்டு கொடும தலவிரிச்சு ஆடிச்சா*

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் சொல்லக்கூடிய பல பழமொழிகளாகும்.

கேட்பவர்கள் முட்டாள்களாக இருந்தால், அனைவரும் அவர்களை விரைவில் ஏமாற்றிவிடுவார்கள் என்பதை,

*உழுகிறவன் ஏமாளியா இருந்தா*
*எருது மச்சானே மச்சானேன்னு சொல்லும்*

*கேக்கறவன் கேணப்பையனா இருந்தா எருது ஏராப்ளான் ஓட்டுது*

*கேப்பையில நெய் வடிதுனா*
*கேப்பார்க்கு மதி எங்க போச்சு*

*கேணைன்னா கேப்பையிலும் நெய் வடியும்*

எனும் பழமொழிகள் ஒரே சூழலில் வழங்கக்கூடிய பழமொழிகளாக அமைந்துள்ளதைக் காணலாம். எதற்கும் பொறுமையின்றி இருக்கக் கூடியவர்களை,

*ஆடு அறுப்பதற்கு முன்னால புடுக்குக்கு முந்தாதே*

*பிள்ளை பெறுமுன் பெயர் வைக்காதே*

*முந்திரிக் கொட்ட மாதிரி முந்தாதே*

*எச்சித் தண்ணில ஈ விழற மாதிரி விழாதே*

போன்ற பழமொழிகளை அனைத்து இன மக்களும் ஒரே சூழலில் கூறுகின்றனர் என்பதை கள ஆய்வின் போது அறிய முடிந்தது.

கஞ்சத்தனத்துடன் மிகவும் இழிவாக இருக்கக்கூடிய சுண்ணாம்பு, எச்சக்கையிலுள்ள சாப்பாடு போன்றவற்றைக் கொடுக்காமல் இருக்கக் கூடியவர்களும் உள்ளனர் என்பதை,

*எச்சக் கையால ஈ ஓட்ட மாட்டான்*

*அறுத்த கைக்கு சுண்ணாம்பு கொடுக்க மாட்டான்*

*ஆடு பொளச்சுதுன்னா மயிர் கூட கொடுக்க மாட்டான்*

எனும் பழமொழிகள் கஞ்சத்தனத்துடன் இருக்கக்கூடியவர்களைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளன.

ஒரு செயலைச் செய்யச் சொல்லிக் கூறினால் அதற்கு அடுத்தப்படியான செயலினைச் செய்து வருகின்ற நிலையினை,

*வெட்டீட்டு வான்னா வேரோட புடுங்கீட்டு வருவான்*

*வெட்டீட்டு வான்னா கட்டீட்டு வாறான்*

*எள்ளுன்னா எண்ணையா நிக்கறான்*

எனும் பழமொழிகள் ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல பழமொழிகளாக அமைந்துள்ளதைக் காணலாம்.

தங்களுடைய குறைகளைக் கவனிக்காமல் பிறரைக் குறை கூறுபவர்கள் இருக்கின்றனர் என்னும் சூழலில்,

*நீ போட்டிருக்கிறதே ஓட்ட டிரவுசரு*
*அவனோட குண்டிய நீ எதுக்கு பாக்கற*

*ஓ முதுகுல ஆயிரத்தெட்டு அழுக்கு வெச்சிட்டு*
*அடுத்தவன் முதுகுல இருக்கற அழுக்கெ அப்புறம் பாரு*

எனும் பழமொழிகள் கூறப்படுகின்றன.

வேளாண்மைத் தொழில் செய்பவர்களின் வாழ்வில் வறுமை தாண்டவம் ஆடுகிறது எனும் சூழலில்,

*உழுதவனுக்கு உழவுக் கோலுங்கூட மிஞ்சாது*

*பறக்க பறக்க பாடுபட்டு படுக்க பாயில்லை*

எனும்ப ழமொழிகள் கூறப்படுகின்றன.

நாம் ஒரு செயலை பிறர் தெரியக் கூடாது என்று மறைத்து வைத்தாலும் அச்செயலானது வர வேண்டிய நேரத்தில் வெளியில் வந்துவிடும் என்பதை,

*கத்தரிக்காய் முற்றினால் கடைவீதிக்கு வந்துதானே ஆகணும்*

*தண்ணில தாமரை முக்கி வெச்சாலும் வெளிய வந்திடும்*

*பழம் பழுத்திட்டா கொப்புல நிக்காது*

என்ற பழமொழியின் மூலம் கூறுகின்றனர். இப்பழமொழிகள் அனைத்தும் இயற்கையை உவமையாக வைத்து மனிதனுக்கு அறிவுரை கூறும் நிலையில் அமைந்துள்ளன.

நாம் புதிதாக ஒரு இடத்திற்குச் சென்றோமெனில், அந்த இடத்தில் இருக்கின்ற மனிதர்களைப் போன்றும், அவர்களது பண்பாடு, கலாச்சாரம் போன்றவற்றைப் போன்றும் தான் நடக்க வேண்டும் என்பதை,

*கோமணம் கெட்டற ஊருல நீ ஏன் வேட்டி கட்டற*

*பாம்பு திங்கற ஊர்ல போனா நடுத்துண்டந்தான் சாப்பிடணும்*

எனும் பழமொழிகள் சுட்டுகின்றன.

அவரவர்களுக்கு என்றிருக்கக்கூடிய வேதனைகளும், துன்பங்களும் அவரவர்களுக்குத்தான் தெரியும் என்ற சூழலில்,

*அழுதாலும் பிள்ளை அவதான் பெறணும்*

*முட்டை போடுற கோழிக்குத்தாண்டி தெரியும் குண்டி எரிச்சல்*

*நோயாளிக்குத் தானே நோயோட வருத்தம் தெரியும்*

*எங்க வயித்து வலி எங்களுக்குத்தான் தெரியும்*

*தலைவலியும் திருகுவலியும் தனக்கு வந்தாதான் தெரியும்*

எனும் பழமொழிகளைக் கூறுகின்றனர்.

ஒருவரை ஏதாவதொரு விஷயத்திற்காக விரைவில் வரும்படிக் கூறினால், அவர்கள் மெதுவாகத் தான் வந்தடைவார்கள் என்பதைக் குறிப்பிட,

*தாகத்துக்குத் தண்ணி கேட்டா மேகத்துக்குப் போறான்*

*ஆத்தரத்துக்கு ஆள்விட்டோனா சாத்தரத்துக்கு வந்து சேருவான்*

*சாவுக்கு வான்னா ஏழுக்கு வாரான்*

போன்ற பழமொழிகளை ஒரே சூழலில் கூறி வருகின்றனர்.

செல்வம் இருக்கின்ற இடத்தில் தான் அனைத்து மக்களும் இருப்பார்கள் என்பதை,

*தேன் இருக்கற இடத்திலதானே ஈ மொய்க்கும்*

*சதை இருக்கற இடத்தில் கத்தி பாயும்*

*சக்கரை இருக்கிற இடத்திலே தானே எறும்பும் இருக்கும்*

*வெல்லப் பானையை எறும்பு மொய்த்தாற் போல*

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் சொல்லக்கூடிய பல பழமொழிகளாக அமைந்துள்ளன. இங்கு தேன், சதை, சக்கரை, வெல்லம் போன்றவை செல்வந்தர்களுக்கு உவமையாகக் கூறியுள்ள நிலையினைக் காணலாம்.

### 3.1.11 சில வேறுபாடுடன் இருக்கக்கூடிய தமிழ்ப் பழமொழிகள்

களஆய்வின் போது தமிழ்ப் பழமொழிகள் மொழிபெயர்ப்பைப் போன்று இருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகள் கிடைத்தன. இப்பழமொழிகளில் சில சொற்கள் மட்டும் மாற்றமடைந்து இருக்கின்ற தன்மையினைக் காணமுடிந்தது. இந்த அடிப்படையிலான பழமொழிகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. இதற்கான காரணம் பாலக்காட்டில் அதிகமாக தமிழ் மக்கள் உள்ளனர். இவர்கள் மலையாள மக்களுடன் தொடர்புடனும் இருக்கின்றனர். இவ்வாறு தமிழ் மலையாள மக்களினுடைய கூட்டுறவினால் இரண்டு கலாச்சாரத்திலும் தாக்கம் ஏற்படுவதைப் பழமொழிகளில் காணமுடிகின்றது. தமிழின் மொழிபெயர்ப்பினைப் போன்று இருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகள் வேறு எந்த மாவட்டத்திலும் வழங்கப்படுவதில்லை என்பது களஆய்வின் போது கிடைத்த செய்தியாகும். தமிழிலிருந்து மொழிபெயர்ப்பாக மலையாளத்திற்கு வந்திருக்கலாம் என்று கூறக்கூடிய சில பலமொழிகள் கீழ்வருமாறு கூறப்படவுள்ளன.

*மேயற மாட்ட நக்கற மாடு கேடு வருத்தற மாதிரி*

*மேயுன்ன மாட்டினெ நக்குன்ன மாடு கேடு வருத்தும்*

இப்பழமொழியில் மேயுன்ன என்பது தமிழ்ச் சொல்லாகும். மேய்கின்ற எனும் சொல்லானது மேயுன்ன என்று மருவி வந்துள்ள நிலையினை காணலாம். அதே போன்று,

*அஸ்திவாரம் நல்லா இருந்தா கட்டிடம் பலமாகயிருக்கும்*

*அடித்தர நன்னெங்கில் கெட்டிடம் பலமாயிரிக்கும்*

இப்பழமொழியில் கட்டிடம் என்பது கெட்டிடம் என்றும், பலமாகயிருக்கும் என்பது பலமாயிரிக்கும் என்பதன் அடிப்படையில் வந்துள்ளமையைக் காணலாம்.

*ஆட்டுக்கல்லிடம் கேட்டிட்டா மொளகு அரைப்பது*

*ஆட்டுக்கல்லின்டிடடுத்து சோதிச்சிட்டு வேணோ முளகரைய்க்கான்*

இப்பழமொழியில் வேணோ என்பது வேண்டுமா? என்று கூறக்கூடிய தமிழ்ச் சொல்லாகும். அதே போன்று மிளகு அரைத்தல் என்று தமிழ்ச் சொல்லானது மறைந்து முளகரைத்தல் என மாற்றமடைந்துள்ள நிலையினைக் காணலாம்.

*முடியுள்ள மகராசி அள்ளியும் முடிப்பா அவுத்தும் விடுவா*

*முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கெட்டும் சரிச்சிட்டும் கெட்டும்*

எனும் பழமொழிகளில் சாய்த்திட்டு, சரிச்சிட்டு என்பது சாய்த்து, சரித்து என்று பயன்படுத்தக்கூடிய தமிழ்ச் சொல்லாகும். இதனை மலையாள மக்கள் தமிழ்ச் சொல்லினை அவ்வாறே பயன்படுத்தியுள்ளனர் என்பதை பழமொழியால் அறிய முடிகிறது.

*நின்ன தண்ணிய வந்த தண்ணீ அடிச்சிட்டு போயிடுச்சாமா*

*வன்ன வெள்ளம் நின்ன வெள்ளத்தினெ கொண்டு போயி*

என்ற பழமொழியில் வெள்ளம் என்பது தூய தமிழ்ச் சொல்லாகும். இதனை நாம் பயன்படுத்தாமல் இருக்கிறோம். ஆனால் மலையாள மக்கள் அன்றாடம் பேச்சு வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் பயன்படுத்துகின்றனர்.

### 3.1.12 தமிழ் பழமொழிகளின் பாடவேறுபாடு

ஒருவர் பேசும் பொழுது மொழியில் பலவிதமான மாற்றங்கள் ஏற்படுவதைக் காணலாம். இதற்கு பேசும் இடம், சாதி, கல்வி, தொழில், வயது போன்ற பல காரணங்கள் இருக்கும். இது கிளைமொழியாக்கத்தின் ஒரு பாகமாக அமையலாம் என்கிறது சமூக மொழியியல். இங்கு தமிழ்ப் பழமொழிகளில் இருக்கக்கூடிய சொற்கள் அல்லது எழுத்துக்கள் மாற்றமடைந்து, அதனுடைய பொருளில் மாற்றங்கள் ஏற்படாமல் வருவதைக் கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளில் காணமுடிந்தது. அவ்வாறு அமைந்திருக்கக்கூடிய பழமொழிகள் இங்கு பாடவேறுபாடு என்ற அமைப்பிற்குள் அடக்கப்பட்டுள்ளன. இவ்வமைப்புடன் இருக்கக்கூடிய தமிழ்ப் பழமொழிகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. அவை பின்வருமாறு கூறப்படவுள்ளது.

*கொரங்கு தான் கெட்டதுமில்லாம வனத்தையும் அழிச்சுதாமா*

*குரங்கு தான் கெட்டதுமில்லாம வனத்தையும் அழிச்சுதாமா*

எனும் பழமொழிகளில் கொரங்கு, குரங்கு என்பதிலுள்ள முதல் எழுத்தானது பாடவேறுபாடுடன் அமைந்திருப்பதைக் காணலாம். இங்கு முதல் பழமொழியை படிப்பறிவின்றி இருக்கக்கூடிய மக்களும், இரண்டாவது பழமொழியை கல்வியறிவு பெற்ற ஒருவரும் கூறக்கூடிய நிலையினைக் காணலாம். அதே போன்று,

*கழந்த பாலு கலயமேறவா போகுது*

*கமுந்த பாலு கலயமேறவா போகுது*

எனும் பழமொழிகளானது கால்நடை வளர்க்கக்கூடியவர்கள் தொழிலின் அடிப்படையில் வழங்கக்கூடிய பழமொழிகளாகும். கவிழ்ந்த என்ற சொல்லானது கழந்த கமுந்த என்ற சொற்களாக மாறியமைந்திருப்பதைக் காணலாம். மட்டுமின்றி இவ்விரு பழமொழிகளும் கல்வியறிவு இன்றி இருக்கக்கூடிய மக்கள் வழங்கக்கூடிய பழமொழிகளாக பாடவேறுபாடுடன் அமைந்திருப்பதைக் காணலாம்.

*எறும்பு நுளைய இடம் கொடுத்தா யானையைக் கொண்டாந்து*
*கட்டுன கதையாய் போச்சு*

*எறும்பு நுளைய எடங் கொடுத்தா யானையைக் கொண்டாந்து*
*கட்டுன கதையாய் போச்சு*

இப்பழமொழி, சாதாரணமாக பேச்சு வழக்கில் வழங்கக்கூடிய அமைப்பில் அமைந்திருக்கக்கூடிய பழமொழிகளாகும். இப்பழமொழியில் இடம் என்பது எடம் என மருவி பாடவேறுபாடு எனும் அமைப்பிற்குள் அமைந்துள்ள நிலையினைக் காணலாம்.

*ஆடு அறுப்பதுக்கு முன்னால புடுக்குக்கு அலையாதே*

*ஆடு அறுப்பதுக்கு முன்னால புடுக்குக்கு முந்தாதே*

இப்பழமொழிகள், பறையர் இன மக்கள் வழங்கக்கூடிய பழமொழிகளாகும். இதில் அலையாதே, முந்தாதே எனும் வார்த்தைகளில் பாடவேறுபாடு அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. அதே போன்று சாதி அடிப்படையில் செட்டியார் இன மக்களை,

*இலாபமில்லாம செட்டி ஆத்தோட போவானா*

*ஆதாயமில்லாம செட்டி ஆத்தோட போவானா*

எனும் பழமொழியை பாடவேறுபாடுடன் கூறுகின்றனர்.

ஒரு பழமொழியின் அடி முழுவதும் பாடவேறுபாடு அமைந்திருப்பதையும் கள ஆய்வின் போது திரட்டப்பட்ட பழமொழிகளின் மூலம் காண முடிந்தது. இதை,

*நாசுவன் குப்பகிளச்சா பூரா மசுரு மசுரா* வரும்

*அம்பட்டன் குப்பையைக் கௌறனா மயிரு மயிராட்டம்* வரும்

எனும் பழமொழிகளால் உணரலாம்.

*மத்து போட்ட தயிறு மாதிரி புத்தி குழம்பி போச்சா*

*மத்து போட்ட தயிறு மாதிரி புத்தி கொழம்பி போச்சா*

எனும் பழமொழியில் குழம்பி, கொழம்பி எனும் வார்த்தைகளை அனைத்து இன மக்களும் சாதாரண பேச்சு வழக்கில் வழங்கக்கூடிய சொற்களாகும். இப்பழமொழி தொழில், சாதி, கல்வி போன்றவை இப்பழமொழி தோன்றுவதற்கு காரணமாக அமையவில்லை.

மேற்கூறப்பட்ட தமிழ்ப் பழமொழிகளில் பாடவேறுபாடு அமைந்துள்ள பகுதிகளை முதல், இடை, கடை, ஒரு பழமொழி முழுவதும் எழுத்துக்கள், சொற்கள் போன்றவை மாற்றமடைந்து பாடவேறுபாட்டுடன் அமைந்துள்ள நிலையினை அடிக்கோடிட்டு காட்டப்பட்டுள்ளன.

## 3.2 பாலக்காடு மாவட்ட மலையாளப் பழமொழிகளில் காணப்படும் சமூகக் கூறுகள்

### 3.2.1 பாலக்காடு மாவட்டத்தின் அமைப்பு

கேரளம் இயற்கை வளம் நிறைந்த ஒரு மாநிலமாகும். இங்கு வயல் வெளிகளும், மலைகளும், காடுகளும், அருவிகளும் நிறைந்து காணப்படுகின்றன. இவ்வாறு இயற்கை எழில் நிறைந்த கேரள மாவட்டங்களில் ஒன்று பாலக்காடு மாவட்டமாகும். இது கேரளாவிலேயே மிகப் பெரிய மாவட்டமாகும். இந்தியாவின்

தென்மேற்குக் கடலோரத்தில் அமைந்துள்ள கேரள மாநிலத்தின் மத்தியப் பகுதியில் பாலக்காடு மாவட்டம் அமைந்துள்ளது. வடக்கு அட்சரேகை $10^{0}21$ – $11^{0}14$க்கும் கிழக்கு தீர்க்கரேகை $76^{0}02$ - $76^{0}54$க்கும் இடையில் இம்மாவட்டம் நிலைபெற்றுள்ளது. தமிழகத்தின் மேற்கு எல்லையில் அமைந்துள்ள கோயம்புத்தூர் மாவட்டத்தைக் கிழக்கு எல்லையாகக் கொண்டு அமைந்துள்ளது இம்மாவட்டம். கோயம்புத்தூரிலிருந்து 25கி.மீ தொலைவில் பாலக்காடு மாவட்டத்தின் எல்லை ஆரம்பமாகிறது. இம்மாவட்டத்தின் தலைமைச் செயலகம் பாலக்காடு நகரின் மத்தியில் அமைந்துள்ளது. கேரளத்தின் மத்தியப் பகுதியில் அமைந்துள்ள இம்மாவட்டத்தின் வடக்குப் பகுதியில் மலப்புரம் மாவட்டமும், மேற்குத் தெற்குப் பகுதிகளில் திருச்சூர் மாவட்டமும், கிழக்குப் பகுதியில் கோயம்புத்தூர் மாவட்டமும் எல்லைகளாக அமைந்துள்ளன.

இப்பகுதியில் பாலக்காடு மாவட்டப் பகுதிகளிலிருந்து திரட்டப்பட்ட மலையாளப் பழமொழிகளைத் தொகுத்து அவற்றைக் கீழ்க்காணும் தலைப்புக்களில் வகை செய்து அதில் காணும் சமூகம் சார்ந்த செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

1. சமூக உறவுமுறைகள் தொடர்பான பழமொழிகள்
2. புழங்கு பொருள்சார் பண்பாடு
3. தொழில்கள் தொடர்பான பழமொழிகள்
4. நம்பிக்கை தொடர்பான பழமொழிகள்
5. உயிரினங்கள் தொடர்பான பழமொழிகள்
6. பிற பழமொழிகள்

## 3.2.2 சமூக உறவுமுறைத் தொடர்பான பழமொழிகள்

### 3.2.2.1 குடும்ப உறவுகள்

குடும்பம் 'கூடு' என்ற அடிச்சொல்லின் பெயர் ஆகும். கூடு அல்லது முட்டை, தொகுதி, கொத்து எனப் பொருள் தருகிறது ((Encyclopaedia of the

Science, P.60). "திருமண உறவு முறையிலும் இரத்த உறவு முறையிலும் கூடி வாழ்தல் அல்லது இணைந்து வாழ்தல் குடும்பம் எனப்படும்"[20].

"நடைமுறை வாழ்க்கையில் ஒரு வீட்டில் வசிக்கும் இரத்த உறவுடைய உறவினர்கள் அனைவரையும் சுட்ட, குடும்பம் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. ஒரு வாழ்விடத்தில் ஒருவகைச் சார்ந்து வாழும் அகச்சுற்றம் என்று இச்சொல்லுக்குப் பொருள் விளக்கம் தருவது பொருத்தமாகும்"[21] என்ற பல கருத்துகள் குடும்பம் என்ற அமைப்பை விளக்குகின்றன.

ஆளுமையை அடிப்படையாகக் கொண்டு குடும்பங்களைத் தாய்வழிக் குடும்பம், தந்தை வழிக் குடும்பம் என்று இரண்டாகப் பிரிப்பர். தாய்வழிக் குடும்பமானது மக்கள் குழுக்களாக வாழ்ந்த காலகட்டத்தில் இருந்ததாகும். இன்று தாய்வழிக் குடும்பங்கள் அழிந்து தந்தை வழிக் குடும்பங்களாக மாறியுள்ளன.

### 3.2.2.2 குடும்ப வகைகள்

குடும்பங்கள் "மையக் குடும்பம், அணிமை உறவுக் குடும்பம், இணைக்குடும்பம் என்று பிரிக்கப்படுகின்றன.

மையக்குடும்பம் (Nuclear family) என்பது தந்தை, தாய், குழந்தைகள் மட்டும் சேர்ந்து வாழ்வதாகும்.

அண்மை உறவுக்குடும்பம் (Consabtive lead family) என்பது பெற்றோர், குழந்தைகள், பேரக்குழந்தைகள் அடங்கியதாகும்.

இணைக்குடும்பம் (Conjugal family) என்பது கணவன் மனைவி அவர்தம் குழந்தைகளுடன் இறுக்கமான நெருக்கமில்லாமல் இடையீடுபட்டு இயங்கும் உறவினர்களையும் உள்ளடக்கியதாகும்"[22] மேலும், உறுப்பினர்களின் அடிப்படையில் குடும்பம் தனிக்குடும்பம், கூட்டுக் குடும்பம் என்றும் பிரிக்கப்படுகிறது.

### 3.2.2.2.1 கூட்டுக்குடும்பம்

கூட்டுக்குடும்பம் என்பது பல தலைமுறைகளைச் சேர்ந்த முப்பது நாற்பது பேர் ஒரே வீட்டில் கூட்டாக வாழ்தல் உண்டு. அதுவே கூட்டுக்குடும்பம் என அழைக்கப்படுகிறது. "ஒரே மரபு வழிச்சார்ந்த இரத்த உறவுடைய இருவரோ அல்லது அதற்கு மேற்பட்டவர்களோ ஒரே வீட்டில் ஒரே தலைமையின் கீழ் தங்கள் மனைவியர்களுடனும் குழந்தைகளுடனும் கூடி வாழ்தலையே கூட்டுக்குடும்பம்"[23] என்பர். இது போன்ற பல வகையான குடும்பங்களையும் உறவு நிலைகளையும் பாலக்காடு பகுதியில் காணமுடிகிறது.

பாலக்காடு மாவட்ட குடும்ப உறவினைப் பற்றிக் கூறக்கூடிய மலையாளப் பழமொழிகளில் தந்தை என்பவர் என்னென்ன கடமைகள் செய்ய வேண்டும் என்ற பழமொழிகள் இடம்பெறவில்லை. அடுத்த நிலையில் தாய் என்பவள்,

*பத்தம்மா சமஞ்ஞாலும் பெத்தம்மயாவில்லா*
(பத்து அம்மா இருந்தாலும் பெத்தம்மாவாகாது)

என்ற பழமொழிக்கு ஏற்ப பெற்றதாய் போற்றப்படுகிறாள்.

*அவன்டெ மக்களெ ஊட்டி வளர்த்தியா தன்டெ குஞ்சு தானே வளரும்*
(அவனுடைய குழந்தைகளை ஊட்டி வளர்த்தினால் தன்னுடைய குழந்தைகள் தானாக வளர்ந்து விடும்)

இது ஒரு கூட்டுக்குடும்ப உறவு நிலையைக் காட்டுவதாக அமையும் பழமொழியாகும்.

பெற்றோர், பிள்ளைகள் மீது வைத்திருக்கின்ற அன்பினை வெளிப்படையாகக் காட்டக்கூடாது. அவ்வாறு காட்டினால் அவர்கள் நெறிகெட்டுப் போய்விடுவார்கள் என்ற கருத்து உள்ளது. இதை விளக்கும் விதமாக,

*மக்களோடுள்ள ஸ்னேகம் மனசிலிரிக்கணம்*

(பிள்ளைகளின் மீதுள்ள அன்பு மனதில் இருக்க வேண்டும்)

எனும் பழமொழி அமைந்துள்ளது.

*அம்ம வேலி சாடியால் மகள் மதிலு சாடும்*

(அம்மா வேலியினைச் சாடினால் பிள்ளை மதிலினைத் தாண்டி விடும்)

எனும் பழமொழி, தாய் என்பவள் ஒழுக்கத்தோடு இருக்க வேண்டும் என்றொரு எச்சரிக்கை கூறுதல் இதன் மூலம் வெளிப்படுகிறது.

குடும்ப உறவில் அக்கா, தங்கை, அண்ணன், தம்பி போன்றவர்களைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைக்கவில்லை. குடும்ப உறவில் மாமியார் என்பவருடைய உறவினைப் பற்றிக் குறிப்பிடுகையில், மருமகள் செய்யக் கூடிய செயல்களில் குற்றங்களை கண்டு பிடிக்கக் கூடியவராக இருக்கிறார். இதனை,

*அம்மாயம்மா ஓடைக்கண சட்டிக்கு வெலயில்லா*
*மருமகள் ஓடைக்கண சட்டிக்கு வெலையுண்டு*
(அத்தை உடைக்கும் பானைக்கு விலை இல்லை
மருமகள் உடைக்கும் பானைக்கு விலை உண்டு)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம். மாமியார் என்பவர் மருமகளின் குற்றங்களை கண்டு பிடிப்பவளாக இருந்தாலும் கூட மணமான தொடக்கத்தில் மருமகளின் மீது அன்பாகவும் இருந்திருக்கின்றார் என்பதை,

*புதுக்கத்தில் அம்மாயி வருத்திட்டும் பொடிச்சிட்டும்*
*பழக்கத்தில் அம்மாயி சுட்டிட்டும் கரிச்சிட்டும்*
(புதுமையில் மாமியார் வருக்கவும் பொடிக்கவும்
பழமையில் மாமியார் சுடச் செய்தும் கரிய வைத்தும்)

எனும் பழமொழி விளக்குகிறது.

அதே போன்று மருமகள் என்பவளைப் பற்றிக் கூறுகையில்,

*கெடன்னு நெரங்ஙன அம்மாயம்மய்க்கு*
*இருன்னு நெரங்ஙன மருமகளு*
(படுத்து நகர்ந்து கொண்டிருக்கின்ற மாமியாருக்கு
உட்கார்ந்து நகர்ந்து கொண்டிருக்கின்ற மருமகள்)

என்று 'அரசன் எவ்வழியோ மக்கள் அவ்வழி' என்ற நிலையில் மாமியார் மருமகளின் நிலை அமைந்துள்ளது என்பதை பழமொழிகள் சுட்டிச் செல்கின்றன.

மேலும், வீட்டிற்கு வரக்கூடிய மருமகன் மாமனாரினை,

*உண்ணான் கொடுத்தால் அம்மாவன் இல்லெங்கில் கும்மாவன்*
(சாப்பிடக் கொடுத்தால் மாமன் இல்லையெனில் கூமன்)

என்று கூறி விடக் கூடாது என்பதை மனதிற் கருதி மருமகனை நன்கு விருந்து உபசரிக்கக் கூடிய நிலையினையும் காண முடிகின்றது. இதனை,

*சீறக்கறி சிங்காரக்கறி இங்கிடு கொண்டா*
*கோழிக்கறி கொள்ளிக்கறி மருமகனு கொண்டு கொடு*
(கீரைக்குழம்பு நல்ல குழம்பு இந்தப் பக்கம் கொண்டு வா
கோழிக்குழம்பு கிழங்குக் குழம்பு மருமகனுக்குக் கொண்டு கொடு)

எனும் பழமொழியும் மாமனார் மருமகனை விருந்து உபசரிப்பதாக அமைந்துள்ளது.

குடும்ப நபர்கள் ஒற்றுமையுடன் இருக்கக் கூடியவர்களாக இருக்க வேண்டும் என்பதை,

*ஒருமயுண்டெங்கில் உலக்க மேலும் கிடக்காம்*
*ஒத்து பிடிச்சால் மலயும் போரும்*

(ஒற்றுமையாக இருந்தால் உலக்கையின் மீதும் படுக்கலாம்
ஒன்றாகப் பிடித்தால் மலையும் பெயர்ந்து வரும்)

என்று பழமொழி தெளிவுறுத்துவதைக் காணலாம். ஒத்த குணமுடைய கணவன் மனைவி பற்றிக் குறிப்பிடுகையில்,

*சக்கிக் கொத்தொரு சங்கரன்*
*சக்கைக் கொத்தொரு பிச்சாத்தி*
(சக்கி என்ற பெண்ணிற்கு ஏற்ற சங்கரன் என்ற ஆண்
பலாப்பழத்திற்கு ஏற்ற கத்தி)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம்.

*சட்டியும் கலவும் ஆகும்போ*
*தட்டியும் முட்டியும் இரிக்கும்*
(சட்டியும் பானையும் இருக்கும் பொழுது
தட்டவும் முட்டவும் செய்யும்)

என்று கணவன் மனைவிக்குள் மகிழ்ச்சி மட்டுமின்றி சில நேரங்களில் சிறு சிறு பிரச்சினைகளும் ஏற்படும் என்று கூறுவதாக இப்பழமொழி அமைந்துள்ளது. அவ்வாறு பிரச்சினைகள் ஏற்பட்டிருக்கும் பொழுது, கணவனுக்குப் பிடிக்கக்கூடிய நிலையில் மனைவி நடந்து கொண்டாலும் கூட 'இஷ்டமில்லாத்த அச்சி (மனைவி) தொட்டதெல்லம் குற்றம்' என்று குற்றங்களைக் கண்டுபிடிக்கக் கூடியவனாகவும் கணவன் காட்சியளிப்பான். இங்கு 'அச்சி' என்பது 'மனைவி' என்ற பொருளைக் குறிக்கக் கூடிய சொல்லாகும். இச்சொல் நாயர் குடும்பத்திலுள்ளவர்கள் மட்டும் மனைவியைக் குறிக்க பயன்படுத்தி வருகின்றனர். இந்த அச்சி என்பவர்கள் புதிதாக ஒரு வீட்டிற்கு செல்லும் பொழுது நன்றாக வேலை செய்வர். அதுவே சில நாட்களுக்குப் பின்னர் பின்தங்கிய நிலையில் வேலைகள் செய்வதைக் காணலாம். இதனை,

*புத்தனச்சி படிப்புரம் தூத்த போலே*

(புதிய மனைவி வாசல் கூட்டியது (பெருக்கினது) போல)

எனும் பழமொழி தெளிவுறுத்துகிறது.

ஆண்கள் ஒற்றுமையாக இருப்பார்கள் என்றும் பெண்கள் ஒற்றுமையாக இருக்கமாட்டார்கள் என்றும் ஒரு கருத்து தந்தை வழிச் சமூகத்தில் நிலவுகிறது. இதை,

*நாலு தல சேரும் நாலு முல சேரில்லா*

(நான்கு தலைகள் சேர்ந்துவிடும் நான்கு முலைகள் சேராது)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம்.

*பெண்ணுங்ஙள்க்கு முலையழகும் முடியழகும் வேணம்*

(பெண்களுக்கு முலை அழகும் முடி அழகும் வேண்டும்)

எனும் பழமொழி, பெண் என்பவள் மார்பு அழகினையும் கூந்தல் அழகினையும் பெற்றிருக்கக் கூடியவளாக இருக்க வேண்டும் என்றும், பெண்களினுடைய உருவத்தினை எடுத்தியம்புவதாகவும் இதன் மூலம் அறியமுடிகிறது. இவ்வாறு இருக்கக் கூடிய பெண்ணினை, பதினாறு வயது ஆனவுடன் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்பதை,

*பதினாறாயால் பறையனும் பிடிச்சு கொடுக்கணம்*

(பதினாறு வயது ஆனவுடன் பறையனுக்காவது

திருமணம் செய்து கொடுக்க வேண்டும்)

எனும் பழமொழியால் உணரலாம். மேலும்,

*செம்மீன் சாடியால் முட்டோளம்*

*பின்னயும் சாடியால் சட்டியோளம்*

(செம்மீன் குதித்தால் முட்டுங்கால் வரை
பிறகும் குதித்தால் சட்டியினுள் வரை)

எனும் பழமொழி பெண் என்பவள் உயர்ந்த நிலைக்குச் சென்றாலும், அவளை உயரவிடாமல், அதற்கான தண்டனை அளித்து வருகின்ற நிலையினை பாலக்காடு மாவட்ட பழமொழியின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

கேரளாவில் பலகணவர் மணம் இருந்ததற்கான சான்றுகள் உள்ளன. ஒரு குடும்பத்திலுள்ள அண்ணன் திருமணம் செய்யக்கூடிய பெண்ணை, அவனது தம்பிமார்கள் மனைவியாக்கிக் கொண்டு வாழக்கூடிய வழக்கம் கேரளாவில் மிகப் பரவலாக இருந்தது என்பதை சமூக வரலாற்று செய்திகள் மூலம் அறியலாம். இதன் எச்சமாக சில வழக்கங்களும், பழமொழிகளும் இன்றும் சமூகத்தில் காணக்கிடக்கின்றன.

*வலியச்சன் வரும்போல் கொச்சச்சன் படிக்கு புறத்தாய போலே*
(பெரியப்பா வரும் போது சித்தப்பா வாசப்படிக்கு வெளியில் சென்றது போல)

எனும் பழமொழி பாலக்காடு மாவட்டத்தில் இருந்து திரட்டப்பட்டதாகும். இங்கு அண்ணன் வரும்போது தம்பி வீட்டுக்கு வெளியே போய்விட வேண்டும். அதாவது சட்டப்படி உரிமையான கணவன் மூத்தவன் தான். எனவே தம்பிகளுக்கு உரிமை குறைவு தான் என்பது புலனாகிறது.

### 3.2.2.3 சாதி

பாலக்காடு மாவட்டத்தில், இந்து மதத்திலுள்ள நாயர், பட்டர், செறுமர், பறையர் போன்ற சாதியினரைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் மட்டும் கள ஆய்வின் போது கிடைத்துள்ளன. இப்பழமொழிகள் இந்து மதத்திலுள்ள ஈழவர் பிரிவினைச் சார்ந்த மக்களிடமிருந்து சேகரிக்கப்பட்டன.

பிராமணா் பிரிவினைச் சாா்ந்த மக்கள் பூசை முறைகள் செய்யக் கூடியவா்களாக இருப்பாா்கள். இவா்கள் படைத் தொழிலுக்கு லாயக்கற்றவா்கள் என்பதை,

*பட்டர் கெந்தா படயிலு காரியம்*

(பட்டருக்கு என்ன படையில் காரியம்)

எனும் பழமொழியின் மூலம் கேலி செய்வதைக் காணலாம்.

அறிவு சாா்ந்த செயல்களில் செறுமா்கள் பயனற்றவா்கள் என்று பிற உயா் சாதியினா் கூறி செறுமா்களை மட்டம் தட்டுகின்றனா். இதனை,

*செறுமர் புத்தி பொடனீலு*

(செறுமரின் புத்தியானது பொடனீல)

எனும் பழமொழியின் மூலம் உணா்ந்து கொள்ள முடிகின்றது.

*பறையன்டெ முற்றத்து பசு வாழுகயில்லா*

(பறையனுடைய வீட்டு வாசலில் பசு உயிருடன் இருக்காது)

எனும் பழமொழியானது, பறையன் பிரிவினைச் சாா்ந்த மக்கள் பசுவினை உண்ணக் கூடியவா்களாக இருப்பதால் பசுவைக் கொன்று விடுவா் என்கிறது. இவா்கள் பசுந்தோலில் இசைக்கருவிகள் செப்பவா்கள் என்பதையும், பழங்காலத்தில், இறந்த மாடுகளைத் உண்ணக்கூடியவா்கள் என்பதையும் கள ஆய்வில் அறிய முடிந்தது.

*வெருதே இருந்ந நாயர்க்கு விளிகேட்ட கச்சோடம்*

(சும்மா இருந்த நாயருக்கு யாரோ அழைத்தது போன்று கேட்ட வியாபாரம்)

எனும் பழமொழி மூலம் இம்மாவட்டத்தில் நாயா் சாதியினரும் உள்ளனா் என்பதை அறியமுடிகிறது.

### 3.2.3 புழங்கு பொருள் சார் பண்பாடு

மக்கள் அனுதினம் பயன்படுத்தக் கூடிய பொருட்கள் புழங்கு பொருட்கள் எனலாம். பாலக்காடு மாவட்ட கள ஆய்வின் போது ஆண்கள், பெண்கள் பயன்படுத்தக் கூடிய பொருட்களை வைத்து கூறக்கூடிய பழமொழிகள் கிடைத்துள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு காணலாம்.

#### 3.2.3.1 புழங்கு பொருள் பண்பாட்டில் பெண் பற்றிய பதிவுகள்

பெண் என்பவள் வீட்டிலும், அயலகப் பகுதிகளிலும் குடும்பம் சார்ந்த வேலைகளை செய்யக் கூடியவளாகவும் இருப்பவள். ஆண்கள் புறவெளி சார்ந்த பணிகளில் ஈடுபடும் வகையில் இருக்கக்கூடிய வேலைகளைச் செய்து வருபவர்களாகவும் இருக்கின்றனர் என்பதை முன்னர் கண்டோம். அதே போன்று பாலக்காடு மாவட்டப் பெண்களும் குடும்பம் சார்ந்த பணிகளில் ஈடுபடுகின்றனர் என்பதை மலையாளப் பழமொழிகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது. சான்றாக,

**நீர் இரைத்தல்**

*கோரிய கிணற்றிலெ வெள்ளமுறு*

(இரைக்குந்தோறும் ஊறும் கிணறு)

**உலக்கை குத்துதல்**

*குத்துன ஓலக்கயிட்டிட்டு குதிரக்களி காணான் போய போல*

(குத்துகின்ற உலக்கையை போட்டு விட்டு குதிரை விளையாட்டைப் பார்க்கப் போனது போல)

**வாசல் கூட்டுதல்**

*புத்தன் அச்சி படிப்புரம் தூத்த போலே*

(புதிய மனைவி வாசல் கூட்டியது போல்)

**குழந்தை வளர்த்தல்**

*அவன்டெ குஞ்ஞினெ ஊட்டி வளர்த்தியா தன்டெ குஞ்ஞு தானே வளரும்*

(அவனுடைய குழந்தையை ஊட்டி வளர்த்தினால் தன்னுடைய குழந்தைகள் தானாக வளருவார்கள்)

**அரைத்தல்**

*அரச்சது தன்னெ அரச்சால் முகத்து தெரிக்கும்*

(அரைத்ததை மீண்டும் அரைத்தால் முகத்தில் தெரித்துவிடும்)

**குளிக்க வைத்தல்**

*குளிப்பிச்சு குளிப்பிச்சு குஞ்ஞில்லாதாயி*

(குளிக்க வைத்து குளிக்க வைத்து குழந்தை இல்லாமல் ஆகிவிட்டது)

**கூடை பின்னுதல்**

*வல்லம் கெட்டுன அப்பனேக்காளும் வட்டி கெட்டுன அம்மயானு நல்லது*

(பெரிய கூடை பின்னுகின்ற அப்பாவை விட சிறிய கூடை பின்னுகின்ற அம்மா மேல்)

போன்ற இச்சொற்களை ஆராய்ந்து பார்க்கின்ற பொழுது பாலக்காடு மாவட்ட பெண்கள் வீட்டிற்கு உட்புறமாக இருக்கக் கூடிய வேலைளை மட்டும் அனுதினமும் செய்து வந்துள்ளனர் என்பதை கணித்தறிய முடிகிறது.

### 3.2.3.2 புழங்கு பொருள் பண்பாட்டில் ஆண் பற்றிய பழமொழிகள்

பாலக்காடு மாவட்டத்து ஆண்கள் வீட்டிற்கு வெளியே சென்று தங்களுடைய வேலைகளைச் செய்து வந்துள்ளனர் என்பதை,

**மத்தளம்**

*உரலின்டெ சங்கடம் மத்தளத்தோடு காணிக்குன்னது போலே*

(உரலினுடைய துன்பம் மத்தளத்திடம் காட்டுவது போல)

**ஏணி ஏறுதல்**

*கேட்டி விட்டிட்டு ஏணி வலிக்குக*

(ஏற்றி விட்டுவிட்டு ஏணியை இழுப்பது)

**கூடை பின்னுதல்**

*வல்லம் கெட்டுன அப்பனேக்காலும்*

*வட்டி கெட்டுன அம்மயானு நல்லது*

(பெரிய கூடை பின்னுகின்ற அப்பாவை விட சிறிய கூடை

பின்னுகின்ற அம்மா மேல்)

**படைத் தொழில்**

*பட்டர்க்கெந்தா படயிலு காரியம்*

(பட்டர்க்கு என்ன படையில் காரியம்)

**மண்ணைப் புரட்டுதல்**

*அவிடெ மண்ணு திரிக்குன்னது ஆரானு நோக்கண்டா எந்து பரஞ்ஞுபோலே*

(அங்கு மண்ணைப் புரட்டுவது யார் என்று பார்க்க வேண்டாம் என்று கூறியது போல)

எனும் இப்பழமொழிகளின் மூலம் உணரலாம்.

### 3.2.3.3 உணவுப் பொருட்கள்

குடும்பம் என்னும் களத்தில் பெண்களுடைய பணிகள் ஏராளமானதாகும். அதில் ஒன்று உணவு தயாரித்தல். இவ் உணவு தயாரித்தல் பணி என்பது பெண்களின் மேல் சுமத்தப்பட்டது. மனித இனம் சிறு சிறு குழுக்களாக வாழ்ந்த காலகட்டத்தில் பெண்தான் மனித குழுக்களைத் தலைமை தாங்கி வழிநடத்தினாள் என்றும் அக்குழுக்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களை வேட்டையாடிக் கொணர்ந்து பங்கிட்டுக் கொடுத்தாள் என்றும் கூறுகின்றனர். அந்த வகையில் இன்றும் குடும்பங்களில் பெண்கள் உணவு சமைப்பதில் ஈடுபடுவதும், அதனைப் பங்கிட்டு இல்லங்களைப் பராமரிப்பதில் ஈடுபடுவதும் இனக்குழுச் சமூகத்தின் எச்சங்களாக வெளிப்படுகின்றன எனக் கொள்ளலாம். இப்பகுதியில் பாலக்காடு மாவட்ட மக்கள் எந்த வகையிலான உணவுகளையெல்லாம் உட்கொண்டு தங்களது வாழ்க்கையில் வாழ்ந்துள்ளனர் என்பதை இவர்கள் வழங்கி வரும் பழமொழிகளின் பதிவுகள் மூலம் அறிய முடியும்.

#### 3.2.3.3.1 கஞ்சி

இம்மக்கள் இரவில் அரிசியினால் சமைத்த உணவினை உண்ட பின்னர் மீதமுள்ள உணவினில் நீர் ஊற்றி வைப்பர். மறுநாள் காலையில் உண்பர். இதை 'பழங்கஞ்சி' அதாவது 'பழைய சோறு' எனும் பெயரால் வழங்கி வருகின்றனர் என்பதை,

> *பழங்கஞ்சி குடிச்சாலும் பத்ராஸ் விடில்லா*
> (பழைய சோறு சாப்பிட்டாலும் பெருமை பேசுவதை விடமாட்டார்கள்)

எனும் பழமொழி சுட்டுகிறது. 'பத்ராஸ்' என்ற சொல்லானது 'பெருமை பேசுதல்' எனும் சொல்லைக் குறிப்பதாகும். இப்பழங்கஞ்சி மட்டுமின்றி காலை உணவாக 'அப்பம்' என்ற பலகார உணவினையும் உண்டு வருகின்றனர். இதனை,

*அப்பம் திந்நா மதி குழியென்னண்டா*

(அப்பம் சாப்பிட்டால் போதும் குழி எண்ண வேண்டாம்)

எனும் பழமொழியால் உணர்ந்து கொள்ள முடிகின்றது. இந்த அப்பத்தினைப் பெற வேண்டுமெனில் 'பந்திக்கு முந்தனும் படைக்குப் பிந்தனும்' எனும் முதுமொழிக்கு ஏற்ப முதலில் செல்ல வேண்டும் என்பதை,

*ஆத்யம் செல்லுன்னவன் அப்பம் நேடும்*

(முதலில் சென்றவன் அப்பத்தினைப் பெறுவான்)

எனும் பழமொழி விளக்குகிறது.

### 3.2.3.3.2 பால்

'பால்' என்ற உணவுப் பொருளினை பாலக்காடு மாவட்ட மக்கள் உணவுப் பொருளாக மட்டுமின்றி அதிலிருந்து வேறு உணவுப் பொருளை உற்பத்தி செய்வதாகவும் பழமொழிகள் சுட்டுகின்றன. காற்றுள்ள போதே தூற்றிக் கொள் என்பதைப் போல,

*சுரத்தும்போ கறன்னாலே பாலு கிட்டூ*

(சுரந்து வரும் பொழுது கரந்தால் தான் பால் கிடைக்கும்)

என பழமொழி உணர்த்துகின்றது. தக்க சமயத்தில் பாலினைக் கறந்து எடுக்க வேண்டும் என்ற பொருளினைக் கூறுவதாக பழமொழி அமைந்துள்ளது.

*பாலு குடிச்சிட்டு கெடக்கீலு கிடக்காம் பரஞ்ஞா*
*கள்ளு குடிச்சிட்டு கட்டையிலே கெடக்கூனு*

(பால் குடித்துவிட்டு மெத்தையில் படுக்கச் சொன்னால்
கள் குடித்துவிட்டு விறகு கட்டையில் தான் படுக்கிறான்)

இப்பழமொழியானது ஒருவனது குணத்தினைக் கூறுவதாக அமைந்துள்ளது. இதில் பால், கள் இரண்டும் ஒரே நிறத்தினைக் கொண்டுள்ளது. ஆனால் சுவையிலும்,

குணத்திலும் வேறுபட்டு நிற்கக் கூடியவைபாகவும் அமைந்துள்ளன என்பதையும் இதன் மூலம் உணரலாம்.

பால், தயிர், வெண்ணெய் போன்ற அனைத்துப் பொருள்களின் மூலம் ‘நெய்’ உருவாகும். ஆனால் இந்த நெய்யினை எடுக்கத் தெரியாமல் இருப்பதை,

*வெண்ணெ கையில் வெச்சிட்டு நெய்யன்னேஷிக்குன்ன தெந்தினு*
(வெண்ணெய் கையில் இருக்கும் பொழுது நெய்க்கு அலைவானேன்)

என்கிறது பழமொழி. இப்பழமொழியானது ஒருவருடைய இயலாமையை வெளிப்படுத்திக் கூறுவதாக அமைந்துள்ளது எனலாம். இதன் மூலம் பாலக்காடு மாவட்டத்தில் கால்நடைகளை வளர்த்து வருகின்றனர் என்பதை உணர முடிகின்றது. மேலும் கள்ளைப் பயன்படுத்துகின்றனர் என்பதையும் மேலே கூறிய பழமொழி மூலம் உணரலாம்.

### 3.2.3.3.3 காய்கறிகள்

பாலக்காடு மாவட்டத்தில் நெல் வேளாண்மைத் தொழில் மட்டுமின்றி கத்தரிக்காய், உருளைக்கிழங்கு, மாங்காய், தேங்காய், சுண்டைக்காய், கொள்ளிக்கிழங்கு, சேனைக்கிழங்கு கீரை போன்ற காய்கறி வகைகளையும் விவசாயம் செய்து வருகின்றனர். இவை சுவை சார்ந்தும், உணவில் பயன்படுத்தப்படும் முறை சார்ந்தும் பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணமுடிகின்றது.

*உருளைக்கு உப்பேரி*
(உருளைக் கிழங்கிற்கு ஏற்ற பொறியல்)

எனும் பழமொழி உருளைக்கிழங்கினை எவ்வாறு பயன்படுத்துகின்றனர் என்பதை கூறுவதாக அமைந்துள்ளது. இது உடனுக்குடன் பதிலடி கொடுக்கக் கூடிய

மனிதர்களை இந்த கிழங்கின் ஊடாக ஒப்பிட்டு கூறியுள்ள நிலையினைக் காணலாம். மேலும்,

*சுண்டங்ங்ா கொடுத்து வழுதனங்ங்ா வாங்கிக்கல்லே*
(சுண்டைக்காய் கொடுத்து கத்தரிக்காய் வாங்காதே)

*மாங்கா பழுத்தா தானே வீழும்*
(மாங்காய் பழுத்தால் தானாக விழுந்து விடும்)

*எண்ணப்பாடம் புளி மண்ணு தேச்சு குளி*
(எண்ணப்பாடம் என்ற ஊரில் புளி மண்ணினை தேய்த்து குளித்தல்)

போன்ற பழமொழிகள் சுண்டைக்காய், கத்தரிக்காய் (வழுதனங்கா) மாங்காய், புளி போன்றவற்றை இம்மக்கள் உணவுப் பொருட்களாகப் பயன்படுத்தி வந்துள்ளனர் என்பதை நிரூபித்து நிற்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

இந்தக் காய்கறி உணவு வகைகளைப் பயன்படுத்துவதோடன்றி 'ஞண்டு போயால் எவிடம் வரெ போகும்' (நண்டு சென்றால் எவ்விடம் வரை போகும்); 'வெள்ளம் வற்றியேடத்து மீன் களிக்கும் போலே' (தண்ணீர் வற்றிய இடத்தில் மீன் துள்ளி விளையாடுவது போலே); 'செம்மீன் சாடியால் முட்டோளம், பின்னயும் சாடியால் சட்டியோளம்' (செம்மீன் சாடினால் முட்டு வரை, மேலும் சாடினால் சட்டியினுள்) எனும் பழமொழிகளின் வாயிலாக நண்டினையும் மீன் வகைகளையும் பாலக்காடு மாவட்ட மக்கள் தங்களது உணவிற்கு பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் அறியலாம்.

வந்தவர்களை வரவேற்பது தமிழர் மரபு. இம் மரபு மலையாள மக்களிடமும் காணப்படுகிறது. இது பழமொழியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. சான்றாக, மாமனார் கீரைக் குழம்பை உண்டு கொண்டு மருமகனுக்குக் கோழிக் குழம்பைக் கொடுக்கும் விருந்தோம்பலைக் கான முடிகிறது. இதனை,

*சீரக்கறி சிங்காரக்கறி இங்கிடு கொண்டா*

*கோழிக்கறி கொள்ளிக்கறி மருமகனு கொண்டு கொடு*

(கீரை குழம்பு நல்ல குழம்பு இந்தப் பக்கம் கொண்டு வந்து கொடு

கோழிக் குழம்பு கிழங்கு குழம்பு மருமகனுக்கு கொண்டு போய் கொடு)

என்னும் பழமொழி விளக்குகிறது. மேலும் கீரையின் குணத்தினையும் கோழிக்கறிக்கு ஏற்ற உணவுப் பொருள் கொள்ளிக்கிழங்கு என்பதையும் வெளிப்படையாகக் கூறியுள்ள நிலையினை உணர முடிகின்றது.

இவை மட்டுமின்றி திராட்சை – எத்தாத்த முந்திரிங்ஙா புளிக்குன்னது போலே (பறிக்க முடியாத திராட்சை புளிப்பது போல); அத்திப்பழம் – அத்திப்பழம் பழுக்கும்போ காக்கய்க்கு வாய்ப்புண்ணு (அத்திப்பழம் பழுக்கும் பொழுது காக்காவிற்கு வாயில் புண்); பலாப்பழம் – சக்க முரிக்குன்னிடத்தே ஈச்ச கூடு (பலாப்பழம் அறுக்கும் இடத்தில் ஈ நிறைந்து விடும்) போன்ற பழவகைச் சார்ந்த பழமொழிகள் மூலம் இவர்கள் இவற்றைப் பயன்படுத்துகின்றனர் என்பதை உணரலாம்.

காலத்திற்கு ஏற்றாற் போன்ற உணவுகளை உண்ணக்கூடிய வழக்கமும் இவர்களிடையே காணப்படுகிறது. என்பதை,

*கர்க்கிடக சேனா கட்டிட்டெங்கிலும் திண்ணம்*

(ஆடி மாத சேனைக்கிழங்கை திருடியாவது சாப்பிட வேண்டும்)

எனும் பழமொழி சேனைக்கிழங்கு பயிர் செய்து எடுப்பதற்கு ஏற்ற காலம் ஆடிமாதம். இம்மாதத்தில் கிடைக்கக்கூடிய சேனைக்கிழங்கு நன்றாக வேகும் தன்மை வாய்ந்ததாகவும் சுவையுடையதாகவும் இருக்கும். அதனால் இம்மக்கள் சேனைக்கிழங்கினை பயிர் செய்து உணவாக உட்கொள்கின்றனர் என்பதை இதன் மூலம் புரிந்து கொள்ள முடிகின்றது.

### 3.2.3.4 கட்டிடம்

பாலக்காடு மாவட்ட மக்கள் நடுத்தர வீடுகளில் வாழக்கூடிய மக்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் கூரை வீடுகளைப் பயன்படுத்துவதில்லை. இவர்கள் 'வீடு' என்பதை 'இல்லம்', 'புற' போன்ற சொற்களால் வழங்கி வருகின்றனர். இதனை,

*எலியெ பேடிச்சு இல்லம் சுடுக*

(எலியை பயந்து வீட்டினை எரித்தது போல)

*புர கத்தும்போ வாழ வெட்டருது*

(வீடு எறிந்து கொண்டிருக்கும் பொழுது வாழை வெட்டக்கூடாது)

*பொன்னு காய்க்கன மரமாயாலும்*
*புரய்க்கு சாஞ்ஞால் வெட்டணம்*

(துங்கம் காய்க்கிற மரமாக இருந்தாலும்
வீட்டின் மீது சாய்ந்தால் வெட்ட வேண்டும்)

போன்ற பழமொழிகளின் மூலம் உணரமுடிகிறது. இவர்கள் வீடுகளை சிமெண்டினால் செய்த கட்டைகளை (துடிகள்) வைத்து கட்டியுள்ளனர். இதனை,

*கார கோலு செதலு புடிச்ச போலே*

(சிமெண்ட் குச்சிகள் சிதல் பிடித்தது போல)

எனும் பழமொழி விளங்குகிறது. வீட்டிற்கு முன்பாக சிறிது இடம் காணப்படுகிறது. இதனை, முற்றம் எனும் சொல்லால் வழங்கி வருகின்றனர்.

*முற்றத்தெ முல்லயக்கு மணமில்லா*

(வாசலில் இருக்கின்ற மல்லிகைப்பூவிற்கு மணம் கிடையாது)

*மூவர் சேர்ந்நால் முற்றம் தூக்கில்லா*

(மூன்று பேர் சேர்ந்தால் வாசல் கூட்டமாட்டார்கள்)

எனும் பழமொழிகளில் நம் தமிழ்ச் சொல்லான முற்றம் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ள நிலையினைக் காணலாம். வீடு, முற்றம் போன்ற அனைத்துப் பகுதிகளிலும் பாதுகாப்புடன் இருப்பதற்காக மதிலினைக் கட்டியுள்ளனர்.

இம்மதிலின் சிறு பகுதியில் கதவினையும், கீழே இறங்கிச் செல்வதற்காக வாசப்படியினையும் கட்டியுள்ளனர். இதை,

*பணி தீர்ந்நால் படிக்கு புறத்து*

(வேலை முடிந்தால் வாசப்படிக்கு வெளியில்)

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். இவர்கள் வாசப்படி என்பதைக் குறிக்க தமிழ்ச் சொல்லான 'படிக்கால்' எனும் சொல்லினை பயன்படுத்தி வந்துள்ளனர் என்பதை,

*பரணி நாளு படிக்காலு பிடுங்கும்*

(பரணி நாள் படியின் கால்களைப் பிடுங்கிவிடும்)

எனும் பழமொழி உணர்த்தி நிற்பதைக் காணலாம். கூட்டுக்குடும்பத்துடன் ஒன்றாக இருக்கக் கூடிய வீட்டினை 'தரவாட்டு வீடு' எனும் சொல்லால் வழங்குகின்றனர். இதனை,

*நாயாயி பிறந்நாலும் தரவாட்டில் பிறக்கணம்*

(நாயாக பிறந்தாலும் தரவாட்டு வீட்டில் பிறக்க வேண்டும்)

எனும் பழமொழி விளக்குகிறது.

### 3.2.3.5 ஆடை அணிகலன்கள்

பாலக்காடு மாவட்ட மக்களின் சில ஆடைகளைப் பற்றிய செய்திகள் பழமொழிகளில் பதிவாகியுள்ளன.

*பிடிச்சு வலிச்சு குப்பாயமிட்டால் வலிச்சு கீறி ஊறேண்டி வரும்*
(பிடித்து இழுத்து சட்டை அணிவித்தால் இழுத்து கிழித்து எடுக்க வேண்டும்)

*பொதப்பினெக் கொடுத்து கோணாகம் வாங்கருது*
(போர்வையைக் கொடுத்து கோமணத்தை வாங்கக் கூடாது)

*மடியன் ஆடினு கம்பிளி பாரம் போலே*
(சோம்பேறி ஆட்டிற்கு கம்பிளி கனம் போல)

போன்ற பழமொழிகளில் சட்டை, போர்வை, கம்பிளி, கோமணம் போன்ற ஆடைகளைப் பயன்படுத்தியமை புலனாகிறது. கள ஆய்வின் போது பெண்கள் அணியக்கூடிய ஆடைகளைப் பற்றிய பழமொழிகள் கிடைக்கவில்லை. ஆனால், இங்குள்ள பெண்கள் கூந்தலிற்கு முக்கியத்துவம் கொடுத்து வருகின்றனர். இதனை,

*பெண்ணுங்ஙல்க்கு முலையழகும் முடியழகும் வேணம்*
(பெண்களுக்கு முலை அழகும் முடி அழகும் வேண்டும்)

எனும் பழமொழி விளக்கி நிற்பதைக் காணலாம். அத்துடன் கூந்தலை பல்வேறு விதமான அலங்காரத்துடன் முடிந்தும் கொள்கின்றனர். இதை,

*முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கெட்டும் சரிச்சிட்டும் கெட்டும்*
(முடியுள்ள பெண் சாய்த்தும் கட்டுவாள் சரித்தும் கட்டுவாள்)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம்.

### 3.2.4 தொழில்கள் தொடர்பான பழமொழிகள்

சமுதாய முன்னேற்றத்தினை உணர்த்தவும் உறுதிப்படுத்தவும் செய்யக்கூடிய காரணிகளுள் ஒன்று தொழில். பல்வகைத் தொழில்களும் நிறைந்திருத்தல், செழிப்புற்றிருத்தல் வாழ்வின் வளர்ச்சிக்கும், அதன் வழி நாட்டின் வளர்ச்சிக்கும் இன்றியமையாததாகிறது. "ஒரு மனிதனுடைய தொழில் அவனுக்குக் கல்வியுமாகும்"[24] எனும் அயர்லாந்து பழமொழி இங்கு நினைவு கூறத்தக்கது.

மக்கள் தங்களுடைய அடிப்படைத் தேவைகளுக்காகவும் வாழ்வின் பிற தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகவும் உழைக்கின்றனர். இவ்வுழைப்பு ஏதேனும் ஒரு தொழிலில் ஈடுபடுவதாக அமைகிறது. அவ்வகையில் பாலக்காடு மாவட்டத்தில்,

**முடிவெட்டுதல்**

*நாயய்க்கு மீச வளர்ன்னால் அம்பட்டனெந்து காரியம் அது போல*
(நாயிற்கு மீசை வளர்ந்தால் நாசுவனுக்கு என்ன என்ன பயன்
அது போல)

**கசாப்புத் தொழில்**

*வெட்டான் போகுந்ந போத்தினோடு வேதம் ஓதியால் நடக்குமோ?*
(வெட்டப் போகின்ற எருமையிடம் வேதம் ஓதினால் நடக்குமா?)

**துணி துவைத்தல்**

*வெயிலத்து வண்ணான் சக்க குரு சுட்டு திண்ணானும்*
*மழையத்து வண்ணான் அலக்கானும் போய போல*
(வெயிலின் பொழுது வண்ணான் பலாப்பழக்
கொட்டையினை சுட்டு சாப்பிடுவதற்கும் மழையின்
பொழுது வண்ணான் துணிகளை துவைக்கச் சென்றதும் போன்று)

**மீன் பிடித்தல்**

*வெரச்சு வெரச்சு மீன் பிடிச்சா மீன் கழிக்கான் ஆளு வேண்டே*

(விரைத்து விரைத்து மீன் பிடித்தால் மீன் சாப்பிடுவதற்கு ஆட்கள் வேண்டுமல்லவா?)

**வைத்தியர், வக்கீல்**

*வைத்தியனோடும் வக்கீலினோடும் கள்ளம் பறயருது*

(வைத்தியருடனும் வக்கீலினிடமும் பொய் கூறுதல் கூடாது)

**மருத்துவம்**

*ஈற்றெடுக்கான் போயவளு இரட்ட பிரசவிச்சு*

(பிரசவம் பார்க்கச் சென்றவள் இரண்டு குழந்தைகளை பிரசவித்து விட்டாள்)

**ஆசாரி**

*மரம் கோணியால் செத்தி நிவர்த்தாம்*
*மனசு கெட்டால் ஒன்னும் செய்யான் பட்டில்லா*

(மரம் வளைந்து விட்டால் செதுக்கி நிமிர்த்தி விடலாம்
மனது கெட்டுவிட்டால் ஒன்றும் செய்ய முடியாது)

*கட்டில் செறுதானெங்கிலும் காலு நாலு வேணம்*

(கட்டில் சிறியதாக இருந்தாலும் கால்கள் நான்கு வேண்டும்)

**அடுப்புவனைதல்**

*அடுப்பெத்ர செறுதாயலும் காலுமுணு வேணம்*

(அடுப்பு எவ்வளவு சிறியதாக இருந்தாலும் கால்கள் மூன்று வேண்டும்)

**கூடை பின்னுதல்**

*வல்லம் கெட்டுன அப்பனேக்காலும் வட்டி கெட்டுன அம்மயானு நல்லது*

(பெரிய கூடை பின்னுகின்ற அப்பாவை விட சிறிய கூடை பின்னுகின்ற அம்மா மேல்)

**கயிறு திரித்தல்**

*சகிரியில்லெங்கில் கயறுண்டாக்கான் பற்றுமோ?*

(தேங்காய் நார் இல்லாவிட்டால் கயிறு திரிக்க முடியுமா?)

**செண்டை**

*தள்ளு கொள்ளான் செண்டா காசு வாங்ஙான் மாறாரு கொட்டுதல்*

(அடி வாங்குவது செண்டை பணம் வாங்குவது மாறாரு)

போன்ற தொழில்களைப் பற்றிய பழமொழிகளை ஆராயும் பொழுது நாவிதன், வண்ணான், ஆசாரி, மாறார் ஆகியோர் அவர்களுடைய குலத் தொழில்களைச் செய்து வந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. அல்லாத நிலையில் அனைத்துச் சாதியிலுள்ள மக்களும் அனைத்து தொழில்களையும் செய்து வந்துள்ளனர் என்று உணரமுடிகிறது.

### 3.2.4.1 விவசாயம்

பாலக்காடு மாவட்டத்திலுள்ள மக்கள் விவசாயம் செய்வதையே முதன்மையாகக் கொண்டுள்ளனர். இம்மாவட்டத்தில் அதிகமாக நெற்பயிர்களை விவசாயம் செய்து வருகின்றனர் என்பதை பழமொழிகள் மூலம் உணரமுடிகிறது.

இம்மாவட்டத்திலுள்ள மக்கள் நெல் வயலைக் 'கண்டம்' எனும் பெயரால் குறிப்பிடுகின்றனர். இவர்கள் நெல் பயிரிடுவதற்கு நிலத்தினைப் பதப்படுத்துவதற்கு முன்பாக 'ஒண்ணு சீஞ்ஞால் மற்றொன்னினு வளம்' (ஒன்று அழிந்து விட்டால் மற்றொன்றிற்கு வளம்) என்பதை உணர்ந்து அனைத்து பொருட்களையும், அதாவது மனிதனுக்குத் தேவையில்லாத அனைத்துப் பொருட்களையும் வயல்களில் போட்டு விடுகின்றனர். அதன் பின்னர்,

*அவிடெ மண்ணு திரிக்குன்னது ஆரானு நோக்கண்டா*
*எந்நு பரஞ்ஞு போலே*
(அங்கு மண்ணைப் புரட்டுவது யார் என்று பார்க்க வேண்டாம்
என்று கூறியது போல)

என்ற பழமொழிக்கு ஏற்ப மண்ணைப் புரட்டிப் போடுகின்றனர். பிறகு 'வித்து குணம் பத்து குணம்' (விதை பத்து விதமான குணங்களைக் கொண்டிருக்கும்) என்பதைப் போல அஸ்வதி நாளன்று வயல்களில் நெற்பயிர்களின் விதைகளை விதைக்கின்றனர். சிறிது நாட்களுக்குப் பின்னர் வேறொரு இடத்தில் நடுகின்றனர். அதன் பின்னர் நட்டு வைத்த பயிர்களை 'பெற்றொனங்கிய பெண்ணும் நட்டொனங்கிய நாறும் போலே' (பிரசவித்து வாடிப்போன பெண்ணும் நட்டு வைத்து காய்ந்து போன நாற்றும் போல) ஆகிவிடாமல் இருப்பதற்காக போதுமான நீரினை வயலுக்கு விடுகின்றனர். சிறிது நாட்களுக்குப் பின்னர் நட்டு வைத்த நெற்செடிகளுக்கு இடையில் பலவிதமான செடிகள் முளைத்திருப்பதைக் காணலாம். இதனை,

*ரோஹிணி பட்டு களயும் மொளயும் வரும்*
(ரோஹினி நட்சத்திரத்தின் போது களைகளும் அரும்புகளும் வரும்)

எனும் பழமொழி கூறுகிறது. இக்களைகளை நீக்கியதன் பின்பு 'கதிரின் மேல் கொண்டு வளமிட்டிட்டு காரியமில்லா' (கதிரின் மீது உரம் போட்டால் ஒரு பயனும்

கிடையாது) என்பதை உணர்ந்து நெற்பயிருக்கு கிடைக்கும்படி உரத்தினை இடுகின்றனர். சில மாதங்கள் கழிந்த பின்னர் அந்நெற்பயிர்களை அறுவடை செய்கின்றனர். இதனை,

*ஏரே கொய்தவன் தாழே சுமக்கும்*
(கீழ்பகுதிவரை நெற்கதிர்களை அறுவடை
செய்தவன் முற்றிலும் சுமக்க வேண்டும்)

என்பதை உணர்ந்து தேவையான பகுதிவரை அறுவடை செய்து எடுக்கின்றனர். அதன் பின்னர்,

*ஆயிரம் பர நெல்லிலு அர குனியன் பட்ட போலே*
(ஆயிரம் பரை நெல்லிற்குள் அரை பதர் பட்டது போல)

இருக்கக்கூடிய நெல்லினையும், பதரினையும் வேறுபடுத்துகின்றனர். இங்கு குனியன் என்பது 'பதர்' எனும் சொல்லினைக் குறிக்கக் கூடிய சொல்லாகும். இப்பதர்களை, 'காற்று வரும்போ பாற்றணம்' (காற்றுள்ள போதே தூற்றிக் கொள்) என்பதற்கிணங்க காற்று வரும் பொழுது நீக்கி விடவும் செய்கின்றனர்.

இதன் மூலம் இம்மாவட்டத்தில் நெற்பயிர்களை பெருவாரியாக விவசாயம் செய்து வந்துள்ளனர் என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

### 3.2.4.2 பொருளாதாரம்

பொருளாதாரத்தைப் பற்றி பெவரிட்ஜ் அவர்கள், "மனிதன் தன் உலகத் தேவைகளை நிறைவேற்ற ஒத்துழைக்கும் முறைகளைப் பற்றிக் கூறுவது" என்கிறார். பென்ஹம் என்பவர், "ஒரு நாட்டின் தேசிய வருமானத்தின் அளவு, பங்கீடு, உறுதில ஆகியவற்றைப் பாதிக்கும் ஆய்வே பொருளாதாரம்"[25] என்று வரையறை கூறுகிறார்.

பாலக்காடு மாவட்ட மக்கள் நெற்பயிர்களை விவசாயம் செய்து வாழக்கூடியவர்களாக இருந்துள்ளனர் என்பதை முன்னர் கண்டோம். சில வேளைகளில் இயற்கையின் காரணமாக விவசாயம் செய்ய முடியாமல் போகவும் நேரிடலாம். அப்பொழுது இம்மக்களுக்குப் பொருளாதாரத்தில் பிரச்சனையும் ஏற்படுகிறது. இதன் மூலம் மக்கள் உணவிற்கு வழியின்றி, வறுமையுடன் வாழவும் செய்வர். இதனை,

*உண்ணிியெ கண்டாலறியாம் ஊரிலெ பஞ்சம்*

(பிள்ளையைப் பார்த்தால் தெரியும் ஊரிற்குள் ஏற்பட்டிருக்கின்ற பஞ்சம்)

எனும் பழமொழி விளக்கி நிற்பதைக் காணலாம்.

### 3.2.5 நம்பிக்கை தொடர்பான பழமொழிகள்

நாட்டுப்புறவியல் என்பது நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றால் பாதுகாக்கப்படும் ஒரு குறிப்பிட்ட மக்களின் பண்பாடாகும். நன்மையின் காரணமாக ஏற்படுகின்ற ஆர்வமும், தீமையின் காரணமாக ஏற்படுகின்ற அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைகளுக்கு அடிப்படை எனலாம். இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்கள் நடப்பதை உணராத பொழுதும், மனித வாழ்வில் ஏற்படும் மனித மனமானது சிலவற்றைப் படைத்து காரணம் கற்பித்துக் கொள்ளவும் செய்கிறது. அவைகளே நம்பிக்கைகளாக உருவாகின்றன.

நம்பிக்கை என்பது "ஒரு செயலின் காரணமாகவும், மரபு வழியாகச் சந்ததி, பின்சந்ததி ஆகியோரால் பின்பற்றப்படும் வழக்கமாகவும் உள்ளது"[26] என்று குறிப்பிடுகிறது வாழ்வியற் களஞ்சியம்.

இங்கு பாலக்காடு மாவட்டத்தில் கிழமை, நட்சத்திரம், மாதம், உடலுறுப்பு, விதி, இயற்கை, அதிர்ஷ்டம் போன்ற நம்பிக்கைகள் காணப்படுகின்றன. அவை கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளன.

*திங்கள் நெடுநாளு*

(திங்கட்கிழமை நீண்ட நாள்)

எனும் பழமொழியானது, திங்கட்கிழமை ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்யத் துவங்கினால் அந்த வாரம் இறுதி வரை அதற்காக தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று மக்கள் நம்புகின்றனர். இது நம்பிக்கை மட்டுமின்றி சிலரது உண்மை அனுபவம் என்று கூட கூறலாம். வாரத்தின் ஏழு நாட்களும் நல்ல நாட்கள் என்றிருக்க செவ்வாய் கிழமை எந்தவொரு செயலைச் செய்வதற்கும் உகந்த நாள் அல்ல என்ற நம்பிக்கையையும் கள ஆய்வில் அறிய முடிந்தது.

இதனை,

*செவ்வாய்ச்ச வெட்டிய குற்றி அவைக்கில்லா*

(செவ்வாய்கிழமை வெட்டின செடி கிளைவிடாது)

எனும் பழமொழியின் மூலம் மக்கள் நம்பிக்கை வைத்துள்ளதை அறியலாம். மேலும் சனிக்கிழமை அறுவடை கூடாது. இதனை,

*சனியாழ்ச்சா சவத்திலும் கத்தி வைக்கருது*

((சனிக்கிழமை இறந்த சடலத்தின் மீது கத்தி வைத்தல் கூடாது)

எனும் பழமொழி விளக்குகிறது.

நட்சத்திரங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், ‘பரணி நாளு படிக்காலு பிடுங்கும்’ (பரணி நட்சத்திரம் வாசப்படியை பிடுங்கிவிடும்) என்கின்றனர். பரணி நட்சத்திரத்தில் பெண் குழந்தை பிறந்தால் அக்குழந்தை பெரியவளாகி, அவளுக்கு என்றொரு சுபகாரிய நிகழ்ச்சிகள் முடிவதற்கு முன்பாக குடும்பத்திலுள்ள ஆண்கள் யாரேனும் இறந்து விடுவார்கள். வீட்டின் அஸ்திவாரம் இல்லாமல் போய்விடும் என்று மக்கள் நம்பிக்கை வைத்துள்ளனர். இதனை,

*பரணி நாளு படிக்காலு பிடுங்கும்*

(பரணி நட்சத்திரம் வாசப்படியை பிடுங்கிவிடும்)

எனும் பழமொழியின் மூலம் அறியலாம். மேலும் பரணி நாளில் ஆண் பிள்ளைகள் பிறந்தால் மிகவும் நன்மை பயப்பதாக இருக்கும் என்று மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பதை,

*பரணீலு குட்டி தரணீலும் கிட்டில்லா*

(பரணி நாளில் பிறந்த குழந்தை இவ்வுலகத்தில் கிடைக்காது)

எனும் பழமொழி விளக்குகிறது.

விவசாயம் செய்யக் கூடிய மக்கள், இவர்கள் விதைத்த நெற்பயிர் செடிகள் அனைத்திலும் கார்த்திகை நட்சத்திரத்தின் போது பூக்கள் அரும்பியிருக்க வேண்டும். அவ்வாறு பூக்கள் அரும்பியிருக்கக் கூடிய நெற்செடிகளிலெல்லாம் நெற்பயிர்கள் நன்றாக செழிப்புடன் வளர்ந்து வரும். இதை,

*கார்த்திகப் பட்டு கனகப்பட்டு*

(கார்த்திகை நட்சத்திரத்தில் முளைக்கக் கூடிய நெற்பயிர்களிலுள்ள பூக்கள் நல்ல பூக்கள்)

எனும் பழமொழியின் மூலம் மக்கள் நம்பிக்கை கொண்டுள்ள நிலையை உணர முடிகிறது. இங்கு பட்டு என்பது பூக்கள் எனும் சொல்லைக் குறிக்கக் கூடிய சொல்லாகும்.

*ஆயில்யம் அயலு முடிக்கும்*

(ஆயில்பம் நட்சத்திரம் பக்கத்து வீட்டாருக்கு ஆகாது)

எனும் பழமொழியானது ஆயில்யம் நட்சத்திரத்தில் பிறந்த குழந்தை பக்கத்து வீட்டிலுள்ளவர்களுக்குத் தீமைகளை ஏற்படுத்தும் என்று மக்கள் நம்பிக்கை

வைத்துள்ளனர். மட்டுமின்றி இந்நட்சத்திரம் பாம்புகளுக்குரிய நாளாகக் கருதப்பட்டு வருகிறது. இந்நட்சத்திரத்திலுள்ள பெண்களுக்கு திருமணம் நடைபெற காலதாமதம் ஏற்படும். இத்தடைகளெல்லாம் நிவர்த்தி செய்ய வேண்டுமெனில் 'ஆயில்யம் காவு' என்று கூறக்கூடிய பாம்புகளின் உருவங்கள் இருக்கின்ற இடத்திற்குச் சென்று வழிபட வேண்டும். அப்பொழுது நல்ல கணவன் அமைவான் என்று மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பதையும் கள ஆய்வில் அறிய முடிந்தது.

உத்திரம் நட்சத்திரத்தில் பிறக்கக் கூடியவர்கள் எதாவதொரு செயல் செய்ய வேண்டும் என நினைத்தார்கள் எனில் அதை உடனே செய்ய வேண்டும். செய்தே தீருவேன் என்ற மனநிலையில் இருப்பவர்களாக இருப்பார்கள். மட்டுமின்றி இந்நட்சத்திரத்தில் பிறக்கக் கூடிய குழந்தைகள் ஆணாக இருப்பினும், பெண்ணாக இருப்பினும் தனக்கென ஒரு வீட்டினையும் கட்டி முடிப்பார்கள் என்ற நம்பிக்கையினையும் மக்கள் கொண்டுள்ளனர் என்பதை,

*உத்ரம் உத்திரம் வைக்கும்*
(உத்திரம் நட்சத்திரம் வீடு கட்டும்)

எனும் பழமொழியின் மூலம் அறியலாம்.

சித்திரை நட்சத்திரத்தில் பிறக்கக் கூடியவர்கள் சுயமாக சம்பாதித்து வாழ வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களாக இருப்பார்கள். அவர்களுக்கு என்று நிலையான வேலை இருந்தாலும் கூட மீண்டும் மீண்டும் சம்பாதிக்க வேண்டும் என நினைத்து அங்குமிங்குமாக ஓடிக் கொண்டிருப்பார்கள் என்பதை,

*சித்திரப்பன் தெருவோடும்*
(சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தெருத் தெருவாக ஓடுவார்கள்)

எனும் பழமொழியின் மூலம் மக்கள் நம்பிக்கை கொண்டிருப்பதை அறியலாம். சோதி நட்சத்திரத்தில் பிறக்கக் கூடிய குழந்தைகளின் வீட்டில் உணவிற்கு பஞ்சம்

ஏற்படாது என்பதை, 'சோதி நாளு சோற்றினு பஞ்சமில்லா' (சோதி நட்சத்திரத்தில் பிறந்திருக்கக் வடிய பிள்ளைகளின் வீட்டில் சாப்பாட்டிற்கு பஞ்சம் ஏற்படாது) எனும் பழமொழியின் மூலம் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையினை அறிய முடிகின்றது.

*பூராடம் ஊரோடும்*

(பூராடம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஊர் ஊராக அலைந்து கொண்டிருப்பார்கள்)

எனும் பழமொழி, பூராடம் நட்சத்திரத்தில் பிறந்திருக்கக் கூடியவர்கள் வேலைக்காக ஒவ்வொரு ஊரிற்கும் சென்று அலைந்து திரிந்து கொண்டே இருப்பார்கள் என்கிறது.

*அவிட்டம் நட்சத்திரம் தவிட்டிலும் நேடும்*

(அவிட்டம் நட்சத்திரம் தவிட்டிலும் சம்பாதிப்பார்கள்)

இந்நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் எந்தவொரு பொருளையும் விரைவில் வீணாக்கமாட்டார்கள். வீணாகின்ற பொருளையும் அழகுபடுத்தி பாதுகாப்புடன் எடுத்து வைக்கக் கூடியவர்களாகவும் இருப்பார்கள். மட்டுமின்றி இவர்களுக்கு எந்தவொரு சுபகாரியங்களும் தாமதமாகத்தான் அமையும். அதன் மூலம் அவர்கள் வாழ்க்கையில் நல்ல நிலையில் முன்னேற்றமடைந்து மகிழ்ச்சியுடன் காணப்படுவார்கள் என்று மக்கள் நம்பிக்கை வைத்துள்ளனர்.

சதயம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் எங்கு சென்றாலும் வேலை அமைந்து கிடைக்கும். ஆனால் நிலையானதாக அமையாது. மட்டுமின்றி எந்தவொரு செயலைச் செய்யத் தொடங்கினாலும் காலதாமதம் ஏற்பட்டு சதைந்து சதைந்து கொண்டே இருக்கும். இதனை,

*சதயம் நாளு சதஞ்சு சதஞ்சு கிடக்கும்*

(சதயம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சதைந்து சதைந்து இருப்பார்கள்)

எனும் பழமொழியால் அறியலாம்.

நட்சத்திரங்களில் ஒன்றான அத்தம் நட்சத்திரத்தின் போது வானமானது கருமை நிறமடைந்து மழை பொழிய வேண்டும். அப்பொழுது அத்தம் நட்சத்திரம் பத்து நாட்கள் முடிந்த பிறகு ஓணப் பண்டிகையின் பொழுது வானமானது வெண்மை நிறமடைந்து மழை பொழியாமல் இருக்கும். ஓணப் பண்டிகையினை சிறப்பான முறையில் கொண்டாட முடியும் என்று மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பதை,

*அத்தம் கருத்தா ஓணம் வெளுக்கும்*

(அத்தம் நட்சத்திரத்தின் போது வானம் கருமையாக இருப்பின்

ஓணத்தின் போது வானம் வெண்மையாக இருக்கும்)

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

இவ்வாறு ஒவ்வொரு நட்சத்திரத்தில் பிறக்கக் கூடியவர்களின் குணங்கள் எத்தன்மையில் அமைந்திருக்கும் என்பதையும், மக்கள் அவர்களின் மீது நம்பிக்கை கொண்டுள்ள நிலையினைப் பற்றியும் மேற்கூறப்பட்ட பழமொழிகளின் மூலம் அறிய முடிந்தது. பொதுவாகவே மலையாள மக்கள் சோதிடத்தில் அதிக நம்பிக்கை கொண்டுள்ளதைக் காணலாம். மேலும் இவர்கள் பிறந்த நாளை அல்ல பிறந்த நட்சத்திரத்தைக் கொண்டாடுகின்றனர்.

மிதுனம் மாதத்தை தமிழில் 'ஆனி மாதம்' என்பார்கள். காற்றும் வெயிலும் இருக்கக் கூடிய மாதமாகும். விவசாயம் செய்யக் கூடிய மக்களுக்கு ஏற்றாற் போன்று கடும் வெயிலின்றி காற்று மட்டுமே காணப்படக்கூடிய மாதமாகும். இம்மாதத்தில் சரியான முறையில் பருவ காலங்கள் அமையவில்லை என்றாலும் கூட விவசாயிகள் தங்களது வயல்களில் நெற்பயிர்களை நட்டு களைகளையெல்லாம் பறித்து முடித்து நிம்மதியுடன் இருக்கக் கூடிய மாதமாகும். இதனை,

*மிதுனம் தீர்ன்னால் விஷமம் தீர்ன்னு*

(ஆனி மாதம் முடிந்து விட்டால் துன்பங்கள் தீர்ந்து விட்டது)

எனும் பழமொழியின் மூலம் அறிய முடிகின்றது. மட்டுமின்றி கேரளாவில் மிதுனம்

மாதம் அதாவது ஆனி மாதம் முடிந்து விட்டால் விவசாயிகள் சற்று ஓய்வுடன் தான் காணப்படுகிறார்கள்.

*கர்க்கடக சேனா கட்டிட்டெங்கிலும் திண்ணனம்*

(ஆடி மாதத்திலுள்ள சேனைக்கிழங்கு திருடியாவது சாப்பிட வேண்டும்)

கர்க்கடகம் மாதத்தை தமிழில் 'ஆடி மாதம்' என்பார்கள். இம்மாதத்தில் மழை மட்டுமின்றி வெயிலும் இருப்பதனால் நம் உடலில் திடீரென்று எதிர்விளைவுகள் ஏற்படாமலிருக்க குளிர்ச்சியைத் தரக்கூடிய மண்ணிற்கு அடியில் இருக்கின்ற சேனைக்கிழங்கு என்ற கிழங்கு வகையினைச் சாப்பிட வேண்டும். அது உடம்பிற்கு மிகவும் நல்ல சத்துள்ள உணவு வகை என்று நம்பிக்கை கொண்டுள்ளனர். நவரக்கஞ்சி, பயித்துக்கஞ்சி, வெடத்தலாங்களி, இடிஞ்சில்களி, வேங்கக்களி, வெந்தயச் சாப்பாடு போன்ற உணவு வகைகளையும் சாப்பிடுகின்றனர். இந்த உணவு வகைகளைச் சாப்பிட்டோமெனில் உடம்பு மிகவும் ஆரோக்கியமாக இருக்கும் என்று நம்புகின்றமைமைபக் கள ஆய்வில் அறிய முடிந்தது. வாதம் தொடர்பான நோய் இருப்பவர்களுக்கும் வயதானவர்களுக்கும் இரண்டரை மாதங்கள் ஆன சிறிய கோழிக்குஞ்சினை பிடித்து அதில் மருத்துவ குணம் வாய்க்கப் பெற்ற பொருட்களைச் சேர்த்து சூப்பு வைத்துக் குடிக்கின்றனர். இம்மாதத்தின் போது மேற்கூறப்பட்ட உணவு வகைகளைச் சாப்பிடவில்லையெனில், 'கர்க்கடகத்தில் சத்த ப்ரேதம் போல' (ஆடி மாதத்தில் இறந்த சடலம் போல) பொலிவிழந்து காணப்படுவர் என்றும் மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். மீன (பங்குனி) மாதத்தின் மீது வைத்துள்ள நம்பிக்கையினை,

*மீன மாசத்திலெ இடி மீன் கண்ணிலும் வெட்டும்*

(பங்குனி மாதத்தில் வருகின்ற இடி மீனினுடைய கண்ணிலும்
பட்டுவிடும்)

பங்குனி மாதத்து இடியானது தண்ணீரிற்குள் இருக்கின்ற மீனினுடைய கண்களில் பட்டு விடும் என்று விளக்குகிறது பழமொழி.

மனித உடலுறுப்புக்கள் குறித்த நம்பிக்கைகளைப் பாலக்காடு மாவட்ட பழமொழிகள் பதிவு செய்துள்ளன.

*கூட்டு பிரி குடும்பத்தினு ஆகா*

(இரு புருவங்களின் முடி ஒட்டியிருப்பின் குடும்பத்திற்கு நல்லதல்ல)

எனும் பழமொழியின் மூலம் இணைந்த புருவங்கள் தீமை என்ற நம்பிக்கை புலனாகிறது. ஆண்களாக பிறந்த ஒவ்வொருவருக்கும் நாணம் இருக்க வேண்டும் மட்டுமின்றி ஆண்களுக்கு அடையாளமாக இருக்கக் கூடிய மீசையும் இருக்க வேண்டும். இவ்விரண்டும் இருந்தால் மட்டுமே ஆணாக பிறந்ததற்கான ஒரு மதிப்பு இருக்கும் என்பதை,

*ஆணாயால் நாணம் வேணம் முகத்தஞ்சு மீச வேணம்*

(ஆண்களாக இருந்தால் நாணத்துடன் இருக்க வேண்டும்

முகத்தில் ஐந்து மீசையும் இருக்க வேண்டும்)

என்ற பழமொழி விளக்குகிறது.

விதியை மதியால் வெல்ல முடியும் என்பர். ஆனால் பல வேளைகளில் இது முரணாகி விடுவதுண்டு என்பதற்கிணங்க ஒவ்வொருவருடைய வாழ்க்கையில் என்னென்ன இன்ப துன்பங்கள் நடக்க வேண்டுமோ அவையெல்லாம் நடந்தே தீரும் என்பதற்குச் சான்றாக,

*அமர்த்தி சொறிஞ்ஞாலும் தலயிலெழுத்து மாருல்லா*

(அழுத்திச் சொறிந்தாலும் தலையில் எழுதிய எழுத்து மாறாது)

எனும் பழமொழியின் மூலம் மக்கள் விதியின் மீதும் தலையெழுத்தின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பதை உணரமுடிகிறது.

அதிர்ஷ்டம் என்பது அவரவர்களுடைய நல்ல நேரத்தின் காரணமாகவும் அல்லது பிறருடைய நல்ல நேரத்தின் காரணமாகவும் தானாக

அமைந்து வருவதாகும். இங்கு உயிருக்கு ஆபத்தை ஏற்படுத்தக் கூடிய நிலையில் வந்த விபத்தானது அவருடைய அதிர்ஷ்டத்தின் காரணமாக எந்தவிதமான ஆபத்தையும் ஏற்படுத்தாமல் போய்விட்டது என்பதைக் குறிப்பிட,

*கண்ணில் தட்டேண்டது பிரியோட போயி*

(கண்ணில் பட வேண்டியது புருவத்தோடு போய்விட்டது)

எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணலாம். சிலர் அவர்களுடைய காரியங்கள் நிறைவேறுவதற்காகச் செய்யும் காரியங்கள் அவர்களறியாமலேயே பிற செயல்களுக்கும் காரணமாகி விடுவதைக் காணலாம். அதற்குச் சான்றாக,

*ஒரு வெடிக்கு ரெண்டு பஷி*

(ஒரு குண்டில் இரண்டு பறவைகள்)

எனும் பழமொழி அதிர்ஷ்டத்தைக் கூறும் நம்பிக்கையாக அமைந்துள்ளதைக் காணலாம்.

ஒரு பெரிய பிரச்சினையானது திடீரென்று யாருக்கும் எந்த விதமான துன்பத்தையும் ஏற்படுத்தாமல் சுலபமாக முடிந்து விட்டது என்பதைக் குறிப்பிட,

*புலி போலே வன்னது எலி போலே போயி*

(புலி போன்று வந்தது எலி போன்று போய்விட்டது)

எனும் பழமொழி விளக்கி நிற்பதைக் காணலாம்.

### 3.2.5.1 சடங்குகள்

மனித வாழ்வில் சடங்குகள் என்பது ஒரு இன்றியமையாத கூறாகவே அமைந்துள்ளன. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறு விதமான சடங்குகள் செய்கிறான். பாலக்காடு மாவட்டத்தில் உணவு கொடுக்கும் சடங்கு, இறுதிச் சடங்கு

போன்றவற்றை பற்றி மட்டும் கூறக்கூடிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்துள்ளன. அவை கீழ்வருமாறு,

பாலக்காடு மாவட்டத்திலுள்ள மக்கள் புதிதாக வீட்டிற்கு வரக்கூடிய மக்களுக்கு மாமிச உணவினைக் கொடுக்காது காய்கறி உணவினையே கொடுத்து வருகின்றனர். இதை 'சத்யா' என்கின்றனர். இவ்வாறு கொடுக்கக் கூடிய உணவானது அவர்களது பண்பாட்டினை வெளிப்படுத்துகின்றது எனலாம். அதே போன்று திருமணம், கோயில் திருவிழா போன்ற அனைத்திற்கும், சத்யா மட்டும் கொடுக்கின்றனர். இது அம்மக்களுடைய வாழ்வில் ஒரு சடங்காவே மாறியுள்ளது எனலாம்.

*சத்ய மறன்னாலும் பட்டினி மறக்கில்லா*
(விருந்து உணவினை மறந்தாலும் பட்டினியை மறக்க முடியாது)

*விளிக்காத்த சத்யய்க்கு உண்ணான் வரில்லா*
(அழைக்காத விருந்திற்கு உண்ண வரமாட்டேன்)

போன்ற பழமொழிகளில் சத்யா எனும் சொல் வந்திருப்பதைக் காணலாம். மேலும், இப்பாலக்காடு மாவட்ட மக்களிடையே நாள், நட்சத்திரம் பார்க்கக் கூடிய வழக்கமும் உள்ளது. இறந்த உடலினை அலங்காரம் செய்து வீட்டினில் போட்டு வைக்காது கடுகாட்டிற்கு எடுத்துச் சென்று தீயில் எரிக்கவோ அல்லது மண்ணில் குழி தோண்டி புதைக்கவோ செய்கின்றனர். இதனை,

*சத்தவன்டெ நாலு நோக்கீட்டு எந்து செய்யான்*
(செத்தவனுடைய நட்சத்திரம் பார்த்து என்ன செய்வது)

*சத்து கெடன்னாலும் சமஞ்சு கெடக்கணம்*
(செத்துப் படுத்திருந்தாலும் அலங்காரத்துடன் படுக்க வேண்டும்)

*சத்த சவமும் கெடக்கில்லா*

*வெச்ச சோறும் பாக்கிவரில்லா*

(செத்த பிணமும் இருக்காது

ஆக்கிய சோறும் மிச்சம் வராது)

*சுடுகாட்டில் போய சவம் திரிச்சு வருவோ*

(சுடுகாட்டிற்குச் சென்ற சடலம் திரும்ப வருமா?)

எனும் பழமொழிகளின் மூலம் உணரலாம்.

### 3.2.5.2 விழாக்கள்

அனைத்து மக்களும் சாதி மத வேறுபாடின்றி ஒன்றாக இணைவது திருமணம், விழாக்கள் போன்ற இடங்களிலாகும். அவ்வாறு பாலக்காடு மக்கள் ஒன்றாக இணைவது பூரம், ஓணம், ஆராட்டு, வேல போன்ற இடங்களிலாகும். இவ்விழாக்கள் அனைத்தும் இம்மாவட்டத்தில் நடைபெறுகின்றன என்பதற்குச் சான்று கூறும் விதமாக கள ஆய்வின் போது பழமொழிகள் நமக்கு கிடைத்துள்ளன.

இம்மாவட்டத்தில் பூரவிழா நடத்தப்பட்டு வருகிறது என்பதற்குச் சான்றாக,

*காணான் போகுந்ந பூரத்தினு எந்தினு கேட்டறியனு*

(பார்க்கப் போகின்ற பூரவிழாவினை எதற்கு கேட்டுத் தெரிந்து

கொள்ள வேண்டும்)

எனும் பழமொழியால் உணரலாம். ஓணவிழா என்பது மலையாள மக்கள் மிகவும் ஆரவாரமாகக் கொண்டாடக் கூடிய ஒரு விழாவாகும். இவ்விழாவின் பொழுது வெளியூரிற்குச் சென்றிருக்கக் கூடிய அனைத்து மக்களும் தங்களுடைய சொந்த ஊரிற்கு வந்துவிடுவர். அவ்வாறு சிறப்புமிக்க ஒரு விழா ஓணவிழாவாகும். இவ்விழாவினை வசதி இல்லாதவர்கள் கூட கொண்டாடுவர். இதனை,

*கானம் விற்றெங்கிலும் ஓணம் உண்ணனம்*

(காடு விற்றாவது ஓணவிழாவினைக் கொண்டாடி சாப்பிட வேண்டும்)

என்ற பழமொழியின் மூலம் அறியலாம். இப்பழமொழியில் 'காணம்' என்ற தூய தமிழ்ச் சொல்லினை நாம் பயன்படுத்தாது, மலையாள மக்கள் அவர்களது வாக்கில் பயன்படுத்தி வந்துள்ளமையைக் காணலாம். மேலும், இம்மக்கள் ஆராட்டுத் (கொல்லங்கோடு ஆராட்டு) திருவிழாவினையும் கொண்டாடி வருகின்றனர் என்பதை,

*தூராத்தவன் தூரியால் தீட்டங்கொண்டு ஆராட்டு*

(மலங்கழிக்காத்தவன் மலங்கழித்தால் மலத்தினைக் கொண்டு நீராட்டு நடத்துவர்)

எனும் பழமொழி ஆராட்டு விழா நடந்ததற்கானச் சான்றாக அமைந்துள்ளதைக் காணலாம். இவ்விழாவின் பொழுது யானையின் மீது சிலர் அமர்ந்த நிலையிலும் பறை அடித்துச் சிலரும், பாண்ட் வாத்தியங்களை இசைத்துக் கொண்டு சிலரும் கடைத் தெருக்களின் வழியாகக் கோயிலுக்குச் செல்கின்றனர் என்பதை கள ஆய்வின் போது அறியமுடிந்தது. இதை,

*ஆன புறத்து கேரணம்*
*அங்ஙாடியில் கூடி போகணம்*
*கொட்டும் மேளவும் வேணம்*
*ஆரும் காணான் பாடில்லா*
(யானை மீது ஏற வேண்டும்
அங்காடியின் வழியாக செல்ல வேண்டும்
கொட்டும் வாத்யங்களும் வேண்டும்
யாரும் பார்க்கவும் கூடாது)

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது. இந்த ஆராட்டு விழாவின் போது ஏழு அல்லது ஒன்பது அல்லது பதினொன்று யானைகள்

அலங்காரத்துடன் வருதல் என்பது இவ்விழாவிற்கு உரிய சிறப்பாகும். அதே போன்று இம்மாவட்டத்தில் 'நெம்மாரா வல்லங்கி வேல' என்ற வேலத் திருவிழாவினையும் வருடந்தோறும் ஏப்ரல் மூன்றாம் தேதியன்று நடத்தி வருகின்றனர். தத்தமங்கலம் எனும் இடத்தில் குதிரை விளையாட்டு என்று கூறக்கூடிய 'குதிரக்களியினை' நடத்தி வருகின்றனர். இதனை,

*குத்துன ஒலக்கயிட்டிட்டு குதிரக்களி காணான் போய போலே*
(குத்துகின்ற உலக்கையினைப் போட்டுவிட்டு குதிரை விளையாட்டை பார்க்கப் போனது போல)

எனும் பழமொழி நிருவுவதைக் காணலாம்.

### 3.2.5.3 இறைவழிபாடு

பாலக்காடு மாவட்ட மக்கள் இறை நம்பிக்கை கொண்டுள்ளவர்களாகவும், அதனால் கோயிலுக்குச் சென்று வழிபட்டு வரக்கூடிய வழக்கம் உடையவர்களாகவும் உள்ளனர் என்பதை கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளின் மூலம் அறியமுடிகிறது. இவர்கள் அதிகமாக கணபதி, சிவன், ஐயப்பன் போன்ற கோயிலுக்குச் சென்று வருபவர்களாக உள்ளனர். இதனை,

*வழியம்பலத்தில் வெச்சு பொதியழிக்கருது*
(வழியில் தெரிகின்ற கோயிலுக்கு முன்பு சென்று பொதியினை அழிக்கக் கூடாது)

*கணபதிக்கு வெச்சது காக்க கொண்டு போயி*
(கணபதிக்கு வைத்தது காக்காய் எடுத்து சென்று விட்டது)

*தெய்வம் தன்னாலும் சனியன் தின்னாந்தரில்லா*
(கடவுள் தந்தாலும் சனியன் சாப்பிட விடமாட்டார்)

*இப்போழத்த தெய்வம் அப்போழய்க்கப்பல்*

(இப்பொழுதுள்ள கடவுள் உடனுக்குடன்)

*தான் பாதி தம்புரான் பாதி*

(நான் பகுதி கடவுள் பகுதி)

போன்ற பழமொழிகள் ஊடாக உணரலாம். மக்கள் அனைவரும் புழங்கிக் கொண்டிருக்கின்ற இடங்களில் தான் இம்மாவட்டத்தில் கோயில்கள் அமைந்திருக்கும் என்று முதல் பழமொழியும், தங்களுடைய காரியங்கள் யாவும் நடைபெற்று விட்டதெனில் கணபதிக்கு பிடிக்கக் கூடிய பொருட்களை வைத்து பூசை அல்லது வழிபாடு நடத்தக் கூடிய பழக்கம் இம்மக்களிடையே உள்ளது என்று இரண்டாவது பழமொழியும் உணர்த்தி நிற்பதைக் காணலாம். உள்ளூரிற்குள் இருக்கின்ற கோயில்களுக்கு மட்டுமின்றி காசிக்குச் சென்று வழிபட்டு வரக்கூடிய மக்களும் இம்மாவட்டத்தில் உள்ளனர் என்பதை,

*காசினெ மோஹிச்சு காசிக்கு போய போலே*

(பணத்திற்கு ஆசைப்பட்டு காசிக்கு போனது போல)

எனும் பழமொழி உணர்த்துகிறது. மேற்கூறப்பட்ட இப்பழமொழிகளின் மூலம் இம்மக்கள் எந்த அளவிற்கு கோயில் மீதும் கடவுளின் மீதும் பக்தி கொண்டுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

வருடத்திற்கு ஒரு முறை கோயில் விழாக்களின் போது வாள் எடுத்து பூசாரி ஆடக்கூடிய வழக்கம் உள்ளது என்பதை கள ஆய்வின் போது காண முடிந்தது. இதற்கு

*வாளெடுத்தவனெல்லாம் வெளிச்சப்பாடல்லா*

(வாள் எடுத்தவர்கள் அனைவரும் பூசாரிகள் கிடையாது)

எனும் பழமொழி சான்றாக அமைந்துள்ளதைக் காணலாம்.

### 3.2.6 உயிரினங்கள் தொடர்பான பழமொழிகள்

தொல்காப்பியர் பொருளதிகார மரபியலில் “ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே” என்று உயிரினங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். பாலக்காடு மாவட்டத்தில் ஐயறிவு விலங்குகளான மாடு, யானை, நாய், காளை, முயல், எருமை, பன்றி, குள்ளநரி போன்ற விலங்குகளும்; காக்காய், கோழி கொக்கு போன்ற பறவைகளும்; தேனீ என்ற பூச்சியும்; அணில், பாம்பு, எலி, தேள் போன்ற ஊர்வனவும் உள்ளன என்பதை கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளின் மூலம் அறியமுடிந்தது. அவற்றை விரிவாகக் காண்போம்.

#### 3.2.6.1 கால்நடைகள்

ஒவ்வொரு விலங்கும் ஒரு சில தனித்தன்மைகளைக் கொண்டிருப்பதைக் காணலாம். அவ்வகையில், பாலக்காடு மாவட்டத்திலுள்ள நன்றியுள்ள விலங்கான நாய்களில் ஆண் நாயினை நாய் என்றும், பெண் நாயினை பட்டி எனும் பெயரால் வழங்கி வருகின்றனர். இந்த நாயானது வீட்டினை பாதுகாத்து வருவதோடு மட்டுமின்றி, வீட்டில் இருப்பவர்கள் செல்லக்கூடிய இடங்களுக்கும் சென்று வருகிறது. இதனை,

*பட்டி சந்தைக்கு போய போல*

(பெண் நாய் சந்தைக்கு போனது போல)

எனும் பழமொழியால் அறியலாம். இங்கு ‘பட்டி’ என்பது பெண் என்ற பொருளில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த நாயானது எலும்புகளை தனது உணவாக உட்கொண்டு வரும் என்பதை,

*ஒரு பட்டிக்கு ரெண்டு எல்லு எந்தினு*

(ஒரு நாய்க்கு இரண்டு எலும்பு எதற்கு)

எனும் பழமொழி விளக்கி நிற்பதைக் காணலாம். அதே போன்று நாயினுடைய உருவத்தினைப் பற்றிக் குறிப்பிடுகையில், ‘ஆயிரம் வருஷம் நாயின்டெ வாலு

குழலிலிட்டாலும் வளஞ்ஞேயிரிக்கூ' (ஆயிரம் வருடம் நாயினுடைய வாலினை குழலில் போட்டாலும் வளைந்து தான் இருக்கும்) என்றும் 'கடலில் சென்னாலும் நக்கிக் குடிக்கன நாய் நக்கியே குடிக்கூ' (கடலில் சென்றாலும் நக்கிக் குடிக்கின்ற நாய் நக்கித்தான் குடிக்கும்) என்றும், நாயானது நீர் குடிக்கின்ற நிலையினையும், குணத்தினையும் நாயினுடைய வாலானது வளைந்து தான் இருக்கும் என்றும் வெளிப்படுத்திக் கூறுவதாக பழமொழிகள் அமைந்துள்ளன. வீடுகளில் நாய் மட்டுமன்றி பசுக்களையும் வளர்த்து வந்துள்ளனர் என்பதை,

*பணம் கொடுத்து மாடு வாங்கியால்*
*பவன் கொடுத்து தொளுத்து கெட்டணம்*
(பணம் கொடுத்து மாடு வாங்கினால்
பவன் கொடுத்து தொளுவம் கட்ட வேண்டும்)

என்ற பழமொழி சான்றாதாரமாக நிற்பதைக் காணலாம். மாட்டினை நல்ல முறையில் போதுமான வசதிகளுடன் தொளுவில் கட்டி கவனித்து வந்துள்ளனர் என்பதை இப்பழமொழியின் மூலம் அறியமுடிகிறது. இம்மாட்டினை தொளுவில் மட்டும் கட்டி வைக்காமல் அதன் விருப்பப்படி கட்டிலிருந்து அவிழ்த்துவிட்டு மேய்ந்து வரவும் செய்துள்ளனர். இதனை,

*மேயுந்ந மாட்டினெ நக்குன்ன மாடு கேடு வருத்தும்*
(மேய்ந்து கொண்டிருக்கின்ற மாட்டினை நக்கிக் கொண்டிருக்கின்ற
மாடானது மேபவிடாமல் செய்து விடும்)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம்.

இம்மாவட்ட மக்கள் பூனையினை செல்லப்பிராணியாகவும், இவர்களுக்கு தொல்லை தரும் எலியினை பிடிப்பதற்காகவும் வளர்த்து வந்துள்ளனர். இது காலமறிந்து செயல்படக் கூடிய விலங்கு. இதனை, 'மிண்டாப்பூச்சா கலமுடயிக்கும்' (பேசாமல் இருக்க் கூடிய பூனை பானையினை உடைத்துவிடும்)

என பூனையின் குணத்தினைப் பற்றிக் கூறுகின்றனர். அமைதியாக இருக்கக் கூடிய பூனையானது சில வேளையில் அதற்கு தேவையான உணவினை உண்ண வேண்டுமெனில் பானையினை தட்டிவிட்டு அதிலுள்ள உணவினை உட்கொண்டு விடும் என்ற கருத்தும் கூட இப்பழமொழியில் அமைந்திருப்பதைக் காணலாம். மேலும் யானையின் உருவத்தினைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*யானைக்குத் தடி பாரம் உரும்பினு அரி பாரம்*

(யானைக்கு பெரும் மரம் பாரம் எறும்பிற்கு அரிசி பாரம்)

என நேர் எதிராக இருக்கக் கூடிய இரு உருவத்தினை (யானை, எறும்பு) பற்றி பழமொழியில் பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். சேற்றில் வாழக்கூடிய ஒரு விலங்கு பன்றி. இப்பன்றியின் குணத்தினை,

*வெடி கேட்ட பந்நி பாயும் போலே*

(வெடி சத்தம் கேட்ட பன்றி பாய்வதைப் போல)

எனும் பழமொழியின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

*குருக்கண்டெ கண்ணு எப்பழும் கோழிக்கூட்டிலா*

(குள்ளநரியின் கண்கள் எப்பொழுதும் கோழிக்கூட்டில் தான்)

எனும் பழமொழி, குள்ளநரி இரவு நேரங்களில் வந்து கோழிகளைப் பிடித்து சென்று விடுவதன் அனுபவ அடிப்படையில் கூறப்படுகிறது.

எருது என்பது மனிதர்களுக்கு உதவி செய்யக்கூடிய விலங்காக காட்சியளிக்கிறது. இதை வேளாண்மைத் தொழில் செய்யக் கூடிய மக்கள் அதிகமாகப் பயன்படுத்தி வருகின்றனர்.

*காள வாலு பொக்குன்னது போலே*

(காளை வாலினை தூக்குவது போல)

எனும் பழமொழி உணர்த்துகிறது.

விவசாயம் செய்யக்கூடிய மக்கள் எருதுகளை நுகத்தில் பூட்டி பயன்படுத்தியும் வந்துள்ளனர். இதை,

*மூரியோடு சோதிச்சிட்டு வேணோ நுகம் வெக்கான்*

(காளையிடம் கேட்டுவிட்டா நுகம் வைப்பது)

எனும் பழமொழி விளக்குகிறது. எருது என்பதை இம்மக்கள் ‘மூரி’ எனும் சொல்லால் வழங்கி வந்துள்ளனர். நடக்காத காரியம் ஒன்றை ஒருவர் கூறும் போது அதைக் கேலி செய்ய,

*காள பெற்றென்னு கேட்டு கயறெடுக்குன்னது போலே*

(எருது பிரசவித்தது எனக் கேட்டு கயிறினை எடுப்பது போல)

எனும் இப்பழமொழியைக் கூறுகின்றார்.

முயல் எனும் விலங்கானது தோற்றத்தில் மிகச் சிறியதாகும். பொதுவாக முயல்கள் புதர்களில் ஒளிந்து வாழ்கின்றன. விவசாய நிலங்களிலும் இவை காணப்படுகின்றன. அபூர்வமாக நடக்கும் ஒரு செயலைச் சொல்ல,

*ஒரிக்கல் சக்கவீணு முயலு சத்தென்னு வெச்சு எல்லாய்ப்*
*போலும் சக்கவீணு முயலு சாகணமென்னில்லா*

(ஒருமுறை பலாப்பழம் விழுந்து முயல் இறந்து விட்டது
என்று எப்பொழுதும் பலாப்பழம் விழுந்து முயல் சாக
வேண்டுமென்பதில்லை)

இப்பழமொழி பயன்படுத்தப்படுகிறது. யானைக்கும் அடி சறுக்கும் என்பதைப் போல அனைத்து மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் ஒரு முறை தான் ஏமாற்றம் ஏற்படும் என்று முயலின் மூலம் கூறியிருப்பதையும் காணலாம்.

### 3.2.6.2 பறவைகள்

பாலக்காடு மாவட்டத்தில் விலங்குகள் மட்டுமின்றி கொக்கு, காக்கை, கோழி போன்ற பறவைகள் உள்ளன என்று கள ஆய்வின் போது சேகரிக்கப்பட்ட பழமொழிகளின் மூலம் அறிய முடிகிறது.

கொக்கு என்பது வயல் வெளிகளிலும், குளம் போன்ற இடங்களிலும் அமர்ந்திருப்பதைக் காணலாம். இது குளத்திலுள்ள மீன்களை தனது உணவாக உட்கொள்ளுவதற்காக பல குளக்கரைகளிலும் சென்று வரும். இதனை,

*ஈக் கொக்கு எத்ர குளம் கண்டதா*

(இந்தக் கொக்கு எத்தனை குளம் பார்த்ததுண்டு)

எனும் பழமொழியின் மூலம் அறியலாம்.

*காக்கா கண்டறியும் கொக்கு கொண்டறியும்*

(காக்காய் பார்த்து புரிந்து கொள்ளும்

கொக்கு அடிவாங்கி தெரிந்து கொள்ளும்)

எனும் பழமொழி, காக்காய் சுயமாக புரிந்து கொள்ளக் கூடிய திறமை பெற்றிருக்கக் கூடிய பறவை என்றும், கொக்கு பிறர் சொல்லி புரிய வைக்கக் கூடிய திறம் பெற்றிருக்கக் கூடிய பறவை என்றும் இருபறவைகளின் குணத்தினைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது. இங்கு இரு பறவைகளை மனிதர்களுடன் ஒப்பிட்டுக் கூறுவதாக அமைந்துள்ளது என்ற ஒரு கருத்து கூட இருப்பதைக் காணலாம்.

காக்காய், கோழி என்ற இரு பறவைகளும் எதிரிகளாக இருக்கக் கூடிய பறவைகளாகும். இதனை,

*காக்க தின்னுன்னது கோழிக்கு கண்டுகூடா*

(காக்கா சாப்பிடுவது கோழிக்கு பார்க்கப் பிடிக்காது)

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

*முட்டையிடுன்ன கோழிக்கல்லே முண வேதன அறியூ*

(முட்டை போடுற கோழிக்குத்தான் குண்டி வலி தெரியும்)

முட்டைக்காகவும் இறைச்சிக்காகவும் கோழிகள் இல்லங்களில் வளர்க்கப்படுகின்றன.

### 3.2.6.3 பூச்சிகள்

பாலக்காடு மாவட்டம் மலைகளாலும், காடுகளாலும், சூழ்ந்திருக்கக் கூடிய பகுதியாகும். இப்பகுதிகளில் அடர்ந்த மரங்கள் காணப்படுகின்றன. இம்மரங்களில் தேனீக்கள் தேன் கூடுகளை வைத்து வருகின்றன. இதனை,

*கடன்னல் கூட்டில் கல்லெரியருது*

(தேன் கூட்டில் கல்லெறியக் கூடாது)

எனும் பழமொழியின் மூலம் அறிய முடிகின்றது. இப்பழமொழியானது கோப்படும் ஆட்களை சீண்டக்கூடாது. அவ்வாறு சீண்டினால் பின் விளைவுகள் மோசமாக இருக்கும் என்ற கருத்தினை முன் வைத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. இந்த தேனீ மட்டுமின்றி ஊர்வனவற்றைச் சார்ந்திருக்கக் கூடிய அணில், பாம்பு, எலி, ஒந்து, தேள் போன்றவை பற்றிக் கூறக்கூடிய பழமொழிகளையும் காணமுடிகின்றன.

மரங்களில் விரைவில் ஏறி ஊர்ந்து செல்லக்கூடிய திறமை படைத்திருக்கக் கூடிய பிராணி அணில். இதை,

*அண்ணான் மூத்தால் மரம் கேற்றம் மறக்குமோ?*

(அணில் வளர்ந்து விட்டது எனில் மரம் ஏறுவதை மறந்து விடுமா?)

எனும் பழமொழி விளக்குகிறது. சிறியவர்கள், பெரியவர்களாக வளர்ந்து விட்டாலும் அவர்களுக்கு என்றிருக்கக்கூடிய அடிப்படைக் குணங்கள் மாறாது என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது.

ஓந்து என்பது அடிக்க தன்னுடைய நிறத்தினை மாற்றிக் கொள்ளக் கூடிய தன்மை பெற்றிருக்கக் கூடிய விலங்கு. இதனை,

*ஓந்து நிறம்மாரும் போலே*

(ஓந்து நிறம் மாற்றுவதைப் போல)

எனும் பழமொழி சான்று பகர்ந்து நிற்பதைக் காணலாம். ஓந்து என்பது அதிகமாக வேலிகளில் ஊர்ந்து செல்வதைக் காணலாம். இதை 'ஓந்து போயால் எவிடம் வரெ போகும்' (ஓந்து சென்றால் எந்த இடம் வரை செல்லும்) என்று இம்மக்கள் கேலி செய்து கூறுவதையும் இப்பழமொழியால் உணரலாம். மேலும், பாம்பினைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*காலினெ சுற்றிய பாம்பு கடிக்காதெ விடில்லா*

(காலைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் விடாது)

எனும் பழமொழி, பாம்பை மிதித்து விட்டால் உடனே பழி வாங்கிவிடும் என்று பாம்பினுடைய குணத்தினைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு பாம்பு கடித்தாலும் 'கடிச்ச பாம்பினெக் கொண்டு விஷம் இறக்கணம்' (கடித்த பாம்பினை வைத்து நஞ்சினை எடுக்க வேண்டும்) பாம்பு கடித்துவிட்டால் விஷம் இறக்கும் இடங்கள் இங்கு உள்ளன. அதனடிப்படையில் இப்பழமொழி அமைந்துள்ளது.

இம்மாவட்டத்தில் விவசாயம் செய்யக்கூடிய மக்கள் அதிகமாகக் காணப்படுகின்றனர். ஆதலால் இவர்களுடைய வீடுகளில் அதிகமாக எலி இருப்பதைக் காணலாம். இதனை,

*எலியெ பேடிச்சு இல்லம் சுட்ட போலே*

(எலிக்குப் பயந்து வீட்டைச் சுட்டெரித்தது போல)

எனும் பழமொழி விளக்குகிறது. மேலும், தேள் என்பது வாலில் நஞ்சினை வைத்துக் கொண்டு ஊர்ந்து கொண்டிருக்கும் என்பதை,

*தேளினு வாலில் விஷம் தேவிடிசிக்கு உடலாகெ விஷம்*

(தேளிற்கு வாலில் நஞ்சு தேவடியாளுக்கு உடம்பு முழுவதும் நஞ்சு)

எனும் பழமொழியில் உணரலாம்.

*மீன் குஞ்ஞினெ நீந்தல் படிப்பிக்கனோ?*

(மீன் குஞ்சிற்கு நீச்சல் கத்துக் கொடுக்க வேண்டுமா?)

இப்பழமொழி குலதொழிலைக் குழந்தைகள் இயல்பாகவே கற்றுக் கொள்வார்கள் என்று கூறுகிறது.

### 3.2.7 பிறபழமொழிகள்

பாலக்காடு மாவட்ட பிற பழமொழிகள் தத்துவம், அறிவுரை, இயற்கைச் செய்திகள் என்பதன் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. அவை கீழ்வருமாறு,

#### 3.2.7.1 தத்துவம்

அறிவு குன்றிய நிலையில் இருக்கின்ற ஒருவரிடம் பரந்துபட்ட உலகிலுள்ள நிகழ்ச்சியினைப் பற்றிக் கூறினால் அவருக்கு ஒன்றும் தெரியாது என்பது உலகத்தவரால் ஏற்றுக் கொண்ட உண்மையாகும். என்பதை,

*குளத்திலெ மீனினு கடலின்டெ கதயறியுமோ?*

(குளத்திலுள்ள மீனிற்கு கடலிலுள்ள கதையைப் பற்றித் தெரியுமா?)

எனும் பழமொழி வெளிப்படையாக உணர்த்தி நிற்பதைக் காணலாம். அறிவாளியாக இருக்கிறோம் என நினைத்து அடக்கமின்றி ஆணவத்துடன் செயல்படுதல் கூடாது. அவ்வாறு நடந்தார்களெனில் அதற்கான தண்டனை நிச்சயமாக உடனுக்குடன் கிடைக்கும். இதை,

*செம்மீன் சாடியால் முட்டோளம்*

*பின்னயும் சாடியால் சட்டியோறம்*

(செம்மீன் சாடினால் முட்டுங்கால் வரை

பிறகும் சாடினால் சட்டியினுள் வரை)

என்ற தத்துவார்ந்த உண்மையினை இப்பழமொழியின் மூலம் அறியலாம். ஒரு மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை, அவனது தோற்றத்திலும் உருவத்திலும் மாற்றங்கள் ஏற்படலாம். ஆனால் அவனுடைய குணமானது ஒரு போதும் மாறாமல் எப்பொழுதும் ஒரே போன்று தான் இருக்கும் என்ற நிலையான உண்மையினை,

*நடுகடலில் சென்னாலும் நக்கிக் குடிக்கன நாய் நக்கியே குடிக்கூ*

(நடுக்கடலில் சென்றாலும் நக்கிக் குடிக்கின்ற நாய் நக்கித் தான் குடிக்கும்)

எனும் பழமொழியின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. மட்டுமின்றி நமக்குத் தீமை தரக்கூடிய செயல்கள் இயல்பாகவே நடக்கும் என்ற தத்துவார்ந்த உண்மை நிலையினை,

*தொட்டாவாடி நட்டு வளர்த்தனோ?*

(தொட்டாவாடிச் செடி நட்டு வளர்த்த வேண்டுமா?)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம்.

ஒன்றை மனதில் நினைத்துச் செய்யும் போது அது வேறொன்றாக மாறிவிடுகிறது என்பதை, ‘கணபதிக்கு வெச்சது காக்க கொண்டு போயி’ (கணபதிக்கு வைத்த பொருள் காக்கை கொண்டு சென்று விட்டது) எனும் பழமொழி நிரூபித்து நிற்பதைக் காண முடிகின்றது.

*தொடக்கம் நன்னாயால் ஒடுக்கவும் நன்னாயிரிக்கும்*

(துவக்கம் நன்றாக இருந்தால் இறுதியும் நன்றாக இருக்கும்)

எனும் பழமொழியானது, ஒரு செயலைச் செய்வதற்கு முன்பாக கடவுளை வழிபட்டு

படிப்பறிவு குன்றி இருக்கக் கூடியவர்களது நாட்டில் சிறிது படிப்பறிவு இருப்பவர்கள் தங்களை உயர்ந்த நிலையில் காட்டிக் கொள்வர் என்பதைக் குறிப்பிட,

*குருடன் நாட்டில் கோங்கண்ணன் ராஜாவு*

(குருடாக இருப்பவனுடைய ஊரில் மாருகண்ணுடன் இருப்பவன் ராஜாவாம்)

எனும் பழமொழி வெளிப்படையாக கூறியிருப்பதைக் காணலாம்.

நமக்கு ஒரு பொருள் வேண்டுமெனில், அதற்காக முறையாக செயல்பட்டால் மட்டுமே அதை நம்மால் பெறமுடியும் என்பது உலகத்தவரால் ஏற்றுக் கொண்ட உண்மையாகும். சான்றாக,

*கரயுண்ண குஞ்ஞிநெ பாலுள்ளு*

(அழுத புள்ளைக்குத் தான் பால்)

என்ற தத்துவார்ந்த நிலையினை பழமொழியில் காணலாம். அதே போன்று, எந்தவொரு பொருளாக இருப்பினும் அதற்கான அமைப்புடன் இருக்க வேண்டும். இதனை,

*கட்டில் செறுதானெங்கிலும் காலு நாலு வேணம்*

(கட்டில் சிறியதாக இருந்தாலும் கால்கள் நான்கு வேண்டும்)

ஒன்றின் அழிவு மற்றொன்றின் பெருக்கத்திற்குக் காரணமாகும் என்பதற்கு,

*ஒண்ணு சீஞ்ஞால் மற்றொன்னினு வளம்*

(ஒன்று அழுகி விட்டால் மற்றொன்றிக்கு வளமாக இருக்கும்)

எனும் பழமொழியால் அறியலாம். இந்த தத்துவார்ந்த உண்மைகள் மட்டுமின்றி நாம் அதைப் பேசும் பொழுதும் நன்கு யோசித்து பேச வேண்டும். நரம்பின்றி இருக்கக்

செய்து வந்தால் அச்செயலானது இறுதிவரை நன்றாக அமையும் என்று அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட தத்துவார்ந்த உண்மை நிலையினை விளக்குகிறது.

ஒருவரைப் பற்றி யாரேனும் ஏதேனும் குறை கூறினார்களெனில், பின்னர் அது அவரைச் சுற்றியுள்ள அனைவரையும் பாதித்து விடும் என்ற உண்மை நிலையினை,

*நீளத்தில் தள்ளியால் வட்டத்தில் தெரிக்கும்*
(நீளமாக அடித்தால் வட்டமாக தெரித்து விடும்)

எனும் பழமொழியின் மூலம் உணரலாம்.

வசதியின்றி இருப்பவர்கள், திடீரென்று வசதி படைத்தவர்களாக மாறி விட்டார்களெனில் என்ன செய்வதென்று அறியாது நிலைதடுமாறி சில செயல்களை செய்து வருவர். இதனை, 'சிலம்பிட்ட பாணன் நிலத்து நிக்கில்லா' (சிலம்பணிந்த பாணன் நிலத்தில் நிற்கமாட்டான்) எனும் பழமொழி வெளிப்படுத்தி நிற்பதைக் காணலாம். பாலக்காடு மாவட்டத்தில் பாணர் என்பவர் முடிவெட்டும் தொழிலைச் செய்யக்கூடிய 'நாவிதன்' என்பவர்களைக் குறிக்கக் கூடிய சொல்லாகும். மரணமடையும் தருவாயில் மக்கள் நல்லதைச் சொல்வார்கள் என்பதை,

*கெடாராகும்போ விளக்கு ஆளிக்கத்தும்*
(கெட்டு விடும் பொழுது விளக்கு நன்றாக எறியும்)

எனும் பழமொழியால் அறியலாம். அளவுக்கு அதிகமானால் அமிர்தமும் நஞ்சு என்பதை,

*குளிப்பிச்சு குளிப்பிச்சு குஞ்ஞில்லாதாயி*
(குளிக்க வைத்து குளிக்க வைத்து குழந்தையில்லாமல் ஆயிற்று)

என்னும் பழமொழி கூறுகிறது.

கூடிய நாவின் மூலம் ஏதேனும் யோசனையின்றி பேசிவிட்டோமெனில் அதை திரும்ப நம்மால் பெற முடியாது என்பதை,

*எறிஞ்ஞ கல்லும் பரஞ்ஞ வாக்கும் திரிச்செடுக்கானாவில்லா*

(எறிந்த கற்களும் கூறிய சொற்களும் திரும்ப எடுக்க முடியாது)

என்பதால் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

*இரும்பும் வித்யயும் இரிக்கெ கெடும்*

(இரும்பும் படிப்பும் இருக்கும் பொழுது கெட்டு விடும்)

எனும் பழமொழியானது, நமக்கு தெரியக் கூடிய விஷயங்களை பிறரிடமும் கூறி பகிர்ந்து கொள்ள வேண்டும். இல்லையெனில் அதனால் ஒரு பயனுமில்லை என்று மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை நிலையினை எடுத்தியம்புவதாக பழமொழி அமைந்துள்ளது. தவறுகள் செய்பவர்களுக்கு நிச்சயமாக கடவுள் உடனுக்குடன் தண்டனை கொடுத்து விடுவார். இதனை,

*இப்போழத்த தெய்வம் அப்போழக்கப்பல்*

(இப்பொழுதுள்ள கடவுள் உடனுக்குடன்)

*உப்பு தின்னவன் வெள்ளம் குடிக்கும்*

(உப்பு சாப்பிட்டவன் தண்ணீர் குடிப்பான்)

எனும் பழமொழிகளில் தத்துவார்ந்த உண்மைகள் வெளிப்பட்டுள்ளமையைப் புரிந்து கொள்ள முடிகின்றது.

மேற்கூறப்பட்ட பாலக்காடு மாவட்ட மலையாளப் பழமொழிகளின் கருத்துகள் அனைத்தும் உண்மையான நிலையினை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளன என்று எவ்விதமான ஐயமுமின்றி கூறலாம்.

### 3.2.7.2 அறிவுரை

பாலக்காடு மாவட்டத்தில் நன்மை தரக்கூடிய எந்த செய்தியாக இருப்பினும், சிறியவர் பெரியவர் என்று பாராமல் அறிவுரை கூறுகின்றனர். இதை கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளின் மூலம் அறிந்து கொள்ள முடிந்தது.

அறிவில் சிறந்து பிறருக்கு உதவக் கூடிய மனப்பான்மை கொண்ட மனிதர்களுக்கும் கூட சில நேரங்களில் தடுமாற்றம் ஏற்படலாம். ஆனால் அவர்கள் தான் இவ்வுலகில் பெரியவர்கள் எந்த விதமான தீமையும் செய்யாதவர்கள் என்று நினைத்து முழுமையாக அவர்களை நம்புதல் கூடாது. நமக்கு தீமை செய்யக் கூடியவர்களின் தொடர்பினை அறவே ஒழித்து விட வேண்டும் என்பதற்குச் சான்றாக,

*பொன்னு காய்க்கன மரமாயாலும்*
*புறய்க்கு சாஞ்சால் வெட்டணம்*
(தங்கம் காய்க்கின்ற மரமாக இருந்தாலும்
வீட்டின்மேல் சரிந்தால் வெட்ட வேண்டும்)

என்ற அறிவுரை கருத்தினைக் கூறுவதாக இப்பழமொழி அமைந்துள்ளது.

குடும்பம் எனும் பொழுது பலவிதமான பிரச்சினைகள் இருக்கும். பிரச்சினைகள் இல்லாத குடும்பங்கள் இல்லை. அதனால் அவரவர்களுடைய பிரச்சினைகளை அவரவர்களே தீர்த்துக் கொள்ள வேண்டும். அன்றி வேறொருவரை நாடிச் செல்லுதல் கூடாது என்பதை,

*அவனவன்டெ பல்லினெக்குத்தி ஆரான்னெ நாற்றிக்கனோ*
(அவரவர்களுடைய பல்லினைக் குத்தி பிறரிடம் நாற்றத்தைக்
காண்பிக்கலாமா?)

எனும் அறிவுரையினைக் கூறுவதாக இப்பழமொழி அமைந்துள்ளது என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

ஒரு பிரச்சினை ஏற்பட்டிருக்கும் பொழுது, பிரச்சினை உருவாவதற்குக் காரணமாக இருக்கின்ற ஒருவரை மட்டும் அழைத்து விசாரிக்காது இருவரையும் அழைத்து விசாரிக்க வேண்டும் என்பதற்குச் சான்றாக,

*ஒரு ஏடு எடுத்தால் ரெண்டு பாகவும் வாயிக்கணம்*

(ஒரு காகிதம் எடுத்தால் இரண்டு பக்கமும் படிக்க வேண்டும்)

எனும் அறிவுரையினைக் கூறுவதாக பழமொழி அமைந்துள்ளது. இங்கு 'ஏடு' என்ற தமிழ்ச் சொல்லினை மலையாள மக்கள் பயன்படுத்தியுள்ளமையைக் காணலாம். பிள்ளைகளை நல்ல முறையில் வளர்க்க வேண்டும் என்பதை,

*ஒன்னானெங்கிலும் ஒலக்க கொண்டு அடிக்கணம்*

(ஒரு பிள்ளையாக இருப்பினும் உலக்கை வைத்து அடிக்க வேண்டும்)

எனும் பழமொழியின் மூலம் அறிய முடிகின்றது. இல்லையெனில் அவர்கள் வளர்ந்து விட்டார்களெனில் பெற்றோர்களின் சொற்களைக் கேளாமல் அடங்காபிடாரியாக மாறி விடுவார்கள் என்ற அறிவுரையை கூறும் விதமாக இப்பழமொழி அமைந்துள்ளது.

வசதி குன்றிய நிலையில் இருப்பவர்களைப் பார்த்து உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் ஏதேனும் காரணங்கள் வைத்து துன்புறுத்தவும், கேலி செய்யவும் செய்வதைக் காணலாம். அவ்வாறு இருப்பவர்களை கடவுள் மிகவும் கடுமையாக தண்டித்து விடுவார் என்பதற்குச் சான்றாக,

*எளியவனெ வலியவனடிச்சால்*
*வலியவனெ வல்லவனடிக்கும்*
(தாழ்ந்தவர்களை உயர்ந்தவர்களடித்தால்
உயர்ந்தவர்களை கடவுளடித்து விடுவார்)

எனும் பழமொழியின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

நாம் உயிருடன் இருப்பது சில நாட்களுக்கு மட்டும். அதில் எந்த மனிதர்களையும் புண்படுத்தாமல் வாழ்ந்திருத்தல் வேண்டும் என்ற அறிவுரையைக் கூறுகிறது இப்பழமொழி.

வாழ்க்கையில் பொய்யை மட்டும் பேசிக் கொண்டு வாழ்பவன் இறுதியில் யாருடைய துணையுமின்றி அனாதையாக பிச்சையெடுத்து வாழவேண்டிய சூழல் ஏற்பட்டு விடும் என்று,

*உருட்டும் பிரட்டும் சம்சாரிக்குன்னவனு ஓடுக்கம் சிறட்டா*

(பொய்யும் பொரட்டும் பேசுபவன் இறுதியில் ஓடு எடுக்க வேண்டும்)

இப்பழமொழி உணர்த்துகிறது.

*குளிக்காதெ ஈரம் சுமக்குன்னது போலே*

(குளிக்காமல் நனைந்து கொண்டிருப்பதைப் போல)

இப்பழமொழியானது, தவறுகள் செய்யாமல் இருப்பவர்கள் தண்டனைகளைப் பெற்று கொண்டிருக்கின்றனர் என்பதைக் கூறுவதாக அமைந்துள்ளது.

எந்தவொரு செயலையும் பொறுமையுடனும் நிதானத்துடனும் செய்ய வேண்டும். அன்றி 'இரிக்கும்மும்பு கால்நீட்டருது' (உட்காருவதற்கு முன்பாக கால்களை நீட்டக் கூடாது) எனும் பழமொழி அறிவுரை கூறுவதாக அமைந்திருப்பதைக் காணலாம். அதே போன்று, ஒருவர் செய்யக் கூடிய வேலையினை ஒருவர் தான் செய்ய வேண்டும். அவ்விடத்தில் பலர் சேர்ந்தால் வேலைகள் ஒன்றும் நடைபெறாது. இதை,

*ஆளேறியால் பாம்பு சாவில்லா*

(ஆட்கள் அதிகமானால் பாம்பு சாகாது)

எனும் பழமொழியின் மூலம் அறியமுடிகின்றது.

*அவனவன்டெ கண்ணிலு போரல் வெச்சிட்டு*

*மற்றுள்ளவருடெ கண்ணிலு கரடு களயான் வரண்டா*

(அவரவர்களுடைய கண்களில் காயத்தை வைத்துக் கொண்டு

பிறருடைய கண்களிலுள்ள தூசியை எடுக்க வருதல் கூடாது)

இப்பழமொழியானது அவரவர்களிடமுள்ள குறைகளை மறைத்து வைத்துக் கொண்டு, பிறருடைய குறைகளை வெளிக்காட்டி விடுவார்கள். இவ்வாறு இருப்பவர்களிடம் நட்பு வைத்தல் கூடாது என்ற அறிவுரையினை எடுத்தியம்புவதாக உள்ளது. வீட்டிற்கு வரும் விருந்தினரை அன்புடன் இன்முகத்துடன் உபசரிக்க வேண்டும். அன்றி 'வெளுத்த சோறும் கருத்த முகவும் காட்டருது' (வெண்மையான சோறும் கருமையான முகமும் காட்டக்கூடாது) எனும் பழமொழி, இவ்வாறு விருந்து உபசரித்தால் ஒரு பயனுமின்றி போய்விடும் என்ற அறிவுரையைக் கூறுவதாக அமைந்துள்ளது.

வசதியிருப்பவர்கள் எப்படி வேண்டுமானாலும் வாழ்வார்கள். இதனை, 'முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கெட்டும் சரிச்சிட்டும் கெட்டும்' (முடி இருக்கின்ற பெண் சாய்த்தும் கட்டுவாள் சரிவாகவும் கட்டுவாள்) எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணலாம். நம்முடைய மூதாதையர்கள் வாழ்ந்த காலத்திலுள்ள பெருமைகளையும் சிறப்புக்களையும் கூறிக் கொண்டிருந்தால் அதன் மூலம் ஒரு பயனுமில்லை. என்பதை,

*பழம பரஞ்சு கொண்டிருன்னால் விசப்பு மாறுமோ?*

(பழமை பேசி கொண்டிருந்தால் பசி போய் விடுமா?)

எனும் பழமொழி உணர்த்துகிறது. இன்றைய காலகட்டத்தில் அவரவர்களுடைய வாழ்க்கையை அவரவர்கள் தான் கவனிக்க வேண்டும் என்ற அறிவுரையைக் கூறுவதாக அமைந்துள்ளது இப்பழமொழி.

பெண் குழந்தைகளை சரியான பருவத்தில் சாதி மத வேறுபாடின்றி உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்று பாராமல் பதினாறு வயது பூர்த்தியானவுடன் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்ற அறிவுரையினை கூறுவதாகவும் பழமொழி அமைந்துள்ளது. இதனை,

*பதினாறாயால் பறையனும் பிடிச்சு கொடுக்கணம்*

(பதினாறு வயது ஆனவுடன் பறையனுக்காவது திருமணம்

செய்து கொடுக்க வேண்டும்)

எனும் பழமொழியால் உணர்ந்து கொள்ள முடிகிறது. நாம் ஒருவருக்கு தீமை செய்தால் அவர்கள் அதை மறக்காமல் மனதில் வைத்து ஒன்றுக்கு இரு மடங்காக நமக்கு தீமை செய்து விடுவார்கள் என்பதை,

*நோவிச்சால் கடிக்காத்த பாம்பில்லா*

(துன்பப்படுத்தினால் கடிக்காத்த பாம்பில்லை)

எனும் பழமொழியின் மூலம் கூறுவதைக் காணலாம். இப்பழமொழியானது, யாருக்கும் தீமை செய்தல் கூடாது என்ற அறிவுரையைக் கூறுவதாக அமைந்துள்ளது. 'நம்மளு நிக்கேண்டிடத்து நம்மளு நிக்கணம், நாயினெ நிர்த்தேண்டிடத்து நாயினை நிர்த்தணம்' (நாம் நிற்க வேண்டிய இடத்தில் நாம் நிற்க வேண்டும், நாயினை நிற்க வைக்க வேண்டிய இடத்தில் நாயினை நிற்க வைக்க வேண்டும்) எனும் பழமொழி கூறும் அறிவுரை கருத்தானது நமக்கு இருக்கக் கூடிய மதிப்பை நாம் இழந்து விடுதல் கூடாது. யாருக்கு என்ன மதிப்பு கொடுக்க வேண்டும் என்பதையெல்லாம் உணர்ந்து செயல்படுதல் வேண்டும் என்பதைச் சுட்டிச் செல்கிறது. நமக்கு ஒரு செய்தி ஒருவரிடம் கூட வேண்டுமெனில் அதை நேரடியாக கூற வேண்டும். அன்றி பிறரிடம் கூறி சொல்லுதல் கூடாது என்பதற்குச் சான்றாக,

*தலயெ சுற்றி வாயிலிடருது*

(தலையினைச் சுற்றி வாயில் போடக்கூடாது)

எனும் பழமொழி அமைந்துள்ளது.

*கும்பத்திலு கொடமுருட்டும்*

(மாசி மாதத்தில் குடம் உருண்டு விடும்)

எனும் பழமொழிகளின் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

*செம்மானம் கண்டால் அம்மானத்து மழயில்லா*

(சிகப்பு நிறமாக வானம் இருந்தால் அந்த வானத்திலிருந்து மழை பெய்யாது)

எனும் பழமொழி மழை பெய்யாது என்பதற்கான அடையாளங்களைக் (அறிகுறிகளை) கூறுவதாக அமைந்துள்ளது. ஆவணி, மாசி போன்ற மாதங்களில் மழை பெய்யும் என்பதை,

*சிங்ஙத்தில் சீஞ்சிரிக்கும்*

(ஆவணி மாதத்தில் மழை சிறியதாக பெய்த்து கொண்டேயிருக்கும்)

*கும்பத்திலு மழை பெய்தா குப்பயிலும் நெல்லு*

(மாசி மாதத்தில் மழை பொழிந்து விட்டால் குப்பையிலும் கூட நெல்லிருக்கும்)

என்று மழை பெய்வதையும், அவ்வாறு மழை பெய்தால் ஏற்படக்கூடிய சிறப்பினைப் பற்றியும் கூறுவதாக அமைந்துள்ளதை பழமொழிகளின் மூலம் அறியமுடிகின்றது. மேலும், சித்திரை ஆடி போன்ற மாதங்களில் வெப்பம் அதிகரித்து காணப்படும். இதனை,

*மேடத்தில் மேடுருகும்*

(சித்திரை மாதத்தில் மேட்டு நிலப்பகுதி கூட உருகிவிடும்)

*கர்க்கடக வெயிலு கள்ளனும் கொள்ளில்லா*

(ஆடி மாத வெயிலின் போது திருடனும் வெளியில் இறங்கமாட்டான்)

போன்ற பழமொழிகளின் மூலம் உணரலாம். இந்த வெப்பம் அதிகரித்து காணப்படக் கூடிய நிலை கேரளாவில் குறிப்பாக பாலக்காடு மாவட்டத்தில் மட்டும் தான்

*தல மறன்னு எண்ண தேய்க்கருது*

(தலை மறந்து எண்ணெய் தேய்க்கக் கூடாது)

எனும் பழமொழி தகுதி அறிந்து செயல்படுதல் வேண்டும் என்கிறது.

*சம்பத்து காலத்து தைப்பத்து வெச்சால்*
*ஆபத்து காலத்து காப்பத்து திண்ணாம்*
(செல்வச் செழிப்புடன் இருக்கின்ற காலத்தில் பத்து செடிகளை நட்டு வைத்தால் வறுமையில் இருக்கின்ற காலத்தில் அதனுடைய பகுதியையாவது சாப்பிடலாம்)

எனும் பழமொழி கூறும் அறிவுரை கருத்தானது, செல்வச் செழிப்புடன் இருக்கக் கூடிய காலகட்டத்தில், சிறு சேமிப்பினையாவது சேகரித்து வைக்க வேண்டும். அவ்வாறு செய்தோமெனில், நமக்கு துன்பம் வரும் நேரத்தில் பிறரிடம் சென்று உதவி கேட்க வேண்டிய சூழல்களை தவிர்க்கவும் செய்யலாம் என்று கூறுவதாக அமைந்துள்ளது.

### 3.2.7.3 இயற்கைச் செய்திகள்

பாலக்காடு மாவட்ட கள ஆய்வின் போது மழை, மின்னல், இடி, மரம் போன்ற இயற்கை சார்ந்த பல பழமொழிகள் கிடைத்துள்ளன. அவற்றைக் கீழ்வருமாறு விளக்கி கூறப்படவுள்ளன.

இம்மாவட்டத்தில் தை, மாசி போன்ற மாதங்களில் பனி பெய்து காற்று வீசிக் கொண்டிருக்கும் என்பதை,

*மகரத்தில் மரம் பொளிக்கும்*
(தை மாதத்தில் மரம் உடைந்து விடும்)

காணப்படுகிறது. இவ்வாறு மேற்கூறப்பட்ட பழமொழிகள் அனைத்தும் இயற்கையினைப் பற்றிக் கூறுவதோடு மட்டுமின்றி ஒவ்வொரு மாதத்தின் சிறப்பினைப் பற்றியும் கூறியுள்ள நிலையினைக் காணலாம்.

### 3.2.7.4 துன்பம்

ஒருவருக்கு துன்பம் ஏற்பட்டு விட்டால் அவரை விடாமல் தொடர்ந்து ஆட்டிப் படைப்பதை பாலக்காடு மாவட்டப் பழமொழியில் காணமுடிகிறது. தன்னுடைய துன்பங்கள் அனைத்தும் தீர வேண்டும் எனக் கருதி கடவுளுக்காக முடியினைப் படைத்து வழிபாடு செய்கின்றனர். ஆனால் அவ்வேளையில், அவனை துன்பமானது பின் தொடர்ந்து மீண்டும் வந்துவிடுகிறது. இதனை,

> *கஷ்டகாலம் பிடிச்சவன்டெ தல மொட்டயடிச்சப்போ கல்லு மழ பெய்து*
>
> (கஷ்டகாலம் பிடித்தவனுடைய தலை மொட்டையடித்த பொழுது கல் மழை பெய்தது)

எனும் பழமொழியால் உணரலாம்.

### 3.2.8 வட்டாரமொழிச் சொற்கள்

கோவை மாவட்டத்தில் மட்டுமின்றி, பாலக்காடு மாவட்டத்திலும் வட்டாரத்திற்கு வட்டாரம், இடத்திற்கு இடம் பழமொழிகள் மாற்றமடைந்து வழங்குகின்ற நிலையினை கள ஆய்வின் போது சேகரித்த பழமொழிகளின் மூலம் அறிய முடிந்தது. அவை கீழ்வருமாறு கூறப்படவுள்ளது.

> *பயறு முளச்சால் பசு தொழுத்திலு கிடக்குவோ*
>
> (பயிறு செடி முளைத்தால் மாடு தொழுவில் கிடக்குமா?)

*பொள்ளாச்சி கெடக்கன பொதப்பினெ இவிடெ காலிட்டு கீரணா?*

(பொள்ளாச்சியில் இருக்கின்ற போர்வையை இங்கு கால்போட்டு கிழிக்க வேண்டுமா?)

*பயரு தீந்ந பர்யம்பரம் போலே*

(பயரு தின்று வீட்டிற்கு பின்னால போனது போல)

*நிலா வெளிச்சம் உண்டெந்நு கருதி வெளுக்குவோளம் கக்கான் பாடில்லா*

(நிலா வெளிச்சம் இருக்கிறது என்று நினைத்து நேரம் விடியும் வரை திருடக் கூடாது)

*கத்தன வீட்டிலு ஊருண கல்கோலு லாபம்*

(எறியற வீட்டில புடுங்கினது மிச்சம்)

*கோரிய கைலு எறயத்து*

(சாப்பாடு எடுக்கின்ற கரண்டி மேற்கூரையில்)

போன்ற பழமொழிகளில் ‘கிடக்குமா’ என்ற சொல்லைக் குறிக்கக் கூடிய ‘கிடக்குவோ’ என்ற சொல்லும், கிழிக்க வேண்டுமா என்பதைக் குறிக்க ‘கீரணா’ என்ற சொல்லையும், வீட்டிற்குப் பின்னால் என்ற சொல்லைக் குறிக்க் கூடிய ‘பர்யம்பரம்’ என்ற சொல்லையும், விடியும் வரை என்பதைக் குறிக்க ‘வெளுக்குவோளம்’ என்ற சொல்லையும், எறியும் என்ற சொல்லைக் குறிக்க ‘கத்துன’ என்ற சொல்லையும், பிடுங்கிய என்ற சொல்லைக் குறிக்கக் கூடிய ‘ஊருண’, மேற்கூரை என்ற சொல்லைக் குறிக்கக் கூடிய ‘எறயத்து’ போன்ற சொற்களைப் பயன்படுத்துகின்றனர். இச்சொற்களை பாலக்காடு மாவட்டத்திலுள்ள செங்கம்பொட்டா, கொல்லங்கோடு, மாத்தூர், தேக்கின்சிறா, நென்மேனி,

சிக்கனாம்பாறா போன்ற பகுதிகளில் வாழக்கூடிய முஸ்லீம், ஈழவர், செறுமர் போன்ற இனமக்களால் அதிகமாக வழங்கி வருவதைக் காணமுடிகின்றன.

### 3.2.9 தகாதசொற்கள் வரக்கூடிய பழமொழிகள்

பாலக்காடு மாவட்ட கள ஆய்வின் போது தகாத சொற்கள் வரக்கூடிய பழமொழிகள் அதிகமாகக் கிடைக்கவில்லை. இருப்பினும்,

ஒரு பெண்ணானவள் தலைமுடி அழகினையும், மார்பழகினையும் பெற்றவளாக இருக்க வேண்டும் என்பதை,

*பெண்ணுங்ஙள்க்கு முடியழகும் முலயழகும் வேணம்*
(பெண்களுக்கு தலைமுடியழகும் மார்பழகும் வேண்டும்)

என்று கூறப்பட்டுள்ளது. மேலும்,

*பயறு தின்ன பூரு போலே*
(பயறு தின்ற குண்டி போல)

இங்கு பொதுவாக குண்டி என்பதற்கு 'பூரு' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். இந்த இரு பழமொழிகள் மட்டுமே மலையாளத்தில் கிடைத்துள்ளன.

### 3.2.10 ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல மலையாளப் பழமொழிகள்

பாலக்காடு மாவட்டத்து கள ஆய்வின் போது ஒரே சூழலில் வழங்கக்கூடிய பல பழமொழிகள் குறைவாகத் தான் கிடைத்துள்ளன. அவை கீழ்வருமாறு காணலாம்.

நம்முடன் இருப்பவர்களே சில நேரங்களில் நமக்குச் சதி செய்து விடுவார்கள். அந்த மாதிரியான குணம் கொண்டவர்களும் நம்முடன் இருப்பார்கள் என்பதை,

*கூட நடன்னு குழியில் தள்ளுக*

(கூட நடந்து கொண்டு குழியில் தள்ளி விடுதல்)

*கேற்றி விட்டிட்டு கேணி வலிக்குக*

(ஏற்றி விட்டுவிட்டு ஏணியையும் இழுத்து விடுதல்)

*தோளத்திருன்னு செவி கடிக்குக*

(தோளில் இருந்து கொண்டு காதுகளை கடித்துவிடுவது)

போன்ற பழமொழிகள் ஒரு சூழலில் சொல்லக்கூடிய பல பழமொழிகளாக அமைந்துள்ளன.

ஒருவருக்கு என்று ஒரு பொருளை நாம் பாதுகாப்பாக எடுத்து வைப்போம். ஆனால் அந்த நேரத்தில் அப்பொருளை வேறு யாரேனும் வந்து பயன்படுத்தி விடுவார்கள். இதனை,

*கணபதிக்கு வெச்சது காக்க கொண்டு போயி*

(கணபதிக்கு என்று வைத்தது காக்காய் எடுத்து சென்று
விட்டது)

*கொக்கினு வெச்சது கொளக்கோழிக்குப் பட்டு*

(கொக்கிற்கு வைத்தது குளக்கோழிக்குக் கிடைத்துவிட்டது)

எனும் பழமொழிகள் ஒரு சூழ்நிலைக்கு தக்கவாறு இரு பழமொழிகளாக அமைந்துள்ளதைக் காணலாம். மட்டுமின்றி யாரேனும் ஏதாவது கூறினார்களெனில் உடனடியாக அவர்களுக்கு அந்த நேரத்திலேயே பதில் கொடுக்கக்கூடியவர்களும் உள்ளனர். இதனை,

*இப்போழத்த தெய்வம் அப்போழய்க்கப்போல்*

(இப்போதுள்ள கடவுள் உடனுக்குடன்)

*உருளைக்கு உப்பேரி*

(உருளைக்கிழங்கிற்கு ஏற்ற பொறியல்)

*கடிக்கும்போ தொடைக்கணம்*

(கடிக்கும் பொழுது துடைத்துவிட வேண்டும்)

எனும் பழமொழிகள் ஒரே சூழலில் கூறக்கூடிய பல பழமொழிகளாக அமைந்துள்ளமையைக் காணலாம்.

ஒரு இடத்திற்குச் சென்றால் அந்த இடத்திலுள்ள மக்களைப் போன்று நாமும் இருக்க வேண்டும் என்பதை,

*காலத்தினொத்து கோலம் கெட்டணம்*

(காலத்திற்கு ஏற்றாற் போன்று நடக்க வேண்டும்)

*நடுத்துண்டம் தின்னுன்ன நாட்டில் சென்னால்*
*நடுத்துண்டம் தின்னனம்*
(நடுத்துண்டு சாப்பிடுகின்ற நாட்டிற்குச் சென்றால்
நடுத்துண்டம் சாப்பிடணும்)

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் கூறக்கூடிய பல பழமொழிகள் என்ற நிலையில் அமைந்துள்ளன.

நம்முடன் இருக்கின்றவர்களுக்குத் தான் நம்முடைய உண்மையான குணத்தைப் (துன்பங்களை) பற்றித் தெரியும் என்ற சூழலில் பல பழமொழிகள் கூறப்படுகின்றன. சான்றாக,

*கூட கிடக்குன்னவனே ராப்பனியறியூ*

(கூடப் படுத்திருப்பவர்களுக்குத் தான் இரவு நேரத்தில்
வருகின்ற காய்ச்சலைப் பற்றித் தெரியும்)

*அண்டியோடு அடுக்கும்பழே புளிப்பறையூ*

(மாங்காவின் கொட்டையுடன் சேர்த்து அறுக்கும்

பொதுதுதான் அதனுடைய புளிப்பை பற்றித் தெரியும்)

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் கூறுவதாக அமைந்துள்ளன.

அனைத்து வேலைகளையும் செய்துவிட்டு இறுதியில் அதை நாசமாக்கிவிடும் சூழலில்,

*வெளுக்குவோளம் வெள்ளம் எடுத்திட்டு அந்திக்கு குடம் உடச்சது போலே*

(விடியும் வரை தண்ணீர் எடுத்துவிட்டு இரவில் குடத்தை உடைத்து விட்டது போன்று)

*குளிப்பிச்சு குளிப்பிச்சு ஒடுக்கம் குஞ்ஞில்லாதாயி*

(குளிக்க வைத்து குளிக்க வைத்து இறுதியில் குழந்தையில்லாமல் ஆகிவிட்டது)

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் சொல்லக்கூடிய இரு பழமொழிகளாக அமைந்திருப்பதைக் காணலாம்.

சிலர் நம் முன்னிலையில் நம்முடன் அன்புடன் இருப்பதைப் போன்று பேசிக் கொண்டிருப்பார்கள். ஆனால் மனதினுள் அன்பின்றி இருப்பார்கள் என்ற சூழலில் அவர்களை,

*வெளுத்தச் சோறும் கருத்த முகமும் காணிக்கருது*

(வெண்மையான சோற்றினையும் கருமையான முகத்தினையும் காண்பித்தல் கூடாது)

*வாயில் தேனும் வாலில் விஷவும்*

(வாயில் தேனும் வாலில் நஞ்சும்)

*முகம் சந்திரபிம்பம் அகம் பாம்பின் விஷம்*

(முகம் நிலவினைப் போன்றும் அகம் பாம்பினுடைய நஞ்சும்)

போன்ற பழமொழிகளின் மூலம் கூறுகின்றனர்.

அஃறிணைப் பொருள்களுக்கு ஒரு செயல் செய்ய வேண்டுமெனில், அவர்களிடம் கேட்டுவிட்டுத் தான் செய்ய வேண்டுமா? என்பதை,

*மூரியோடு சோதிச்சிட்டு வேணோ நுகம் வைக்கான்*

(காளையிடம் கேட்டுவிட்டா நுகம் வைப்பது)

*ஆட்டுக் கல்லின்டிடத்து சோதிச்சிட்டு வேணோ*

*மொளகரைக்கான்*

(ஆட்டுக்கல்லிடம் கேட்டு விட்டா மிளகினை அறைப்பது)

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் சொல்லக்கூடிய இரு பழமொழிகளாக அமைந்துள்ளன.

தான் ஒரு செயலைச் செய்யமாட்டார்கள். பிறருக்கு அச்செயலானது பயன்படும் என்று நினைத்து கொடுத்து உதவவும் மாட்டார்கள் என்பதை,

*பட்டி தின்னுகயில்லா பசுவினெக் கொண்டு தீட்டிக்குகயுமில்லா*

(நாய் சாப்பிடவும் செய்பாது மாட்டை சாப்பிடவும் விடாது)

*தானும் தின்னில்லா தர்மவும் செய்யில்லா*

(தானும் சாப்பிட மாட்டார்கள் பிறருக்குத் தர்மமும் செய்ய மாட்டார்கள்)

எனும் பழமொழியின் மூலம் பிறருடைய குணங்களைப் பற்றி ஒரே சூழலில் சொல்லக் கூடிய நிலையை அறிய முடிகின்றது. பிறருடைய பொருட்களின் மீது ஆசை வைத்து திருடியவர்கள் ஒரு போதும் நன்றாக மாட்டார்கள் என்பதை,

*அதிரு நீக்கியவன் கதிராயிபோகும்*

(எல்லை நீக்கி வேலி கட்டியவன் நெற் கதிர்களை போன்று ஆகிவிடுவான்)

*தட்டிப் பறிச்ச முதலு பொட்டித் தெறிச்சு போகும்*

(தட்டிப் பறித்த சொத்துக்கள் பொட்டித் தெறித்துப் போய்விடும்)

*இரும்பு கட்டவன் துரும்பாயிப் போகும்*

(இரும்பினைத் திருடியவன் துரும்பாகிப் போய்விடுவான்)

போன்ற பழமொழிகள் ஒரே சூழலில் சொல்லக்கூடிய பழமொழிகளாக அமைந்துள்ளன.

ஒரு செயல் நடக்க வேண்டுமெனில் பிறருடைய துணை வேண்டும் என்று எங்கு செல்லும் பொழுதும் அவர்களையும் அழைத்து கொண்டு செல்வதைக் காணலாம். ஆனால் அவர்களின் மூலம் அவர்களுடைய செயல்கள் யாவும் வெற்றிகரமாக நடந்து முடிந்துவிட்டதெனில் அவர்களை ஒரு பொருட்டாக எண்ணாமல் நடப்பார்கள் என்பதை,

*காரியங்காணான் நாராயண காரியம் கழிஞ்ஞால் கூராயணா*

(காரியம் நடைபெற நாராயணன் காரியம் முடிந்துவிட்டால் கூராயணன்)

எனும் பழமொழிகள் ஒரே சூழலில் கூறக்கூடிய பழமொழியாக அமைந்துள்ளதைக் காணலாம்.

### 3.2.11 சில வேறுபாடுடன் இருக்கக்கூடிய மலையாளப் பழமொழிகள்

மலையாளத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்ப்பு செய்தது போன்று சில தமிழ்ப் பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்துள்ளன. இப்பழமொழிகள்

கோவை மாவட்டத்தில் மட்டுமே பழக்கத்தில் உள்ளன. தமிழகத்தின் பிற பகுதிகளில் இவை பயன்படுத்தப்படுவதில்லை. மேலும் இங்கு கூறப்படும் மலையாளப் பழமொழிகள் கேரளத்தில் பரவலாகக் கூறப்படுவதையும் காணலாம். எனவே இவை மலையாளத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டு தமிழுக்கு வந்திருக்க வேண்டும்.

*கைச்சிட்டு இறக்காணும் வய்யா*
*மதுரிச்சிட்டு துப்பானும் வய்யா*
(கசப்பாக இருப்பதால் இறக்கவும் முடியவில்லை, இனிப்பாக
இருப்பதால் துப்புவதற்கும் முடியவில்லை)

*கசந்திட்டு துப்பவும் வய்யா*
*இனிச்சிட்டு சப்பவும் வய்யா*

இப்பழமொழியில் 'வய்யா' என்பது முடியவில்லை என்ற பொருளைக் குறிக்கக்கூடிய மலையாளச் சொல்லாகும். இங்கு வய்யா என்ற மலையாளச் சொல்லின் தாக்கம் தமிழ்ப் பழமொழியில் வந்துள்ள நிலையினைக் காணலாம்.

*தாங்ஙான் ஆளுண்டெங்கில் தளர்ச்சயும் வரும்*
(தாங்குவதற்கு ஆளிருந்தால் சோர்வும் வரும்)

*தாங்கற பக்கந்தான் தளர்ச்ச வரும்*

எனும் பழமொழியில் '*தளர்ச்ச*' என்பது சோர்வு என்ற சொல்லினைக் குறிக்கக்கூடிய தமிழ்ச் சொல்லாகும். தளர்ச்ச என்னும் சொல் மலையாளச் சொல்லாகும் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் தமிழ்ப் பழமொழி அமைந்துள்ளது.

*ஆரான்டெ கோழியே கட்டிட்டு உம்மா பேரிலெ பூஜிக்குக*
(பிறருடைய கோழியினைத் திருடி அம்மாவிற்கு சடங்கு
செய்தல்)

*ஊரான் கோழி எடுத்து உம்மா பேருக்கு பாத்திஹா*

எனும் தமிழ்ப் பழமொழியில் 'உம்மா' என்பது மலையாள முஸ்லீம் இன மக்கள் அம்மாவைக் குறிப்பிட வழங்கக்கூடிய சொல்லாகும்.

## 3.2.12 மலையாளப் பழமொழிகளின் பாட வேறுபாடு

களஆய்வின் போது தமிழைப் போன்று சில மலையாளப் பழமொழிகளும் பாடவேறுபாடுடன் கிடைத்துள்ளன. அவை கீழ்வருமாறு கூறப்படவுள்ளது. முஸ்லீம் இன மக்கள் வழங்கக்கூடிய பழமொழி ஒன்று பாடவேறுபாடுடன் அமைந்துள்ளது.

*புதுக்கத்தில் அம்மாயி வருத்திட்டும் பொடிச்சிட்டும்*
*பழக்கத்தில் அம்மாயி சுட்டிட்டும் கரிச்சிட்டும்*
(புதுமையில் அத்தை வருத்தும் பொடியாக்கியும்
பழமையில் அத்தை சுடவைத்தும் கரிய வைத்தும்)

*புதுக்கத்தில் அம்மாயி வருத்திட்டும் பொறிச்சிட்டும்*
*பழக்கத்தில் அம்மாயி சுட்டிட்டும் மொறிச்சிட்டும்*
(புதுமையில் அத்தை வருத்தும் பொறித்து எடுத்தும்
பழமையில் அத்தை சுடவைத்தும் மொறு மொறு என்று ஆக்கியும்)

எனும் பழமொழிகளில் இறுதியடியானது பாட வேறுபாடுடன் அமைந்திருப்பதைக் காணலாம். சாதாரணமாக முஸ்லீம் இன மக்கள் மட்டுமின்றி, அனைத்து இன மக்களும் பொடிச்சிட்டு, கரிச்சிட்டு, பொறிச்சிட்டு, மொறிச்சிட்டு எனும் சொற்களை அவரவர்களுடைய பயன்பாட்டில் பயன்படுத்தி வருகின்றனர். ஆனால் இவ்வாறு பாடவேறுபாடுடன் அமைந்திருக்கக்கூடிய இப்பழமொழியினை முஸ்லீம் இன மக்களிடமிருந்து தான் கிடைத்தது. ஆதலால் இப்பழமொழி சமூக மொழியியல் அடிப்படையில் நோக்கினால் முஸ்லீம் இன மக்களுடைய வழக்காறுகளில் இருந்து தோன்றி இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

*<u>தூணுசாரியிருன்னவன்</u> பெண்ணுங் கொண்டுபோயி*

(வீட்டினுடைய தூண்களைச் சாய்ந்து நின்றவன்

பெண்ணைக் கொண்டு சென்று விட்டான்)

*<u>தெங்ஙுசாரினின்னனவன்</u> பெண்ணுங் கொண்டு போயி*

(தென்னை மரத்தைச் சாய்ந்து நின்றவன் பெண்ணைக்

கொண்டு சென்று விட்டான்)

இப்பழமொழி, சாதாரணமாக கிராமப்புறங்களிலுள்ள சாதி மத வேறுபாடின்றி அனைத்து இன மக்களும் புழங்கி வரக்கூடிய ஒரு பழமொழியாகும். சாதாரண மக்கள் அதாவது பெண்களுடைய புழகத்தில் வழங்கக்கூடிய ஒரு பழமொழி கீழ்வருமாறு,

*பெண்ணுங்ஙல்க்கு <u>முடியழகும்</u> <u>முலயழகும்</u> வேணம்*

(பெண்களுக்கு முடி அழகும் முலை அழகும் வேண்டும்)

*பெண்ணுங்ஙல்க்கு <u>முன்னழகும்</u> <u>பின்னழகும்</u> வேணம்*

(பெண்களுக்கு முன் அழகும் பின் அழகும் வேண்டும்)

இப்பழமொழிகளானது, பெண்கள் மட்டும் இருக்கக்கூடிய இடத்தில் கூறக்கூடிய பழமொழியாகும். அதுவே சில நேரங்களில் மாற்றமடைந்தும் காணப்படும் என்பதை பாடவேறுபாடாக முடியழகு முலயழகு, முன்னழகு பின்னழகு என்று சூழலுக்கு ஏற்ப கூறி வருவதையும் இப்பழமொழி மூலம் அறிய முடிகிறது.

*<u>இறயிட்டு மீன் பிடிக்குன்னது போலே</u>*

(இறைபோட்டு மீன் பிடிப்பது போல)

*<u>இறயிட்டாலே மீன் பிடிக்கான் பற்றூ</u>*

(இறை போட்டால் தான் மீன் பிடிக்க முடியும்)

எனும் பழமொழி தொழிலின் அடிப்படையில் அதாவது மீன் பிடிக்கக் கூடியவர்களின் வழக்காறுகளில் பயன்படுத்தக்கூடிய பழமொழியாகும். இங்கு இறை போட்டு மீன்

பிடிப்பது போன்று என்றும், இறை போட்டால் தான் மீன் பிடிக்க முடியும் என்றும் சூழலுக்கு தக்கவாறு பாடவேறுபாடு அமைந்திருப்பதைக் காணலாம்.

*குளிக்காதே ஈரம் சுமக்குன்னது போலே*

(குளிக்காமல் ஈரத்தை சுமப்பதைப் போன்று)

*நனயாதெங்ஙன ஈரம் சுமக்கணு*

(நனையாமல் எப்படி ஈரத்தை சுமப்பது)

எனும் பழமொழிகள் பாடவேறுபாடுடன் அனைத்து இன மக்களும் வழங்கி வருகின்றனர். மேற்கூறப்பட்ட மலையாளப் பழமொழிகளில் பாடவேறுபாடு அமைந்துள்ள பகுதிகளை முதல், இடை, கடை ஒரு பழமொழி முழுவதும் எழுத்துக்கள், சொற்கள் போன்றவை மாற்றமடைந்து பாடவேறுபாடுடன் அமைந்துள்ள நிலையினை அடிக்கோடிட்டு காட்டப்பட்டுள்ளன.

### 3.2.13 மலையாளப் பழமொழிகளின் இன்றைய வளர்ச்சித் தன்மை

இன்றைய சூழ்நிலையில் கிராமப்புறங்களிலுள்ள மக்கள் மட்டுமே பழமொழிகளை அதிகமாகப் பயன்படுத்துகின்றனர். கிராமப்புறங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்கு வந்த மக்கள் பழமொழிகள் தெரிந்தாலும் பழமொழிகளை பேச்சின் போது அதிகமாகப் பயன்படுத்துவதில்லை. ஏனெனில் தான் ஒரு கிராமத்தான் என்று வெளிப்படுத்த விரும்பாமல் இருப்பதே ஒரு காரணம் என்கிறார் இக்னேஷியஸ். அதனால் பழமொழிகள் அனைத்தும் அழிந்து கொண்டு தான் இருக்கின்றன என்று நாம் அனைவரும் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் நாகரீகம், அறிவியல் வளர்ச்சியடைந்த இக்காலகட்டத்தில் கிராமப்புறங்களில் மட்டுமின்றி நகர்ப்புறங்களிலும் பழமொழிகள் அழியாமலும், ஞாபகப்படுத்தும் வகையிலும் உருவாக்கப்படுகின்றன என்பதை கணினியின் உதவியுடன் அறிய முடிகிறது. இப்பகுதியில் கிராமப்புறங்களில் சொல்லக்கூடிய மலையாளப் பழமொழிகளை இன்றைய காலகட்டத்தில் கணினி, மது, சோடா, கைப்பேசி

போன்றவற்றின் மூலம் சொல்லக்கூடிய மலையாளப் பழமொழிகளோடு ஒப்பீடு செய்து கூறும் விதமாக சில பழமொழிகள் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளன.

*ஆரான்றெ அம்மய்க்கு பிராந்து பிடிச்சால் காணான் நல்ல சேலு*
(பிறருடைய அம்மாவிற்கு பைத்தியம் பிடித்தால் பார்ப்பதற்கு நன்றாக இருக்கும்)

*ஆரென்றெ சிஸ்டத்திலு வைரஸ் கயறியால் காணான் நல்ல ரசம்*
(பிறருடைய கணினியில் வைரஸ் ஏறினால் பார்ப்பதற்கு நன்றாக இருக்கும்)

மேற்கூறப்பட்ட பழமொழி கூறும் கருத்தானது, ஒருவருக்கு துன்பம் ஏற்படின், அதைப் பாரத்துக் கொண்டிருப்பவர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் இருப்பார்கள் என்பதைக் கூறும் விதமாக அமைந்துள்ளது.

*தன்னெப் போலே தன்னெ தன்றெ அயல்காரனெயும் ஸ்நேகிக்குக*
(தன்னைப் போன்று தான் தன்னுடைய பக்கத்திலிருப்பவனையும் நேசிக்க வேண்டும்)

*தன்னெப் போலே தன்னெ தன்றெ சிஸ்டத்தினெயும் ஸ்நேஹிக்குக*
(தன்னைப் போன்று தான் தன்னுடைய கணினியையும் நேசிக்க வேண்டும்)

பழமொழி கூறும் கருத்தானது, தன்னையும், தன்னைச் சார்ந்திருக்கக் கூடிய அனைவரையும் நேசிக்க வேண்டும் என்று கூறுகிறது.

*தேடிய வள்ளி காலில் சுற்றி*
(தேடிச் சென்ற கொடி காலில் சுத்திக் கொண்டது)

*தேடிய ஃபயலு கழ்சரில் தட்டி*
(தேடின ஃபயலு கழ்சரில் தட்டிவிட்டது)

நாம் ஒருவரை தேடிச் செல்கிறோம். நம்மால் அவரை பார்க்க முடிவதில்லை. ஆனால் திடீரென்று ஒரு நாள் அவரே நம் முன் நிற்பதைக் காணலாம் என்பதைக் கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழிகள் அமைந்துள்ளன.

*உத்தரத்திலிரிக்குன்னது எடுக்குகயும் வேணம்*
*கக்ஷத்திலிரிக்குன்னது களயானும் பாடில்லா*
(மேற்கூரையிலுள்ள பொருளை எடுக்கவும் வேண்டும்
அக்குல் பகுதியில் இருப்பது விழுந்து போகவும் கூடாது)

*நெட்டிலுள்ளது டவுன்லோட் செய்யுகயும் வேணம்*
*சிஸ்டத்திலு வைரஸ் கயரானும் பாடில்லா*
(நெட்டிலிருந்து டவுன்லோட் செய்து எடுக்கவும் வேண்டும்
கணினியில் வைரஸ் ஏறிடவும் கூடாது)

மேற்கூறப்பட்ட பழமொழிகள் கூறும் கருத்தானது, நமக்குத் தேவையான பொருளைப் பெற வேண்டும். ஆனால் நம்மிடமுள்ள பொருள் நமக்கு உபயோகமின்றி ஆகிவிடவும் கூடாது என்பதைக் கூறும் விதமாக அமைந்துள்ளது.

*வேலி மேல் கிடந்ந பாம்பினை எடுத்து கழுத்தில் சுற்றருது*
(வேலியின் மேல் இருந்த பாம்பினை எடுத்து கழுத்தில் சுற்றக்கூடாது)

*நெட்டிலே கிடன்ன வைரஸ்ஸினெயெடுத்து சிஸ்ட்டத்திலு வெக்கருது*
(நெட்டில் இருந்த வைரஸினை எடுத்து கணினியில் வைக்கக் கூடாது)

எனும் பழமொழி கூறும் கருத்தானது, அமைதியாக வெளியில் சென்று கொண்டிருந்தவர்களை அழைத்து தேவையில்லாத பேச்சுகளைப் பேசி

பிரச்சினைகளை உண்டு பண்ணுதல் கூடாது என்பதைக் கூறும் விதமாக அமைந்துள்ளன.

*அஞ்ஞனம் எந்நால் ஞானறியும் மஞ்ஞளு போலே வெளுத்திருக்கும்*
(கண்மை என்றால் எனக்குத் தெரியும் மஞ்சளைப் போன்று
வெளுப்பாகயிருக்கும்)

*கீபோடென்னாலு ஞானறியும் சீடி போலே உருண்டிரிக்கும்*
(கீபோர்டு என்றால் எனக்குத் தெரியும் சீடியைப் போன்று
உருண்டையாக இருக்கும்)

எனும் பழமொழி கூறும் கருத்தானது, ஒரு விஷயத்தைப் பற்றித் தெரியவில்லையெனில் அதைத் தெரியாது என்று கூறாமல், தெரிந்ததைப் போன்று தவறாகத் தன்னைக் காட்டிக் கொள்ளக் கூடிய குணம் கொண்டவர்களும் உள்ளனர் என்பதைக் கூறும் விதமாக அமைந்துள்ளது.

*பொன்னு காய்க்குன்ன மரமாயாலும் புறய்க்கு சாஞ்ஞால் வெட்டணம்*
(தங்கம் காய்க்கின்ற மரமாக இருந்தாலும் வீட்டிற்கு மேல் சாய்ந்து
விட்டால் வெட்ட வேண்டும்)

*பணம் காய்க்குன்ன பயலாயாலும் வைரஸ் கயறியாலு நசிப்பிக்கணும்*
(பணம் காய்க்கின்ற பயலானாலும் வைரஸ் ஏறினால் அழித்துவிட
வேண்டும்)

நமக்குத் தீமை விளைவிக்கக் கூடிய எந்த விலை மதிப்புள்ள பொருளாக இருப்பினும் அதை அடியோடு சாய்த்து எரித்திட வேண்டும் என்பதைக் கூறும் விதமாக அமைந்துள்ளது.

*குந்தம் போயால் குடத்திலும் தப்பணம்*

(ஈட்டி காணாமல் போனால் குடத்திலும் தேட வேண்டும்)

*ஃபயலு போயாலு ரீ சைக்கிள் பின்னிலும் தப்பணம்*

(ஃபயலு காணாமல் ஆகிவிட்டதெனில் ரீசைக்கிள் பின் என்ற பகுதியிலும் தேட வேண்டும்)

சிறிய பொருளாக இருப்பினும், பெரிய பொருளாக இருப்பினும் ஒரு பொருள் தொலைந்து போய்விட்டதெனில் அனைத்துப் பகுதிகளிலும் தேட வேண்டும் என்பதைக் கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது.

*அப்பன் சத்தாலே அப்பன்றெ விலயறியூ*

(அப்பன் இறந்தால் தான் அப்பாவின் மதிப்பு தெரியும்)

*மௌசில்லங்கிலெ மௌசின்றெ விலயறியூ*

(மௌசில்லாமல் இருந்தால் தான் மௌசினுடைய அருமை தெரியும்)

ஒரு பொருள் நம்மிடம் இருக்கும் பொழுது அதனுடைய மதிப்பு என்ன என்று நமக்குத் தெரியாது. அதே பொருள் இல்லாமல் போனால் தான் அப்பொருளினது அருமை என்ன என்று நமக்குத் தெரியவரும் என்று கூறுகிறது மேற்கூறப்பட்ட பழமொழிகள்.

*மலபோல வன்னது மஞ்ஞு போலே போயி*

(மலை போன்று வந்தது பனி போன்று போய்விட்டது)

*வைரஸ் போலே வன்னது வைடு கெ போலே போயி*

(வைரஸ் போன்று வந்தது வைடு கெ போன்று போய்விட்டது)

பெரிய ஆபத்தை ஏற்படுத்தக் கூடிய வகையில் வந்த துன்பமானது மிகவும் எளிமையான நிலையில் முடிவடைந்து விட்டது என்பதைக் கூறுவதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளது.

*எலിയെ പേടിച്ച് ഇല്ലം ചുടുക*

(எலியை பயந்து வீட்டினை சுட்டெரிப்பது)

*വൈറസ്സിനെ പേടിച്ച് കമ്പ്യൂട്ടർ കത്തിക്കുക*

(வைரஸ்ஸிற்கு பயந்து கணிணியை தீக்கொளுத்தி எரிய வைப்பது)

எனும் பழமொழிகள் கூறும் கருத்தானது, சிறிய ஒன்றிற்கு பயந்து, தன்னிடம் விலைமதிக்க முடியாத அனைத்துப் பொருட்களையும் நாசமடையச் செய்கின்றனர் என்பதைக் கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழிகள் அமைந்துள்ளன.

*പുണ്ണിയത്തുക്കു കുടുത്ത മാട്ടേ പല്ലപ് പുടിച്ചു പാക്കാതേ*

*അപ്പം തിന്നാ മതി കുഴിയെണ്ണണ്ടാ*

(அப்பம் சாப்பிட்டால் போதும் குழியை எண்ண வேண்டாம்)

*ടൈപ് ചെയ്താൽ പോരേ കീയെണ്ണണ്ട കാര്യമുണ്ടോ*

(டைப் செய்தால் போதும் கீ எண்ண வேண்டிய அவசியம் இருக்கிறதா?)

எனும் பழமொழிகள் கூறும் கருத்தானது, யாரேனும் ஒரு பொருள் கொடுப்பின், அதைப் பற்றி தெரிந்து கொண்டால் மட்டும் போதும், அது எப்படி வந்தது, யார் கொடுத்தது என்று அறிந்து கொள்ள வேண்டிய தேவையில்லை என்று கூறுகின்றன.

*കക്കാൻ അറിഞ്ഞാ പോരാ നിക്കാനും അറിയണം*

(திருடத் தெரிந்தால் மட்டும் போதாது அதைச் சமாளிக்கவும் தெரியனும்)

*മൌസുണ്ടായാൽ പോരാ ക്ലിക് ചെയ്യാൻ പഠിക്കണം*

(மௌசிருந்தால் மட்டும் போதாது க்ளிக் செய்து படிக்கவும் வேண்டும்)

எனும் பழமொழிகள் கூறும் கருத்தானது, ஒரு பொருள் நம்மிடம் இருந்தால் மட்டும் போதாது அப்பொருளினைப் பற்றித் தெரிந்து வைத்திருக்கவும் வேண்டும் என்பதாகும்.

*எறிஞ்ஞ கல்லும் பரஞ்ஞ வாக்கும் திரிச்செடுக்கானாவில்லா*

*வாவிட்ட வாக்கும் ரீ சைக்கிள் பின்னு விட்ட ஃபயலும்*

*திரிச்செடுக்கான் கழியில்லா*

(வாயிலிருந்து வெளியில் வந்த வார்த்தைகளும் ரீ சைக்கிள்

பின்னிலிருந்து தொலைந்து விட்ட ஃபயலும் திரும்ப

எடுக்க முடியாது)

எனும் பழமொழிகள் கூறும் கருத்தானது, எந்தவொரு செயலைச் செய்யும் பொழுதும் ஒரு முறைக்கு பலமுறை யோசித்து சிந்தித்து நிதானத்துடன் செயல்பட வேண்டும். சிந்திக்காமல் செயல்பட்டோமெனில் அதை ஒரு போதும் நம்மால் திரும்பப் பெற முடியாது என்பதாகும்.

*ஆரான்டெ தோட்டத்திலு புல்லுகண்டு பசு வாங்ஙருது*

(பிறருடைய தோட்டத்தில் புல்லைப் பாரத்து மாடு வாங்குதல் கூடாது)

*ஆரான்டெ வீட்டிலு கம்ப்யூட்டர் கண்டு*

*ஸ்வந்தம் வீட்டிலு ப்லோப்பி வாங்ஙருது*

(பிறருடைய வீட்டிலுள்ள கம்ப்யூட்டரைப் பார்த்துவிட்டு

தன்னுடைய வீட்டில் ப்லோப்பி வாங்கக் கூடாது)

பிறருடைய பொருட்களின் மீது ஆசைப்பட்டு, அதற்கேற்றாற் போன்று தன்னுடைய வீட்டில் பொருட்களை வாங்கக் கூடாது என்று கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழிகள் அமைந்துள்ளன.

மேலும், மது உடல் நலத்திற்குக் கேடு, மது அருந்துபவர்களைக் கேலி செய்யும் விதமாகவும் பழமொழிகள் அமைந்துள்ளன.

*கரயுண்ண குஞ்ஞினெ பாலுள்ளு*

(அழுகின்ற குழந்தைக்குத்தான் பால் கிடைக்கும்)

*க்யூ நின்ன குடியனெ குப்பியுள்ளூ*

(வரிசையில் நிற்கின்ற குடிகாரனுக்கத்தான் பாட்டில் கிடைக்கும்)

ஒரு பொருள் வேண்டுமெனில் அதற்கான முயற்சி செய்தால் மட்டுமே அப்பொருள் கிடைக்கும் என்று கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழிகள் அமைந்துள்ளன.

*ஒக்கத்து பணமுன்டெங்கில் முற்றத்து ரெண்டு சாட்டம்*

(இடுப்பில் பணமிருந்தால் வாசலில் இரண்டு குதி குதிப்பான்)

*அல்ப்பனு வாற்று* (Spirit) *கிட்டியாலு நட்டுச்சைக்கும் வாளுவைக்கும்*

(அல்ப்பனுக்கு பட்டைச் சாராயம் (Spirit) கிடைத்தால் மதிய நேரத்திலும் வாந்தி எடுப்பான்)

எனும் பழமொழிகள் கூறும் கருத்தானது, தன்னிடம் இல்லாத பொருட்கள் திடீரென்று (அவர்கள் அறியாமலேயே அவர்களுக்கு) தனக்கு கிடைத்து விட்டதெனில் செய்ய வேண்டிய செயல்கள் யாவும் நிலையின்றி செய்து கொண்டிருப்பார்கள் என்பதாகும்.

*அடைக்காயானெங்கி மடியிலு வெக்காம் மரமாயாலோ?*

(பாக்காக இருந்தால் மடியில் வைக்கலாம் மரமானால் என்ன செய்வது)

*பியரானெங்கில் மடியிலு வெக்காம் பீவரேஜானங்கிலோ*

(பியராக இருந்தால் மடியில் வைக்கலாம் பீவரேஜானால்)

எனும் பழமொழிகள் கூறும் கருத்தானது, சிறிய காரியங்களை நம்மால் மூடி மறைக்க முடியும். ஆனால் அதே போன்று பெரிய காரியங்களை யாரும் தெரியாதபடி மூடி வைக்க முடியாது என்பதாகும்.

*கைப்பகுத்தியா கும்பிளைங்யா முளைக்குமோ?*

(பாகற்காய் விதை போட்டால் பூசணிக்காய் செடி முளைக்குமா?)

*வோட்கா குடிச்சாலு வாற்று ஆகில்லா*

(வோட்கா குடித்தால் பட்டை சாராயம் ஆகாது)

எனும் பழமொழி கூறும் கருத்தானது, நாம் ஒரு செயலைச் செய்யும் பொழுது நமக்குத் தேவையான செயல்களை மட்டும் செய்ய வேண்டும். இச்செயல் செய்தால், அதற்கு இது சமம் என்று நினைத்து செய்தல் கூடாது. அதற்கு இது ஒரு போதும் சரிசமமான நிலை ஆகாது என்பதைக் கூறும் விதமாக மேற்கூறப்பட்ட பழமொழிகள் அமைந்துள்ளன.

இதேபோன்று, சோடாவைப் பற்றிக் கூறக்கூடிய ஒரு பழமொழியும் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது.

*அதிகமாயால் அமிர்தவும் விஷம்*

(அதிகமானால் அமிர்தமும் நஞ்சு)

*அதிகமாயாலு சோடயும் விஷம்*

(அதிகமானால் சோடாவும் நஞ்சு)

எனும் பழமொழி கூறும் கருத்தானது, எந்தவொரு பொருளும் அளவுக்கு மீறி பயன்படுத்தினோமானால் அது நமக்கு ஆபத்தை ஏற்படுத்தும் என்று கூறுவதாக அமைந்துள்ளது பழமொழி.

மேலும் கைப்பேசியின் மூலம் ஏற்படுகின்ற நன்மையினையும், அதனால் ஏற்படக்கூடிய பாதிப்பினைக் கூறும் விதமாக ஒரு பழமொழியுள்ளது.

*டோப்அப் செய்திட்டு எஸ்.எம்.எஸ் அயய்க்குன்ன ஃபிரன்டினெ*
*விஸ்வாசிக்காம் பக்ஷே மேக்கப் செய்திட்டு மிஸ்கால்*
*அடிக்குன்ன பெண்ணினெ விஸ்வசிக்கருது*

(டாப்அப் செய்து எஸ்.எம்.எஸ் அனுப்புகின்ற நண்பனை நம்பலாம் ஆனால் மேக்கப் செய்த பின்னர் மிஸ்கால் அடிக்கின்ற பெண்ணை நம்பக்கூடாது)

எனும் பழமொழியானது, எப்படிப்பட்ட மனிதர்கள் எல்லாம் இப்பொழுது இருக்கின்றனர் என்பதை கைப்பேசியின் மூலம் கூறி வைத்துள்ளனர். இதற்கேற்றாற் போன்று இருக்கக் கூடிய தமிழ்ப் பழமொழி கள ஆய்வில் கிடைக்கவில்லை.

## தொகுப்புரை

- சமூக உறவு முறைகள் தொடர்பான பழமொழிகள் எனும் தலைப்பின் கீழ் உறவுமுறைகள், சாதிகள் போன்றவற்றைப் பற்றி விளக்கிக் கூறப்பட்டது.
- கோயம்புத்தூர் மாவட்ட உறவு முறைகள் தொடர்பான செய்திகளைப் பற்றிக் கூறுமிடத்து பெற்றோர்கள் பிள்ளைகளின் மீது நன்கு கவனம் செலுத்தி வந்துள்ளனர்
- அண்ணன் தம்பி உறவென்பது கயநலத்துடன் இருக்கக் கூடியதாகக் காணப்படுகிறது.
- தந்தைவழி சமூகத்தில் சொத்துக்கள் ஆண்களுக்கிடையே பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. எனவே சகோதரர்கள் பங்காளிகளாகின்றனர். இந்த பங்காளி உறவு பிரச்சினை உடையதாகவே சமூகத்தில் காணப்படுகிறது.
- அக்கா தங்கை உறவென்பது வெறுப்படையச் செய்யக்கூடிய நிலையில் அமைந்துள்ளது.
- மனைவி என்பவள் கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருசன் என்பதற்கிணங்க கணவனுடைய வீட்டில் தன்னுடைய வாழ்க்கை முழுவதும் அர்ப்பணித்து வருகிறாள்.
- கணவன், வாழ்க்கை முழுவதும் சுதந்திரத்துடன் வாழ்ந்து வருகிறான்.
- கோவை மாவட்டத்தில் மக்கத்தாய முறையில் இருப்பதால் திருமணம் ஆனவுடன் பெண்ணிற்கு தன்னுடைய தந்தை வீட்டில் எந்தவிதமான உரிமையும் அற்றவளாகிறாள்.
- மச்சினன் என்பவனுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர்.
- மாமியாள் மருமகள் உறவென்பது போராட்டக்களமாகவே அமைந்துள்ளது
- பெண்களை வெளியிடங்களுக்குச் செல்லவிடாமல் அவளை உயர விடாமல் பூட்டி வைத்துள்ளனர்.

❖ பெண் வீட்டிற்குள் இருந்தாலும், நன்கு திறமை படைத்தவளாகவும், தன்னுடைய மனதை கட்டுப்பாட்டுடன் வைத்திருக்கக் கூடியவளாகவும் இருக்கிறாள்.

❖ இம்மாவட்டத்தில் தகாத உறவுகள், பலதார மணம் போன்றவை இருக்கின்றன என்பதையும் பழமொழிகள் உணர்த்துகின்றன.

❖ பாலக்காடு மாவட்டத்தில் தந்தை பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் கிடைக்கவில்லை.

❖ தாய் என்பவள் நன்னெறி தவறாது ஒழுக்கத்துடன் வாழக்கூடியவளாக காட்சியளிக்கிறாள்.

❖ பிள்ளைகளின் மீதுள்ள அன்பினை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாது, மனதினுள் அன்பினை வைத்திருக்கக் கூடிய தாயாகவும் இருக்கிறாள்.

❖ அக்கா – தங்கை, அண்ணன் – தம்பி போன்றவர்கள் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் கிடைக்கவில்லை.

❖ குடும்பத்தில் அனைவரும் ஒற்றுமையுடன் இருக்கின்றனர். இருப்பினும், கணவன் மனைவிக்குள் சிறு சிறு பிரச்சினைகளும் இருப்பதாக பழமொழிகள் சுட்டுகின்றன. இது அவர்களுடைய அன்பினை வெளிப்படுத்துவதாக அமைந்திருக்கலாம்.

❖ திருமணம் முடிந்த புதிதில் மாமியாள் மருமகளின் உறவு அன்பாகவும், அதன் பின்னர் போராட்டக்களமாகவும் தான் இருந்துள்ளது என்பதையும் பழமொழிகளின் ஊடாக அறிய முடிகிறது.

❖ பெண் என்பவள் எத்தகைய அழகினைப் பெற்றிருக்கக் கூடியவளாக இருக்க வேண்டும் என்பதை பழமொழிகள் வாயிலாகக் கட்டமைத்துள்ளமையைக் காண முடிகின்றது.

❖ பாலக்காட்டில் பலகணவ மணம் இருந்தது என்பதையும் பழமொழிகள் சுட்டிச் செல்கின்றன.

❖ கோயம்புத்தூர் மாவட்டத்தில் கவுண்டர், செட்டியார், முஸ்லீம், தட்டான், வண்ணான், இடையன், பறையன், பள்ளன், குறவர், சக்கிலியன் போன்ற சாதியில் உள்ளவர்கள் இருக்கின்றனர்.

❖ கவுண்டர் என்பவர் தங்களைத் தாங்களே உயர்த்திக் கூறுபவர்களாகவும், எந்தவொரு விழாவிற்கும் கிடாய் வெட்டி பொங்கல் வைக்கக் கூடியவர்காளகவும் இருக்கின்றனர்.

❖ செட்டியார் இன மக்கள் வயிற்றைக் கட்டி சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணமும் திறமையும் கொண்டவர்களாக இருக்கின்றனர். இவர்கள் தங்களை அலங்காரம் செய்து கொள்வதில் ஆர்வம் கொண்டவர்களாகவும் உள்ளனர்.

❖ முஸ்லீம் இன மக்கள் தங்களுடைய மதத்திற்கு உரிய காரியங்களை எடுத்தோதுபவர்களாக உள்ளனர்.

❖ தட்டான், வண்ணான் என்பவர்கள் அவர்களுடைய குலத் தொழிலைச் செய்து வருபவர்களாக உள்ளனர்.

❖ பறையன், பள்ளன், குறவன் போன்ற கீழ் சாதியிலுள்ள மக்கள், உயர்ந்த நிலைக்குச் சென்றாலும், அவர்களை உயர்ந்து செல்லவிடாமல் அவர்களுடைய சாதியின் பெயரினைக் கூறி கேலிசெய்கின்ற நிலையினைப் பழமொழிகளால் அறிய முடிகின்றது.

❖ பாலக்காடு மாவட்டத்தில் சாதிகள் பல உண்டு. கள ஆய்வின் போது நாயர், பட்டர், செறுமர், பறையர் என்ற நால்வகை சாதியினரைப் பற்றி மட்டும் பழமொழிகள் கிடைத்துள்ளன.

❖ பாலக்காடு மாவட்டத்தில் சாதி பற்றிய காழ்ப்புணர்வு அதிகமாகக் காணப்படுவதில்லை.

❖ பட்டர் சாதியிலுள்ள மக்களைப் பிற இனத்தைச் சார்ந்த மக்கள் கேலி செய்வதாகவும், செறுமர்களை மட்டம் தட்டி பேசக் கூடியவர்களாகவும் உள்ளனர்.

- பறையர் இன மக்கள் பசுக்களை உணவாக உட்கொண்டு வாழக்கூடியவர்கள் என்பதை பழமொழி விளக்கி நிற்பதைக் காணமுடிகிறது.

- புழங்கு பொருள் தொடர்பான பழமொழிகள் எனும் தலைப்பில், இரு மாவட்டப் பெண்களும் வீட்டிற்கு உட்புறத்திலும், வீட்டிற்கு வெளியிலும் சென்று தங்களுடைய வேலைகளைச் செய்து வந்துள்ளனர்.

- ஆண்கள் வீட்டிற்கு வெளியில் சென்று தங்களுடைய வேலைகளைச் செய்து வந்துள்ளனர்.

- கோவை மாவட்டத்தில் அரிசி, கஞ்சி, பொங்கல், பால், தயிறு, உப்பு போன்ற உணவு வகைகளை உண்டு வந்துள்ளனர்.

- காய்கறி வகைகளான கத்திரிக்காய், வெண்டைக்காய், சுரைக்காய், முருங்கைக்காய், மாங்காய், பூசணிக்காய், கீரை வகைகள் போன்றவற்றை இம்மக்கள் பயன்படுத்தி வந்துள்ளனர்.

- பாலக்காடு மாவட்ட மக்கள் கஞ்சி, அப்பம், பால், தயிறு போன்றவற்றைப் பயன்படுத்தி வந்துள்ளனர்.

- காய்கறி வகைகளான கத்தரிக்காய், உருளைக்கிழங்கு, மாங்காய், தேங்காய், சுண்டைக்காய், கொள்ளிக்கிழங்கு, சேனைக்கிழங்கு, கீரை வகைகள் போன்றவற்றையும் உண்டு வந்துள்ளனர்.

- இரு மாவட்ட மக்களும் மாமிச உணவுப் பொருட்களான நண்டு, மீன், கோழிக்கறி, ஆட்டு இறைச்சி போன்றவற்றையும் பயன்படுத்தி வந்துள்ளமை பழமொழிகளின் மூலம் புலனாகின்றன.

- கோவை மாவட்ட மக்கள் கூரைவீடு, சாளை வீடு, மச்சுவீடு, கண்ணாடி வீடு போன்ற வீடுகளில் வசித்து வந்துள்ளனர். இவ்வீடுகளானது அட்டானி, திண்ணை, பொடக்காளி போன்ற அமைப்புடன் இருந்தன. இவ்வீடுகளை பாதுகாப்பதற்காக வேலியினையும் கட்டி வைத்துள்ளனர்.

❖ பாலக்காடு மாவட்ட மக்கள் சிமெண்ட் கட்டைகளால் ஆன வீட்டிலும், தரவாடு என்று கூறக்கூடிய வீட்டிலும் வாழ்ந்து வந்துள்ளனர். இவர்களது வீட்டினுடைய முன்பாக வாசல், மதில் போன்றவை காணப்படுகின்றன. வெளியில் கடந்து செல்வதற்காக வாசப்படியினையும் கதவினையும் சேர்த்து கட்டி வைத்துள்ளனர்.

❖ இரு மாவட்டங்களிலும் விவசாயம் முக்கியத் தொழிலாக இருப்பதால் அதற்கு ஏற்றாற் போன்ற ஆடைகளை மக்கள் பயன்படுத்தி வந்துள்ளனர்.

❖ ஆண்கள் வேட்டி, சட்டை, டிரவுசர், கோமணம், தலைப்பாகை போன்றவை அணிந்து வந்துள்ளனர்.

❖ பெண்கள் சீலை, வண்ணப்புடவை, பட்டுச்சீலை, முக்காடு போன்ற தமிழர் பண்பாட்டிற்கே உரிய ஆடைகளை அணிந்து வந்துள்ளனர்.

❖ ஆண், பெண் இருவருக்கும் பொதுவாக இருக்கக் கூடிய போர்வை, கம்பிளி போன்றவற்றையும் பயன்படுத்தி வந்துள்ளமை பழமொழிகளில் பதிவாகியுள்ளன.

❖ பாலக்காடு மாவட்ட பெண்கள் அணியும் ஆடைகளைப் பற்றிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைக்கவில்லை.

❖ தொழில் தொடர்பான பழமொழிகள் எனும் தலைப்பில், இரு மாவட்ட ஆண்களும் சுயமாக உழைத்து சம்பாதிக்க வேண்டும் என்ற மனநிலையில் இருக்கக் கூடியவர்களாக உள்ளனர்.

❖ இரு மாவட்டத்திலும் உழவுத் தொழில், நாவிதன், செருப்பு தைத்தல், மருத்துவம், தாசில்தார், மீன்பிடித்தல், பொன் வேலை செய்தல், தோட்டவேலை செய்தல், எண்ணையெடுத்தல், மரம் வெட்டுதல், தேன் எடுத்தல், கசாப்புத் தொழில், துணி துவைத்தல், ஆசாரித்தொழில், அடுப்பு வனைதல், கூடை பின்னுதல், கயறு திரித்தல் போன்ற வேலைகளைச் செய்து வந்துள்ளனர்.

❖ இவ்விரு மாவட்டங்களிலுள்ள மக்கள் விவசாயம் செய்து வாழ்ந்து வருபவர்களாக இருப்பதால், வரவிற்கு அதிகமான செலவு இருந்தது. அதனால்

பொருளாதாரத்தில் பலவிதமான பிரச்சினைகளும் இம்மக்களுக்கு ஏற்பட்டிருந்தன என்பதை பழமொழிகளில் பரவலாகக் காண முடிந்தது.

- கோவை மாவட்ட மக்கள் பெண் பற்றிய நம்பிக்கை, பெண் உடலுறுப்பு சார்ந்த நம்பிக்கை, பேய், இயற்கை, மாதம், நாள் போன்ற அனைத்திலும் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக இருந்துள்ளனர்.
- கடவுளின் மீதும் மிகுந்த பக்தி கொண்டவர்களாகவும், சடங்குகள், திருவிழாக்கள் போன்றவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்து வருபவர்களாகவும் உள்ளனர்.
- பாலக்காடு மாவட்டத்திலுள்ள மக்கள் நாள், நட்சத்திரம் பார்ப்பதில் மிகுந்த ஈடுபாடுடனும், நம்பிக்கையுடனும் இருக்கின்றனர்.
- இம்மக்கள் திருவிழாக்கள், சடங்குகள் போன்றவற்றை மிக மகிழ்ச்சியுடன் நடத்தி வந்துள்ளனர்.
- கோவை மாவட்டத்தில் கால்நடைகள், பறவைகள், பூச்சிகள், ஊர்வன போன்றவற்றைப் பற்றிக் கூறப்பட்டன.
- கால்நடை வளர்ப்பின் முக்கியத்துவத்தினைப் பற்றியும், அவற்றின் உருவம், குணம், உணவு முறைகள் போன்றவற்றைப் பற்றியும் பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணமுடிந்தது.
- தென்னிந்தியாவில் மிகப்பெரிய கால்நடை சந்தை பொள்ளாச்சியில் தான் அமைந்துள்ளது. இக்கால்நடைகளின் மூலம் விவசாயிகள் பால் வியாபாரம் செய்வதில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தனர்.
- ஆடு, மாடு பற்றிய சிறுசிறு நுணுக்கங்கள் தொடர்பான 50 (ஐம்பது) பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்தது. இதன் மூலம் கால்நடை வளர்ப்பின் இன்றியமையாமையை உணர்ந்து கொள்ளவும் முடிந்தது.

- பாலக்காடு மாவட்டத்தில் மாடு, யானை, நாய், குள்ளநரி, எருது போன்றவற்றின் முக்கியத்துவத்தினையும் அதனுடைய குணத்தினைப் பற்றியும் காணமுடிந்தது.
- இரு மாவட்டங்களிலும் மக்கள் வழங்கக் கூடிய தத்துவம், அறிவுரை, துன்பம் சார்ந்த பழமொழிகள் காணப்படுகின்றன.
- வாழ்க்கை பற்றிய மக்களுடைய கண்ணோட்டம், நன்மை தீமை என்றிருக்கக்கூடிய சமூக கட்டமைப்பு, இன்பமும் துன்பமும் சேர்ந்தது தான் வாழ்க்கை என்ற கருத்தாக்கம் போன்றவையெல்லாம் பழமொழிகளின் மூலம் உணர்ந்து கொள்ள முடிகின்றது.
- இம்மக்கள் வட்டார மொழிச் சொற்களையும், தகாத சொற்களையும் சேர்த்து பழமொழிகளைக் கூறியுள்ளனர்.
- இரு மாவட்ட மக்களும் ஒரே சூழ்நிலையில் பல தமிழ் மலையாளப் பழமொழிகளை வழங்கியுள்ளனர்.
- இரு மாவட்ட மக்களிடமும் தமிழ் மலையாள மொழியின் தாக்கம் காணப்படுவதால் தமிழைப் போன்று மலையாளத்திலும், மலையாளத்தைப் போன்று தமிழிலும் பழமொழிகளைக் கூறிவந்துள்ளனர்.
- பாடவேறுபாடுடன் இருக்கக்கூடியப் பழமொழிகளை இரு மாவட்ட மக்களும் பயன்படுத்தி வந்துள்ளமையை கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளின் மூலம் புலனாகிறது.
- மலையாளப் பழமொழிகளின் இன்றைய வளர்ச்சித் தன்மை எவ்வாறு அமைந்துள்ளது என்பதை பழமொழிகளின் ஊடாக பதிவு செய்யப்பட்டுள்ளன.

**அடிக்குறிப்புகள்**

1. வே. இராதா, அருணகிரிநாதரின் திருப்புகழ் பாடல்கள், ப.160
2. ஜெ. நாராயணன், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.97
3. மேலது, ப.97
4. Malinowski, Kinship in Encyclopaedia Britanica, P.19
5. தொல், பொருள், நூ.1542, 1563, ப.594–600
6. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.31
7. ஜெ. நாராயணன், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப.456–457
8. சீ. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.312–313
9. தொல். பேராசிரியர் உரை, ப.639
10. அரு. இராமநாதன், சித்தர் ஞானக்கோவை, ப.496
11. மேலது, ப.38
12. மேலது, பா.128
13. பக்தவத்சல பாரதி, தமிழர் மானிடவியல், 310
14. ஆய்வுக்கோவை, இரண்டாம் தொகுதி, ப.880
15. தே. இராணி எலிசபெத், பழமொழிகளில் நீதிக்கருத்துக்கள், ப.114
16. மேலது, ப.107
17. த. விஜயலட்சுமி, இரவாளப் பழங்குடிகளின் வாழ்வியல், ப.76
18. சு. சக்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.155
19. Wayland D.Hard, P.244
20. அன்னிதாமசு, சிலம்பில் குடும்ப அமைவு, ப.76
21. ஆறு. இராமநாதன், நாட்டுப்பறப்பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.56
22. ஆறு. இராமநாதன், நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், ப.57

23. மேலது, ப.58

24. தே. இராணி எலிசபெத், பழமொழிகளில் நீதிக்கருத்துக்கள், ப.114

25. மேலது, ப.107

26. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி.11, ப.220–221

# இயல் — 4

# கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஒப்பீடு

4.1 ஒப்பிலக்கியம்

4.2 பழமொழிகளின் சொற்தேர்வு

4.3 புழங்கு பொருள் பண்பாடு

4.4 தொழில்கள்

4.5 நம்பிக்கைகள்

4.6 உயிரினங்கள்

4.7 சாதிகள்

4.8 பிற பழமொழிகள்

4.9 ஒரே சூழலில் வழங்கக்கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள்

தொகுப்புரை

# 4. கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஒப்பீடு

## 4.1 ஒப்பிலக்கியம்

ஒன்றை வேறு ஒன்றுடன் ஒப்பிடும் தன்மையை ஒப்பீடு என்றும் ஒப்புமை என்றும் கூறலாம். ஓர் இலக்கியத்தை இன்னொரு இலக்கியத்துடன் ஒப்பிடுவதை ஒப்பிலக்கியம் என்பர். ஒப்பு நோக்கப்படுவது இலக்கியம் என்பதால் ஒப்பிலக்கியம் என்று வழங்கப்பட்டது.

"ஒப்பிலக்கியம் என்ற தொடர் ஒப்பிடப்படும் இலக்கியம் என்று பொருள்படும் "Comparative Literature" எனும் ஆங்கிலத் தொடர் போன்றே, உருவாக்கம் பெற்ற தமிழ்த் தொடராகும். இத்தொடர் "Literature Composer" எனும் பிரெஞ்சு மொழித் தொடரைப் பின்பற்றி ஆக்கப்பட்டது"[1].

'ஒப்பியல் இலக்கியம்' என்னும் சொற்றொடரைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை க.கைலாசபதி அவர்களையே சாரும். இவருடைய 'தமிழ் வீரயுகப்பாடல்' என்னும் கட்டுரையில் "Comparative Leterature" என்னும் ஆங்கிலத் தொடரைத் தமிழாக்கம் செய்ய முயன்ற போது கிடைத்த அரிய சொற்றொடரே 'ஒப்பியல் இலக்கியம்' ஆகும். ஆனால் வாரன், வெல்லக் ஆகியோரின் நூலை மொழிபெயர்ப்பு செய்த பேராசிரியை குளோரியா சுந்தரமதி தமது இலக்கியக் கொள்கையில் ஒப்பிலக்கியம் என்ற தொடரையே பயன்படுத்தினார்.

'ஒப்பியல் இலக்கியம்' என்ற இச்சொற்றொடர் உருவாகும் முன்னரே தமிழில் ஒப்பாய்வுகள் நடந்துள்ளன. டாக்டர் கால்டுவெல் தமிழ் மற்றும் பிற திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammar of Dravidian Languages)

என்னும் நூலை எழுதியுள்ளார். வ.வே.சு.ஐயர், 'Kambaramayana – A study' என்னும் தமது நூலில் கம்பனின் படைப்புகளை மேனாட்டு மில்டன், ஹோமர் முதலானோரின் படைப்புகளோடு ஒப்பிட்டுள்ளதை அறிய முடிகின்றது.

தமிழ் அறிஞர்களின் பங்களிப்பு மட்டுமின்றி பிறநாட்டு அறிஞர்களின் பங்களிப்புகளும் கவனிக்கத்தக்கன. இலக்கியங்களின் ஒட்டுமொத்த நிலையினை ஆராய்ச்சி செய்வதே ஒப்பிலக்கியம் என்பர்.

இலக்கியத்தை இலக்கியத்தோடு ஒப்பிடுவது பிரெஞ்சு கோட்பாடாகும். அமெரிக்கர் இலக்கியத்தை பிற கலை துறைகளோடு அதாவது ஓவியங்கள், சினிமா போன்ற துறைகளோடும் ஒப்பீடு செய்து ஒப்பிலக்கிய கோட்பாட்டை விரிவுபடுத்தியுள்ளனர்.

"பன்னாட்டு இலக்கியங்களின் உறவுகள் பற்றிய வரலாறு"[2] என கையார்டு கூறுகின்றார்.

'தாரதம்யம்' என்பது ஒப்பிலக்கியம் என்ற சொல்லுக்கு நிகரான மலையாளச் சொல். "19–ஆம் நூற்றாண்டில் Literature Composer என்ற பிரெஞ்சு இலக்கியத்தில் வந்ததை மேத்யூ ஆர்னால்டு என்ற ஆங்கில இலக்கிய எழுத்தாளர் 1841–ஆம் ஆண்டில் "Comparative Literature" என்று ஆங்கிலத்தில் அறிமுகம் செய்தார்"[3].

இருபதாம் நூற்றாண்டில் "ஹோமரின் இலியட், வால்மீகியின் ராமாயணம் இரண்டினையும் டாக்டர் பி.கே. நாராயண பிள்ளை முதன் முதலில் ஒப்புமை செய்தார். அதன் பிறகு 'தாரதம்யம்' என்ற மலையாளச் சொல் வரத் தொடங்கியது"[4].

இங்குக் கோயம்புத்தூர் மாவட்டத் தமிழ்ப் பழமொழிகளையும் பாலக்காடு மாவட்ட மலையாளப் பழமொழிகளையும் ஒப்பீடு செய்து கூறப்படுகின்றது. பழமொழிகள் வாழ்க்கைச் சூழலில் இருந்து தான்

உருவாக்கப்படுகின்றன. எனவே அவற்றிற்கு வாழ்க்கையோடு நிச்சயமாகத் தொடர்பிருக்கும். அத்தொடர்பை மீட்டுருவாக்கம் செய்து, இருவேறு பண்பாடு, வாழ்க்கைப் பின்னணியின் ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறிய இவ்வியல் முனைகிறது.

## 4.2 பழமொழிகளின் சொற்தேர்வு

ஒரே பொருளில் தமிழிலும் மலையாளத்திலும் கூறப்படும் பழமொழிகள் இவை,

*கும்பிடப் போன தெய்வம் குறுக்க வந்தது மாதிரி*

*தேடிய வள்ளி காலில் சுற்றி*

(தேடிய கொடி காலைச் சுற்றியது)

இவ்விரண்டு பழமொழிகளுமே எதிர்பார்த்த செயல் இயல்பாக நடந்தது என்னும் பொருளில் பயன்படுத்தப்படுகின்றன. பொருள் ஒன்றாக, சூழல் ஒன்றாக இருப்பினும் இப்பழமொழிகளின் வெளியீட்டு முறையும் சொற்தேர்வும் அந்தந்தக் கலாசாரத்தை சுட்டி நிற்பதைக் காணலாம். கோவில்கள் நிறைந்த தமிழர் வாழ்வும்; செடி, கொடிகள், மலைகள், ஆயுர்வேதம் நிறைந்த கேரள வாழ்வும் மிக அருமையாக பதிவாகியுள்ளன.

## 4.3 புழங்கு பொருள் பண்பாடு

கோவை மாவட்டப் பெண்களும், பாலக்காடு மாவட்டப் பெண்களும் வீட்டிற்கு உட்புறமும் அயலகப் பகுதியிலும் இருக்கக் கூடிய இடங்களையும் தங்களுடைய புழங்கு வெளிகளாகக் கொண்டிருந்தனர். இதனை,

*அடுப்பே திருப்பதி வாசப்படியே வைகுந்தமாம்*

*அரிக்கிற அரிசிய விட்டிட்டு சிரிக்கற சித்தப்பனோட போனாளாமா*

*சும்மா இருந்தவளோட சும்மாட்டப் பாரு*
*சட்டிப்பான வித்தவளோட தமாசப்பாரு*

*குத்துன ஒலக்கயிட்டிட்டு குதிரக்களி காணான் போய போல*
(குத்துகின்ற உலக்கையினை போட்டுவிட்டு குதிரை விளையாட்டைப் பார்க்கப் போனது போல)

*கோரிய கிணற்றிலெ வெள்ளமுறு*
(இறைத்த கிணற்றில் தண்ணீர் ஊற்றெடுத்து வரும்)

எனும் பழமொழிகளால் அறிந்து கொள்ள முடிகின்றன. மேலும் இப்பெண்கள் frT (yji^^eoTjOfiuT, (S விவசாயம் சார்ந்த தொழில்களையும் செய்து வந்துள்ளனர் என்பதை,

*கம்புக்கு கள வெட்டினாப்லயும் ஆச்சு*
*தம்பிக்கு பொன்னு பாத்தாப்லயும் ஆச்சு*

*பெற்றொனங்கிய பெண்ணும் நட்டொனங்கிய நாறும் போலே*
(பிரசவித்து எழும்பிய பெண்ணும் நட்டு வாடிப் போன நாற்றும் போல)

எனும் பழமொழிகள் மூலம் இரு மாவட்டப் பெண்களின் ஒற்றுமையினை அறியமுடிகின்றது. கோவை மாவட்ட பெண்கள் மரம் ஏறுபவர்களாக உள்ளனர் இதனை,

*அவ மரமேறான்னு சொல்லி இவளப் பாத்தா இவ பனையேறரா*

எனும் பழமொழி வெளிப்படையாகக் கூறுவதைக் காணலாம். பாலக்காடு மாவட்டத்தில் இவ்வமைப்புடன் இருக்கக்கூடிய பழமொழி கிடைக்கவில்லை.

### 4.3.1 உணவு முறைகள்

இவ்விரு மக்களும் தங்களுடைய காலை நேர உணவாக கஞ்சியினைப் பயன்படுத்தியுள்ளனர். இதை,

*ஓசுக்கு கஞ்சி கொடுத்தா மசுரு மசுருன்னானாமா*

*கஞ்சி குடிச்சாலும் பத்ராஸ் விடில்லா*

(கஞ்சி சாப்பிட்டாலும் பெருமை பேசுவதை விடமாட்டார்கள்)

போன்ற பழமொழிகளால் அறியலாம். இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் விவசாயம் செய்யக்கூடியவர்களாக இருப்பதால், காலையில் விரைவில் வயல்களுக்குச் செல்ல வேண்டும் எனக் கருதி காலை நேர உணவாக கஞ்சியினை இம்மக்கள் பயன்படுத்தியிருக்கலாம். ஆனால் நாகரீகம் வளர்ச்சியடைந்த இக்காலகட்டத்தில், கோவை மாவட்ட மக்கள் பொங்கலினையும், பாலக்காடு மாவட்ட மக்கள் அப்பம் என்று கூறக்கூடிய உணவு வகையினையும் உண்டு வருகின்றனர். இதை,

*போக்கிரிகளுக்கு பொங்கல் வெச்ச மாதிரி*

*அப்பம் திந்நா மதி குழியெண்ணண்டா*

(அப்பம் சாப்பிட்டா போதும் குழியை எண்ண வேண்டாம்)

போன்ற பழமொழிகளின் மூலம் இவ்விரு மக்களினுடைய ஒற்றுமை வேற்றுமைகளையும், பண்பாட்டினையும் அறியமுடிகின்றது.

*கத்தரிக்காய்க்கு கையும் காலும் முளைத்த மாதிரி*

*சுண்டைக்காய் கால் பணம் சுமக்கூலி முக்காப்பணம்*

*வித்து ஒண்ணு போட்டு சொறயொன்னு முளைக்குமா?*

*கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தது போல*

*சுண்டங்ஙா கொடுத்து வழுதனங்ஙா வாங்ஙிக்கல்லே*

(சுண்டைக்காய் கொடுத்து கத்தரிக்காய் வாங்கக்கூடாது)

*கைப்ப குத்தி கும்பளைங்ஙா முளைக்குமோ*

(பாகற்காய் விதை விதைத்து பூசணிக்காய் முளைத்து வருமா?)

போன்ற பழமொழிகள் மூலம் இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் ஒரே போன்று இருக்கக்கூடிய காய்கறி வகைகளைத் தான் உட்கொண்டு வந்துள்ளனர் என்பதை அறியலாம். மட்டுமின்றி, இக்காய்கறி வகைகளையெல்லாம் அவர்களுடைய வீடுகளிலேயே பயிர் செய்து உணவிற்காக பயன்படுத்தி வருகின்றனர் என்பதை கள ஆய்வின் போது காண நேர்ந்தது. காய்கறி மட்டுமின்றி மாமிச உணவு வகைகளையும் உண்டு வருகின்றனர். இதனை,

*ஆட்ட அறுபதையும் திம்பாளாமா வெள்ளாட்டப் பாத்தா*
*விருக்குன்னு துள்ளுவாளாமா*

*ஓட்டப் பானைக்குள்ள நண்டு*

*ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு*
*பெட்டியில இருக்கற மீனும் போச்சு*

போன்ற பழமொழிகள் கோவை மாவட்ட மக்கள் அனைத்து விதமான மாமிச உணவினை உண்டு வந்துள்ளனர் என்பதை தெளிவுறுத்தி நிற்பதைக் காணலாம். அதேபோன்று பாலக்காடு மாவட்ட மக்களும் நண்டு, இறைச்சி, மீன், போன்ற அனைத்தையும் உண்டு வந்துள்ளனர் என்பதை,

*ஞண்டு போயால் எவிடம் வரே போகும்*

(நண்டு சென்றால் எந்த இடம் வரை செல்லும்)

*இறைச்சிக்கு போயவன் விரச்சு சத்து*
*வீட்டிலிருன்னவன் கொதிச்சு சத்து*

(இறைச்சி வாங்க சென்றவன் நடுங்கி செத்தான்
வீட்டிலிருந்தவன் ஆசைப்பட்டு செத்தான்)

*செம்மீன் சாடியால் முட்டோளம்*

*பின்னயும் சாடியால் சட்டியோளம்*

(இறால் சாடினால் முட்டு வரை

பிறகும் சாடினால் சட்டி வரை)

போன்ற பழமொழிகளில் தெள்ளத் தெளிவாக பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். மேற்கூறப்பட்ட பழமொழிகளின் மூலம் இருமாவட்டங்களிலுள்ள மக்களினுடைய உணவுகளில் ஒற்றுமையைக் காணமுடிகின்றது.

### 4.3.2 கட்டிடம்

கோவை மாவட்டத்தில் கிராமப்புறங்களிலுள்ள மக்கள் விவசாயம் செய்யக்கூடிய மக்களாக உள்ளனர். இவர்கள் சாளைவீடு, கூரைவீடு போன்ற வீடுகளில் வசித்து வரக்கூடியவர்களாக இருக்கின்றனர்.

*எலிச்சாளையானாலும் தனிச்சாளை வேண்டும்*

*கூரைமேல் ஏறி கோழி பிடிக்காதவன் வானம் ஏறி*
*வைகுந்தம் போனானாம்*

எனும் பழமொழிகள் சான்றாக நிற்பதைக் காணலாம். நாகரீகம் வளர்ச்சியடைந்த பின்னர் இம்மக்கள் அட்டானீ வீடு, கண்ணாடி வீடு, மாளிகை வீடு போன்ற வீடுகளில் வசிக்கத் தொடங்கினர். இதனை,

*ஆடு கடிக்குதுன்னு அட்டானீ மேல ஏறி உக்காந்திட்டான்*

*கண்ணாடி வீட்டுல இருந்திட்டு கல் எறியாதே*

*குடிக்கறது கூழு கனா காண்பது மச்சு மாளிகை*

போன்ற பழமொழிகளால் அறியலாம்.

அதே போன்று பாலக்காடு மாவட்டத்திலுள்ள விவசாயம் செய்யக்கூடிய மக்கள் சிமெண்ட் தூண்களால் ஆகிய வீடுகளை கட்டி வாழ்ந்து வந்துள்ளனர். இதனை தெளிவுபடுத்தும் வகையில்,

*கார கோலு செதலு புடிச்ச போலே*

(சிமெண்ட் குச்சிகள் சிதல் பிடித்தது போன்று)

என்று பழமொழியில் பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். இதன் மூலம் இரு மாவட்ட மக்களினுடைய வீடுகளினுடைய வேற்றுமைகளை அறியலாம்.

### 4.3.3 ஆடை அணிகலன்கள்

கோவை பாலக்காடு மாவட்ட மக்கள் விவசாயம் செய்யக் கூடிய மக்கள் என்று உறுதிப்படுத்தும் வகையில் ஆண்கள் தங்களுடைய ஆடைகளை அணிந்திருந்தனர். இதை கள ஆய்வின் போது விவசாயம் செய்யக்கூடிய இடத்தில் நேரில் காண முடிந்தது. ஆண்கள் கோமணம், டிரவுசர், வேட்டி தலைப்பாகை என்பனவற்றை அணிந்திருந்தனர். இதனை பழமொழிகள் தெளிவுறுத்தி நிற்பதைக் காண முடிகின்றது.

*கோமணம் கட்டற ஊர்ல நீ ஏன் வேட்டி கட்டற*

*நீ போட்டிருக்கறதே ஓட்ட டவுசரு*
*அடுத்தவன் குண்டிய நீ எதுக்கு பாக்கற*

*தலைக்கு வந்தது தலப்பாவோட போச்சு*

இப்பழமொழிகள், விவசாயம் செய்யும் பொழுது தங்களுடைய ஆடைகளில் அதிகப்படியான சேறு ஏற்படாமல் இருப்பதற்காக இந்த வகையான ஆடைகளை ஆண்கள் அணிந்திருக்கலாம். அதே போன்று பாலக்காடு மாவட்ட ஆண்கள், கோமணம் சட்டை போன்றவற்றை அணிந்து வந்துள்ளனர். இதனை

*பொதப்பினேக் கொடுத்து கோணாகம் வாங்஫ருது*

(போர்வையினைக் கொடுத்து கோமணத்தினை வாங்குதல் கூடாது)

*பிடிச்சு வலிச்சு குப்பாயமிட்டால்*

*வலிச்சு கீறி ஊரேண்டிவரும்*

(பிடித்து இழுத்து சட்டையினை அணிவித்தால்

இழுத்து கிழித்து அழித்து எடுக்க வேண்டும்)

எனும் பழமொழி மூலம் உணரலாம். கோவை மாவட்டப் பெண்கள்,

*கையாலாகாத சிறுக்கி வண்ணப்புடவைக்கு ஆசைப்பட்டாளாமா*

*எலி ஏ கோமணத்தோட போகுதுன்னு பாத்தா*

*பட்டுச்சீலையோட போகுது*

*முழுசா நனஞ்ச பெறகு முக்காடு எதற்கு*

போன்ற பழமொழிகள் தமிழர் பண்பாட்டைக் காட்டும் பெண்களின் ஆடைகளான சீலை, வண்ணப்புடவை, பட்டுச்சீலை போன்றவற்றை கூறுவதாக அமைந்துள்ளது எனலாம். பாலக்காடு மாவட்டத்தில் கள ஆய்வின் போது பெண்களின் ஆடை வகைகளைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் எதுவும் கிடைக்கவில்லை. இரு மாவட்டங்களிலும் உள்ள மக்கள் இரு பாலினருக்கும் உரியதாக இருக்கக்கூடிய கம்பிளி, போர்வை போன்றவற்றையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். சான்றாக,

*மச்சான் செத்தா மயிராச்சு எனக்கு ரெண்டு கம்பிளியுமாச்சு*

*பொள்ளாச்சி கெடக்கனு பொதப்பு அதினு இவிடெ எந்தினு*

*காலிட்டு கீறுணு*

(பொள்ளாச்சியில் இருக்கிறது போர்வை அதை இங்கிருந்து எதற்கு

காலை வைத்து கிழிக்கிறாய்)

எனும் பழமொழிகளைக் கூறலாம்.

இரு மாவட்டங்களிலுமுள்ள பெண்கள் தங்களை அலங்காரம் செய்து கொள்வதில் ஆர்வம் கொண்டவர்களாக உள்ளனர். கோவை மாவட்ட பெண்கள் தமிழர்களின் பண்பாட்டினை வெளிப்படுத்தும் விதமாக தங்களுடைய கூந்தலை அலங்காரம் செய்து கொண்டுள்ளனர் என்பதை,

'முடியுள்ள சீமாட்டி அள்ளியும் முடியுவா அவுத்தும் விடுவா' எனும் பழமொழி சுட்டுகிறது. அதே போன்று பாலக்காடு மாவட்ட பெண்களும் தங்களுடைய கூந்தலுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர் என்பதை, 'முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கெட்டும் சரிச்சிட்டும் கெட்டும்' (முடியிருக்கின்ற பெண் சாய்த்தும் கட்டுவாள் சரித்தும் கட்டுவாள்) என்கிறது.

## 4.4 தொழில்கள்

இரு மாவட்டங்களிலுள்ள ஆண்கள் மீன் பிடித்தல், மரம் வெட்டுதல் போன்ற தொழில்களைச் செய்து வந்துள்ளனர். இதனை,

*ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு பெட்டியில*
*இருக்கற மீனும் போச்சு*

*இறயிட்டு மீன் பிடிக்குன்னது போலே*
(இறையினை போட்டு மீன் பிடிப்பதைப் போன்று)

என்னும் பழமொழிகளாலும்,

*வெட்டீட்டு வான்னா வேரோட புடுங்கிட்டு வாரான்*

*இரிக்குன்ன கொம்பின்டெ இட முறிக்கருது*
(உட்கார்ந்திருக்கின்ற கொம்பினுடைய இடையில் வெட்டக்கூடாது)

எனும் பழமொழிகளாலும் இருமாவட்டத்திற்கும் இருக்கின்ற ஒற்றுமையினைக் காணமுடிகின்றது. மேலும்,

*அம்பட்டன் குப்பையக் கிளறுனா பூரா மசுரு மசுராட்டாம் வரும்*

*நாய்க்கு மீச வளர்ன்னால் அம்பட்டனெந்து காரியம்*

(நாய்க்கு மீசை வளர்ந்தால் நாவிதனுக்கு என்ன பயன்)

எனும் பழமொழிகளின் மூலம் இரு மாவட்டங்களில் உள்ள நாவிதன் தொழிலின் ஒற்றுமையினைக் காணலாம்.

### 4.4.1 விவசாயம்

இரு மாவட்டங்களிலுமுள்ள மக்கள் விவசாயத்தைத் தங்களுடைய முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளனர். இதில் கோவை மாவட்டம் சற்று வறண்ட காலநிலையைக் கொண்டதாக இருப்பதால் இங்கு அதற்கேற்ற பயிர்களான கம்பு, சோளம், மேட்டில் விளையும் நெல் போன்றவற்றைப் பயிர் செய்கின்றனர். இதனை,

*நெல்லுக்குப் பாயர தண்ணி புல்லுக்கும் பாஞ்சா என்ன*

*கம்புக்கு கள வெட்டினாப்லயும் ஆச்சு*

*தம்பிக்கு பொண்ணு பாத்தது மாதிரியுமாச்சு*

*ஆளப்பாரு சோளக்காட்டு பொம்ம மாதிரி*

எனும் பழமொழிகள் மூலம் அறியலாம்.

*கதிரின் மேல் கொண்டு வளமிட்டிட்டு காரியமில்லா*

(நெற் கதிரான பின்பு வளம் போட்டால் ஒரு பயனுமில்லை)

என்று பாலக்காடு மாவட்டத்தில் நெற்பயிரினை விவசாயம் செய்து வந்துள்ளனர் என்பதை பழமொழி வெளிப்படையாகக் கூறியுள்ளமையைக் காணலாம்.

## 4.5 நம்பிக்கைகள்

நம்பிக்கையைப் பற்றிக் குறிப்பிடுகையில் கோவை மாவட்ட மக்கள் உடலுறுப்பு, பேய், இயற்கை, மாதம், நாட்கள் போன்றவற்றின் மீது மிகுந்த நம்பிக்கை

கொண்டு வாழ்ந்து வந்துள்ளனர். பாலக்காடு மாவட்ட மக்கள் நாட்கள், நட்சத்திரம், இயற்கை, உடலுறுப்பு, அதிர்ஷ்டம் போன்றவற்றின் மீது அளவு கடந்த நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பது பழமொழிகளில் பதிவாகியுள்ளன. சான்றாக,

*கணுக்கால் பெருத்தவ கொண்டவனுக்காகாது*

*கருப்பப் பாக்காம நாய் ஓலைக்காது*

*பங்குனி மாசத்துல மழ பேஞ்சா பசு குடிக்கக்கூட*
*தண்ணி கெடைக்காது*

*திங்கள் நெடுநாளு*

எனும் பழமொழிகளில், இன்றைய காலங்களைப் போன்று நம் முன்னோர்கள் வாழ்ந்திருக்கக் கூடிய காலகட்டத்தில் ஒரு பெண்ணை திருமணம் செய்ய வேண்டுமெனில் நாள் நட்சத்திரம் பார்க்கக் கூடிய வழக்கம் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆதலால் பெண்ணின் உடலுறுப்பினை வைத்து பெண் என்பவள் எத்தன்மை கொண்டவளாக இருப்பாள் என்று கூறுவதற்காக முதற்பழமொழியினை கூறியிருப்பர். இரண்டாவது பழமொழியானது, கிராமப்புறம் என்பதால் தங்களுடைய பாதுகாப்பிற்காக வீடுகளில் நாய் வளர்த்தக் கூடியவர்களாக இருப்பார்கள். இரவு நேரங்களில் மனிதனுடைய கண்களுக்குப் புலப்படாத சில செயல்கள் நாய்களினுடைய கண்களுக்கு புலப்பட்டிருக்கலாம். ஆதலால் முன்னோர்கள் சூழலுக்குத் தக்கவாறு இப்பழமொழியினைக் கூறியிருக்கலாம். அதே போன்று மழை பெய்வதை வைத்து காலத்தைக் கணித்தும் வந்துள்ளனர் என்பதை மேற்கூறப்பட்ட பழமொழியால் உணரலாம்.

*செவ்வாய்ச்ச வெட்டிய குற்றி அவைக்கில்லா*
(செவ்வாய்க்கிழமை வெட்டின செடி கிளை விடாது)

*அஸ்வதி அச்சனாகா*
(அஸ்வதி நட்சத்திரத்தில் குழந்தை பிறந்தால் தந்தைக்கு ஆகாது)

*கூட்டு பிரி குடும்பத்தினு ஆகா*

(சேர்ந்திருக்கக் கூடிய புருவம் குடும்பத்திற்கு நல்லதல்ல)

*புலி போலே வன்னது எலி போலே போயி*

(புலி போன்று வந்தது எலியைப் போன்று போய்விட்டது)

இப்பழமொழிகளின் மூலம் உடலுறுப்பு, நாள், மாதம் போன்றவற்றின் மீதுள்ள நம்பிக்கைகளின் ஒற்றுமைகள் இரு மாவட்டத்திலும் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

### 4.5.1 சடங்குமுறைகள்

சடங்குகள் செய்வதில் தமிழ் மக்கள் தான் முன்னிலையில் நிற்கின்றனர் என்பதை கோவை மாவட்ட கள ஆய்வின் போது காண நேர்ந்தது. இம்மாவட்டத்தில் காது குத்தும் வழக்கம் உள்ளது என்பதை,

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் பொறந்தான்னு*
*சொல்லி கடப்பார எடுத்து காது குத்தினாங்களாமா*

என்றும்,

*சானியோட சேந்து சந்தனமும் நாறும்*

*எச்சிய பன்னீரா நினைக்கறவ*

போன்ற பழமொழிகளில் ஆண்களுக்கு காது குத்தக் கூடிய வழக்கம் சில சாதி மக்களிடம் காணமுடிகின்றது. திருமணம் போன்ற மகிழ்ச்சியான நிகழ்வின் போது வீட்டிற்கு வரக்கூடிய விருந்தினரை மனமுவந்து பன்னீர், சந்தனம் போன்றவற்றை வைத்து வரவேற்பது என்பது தமிழர் மரபு என்ற கருத்தினைத் தெளிவுறுத்துவதாகவும் இப்பழமொழிகள் அமைந்துள்ளன எனலாம்.

இதே போன்று பாலக்காடு மாவட்டத்தில் திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு போன்றவைகள் உள்ளன. இதனை,

*தெங்ஙு சாரினின்னவன் பெண்ணுங் கொண்டு போயி*

(தென்னை மரத்தில் சாய்ந்து நின்றவன் பெண்ணையும்

கொண்டு சென்று விட்டான்)

*பதினாறாயால் பறயனும் பிடிச்சு கொடுக்கணம்*

(பதினாறு வயது ஆகி விட்டால் பறையனுக்காவது திருமணம் செய்து

கொடுக்க வேண்டும்)

*சத்து கெடன்னாலும் சமஞ்ஞு கெடக்கணம்*

(சடலமாகப் படுத்தாலும் அலங்காரத்துடன் படுக்க வேண்டும்)

*சத்த சவமும் கெடக்கில்லா வெச்ச சோறும் பாக்கி வரில்லா*

(இறந்த சடலத்தையும் போட்டு வைக்க மாட்டார்கள்

வைத்த சாப்பாட்டினையும் மீதி வைக்க மாட்டார்கள்)

போன்ற பழமொழிகளின் மூலம் உணர முடிகின்றது. மட்டுமின்றி இம்மாவட்டத்தில், வீட்டிற்கு வரும் விருந்தினரை 'சத்யா' என்று கூறக்கூடிய விருந்து உணவினைக் கொடுத்து உபசரிக்கின்ற நிலையினைப் பழமொழியில் காணமுடிகிறது. சான்றாக,

*சத்ய மறன்னாலும் பட்டினி மறக்கில்லா*

(விருந்து உணவினை மறந்தாலும் பட்டினியை மறக்க மாட்டோம்)

எனும் பழமொழி மூலம் அறியலாம். இப்பழமொழி இவர்களுடைய அதாவது மலையாள இன மக்களின் பண்பாட்டினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. புதிதாக வீட்டிற்கு வருபவர்களுக்கு மட்டுமின்றி கோயில் திருவிழா, திருமணம் போன்ற அனைத்து இடங்களிலும் இவ்வுணவினைத் தான் கொடுத்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

### 4.5.2 கடவுள் வழிபாடு

இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் பிள்ளைபாரை வழிபட்டு வருகின்றனர். இதனை,

*பிள்ளையார் கோயிலை இடித்து பெருமாள் கோயிலை கட்டலாமா*

*கணபதிக்கு வெச்சது காக்க கொண்டு போயி*

(பிள்ளையாருக்கு வைத்தது காக்காய் கொண்டு சென்று விட்டது)

எனும் பழமொழியால் அறிய முடிகிறது. பாலக்காடு மாவட்ட மக்கள் பிள்ளையாரை, 'கணபதி' என்னும் பெயரால் வழங்கி வருகின்றனர். இப்பழமொழிகளின் மூலம் இரு மாவட்டங்களிலுள்ள மக்களினுடைய ஒற்றுமையை அறியலாம். கோவை மாவட்டத்திலுள்ள நம் முன்னோர்கள் பிள்ளையார் மட்டுமின்றி மாரியம்மன், அனுமன் போன்ற கடவுள்களையும் வழிபட்டு வந்துள்ளனர். இதனை,

*பிச்சை எடுக்கறாரு பெருமாளு அதைப் புடுங்கித் திங்கறாரு அனுமாரு*

*எங்கேயோ போற மாரியாத்தா எம்மேல வந்து ஏறாதே*

எனும் பழமொழிகள் மூலம் இரு மாவட்ட மக்களினுடைய வேற்றுமையை அறியலாம். இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் ஒரு கடவுளை மட்டுமல்லாது, அனைத்து கடவுள்களையும் வழிபடுபவர்களாக உள்ளனர் எனும் கருத்தும் இப்பழமொழிகளின் மூலம் புலனாவதைக் காணலாம்.

### 4.5.3 திருவிழாக்கள்

தேர்த்திருவிழா சிறப்பான முறையில் கோவை மாவட்டத்தில் கொண்டாடி வருகின்றனர் என்பதை,

*தேரோட போச்சு திருநாளு*

*தாயோட போச்சு பொறந்த வீடு*

எனும் பழமொழியால் உணரலாம். பாலக்காடு மாவட்டத்தில் ஆராட்டு (கொல்லங்கோடு ஆராட்டு), வேலை (நெம்மார வேல) போன்ற விழாக்களை இம்மக்கள் சிறப்பான முறையில் கொண்டாடி வருகின்றனர். இதில் 'ஆராட்டு' என்பது கடவுளினைக் குளிப்பாட்டி ஊர்வலமாகக் கொண்டு செல்கின்ற நிலையினை ஆராட்டு என்பர். இந்த மாதிரியான சொல் வரக்கூடிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்துள்ளது. இதை,

*தூராத்தவன் தூரியால் தீட்டங்கொண்டு ஆராட்டு*

(மலங்கழிக்காத்தவன் மலங்கழித்தால் மலத்தைக் கொண்டு

நீராட்டு நடத்துவர்)

எனும் பழமொழியால் உணரலாம். இந்த ஆராட்டு விழாவின் போது யானைகளை அலங்கரித்து ஊர்வலமாகக் கொண்டு செல்வர் என்பது தான் இவ்விழாவின் சிறப்பாகும். இதனை,

*ஆன புறத்து கேரணம்*

*அங்ஙாடியில் கூடி போகணம்*

*கொட்டும் மேளவும் வேணம்*

*ஆரும் காணன் பாடில்லா*

(யானையின் மீது ஏற வேண்டும்

கடைத் தெருக்களின் வழி செல்ல வேண்டும்

கொட்டும் வாதிய மேளமும் வேண்டும்

யாரும் பார்க்கக் கூடாது)

எனும் பழமொழி மூலம் அறிய முடிகிறது.

### 4.6 உயிரினங்கள்

#### 4.6.1 கால்நடைகள்

உயிரினங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், இரு மாவட்டங்களிலும் யானை, காளை, ஆடு, மாடு, கழுதை, நாய், பூனை போன்றவை காணப்படுகின்றன. இம்மக்கள் தங்களுடைய வீடுகளில் காளை, மாடு, ஆடு, நாய், பூனை, கழுதை, குதிரை போன்றவற்றை வளர்த்து வந்துள்ளனர். தென்னிந்தியாவில் மிகப்பெரிய கால்நடை சந்தை பொள்ளாச்சியில் தான் அமைந்துள்ளது. ஆடு, மாடு என்ற கால்நடைகளின் மூலம் இரு மாவட்டங்க்ளிலுள்ள விவசாய மக்கள் பால் வியாபாரம் செய்வதில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தனர். இரு மாவட்டத்திலும் யானைகள் இருந்தன என்பதை,

*யானப் பசிக்கு சோள பொறி போதுமா?*

*யானை காணாமல் போனா குண்டுச் சட்டில தேடினா கிடைக்குமா?*

*யானை மேல ஏறி பாறைமேல விழலாம்*
*நாய் மேல ஏறி பீய் மேல விழக்கூடாது*

*ஆன மெலிஞ்ஞால் தொழுத்தில் கெட்டுமோ?*
(யானை மெலிந்து விட்டால் தொளுவில் கட்டுவார்களா)

*ஆன கொடுத்தாலும் ஆச கொடுக்கருது*
(யானையினைக் கொடுத்தாலும் ஆசையினை வளர்த்தக் கூடாது)

எனும் பழமொழிகளின் மூலம் புலனாகிறது. கோவை மாவட்டத்தில் எருதுகள் இருந்தன என்பதற்குச் சான்றாக,

*உழுகிறவன் ஏமாளியாக இருந்தால் எருது மச்சானே*
*மச்சானேனு சொல்லுமாமா*

*கவுண்டனுக்கு எருது போச்சேன்னு கவல*
*சக்கிலியனுக்கு கொழுப்பில்லைனு கவல*

எனும் பழமொழிகள் மூலம் அறியலாம். அதே போன்று பாலக்காடு மாவட்டத்திலும் காளைகள் இருந்தன என்பதற்கு சான்றாக,

*காள பெற்றென்னு கேட்டு கயறெடுக்குன்னது போலே*
(மூரி பிரசவித்தது என்று கேட்டு கயிற்றினை எடுப்பது போன்று)

எனும் பழமொழியினைக் கூறலாம். இப்பழமொழிகள் இரு மாவட்டத்திலும் காளைகள் உள்ளன என்ற ஒற்றுமையினை தெளிவுறுத்துவதாக அமைந்துள்ளது.

இரு மாவட்டங்களிலும் மாடுகள் இருந்தன என்பதை,

*ஆடு மாடு இல்லாதவன் அடமழைக்கு ராஜா*
*புல்லு வெட்டி இல்லாதவன் பட்டத்துக்கு ராஜா*

என்று தமிழிலும்,

*பட்டி தின்னுகயில்லா பசுவினெக் கொண்டு தீட்டிக்குகயுமில்லா*
(நாய் சாப்பிடவும் செய்யாது மாட்டை சாப்பிடவும் விடாது)

என்ற மலையாளப் பழமொழியும் மாடுகள் இருந்ததற்கான சான்றுகளாக அமைந்துள்ளன. கோவை மாவட்டத்தில் மாடுகள் மட்டுமின்றி ஆடுகளும் இருந்தன என்பதை,

*ஆடு கொளுத்துதுன்னா இடயனுக்கு இலாபம்*

*ஆடு பொளச்சா மயிர் கூட குடுக்கமாட்டான்*

*ஆடு பகையாமா குட்டி உறவாமா*

எனும் பழமொழிகள் புலப்படுத்துவதைக் காணலாம். அதே போன்று பாலக்காடு மாவட்டத்தில்,

*ஆட்டு தோலனிஞ்ஞு சங்ஙாதி*

(ஆடு வேடமணிந்த தோழன்)

*ஆடின்டிடடுத்து சோதிச்சிட்டு வேணோ முளகரைய்க்கான்*

(ஆட்டிடம் கேட்டு விட்டா மிளகரைப்பது)

எனும் மலையாளப் பழமொழிகள் மூலமும் இரு மாவட்டங்களிலுள்ள ஒற்றுமையினை அறியமுடிகின்றது.

கோவை – பாலக்காடு மாவட்டத்தில் உள்ள மக்கள் வீட்டிற்குப் பாதுகாவலாக நாயினை வளர்த்து வந்துள்ளனர். இதனை,

*நக்க விட்ட நாயும் கொத்தவிட்ட கோழியும் சும்மா இருக்காது*

*நாய்க்குத் தெரியுமா ஒரு சந்திப் பானை*

*நாயா இருந்தாலும் தாய்*

*நாயக் கூப்பிடற நேரம் பீய வழி*

எனும் பழமொழிகள் கோவை மாவட்டத்தில் நாய் இருந்ததற்கான சான்றாக அமைந்துள்ளது. அதே போன்று பாலக்காடு மாவட்டத்தில்

*நாயய்கரியுமோ நாயருடெ வேதன*

(நாயிற்குத் தெரியுமா நாயர் சாதியில் இருப்பவர்களுடைய துக்கம்)

*நாயய்க்கு மீச வளர்ண்ணால் அம்பட்டனெந்து காரியம்*

(நாயிற்கு மீசை வளர்ந்தால் நாவிதனுக்கு என்ன பயன்)

எனும் பழமொழிகள் பாலக்காடு மாவட்டத்திலும் நாய்கள் இருந்தன என்ற ஒற்றுமை நிலையினைக் கூறுவதாக அமைந்துள்ளது. இம்மாவட்ட கள ஆய்வின் போது

நாய்கள் மட்டுமின்றி காளை, மாடு, ஆடு போன்ற கால்நடைகளையும் நேரில் காணமுடிந்தன. இரு மாவட்டங்களிலும் பூனைகள் உள்ளன என்பதை,

*பூன குறுக்காச்சு ஒத்தப்பாப்ப முன்னாச்சு*
*சாந்தி குறுக்காச்சு சர்ப்பம் தடயாச்சு*

*பூன எளச்சா எலி விளையாடக் கூப்பிடுமாம்*

*பூனைக்கு சந்தோசம் வந்தா பீத்தப்பாயை சொரண்டுமாம்*

*பூனைக்கு யாரு மணிகட்டுவா*

*மிண்டாப் பூச்சா கலமுடைக்கும்*
(பேசாமல் இருக்கக் கூடிய பூனை சட்டியினை உடைத்து விடும்)

போன்ற பழமொழிகள் மூலம் இரு மாவட்டங்களுக்கிடையுள்ள ஒற்றுமையினை அறிய முடிகின்றது. அதே போன்று இரு மாவட்டங்களிலும் பன்றிகள் உள்ளன என்பதை,

*பன்னி முன்னால முத்தப் போடாதே*

*பன்னிக்கு பத்தென்னம் எந்தினு*
*புலிக்கு ஒன்னு மதி*
(பன்றிக்கு பத்து குட்டிகள் எதற்கு, புலிக்கு ஒரு குட்டி போதும்)

எனும் பழமொழிகள் ஒற்றுமையினை புலப்படுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

கோவை மாவட்ட வண்ணான் இனத்தைச் சார்ந்த மக்கள் Loas^r தங்களுடைய உதவிக்காக கழுதையினை வளர்த்து வந்துள்ளனர். இதற்கு சான்று கூறும் விதமாக,

*வண்ணான் பண்ணையக்காரன் ஆவப் போவதுமில்ல*

*கழுதை உழவுக்கு வரப் போறதுமில்ல*

எனும் பழமொழி கூறப்படுகிறது. பாலக்காடு மாவட்ட விவசாயம் செய்யக்கூடிய மக்கள் தங்களுடைய உழவுப் பணிக்காக காளையினை வளர்த்து வந்துள்ளனர் என்பதை,

*மூரியோடு சோதிச்சிட்டு வேணோ நுகம் வெக்கான்*

(எருதிடம் கேட்டா நுகம் வைப்பது)

எனும் பழமொழிகள் இரு மாவட்டங்களிலுள்ள வேற்றுமைகளைக் கூறுவதாக அமைந்துள்ளது எனலாம்.

### 4.6.2 பறவைகள்

இரு மாவட்டங்களிலும் ஒரே போன்று இருக்கக் கூடிய பறவைகள் தான் காணப்படுகின்றன. இதனை,

*காக்கா உக்கார பனம்பழம் விழுந்துதாமா*

*காக்கா குஞ்சு கருங்குஞ்சானாலும் தன் குஞ்சு பொன் குஞ்சு*

*காக்க கண்டறியும் கொக்கு கொண்டறியும்*

(காக்கை பார்த்தவுடன் புரிந்து கொள்ளும்

கொக்கிற்கு பிறர் கூறி புரிய வைக்க வேண்டும்)

*அத்திப் பழம் பழுக்கும் போ காக்கைக்கு வாய்ப்புண்ணு*

(அத்திப்பழம் பழுக்கும் போது காக்காவிற்கு வாயில் புண்ணு)

போன்ற பழமொழிகள் இரு மாவட்டத்திலும் காக்கைகள் இருந்தன என்ற கருத்தினையும் ஒற்றுமையினையும் கூறுவதாக அமைந்துள்ளது. இதே போன்று இம்மாவட்டங்களில் கோழிகளும் இருந்தன என்பதற்குச் சான்றாக,

*கோழி காலுல கச்சயக் கட்டுனாலும் அது குப்பையைத் தான் கிளறும்*

*கோழி களவு போனா ஆடு வெட்டியா பொங்கலு போடுவாங்க*

*கோழி குருடானா கொழம்பு மனமில்லாமலா போகும்*

*கோழி கஞ்சாவடிச்ச போலே*
(கோழி சாராயம் குடித்தது போன்று)

*கோழி சவுட்டி குஞ்ஞு சாகுமோ*
(கோழி மிதித்து குஞ்சு செத்தா போயிடும்)

எனும் பழமொழிகள் மூலம் அறியலாம்.

காக்காய், கோழி மட்டுமின்றி கொக்கும் இருந்தது என்பதை,

*வண்ணான் துணியைக் காயப் போட்டு கொக்கு பின்னால போன மாதிரி*

*ஈக் கொக்கு எத்ரகுளம் கண்டதா*
(இந்த கொக்கு எத்தனை குளம் பார்த்ததுண்டு)

எனும் பழமொழிகளால் இரு மாவட்டத்தினுடைய ஒற்றுமைகள் புலனாகின்றன. பாலக்காடு மாவட்டத்தில் குளங்கள் அதிகமாகக் காணப்படுவதால் அங்கு அதிகப்படியான கொக்குகள் அமர்ந்திருப்பதைக் கள ஆய்வின் போது காணமுடிந்தது.

### 4.6.3 ஊர்வன

ஊர்வனவற்றில் எலி, அணில், தேள், பாம்பு போன்றவைகள் காணப்படுகின்றன. இதனை,

*எலி நெல்லுக்குள்ள விழுந்த மாதிரி*

*அறுப்புக் காலத்துல எலிக்கு அஞ்சு பொஞ்சாதி*

*எலியெ பேடிச்சு இல்லம் சுடுக*
(எலியினை பயந்து வீட்டினை எரிப்பது)

போன்ற பழமொழிகள் எலி இருந்தமைக்கு சான்றாக அமைந்துள்ளது.

*அணில் ஏங் கெட்டுதுன்னா தன் வாயால கெட்டுது*

*அண்ணான் மூத்தால் மரம் கேற்றம் மறக்குமோ*
(அணில் வளர்ந்துவிட்டால் மரத்தில் ஏறுவதை மறந்து விடுமா)

எனும் பழமொழிகள் இரு மாவட்டங்களிலும் அணில் இருந்தது என்ற ஒற்றுமையினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

*தேளிற்கு வாலில் விஷம் தேவிடிசிக்கு உடம்பு முழுவதும் விஷம்*

*தேளினெ பேடிச்சோடியவன் பாம்பின்டெ வாயில்*
(தேளினை பார்த்து பயந்து ஓடியவன் பாம்பினுடைய வாயில் விழுந்து விட்டான்)

எனும் பழமொழிகள் தேள் இருந்தமைக்கு சான்றாக அமைந்துள்ளது. எலி, அணில், தேள் போன்ற ஊர்வன மட்டுமின்றி பாம்புகளும் இருந்தன. இதற்குச் சான்றாக,

*பாம்புக்கு பல்லுல தான் வெசம்*
*பங்காளிக்கு உடம்பெல்லாம் வெசம்*

*பாம்பு கடிச்சு பொளச்சவனும் உண்டு*
*செருப்பு கடிச்சு செத்தவனும் உண்டு*

*பாம்பானெங்கிலும் பழகியதானு நல்லது*

(பாம்பாக இருந்தாலும் பழமையடைந்தது நல்லது)

*பாம்பின்டெ இடையில் தவள பட்ட போலே*

(பாம்பிற்கு இடையில் தவளை நசுங்கியது போன்று)

எனும் பழமொழிகள் மூலம் இரு மாவட்டங்களிலுள்ள ஒற்றுமைகள் புலனாவதைக் காணமுடிகின்றது.

கோவை மாவட்டத்தில் வெப்பம் அதிகரித்துக் காணப்படுவதால் அதிகப்படியான மூட்டைப் பூச்சிகள் காணப்படுகின்றன என்பதை வெளிப்படுத்தும் வகையில்,

*மூட்டப்பூச்சிக்கு பயந்து வீட்டக் காலி பண்ணின மாதிரி*

எனும் பழமொழி அமைந்திருப்பதைக் காணலாம். அதே போன்று பாலக்காடு மாவட்டத்தில் நெல் விவசாயம் செய்யக்கூடிய மக்களுடைய வீட்டில் அதிகமான எலிகள் காணப்படுகின்றன. இதை,

*எலியேப் பேடிச்சு இல்லம் சுடுக*

(எலியினை பயந்து வீட்டினை எரிப்பது)

எனும் பழமொழியால் அறியலாம். இப்பழமொழிகள் காரணமாகவும் கோவை மாவட்டத்தில் மூட்டைப் பூச்சியின் காரணமாகவும், பாலக்காடு மாவட்டத்தில் எலியின் காரணமாகவும் வீட்டினைக் காலி செய்துள்ளனர் என்பதன் மூலம் இரு மாவட்டங்களினுடைய வேற்றுமைகள் புலனாவதைக் காணலாம்.

## 4.7 சாதிகள்

சாதிகளைப் பற்றிக் குறிப்பிடுகையில், கோவை மாவட்டத்தில் பல சாதிகள் உள்ளன என்பதை கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளால் அறிய

முடிந்தது. சாதி என்ற பெயரினுடைய கட்டமைப்பில் தான் இம்மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இதன் மூலம் ஒவ்வொரு சாதியினருக்கும் உரியதாக இருக்கக்கூடிய குணநலன்கள், பண்பாடு போன்றவை வெளிப்பட்டு நிற்பதைக் காணலாம். சான்றாக, கோவை மாவட்டத்தில் மிகவும் உயர்ந்த சாதியில் இருப்பவர் கவுண்டர் இன மக்கள். இம்மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'காட்ட வித்துக் கள்ளக் குடிச்சாலும் கவுண்டன் கவுண்டந்தான்' எனும் பழமொழியின் மூலம் இழிவான குடிப்பழக்கம் உடையவனாக இருப்பினும் கவுண்டர் என்ற அந்தஸ்து குறைவதில்லை என்று கவுண்டர் இன மக்கள் தன்மானத்துடன் கூறிக் கொள்கின்ற நிலையைக் காண முடிகின்றது. இதன் மூலம் சமூக அதிகார வைப்பு முறையில் அவர்களின் இடத்தை உணர முடிகிறது. மேலும், செட்டியார் இன மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், இவர்கள் நன்கு சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டவர்களாக இருக்கக் கூடிய மக்கள் என்பதை கள ஆய்வின் மூலம் அறியமுடிந்தன. இதை,

*ஆதாயமில்லாம செட்டி ஆத்தோட போவானா?*

*செல்லும் செல்லாததற்கு செட்டியார் தொன இருக்கு*

*செட்டி கெட்டாலும் எட்டு நாளுல பொளச்சிடுவான்*

*செட்டிக்கு தொட்டதெல்லாம் துட்டு*

*செல்லும் செல்லாதத செட்டியார் தலையில கட்டு*

எனும் பழமொழிகளால் உணரலாம்.

*முண்ணூறு உருட்டி மொளக்கு ஈமான் கொண்டவன் சீரேத்தி*
*கலிமா கொண்டவன் ஹைராக்கி*

எனும் பழமொழி முஸ்லீம் இன மக்களினுடைய வேதங்களைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது.

*புதுசுக்கு வண்ணான் கடுசுக்கு வெளுத்தான்*
*பழசுக்கு வண்ணான் சோத்துக்கு வெளுத்தான்*

*இடையன் புத்தி பொடனீல*

*குயவன் மகன டைக்கட்டி பள்ளிக் கூடத்துக்கு*
*அனுப்பினாலும் டையக்கழட்டி கோமணம் கட்டீட்டு வருவான்*

*பள்ளப் புள்ளய பள்ளிக் கூடத்துக்கு அனுப்பினாலும்*
*'அனே'ங்கற புத்தி போகாது*

எனும் பழமொழிகள் ஒவ்வொரு சாதியினருக்கும் உரியதாக இருக்கக்கூடிய குணத்தினை வெளிப்படையாகக் கூறியுள்ள நிலையினைக் காணமுடிகிறது. இவை மட்டுமின்றி கோவை மாவட்டத்தில் சாதியக் காழ்ப்புணர்ச்சியினைத் தூண்டும் வகையில் ஒரு மதத்திலுள்ள மக்கள் பிற மதத்தினை கேலி செய்கின்ற :S)69r (Sa6lS] Qffl நிலையினையும் பழமொழியில் காணமுடிகிறது. சான்றாக,

*பெம்பேச்சு கேட்ட பேய் பெருமாளே மக்கத்துக்குப் போயி*
*தொப்பி இடு*

இப்பழமொழி, பெண்ணினுடைய பின்னால் சுற்றிக் கொண்டும் அவர்களுடைய பேச்சினைக் கேட்டு நடக்கக்கூடிய பெருமாளினை விளித்து, முஸ்லீம்களது புண்ணிய இடமான மக்காவிற்குச் சென்று, இவ்வளவு நாட்களும் செய்த தவறுகளைக் களைந்து பாவமன்னிப்பு கோரி தொப்பியினை அணிந்துவா என்று கூறுவதாக அமைந்துள்ளது. அதன் பிறகு பெண்களினுடைய பின்னால் செல்லக் கூடாது என்று கேலி செய்வதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளதைக் காணலாம்.

கோவை மாவட்டத்தைப் போன்று பாலக்காடு மாவட்டத்திலும் சாதிகள் பல உண்டு. இருப்பினும் சாதி எதிர்ப்பு, கலவரம் போன்றவை ஒன்றும் இம்மாவட்டத்தில் காணப்படுவதில்லை. ஆதலால் சாதியினைப் பற்றிக் கூறக்கூடிய

பழமொழிகள் அதிகமாகக் கிடைக்கவில்லை. தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் சாதியினை நால்வகை சாதியினர் என்று குறிப்பிட்டுச் சொல்வதைப் போல, பாலக்காடு மாவட்டத்தில் நால் வகை சாதியினரைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் கிடைத்துள்ளன. அவை,

*பட்டர்க்கெந்தா படயிலு காரியம்*
(பட்டர்க்கு என்ன போர் செய்யும் இடத்தில் வேலை)

*பறையன்றெ முற்றத்து பசு வாழுகயில்லா*
(பறையனுடைய வீட்டு வாசலில் பசு உயிருடன் இருக்காது)

*பறையன் புத்தி பெடனீலு*
(பறையனுடைய புத்தியானது பொடனியில்)

*வெருதே இருந்ந நாயர்க்கு விளிகேட்ட கச்சோடம்*
(சும்மா இருந்த நாயருக்கு யாரோ அழைத்தது போன்று கேட்ட வியாபாரம்)

எனும் பழமொழிகள், ஒவ்வொரு சாதியிலுள்ள மக்களினுடைய குணத்தினை வெளிப்படுத்துவது போன்று அமைந்திருப்பதைக் காணலாம்.

இரு மாவட்டங்களிலும் நிலையாக இருக்கக் கூடிய செய்தியினைப் பற்றிக் கூறுவதாக தத்துவம் சார்ந்த பழமொழிகள் அமைந்துள்ளன. பாமர மக்களுக்கு விரைவில் கருத்துக்களைத் தெரிவிப்பதற்காக பழமொழிகளைக் கூறி அறிவுரை புகட்டுகின்ற நிலை இரு மாவட்டங்களிலும் காணப்படுகின்றன.

## 4.8 பிற பழமொழிகள்

### 4.8.1 மரங்கள்

இரு மாவட்டங்களிலும் முருங்கை, தென்னை, பனை போன்ற மரங்கள் உள்ளன. இதை,

*வேதாளம் முருங்கை மரம் ஏறிடுச்சு*

*தென்னமரம் வெச்சவன் சாப்பிட்டு சாவான்*
*பனமரம் வெச்சவன் பாத்துட்டு சாவான்*

*அவ மரமேறான்னு சொல்லி இவளப் பாத்தா இவ பனையேறரா*

*முருங்ஙயெ ஒடிச்சு வளர்த்தனம்*
*மக்களை அடிச்சு வளர்த்தனம்*
(முருங்கையினை ஒடித்து வளர்த்த வேண்டும்
பிள்ளைகளை அடித்து வளர்க்க வேண்டும்)

*தெங்ஙு சாரினின்னவன் பெண்ணுங் கொண்டு போயி*
(தென்னை மரத்தில் சாய்ந்து நின்றவன் பெண்ணைக் கொண்டு
சென்று விட்டான்)

*காக்க இருன்னதும் பனம் பழம் வீணு*
(காக்காய் உட்கார்ந்ததும் பனம்பழம் விழுந்துவிட்டது)

போன்ற பழமொழிகளின் மூலம் அறியமுடிகின்றது. பாலக்காடு மாவட்டத்தில் அதிகமான பலாமரங்களும், கோவை மாவட்டத்தில் அதிகமான பனை மரங்களும் காணப்படுகின்றன. இதனை,

*சக்க வீணு முயலு சத்து*
(பலாப்பழம் விழுந்து முயல் இறந்துவிட்டது)

*காக்கா உக்கார பனம்பழம் விழுந்துதாமா*

எனும் பழமொழியாலும் இரு மாவட்டங்களுக்கும் இடையே இருக்கக் கூடிய வேற்றுமை புலனாவதைக் காணலாம்.

### 4.8.2 தகாத உறவுகள்

இரு மாவட்டங்களிலும் தகாத உறவுகள் இருந்தன என்பதை,

*அருப்புக் கோட்டையில உங்கப்பா செருப்பு தெச்சாலும்*
*நானுமில்லாட்டி உங்காத்தா நாறிப் போயிடுவா*

*அரிக்கிற அரிசிய விட்டுப் போட்டு*
*சிரிக்கற சித்தப்பனோட போனாளாமா*

*வலியச்சன் வரும்போ கொச்சச்சன் படிக்கு பறத்தாய போல*
(பெரியப்பா வரும்போது சித்தப்பா வாசப்படிக்கு வெளியில்
சென்றது போல)

எனும் பழமொழிகள் தகாத உறவுகள் இருந்தன என்ற ஒற்றுமை நிலையினைக் கூறுவதாக அமைந்துள்ளமையைக் காணலாம்.

### 4.8.3 பலதார, பலகணவ மணம்

கோவை மாவட்டத்தில் நம் முன்னோர்கள் காலந்தொட்டு இன்றுவரையிலும் பலதார மணம் மிகச் சாதாரணமாக இருந்து வருகிறது. என்பதை,

*அலுத்து செலுத்து அக்கா வீட்டுக்குப் போனா*
*அக்கா தூக்கி மச்சான் மடியில போட்டாளா*

எனும் பழமொழி மூலம் அறியலாம். பாலக்காடு மாவட்டத்தில் பலகணவர் மணம் மிகப் பரவலாக இருந்தது என்பதற்குச் சான்று கூறும் விதமாக,

*வலியச்சன் வரும்போல் கொச்சச்சன் படிக்கு புறத்தாய போலே*
(பெரியப்பா வரும்போது சித்தப்பா வாசப்படிக்கு வெளியில்
சென்றது போல)

எனும் பழமொழியால் உணரலாம்.

இப்பழமொழிகள் இரு மாவட்டங்களுக்கு இடையேயுள்ள (பலதார மணம், பல கணவர் மணம்) வேற்றுமைகளைக் கூறுவதாக அமைந்துள்ளன.

### 4.8.4 குணம்

கோவை பாலக்காடு மாவட்ட மக்களினுடைய மனதானது, நிலைதடுமாறும் வகையில் அமைந்துள்ளது. இதனை,

*வாய் சக்கரை கை கொக்கர*

*வெளுத்த சோறும் கருத்த முகமும் காணிக்கருது*

(வெண்மையான சோற்றினையும் கருமையான முகத்தினையும்
காண்பித்தல் கூடாது)

எனும் பழமொழிகள் குணம் மாறக்கூடிய மக்களினுடைய ஒற்றுமையினை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளது எனலாம்.

## 4.9 ஒரே சூழலில் வழங்கக்கூடிய தமிழ் – மலையாளப் பழமொழிகள்

பழமொழிகளுக்கு சூழல் என்பது மிகவும் முக்கியமான ஒன்றாகும். சூழல் இல்லையெனில் பழமொழிகளின் பொருள் புரிந்து கொள்ள முடியாது. இப்பகுதியில் ஒரே சூழலில் கூறப்படும் தமிழ் – மலையாளப் பழமொழிகளைக் காண்போம்.

ஒரு குடும்பத்திலுள்ள அனைத்துப் பொறுப்புக்களையும் வேலைகளையும் ஒருவர் மட்டும் செய்ய வேண்டும் என்ற சூழலில்,

*அடிப்புளுக்கையிலிருந்து ஆட்டான் புளுக்க வர நாந்தான்*
*பாக்கணும்*

என்று தமிழிலும்,

*தானே வீணு தான் தன்றெ எணிக்கணம்*

(தானே கீழே விழுந்து தானாக எழுந்திருக்க வேண்டும்)

என்று மலையாளப் பழமொழியும் கூறுவதைக் காணலாம்.

ஒருவரிடம் பல குறைகள் இருக்கும் பொழுது, அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் பிறருடைய குற்றங்களையும், குறைகளையும் கூறும் வழக்கம் இரு மாவட்டங்களிலுள்ள மக்களிடமும் காணமுடிகிறது. இதனை,

*ஓ முதுகுல ஆயிரத்தெட்டு அழுக்க வெச்சிட்டு*
*அடுத்தவன் முதுகுல இருக்கற அழுக்க எடுக்கப் போறயா*

என்று தமிழிலும்,

*அவனவன்றெ குற்றம் மறச்சு வெச்சுட்டு*
*ஆரான்றெ குற்றம் சூண்டிக் காட்டருது*
(அவனவனுடைய குற்றங்களை மறைத்து வைத்துவிட்டு
பிறருடைய குற்றங்களைச் சுட்டிக் காட்டுதல் கூடாது)

என்று மலையாளத்திலும் கூறிச் செல்வதைக் காணலாம்.

ஒரு வேலை செய்து அதனால் ஏற்படக் கூடிய துன்பங்கள் அவ்வேலையினைச் செய்தவர்களுக்கு மட்டுமே தெரியும் என்பதற்குச் சான்றாக,

முட்ட போடுற கோழிக்குத் தாண்டி குண்டி வலி தெரியும்"

என்று தமிழிலும்,

*முட்டயிடுன்ன கோழிக்கல்லே மூண வேதன அறியூ*
(முட்டை போடுகின்ற கோழிக்குத்தான் குண்டி வலி தெரியும்)

என்று மலையாளத்திலும் ஒரே சூழலில் கூறுகின்றனர்.

ஒரு பொருள் நம்மிடம் இருக்கும் பொழுது அதற்கான மதிப்பினைப் பற்றி யாரும் உணர்ந்து கொள்ளமாட்டார்கள். ஆனால் அப்பொருளை நாம் இழந்துவிடும் பொழுது அதன் மதிப்பை நம்மால் உணர்ந்து கொள்ள முடியும் எனும் சூழ்நிலையில்,

*அப்பனோட அரும அப்பனில்லாட்டி தெரியும்*
*உப்போட அரும உப்பில்லாட்டி தெரியும்*

என்று தமிழிலும்,

*கண்ணிரிக்கும்போ காழ்ச்ச அறியில்லா*
(கண் இருக்கும் பொழுது காட்சி தெரியாது)

என்று மலையாளத்திலும் கூறுவதைக் காணலாம்.

தன்னிடம் இருக்கின்ற பொருளைத் தானும் பயன்படுத்தமாட்டார்கள் பிறருக்கு கொடுத்து உதவி செய்யவும் மாட்டார்கள் என்ற சூழ்நிலையில்,

*தானும் படுக்க மாட்டான் தள்ளியும் இருக்க மாட்டான்*

என்று தமிழிலும்,

*பட்டி தின்னுகயில்லா பசுவினெக் கொண்டு தீட்டிக்குகயுமில்லா*
(நாய் சாப்பிடவும் செய்யாது மாட்டைச் சாப்பிடவும் விடாது)

என மலையாளப் பழமொழியின் ஊடாக அறியமுடிகிறது.

நாம் எந்த இடத்திற்குச் சென்றாலும் அந்த இடத்திலுள்ள மக்களைப் போன்றும், அவ்விடத்திலுள்ள பண்பாடு, கலாச்சாரம் போன்றவற்றிற்குக் கட்டுப்பட்டுத்தான் வாழ வேண்டும் எனும் சூழலில்,

*பாம்பு திங்கற ஊர்ல போனா நடுத்துண்டந்தான் சாப்பிடணும்*

என்று தமிழிலும்,

*நடுத்துண்டம் தின்னுன்ன நாட்டில் சென்னால் நடுத்துண்டம் திண்ணனம்*

(நடுப்பகுதி சாப்பிடுகின்ற நாட்டிற்குச் சென்றால் நடுத்துண்டு சாப்பிட வேண்டும்)

என்று மலையாளத்திலும் கூறுவதைக் காணலாம்.

யாரிடமாவது இருக்கக் கூடிய கோபத்தை, அவர்களிடம் காண்பிக்காமல் வேறு யாராவது மீது காட்டி கோபத்தைத் தீர்த்துக் கொள்ளக்கூடிய நிலையைக் காணலாம். இது மனித இயல்பு. அந்த மாதிரியான சூழ்நிலையில்,

*எங்கேயோ போற மாரியாத்தா எம்மேல வந்து ஏறாதே*

என்ற தமிழ்ப் பழமொழியினையும்,

*அங்காடியில் தோற்றதினு அம்மயோடானோ கோபம் காணிக்கனு*

(அங்காடியில் தோல்வியடைந்ததற்கு அம்மாவிடமா கோபப்படுவது?)

எனும் மலையாளப் பழமொழி சுட்டிச் செல்வதைக் காணலாம்.

யாருக்கும் நடக்காத ஒரு செயல் ஒருவருக்கு மட்டும் நடந்தது எனில், அவர் சில வித்தியாசத்துடன் இருக்கின்ற செயல்களையெல்லாம் செய்து கொண்டிருப்பார். அது போன்ற சூழலில்,

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் பொறந்தான்னு சொல்லி கடப்பாற எடுத்து காது குத்தினாங்களாமா*

என தமிழிலும்,

*தூராத்தவன் தூரியால் தீட்டங் கொண்டு ஆராட்டு*

(மலங்கழிக்காத்தவன் மலங்கழித்தால் மலத்தைக் கொண்டு நீராட்டு நடத்துவர்)

எனும் மலையாளப் பழமொழியாலும் கூறுவதைக் காணலாம்.

தமிழ்ப் பழமொழியில் ஆண் பிள்ளைகளுக்கு காது குத்தக் கூடிய வழக்கம் உள்ளது என்றும், மலையாளப் பழமொழியில் ஆராட்டு திருவிழா நடத்துகின்ற வழக்கம் உள்ளது என்பதைக் கூறுவதாகவும் அமைந்துள்ளன.

நல்ல பொருள் எந்தச் சூழலிலும் அதன் குணமானது மாறாமல் எப்பொழுதும் ஒரே தன்மையில் இருக்கும். இதனை,

*குப்பையில கிடந்தாலும் குன்றிமணி குன்றிமணி தான்*

என்ற தமிழ்ப் பழமொழியினையும்,

*பந்தீராண்டு கழிஞ்ஞாலும் மாணிக்கம் மங்ஙில்லா*

(பனிரெண்டு ஆண்டு முடிந்தாலும் மாணிக்கத்தின் ஒளி குன்றிவிடாது)

என்று மலையாளத்திலும் ஒரே சூழ்நிலையில் கூறுவதைக் காணலாம்.

தானொரு உயர்வான இடத்தில் பிறக்க வேண்டும் எனும் சூழ்நிலையில்,

செத்து செத்துப் பொறந்தாலும் செட்டியார் வகுத்துல பொறக்கணும்"

என்று தமிழிலும்,

*நாயாயி பிறந்நாலும் தரவாட்டில் பிறக்கணம்*

(நாயாக பிறந்தாலும் தரவாட்டு வீட்டில் தான் பிறக்க வேண்டும்)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் கூறுகின்றனர்.

நமக்குத் தேவையான பொருட்கள் நம்மிடம் இருக்கும் பொழுது அதையெல்லாம் பொருட்படுத்தாமல் பிறரிடம் உதவிகேட்டு செல்லக் கூடிய சூழ்நிலையில்,

*கையில் வெண்ணையை வெச்சுக்கிட்டு நெய்க்கு அலையற மாதிரி*

என்று தமிழிலும்,

*தோட்டத்திலு பழமிரிக்கெ தூரே போகுன்னதெந்தினு*
(தோட்டத்தில் பழம் இருக்கும் பொழுது தூரத்தில் போவது எதற்கு)

என்ற மலையாளப் பழமொழியும் கூறுவதைக் காணமுடிகின்றது.

சில மனிதர்களுக்கு இரண்டு முகங்கள் இருப்பதைக் காணலாம். அதாவது நம்முன் நமக்குச் சாதகமாகப் பேசுவதும், நாம் அவ்விடத்திலிருந்து விலகிச் சென்றதும் நம்முடைய குறைகளை பிறரிடம் கூறிக் கொண்டிருப்பதையும் காணலாம். இதனை,

*முன்னால பல்லுல சிரிச்சிட்டு பின்னால பல்லுல கடிக்கறது*

என்று தமிழிலும்,

*அகத்து குசும்பனும் புறத்து நல்லவனும்*
(மனதினுள் வஞ்சகனும் வெளியில் நல்லவனும்)

என்று மலையாளத்திலும் ஒரே சூழலில் பழமொழிகளைக் கூறுகின்றனர்.

எந்தவொரு செயலாக இருப்பினும் நடக்க வேண்டிய காரியங்கள் அதற்குரிய சமயத்தில் நடக்கும் என்னும் சூழலில்,

*கத்தரிக்காய் முற்றினால் கடைவீதிக்கு வந்து தானே ஆகணும்*

*காணான் போகுந்ந பூரத்தினு எந்தினு கேட்டறியனு*

(பார்க்கப் போகின்ற பூர விழாவை எதற்குக் கேட்டுத் தெரிய வேண்டும்)

என்ற தமிழ் மலையாளப் பழமொழிகள் சூழலுக்குத் தக்கவாறு கூறுவதைக் காணலாம். மிகவும் கோபத்துடன் இருப்பவர்களை,

*மிஞ்ச வெச்ச சாறு சுண்ட வெச்ச மாதிரி*

*இஞ்சி கடிச்ச குரங்கினெ போலே*

(இஞ்சியைக் கடித்த குரங்கினைப் போன்று)

என்ற தமிழ் மலையாளப் பழமொழிகள் வெளிப்படுத்தி நிற்பதைக் காணலாம்.

எந்தவொரு செயலையும் நிதானத்துடனும், பொறுமையுடனும் செய்யாமல் எதற்கும் பொறுமையின்றி செயல்படுபவர்களை,

*வாலுல தீப் பிடிச்ச மாதிரி*

என்று தமிழிலும்,

*வெடி கொண்ட பன்னி பாயும் போலே*

(வெடியின் சத்தம் கேட்ட பன்றி பாய்வதைப் போல)

என்று மலையாளத்திலும் கூறுவதைக் காணமுடிகின்றது.

மிகவும் செல்வச் செழிப்புடன் இருக்கின்றவர்களிடம் உறவினர்களும், சுற்றத்தார்களும், நண்பர்களும் இருப்பார்கள் என்பதை,

*சதை இருக்கற இடத்துலதான் கத்தி பாயும்*

என்று தமிழிலும்,

*சக்க முறிக்குன்னிடத்தே ஈச்ச கூடு*

(பலாப்பழம் இருக்கின்ற இடத்தில் தான் ஈ மொய்க்கும்)

என்ற மலையாளத்திலும் பழமொழி கூறுகின்றனர்.

நாம் ஒருவரைத் தேடிக் கொண்டு செல்கிறோம். ஆனால் அவர் நம் முன் தென்படுவதில்லை. திடீரென்று ஒரு நாள் நாம் அறியாமலேயே நம் முன் வந்து நிற்பதைக் காண்கிறோம். அச்சூழலில்,

*கும்பிடப் போன தெய்வம் குறுக்க வந்தது மாதிரி*

என்று தமிழிலும்,

*தேடிய வள்ளி காலில் சுற்றி*

(தேடிச் சென்ற கொடி காலில் சுற்றிவிட்டது)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் கூறப்படுவதைக் காணலாம்.

கையில் செல்வம் இருப்பவர்கள் எப்படி வேண்டுமானாலும் நடப்பார்கள் என்பதை,

*முடியுள்ள மகராசி அள்ளியும் முடிப்பா அவுத்தும் விடுவா*

என்று தமிழிலும்,

*முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கட்டும் சரிச்சிட்டும் கட்டும்*

(முடியிருக்கின்றவள் சாய்த்தும் கட்டுவாள் சரித்தும் கட்டுவாள்)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் ஒரே சூழலில் கூறப்படுகின்றன. அதிர்ச்சி தரும்படியாக இருக்கக்கூடிய செய்தியினைப் பற்றிக் கூறுகையில்,

*கரண்ட் கம்பி மிதிச்ச மாதிரி*

என்று தமிழிலும்,

*குந்தம் விழுங்கிய போலே நிக்கனு*

(வேல் விழுங்கியது போன்று நிற்கிறாய்)

என்று சூழ்நிலைக்கு ஏற்றவாறு கூறுவதைக் காணலாம்.

சில செயல்கள் நடைபெறுவதற்கு நாம் அறியாமலேயே நாம் காரணமாகிவிடுவோம். அவ்வாறு இருக்கக்கூடிய சூழலில்,

*காக்கா உக்கார பனம்பழம் விழுந்துவிட்டது*

என்று தமிழிலும்,

*சக்க வீணு முயலு சத்து*

(பலாப்பழம் விழுந்து முயல் இறந்து விட்டது)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் கூறப்படுவதைக் காணலாம்.

## தொகுப்புரை

- இப்பகுதியில் 'ஒப்பியல் இலக்கியம்' என்ற தொடரை முதன் முதலில் தமிழில் க. கைலாசபதி அவர்கள் பயன்படுத்திய முறை பற்றிக் கூறப்பட்டுள்ளது.
- ஒப்பியல் இலக்கியம் என்ற தொடரிற்கு பிற ஆசிரியர்கள் கூறிய கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.
- மலையாளத்தில் ஒப்பியல் துறையில் ஈடுபட்டுள்ள ஆசிரியர்களையும், அவர்கள் ஒப்பாய்வு செய்துள்ள நூற்களைக் குறித்தும் கூறப்பட்டுள்ளன.
- கோயில்களால் நிறைந்திருக்கக் கூடிய கோயம்புத்தூர் மாவட்டத்தையும், மலைகளும் செடிகளும், கொடிகளும், குளங்களும் நிறைந்திருக்க கூடிய பாலக்காடு மாவட்டத்தையும் பழமொழியின் மூலம் ஒப்பீடு செய்து விளக்கப்பட்டுள்ளது.
- இரு மாவட்டங்களிலுள்ள புழங்கு பொருட்களின் அடிப்படையில் அந்தந்தப் பண்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன. பெண்களின் புழங்கு வெளிகள், ஆண்களின் புழங்கு வெளிகள் போன்றவையும் பழமொழிகள் மூலம் கண்டறியப்பட்டுள்ளன.
- மக்களின் தொழில்கள் என்று பார்க்கும் போது உழவுத் தொழில், மரம் வெட்டுதல், முடி வெட்டுதல், எண்ணெய் எடுத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்துள்ளனர் என்ற ஒற்றுமை நிலை பழமொழிகளின் மூலம் ஒப்பிடப்பட்டுள்ளது.
- இரு மாவட்டத்திலுள்ள மக்கள் தங்களுடைய உணவுப் பொருளாக அரிசி, கஞ்சி, பால், தயிறு போன்ற உணவு வகைகளையும், கத்தரிக்காய், சுண்டைக்காய், பாகற்காய் என்ற காய்கறி வகைகளையும், மாமிச உணவு வகைகளான நண்டு, மீன், இறைச்சி போன்ற உணவினையும் உண்டு வந்துள்ளனர்.

- கோவை மாவட்ட மக்கள் கூரைவீடு, சாளைவீடு, மச்சுவீடு போன்ற வீடுகளில் வாழ்ந்து வந்துள்ளனர். நாகரீகம் வளர்ச்சியடைந்த காலத்தில் கண்ணாடி வீடுகளில் மக்கள் வாழத் தொடங்கிவிட்டனர். பாலக்காடு மாவட்ட மக்கள் சிமெண்டினால் கட்டிய வீடுகளில் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை பழமொழிகள் வழி விளக்கப்பட்டுள்ளது. இதில் இரு மாவட்டத்திலுள்ள மக்களினுடைய வேற்றுமைகள் புலனாவதைக் காணமுடிந்தது.
- இரு மாவட்டத்திலுள்ள ஆண்கள் வேட்டி, சட்டை, டிரவுசர், கோமணம், தலைப்பாகை போன்றவற்றை அணிந்து வந்துள்ளனர்.
- கோவை மாவட்டப் பெண்கள் தமிழர் பண்பாட்டிற்கு உரியதாக இருக்கக் கூடிய சீலை, வண்ணப்புடவை, பட்டுச்சீலை, முக்காடு போன்றவற்றை அணிந்து வந்துள்ளனர்.
- பாலக்காடு மாவட்டப் பெண்கள் அணியக் கூடிய ஆடைகளைப் பற்றிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைக்கவில்லை.
- இரு பாலினருக்கும் உரியதாக இருக்கக் கூடிய கம்பிளி, போர்வை போன்றவற்றை இரு மாவட்டங்களிலும் உள்ள மக்கள் பயன்படுத்தியுள்ளனர்.
- பெண்கள் தங்களுடைய கூந்தலுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர்.
- இரு மாவட்ட மக்கள் விவசாயத்தைத் தங்களுடைய முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளனர். பாலக்காடு மாவட்ட மக்கள் நெற்பயிரினை விவசாயம் செய்துள்ளனர். கோவை மாவட்ட மக்கள் நெற்பயிர், கம்பு, சோளம் போன்றவற்றைப் பயிர் செய்து வந்துள்ளனர்.
- இரு மாவட்ட மக்களும் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கின்றனர் என்பதை கள ஆய்வின் போது சேகரித்த பழமொழிகளின் மூலம் அறிய முடிந்தது.
- கோவை மாவட்ட மக்கள் உடலுறுப்பு, பேய், இயற்கை, மாதம், நாட்கள் போன்றவை சார்ந்த நம்பிக்கை கொண்டு வாழ்ந்து வந்துள்ளனர்.

- பாலக்காடு மாவட்ட மக்கள் நாட்கள், நட்சத்திரம், இயற்கை, உடலுறுப்பு, அதிர்ஷ்டம் போன்றவற்றின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர்.
- கோயம்புத்தூர் மாவட்டத்தில் காதுகுத்துதல், திருமணத்தின் போது செய்யக்கூடிய சடங்குமுறைகள் போன்றவை காணப்படுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் திருமணம், இறப்புச் சடங்குகள் போன்றவை செய்து வந்துள்ளனர்.
- கோவை மாவட்ட மக்கள் பிள்ளையார், சிவன், பெருமாள், மாரியம்மன் போன்ற கடவுள்களை வழிபட்டு வருகின்றனர். பாலக்காடு மாவட்ட மக்கள் சிவன், பிள்ளையார், ஐயப்பன் போன்ற கடவுள்களை வழிபட்டு வருகின்றனர். இதில் இரு மாவட்டத்திலுள்ள மக்களினுடைய ஒற்றுமை வேற்றுமைகள் புலனாவதைக் காணமுடிந்தது.
- கோவை மாவட்டத்தில் தேர்த் திருவிழாவினை மிக ஆராவரமாகக் கொண்டாடி வருகின்றனர். பாலக்காடு மாவட்டத்தில் ஆராட்டு என்ற விழாவினை மிக மகிழ்ச்சியுடன் ஆராவரமாகக் கொண்டாடி வருகின்றனர்.
- இரு மாவட்டத்திலும் ஒரே போன்று இருக்கக் கூடிய உயிரினங்கள் அதாவது யானை, குதிரை, காளை, ஆடு, மாடு, கழுதை, நாய், பூனை போன்றவை காணப்படுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் காளை என்பதை மூரி எனும் சொல்லால் வழங்கி வருகின்றனர்.
- பறவை இனங்களான கோழி, காக்கை, கொக்கு போன்றவற்றையும், அணில், தேள், எலி போன்ற ஊர்வனவும் இரு மாவட்டங்களிலும் காணப்படுகின்றன.
- கோவை மாவட்டத்தில் கவுண்டர், செட்டியார், முஸ்லீம், வண்ணான், இடையன், குயவன், பள்ளன், சக்கிலியன் போன்ற சாதியிலுள்ள மக்கள் உள்ளனர்.
- கவுண்டர் இன மக்கள் சமூக அந்தஸ்த்தில் உயர்ந்த நிலையில் உள்ளன. செட்டியார் இன மக்கள் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டவர்களாக உள்ளனர்.

- முஸ்லீம் இன மக்கள் அவர்களுக்கு உரியதாக இருக்க் கூடிய செய்திகளைப் பற்றிக் கூறவதாக பழமொழி சுட்டிச் சென்றுள்ளதைக் காண முடிகின்றது.
- வண்ணான், இடையன், குயவன், பள்ளன் போன்ற சாதியினரைப் பற்றிய பழமொழிகளில் அச்சாதியினரை மட்டம்தட்டும் படியான செய்திகளை வெளிப்படையாகக் கூறியுள்ள நிலையினைக் காணமுடிகின்றது.
- கோவை மாவட்டத்தில் சாதியக் காழ்ப்புணர்ச்சியினைத் தூண்டும் வகையில் ஒரு மதத்திலுள்ள மக்கள் பிற மதத்தினைக் கேலி செய்கின்ற நிலையினையும் பழமொழியில் காணமுடிந்தது.
- பாலக்காடு மாவட்டத்தில் சாதிக் கலவரம், எதிர்ப்பு போன்றவை இடம்பெறவில்லை. ஆதலால் பட்டர், பறையன், நாயர், செறுமர் போன்ற நால்வகைச் சாதியினரைப் பற்றி மட்டுமே பழமொழிகள் கிடைத்தன.
- கோவை, பாலக்காடு மாவட்டங்களில் தென்னை, பனை, முருங்கை போன்ற மரங்கள் காணப்படுகின்றன.
- கோவை மாவட்டத்தில் பனைமரமும், பாலக்காடு மாவட்டத்தில் பலாமரமும் அதிகமாகக் காணப்படுகின்றன என்பது இரு மாவட்டங்களுக்கு இடையிலான வேற்றுமையாக அமைந்துள்ளது என்பதை ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளது.
- இரு மாவட்டத்திலும் தகாத உறவு இருந்திருக்கின்றன என்பதையும் பலதார பலகணவ திருமண முறைகள் இருந்தன என்பதையும் பழமொழிகளின் மூலம் ஒப்பீடு செய்து கூறப்பட்டுள்ளன.
- மக்களினுடைய குணம் மாறக்கூடிய நிலையில் இருப்பதை இரு மாவட்டப் பழமொழிகளிலும் காணப்படுகின்றன.
- இரு மாவட்டங்களிலும் ஒரே சூழலில் வழங்கக் கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள் சூழலுக்குத் தக்கவாறு எவ்வாறு வழங்கி வருகின்றன என்பதை பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணமுடிந்தது.

## அடிக்குறிப்புகள்

1. ம.திருமலை, ஒப்பிலக்கிய ஆய்வுகள், ப.19.
2. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், ப.58–59.
3. எம்.லீலாவதி, தாரதம்ய சாகித்ய படனம், ப.29.
4. மேலது, ப.52.

# முடிவுரை

'கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஓர் ஒப்பீடு' என்னும் தலைப்பில் மேற்கொண்ட ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் இங்கே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

- நாட்டுப்புறக் கூறுகளில் ஒன்றான பழமொழி வாய்மொழி இலக்கியம் சார்ந்தது என்று ஏற்றுக் கொண்டாலும் பழமொழிகளுக்கும் நாட்டுப்புறப் பாடல்களுக்கும் இடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உள்ளன.
- பழமொழிகள் தோன்றிய காலத்தைத் திட்டவட்டமாகக் கூற இயலாது.
- காலங்காலமாகப் பழமொழிகள் வளர்ச்சியடைந்து வருகின்றன. தற்காலத்தில் பழமொழியின் செல்வாக்கு அனைத்து இடங்களிலும் பரவலாகக் காணப்படுகின்றது.
- காலந்தோறும் இலக்கியங்களில் பழமொழிகள் பயன்படுத்தப்பட்டு வருவதிலிருந்து பழமொழிகளுக்கு என்றிருக்கக் கூடிய தனிச்சிறப்பினை உணர்ந்து கொள்ள முடிகின்றது.
- ஒவ்வொரு ஊரிலும், நாட்டிலும், வட்டாரங்களிலும் பழமொழியைக் குறிக்கக் கூடிய பல்வேறு சொற்களைக் கூறுகின்றனர். ஆனால் அனைவரும் பழமொழி என்ற ஒரு சொல்லினை அறிந்து வைத்துள்ளனர்.
- தமிழில் நமக்குக் கிடைத்த முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் பழமொழிக்கு என்று இலக்கணம் வகுத்திருப்பதும், பழமொழி நானூறு என்னும் நூல் பழமொழிக்கென்று நானூறு பாடல்களை உருவாக்கியிருப்பதும், பழமொழி பெற்றிருந்த செல்வாக்கினை எடுத்தியம்புவதாக உள்ளன.

❖ தமிழ் மலையாளப் பழமொழிகளில் ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், இரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், மூன்று விளக்கக் கூறுடைய பழமொழிகள் காணப்படுகின்றது.

❖ தமிழில் 687 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், 480 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மூன்று விளக்கக் கூறுடைய ஒரு பழமொழியும் கிடைத்துள்ளன.

❖ மலையாளத்தில் 421 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், 83 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மூன்று விளக்கக் கூறுடைய ஒரு பழமொழியும் கிடைத்துள்ளன.

❖ தமிழ் மலையாளப் பழமொழிகளை ஆராய்ந்த போது மூன்று அடியில் மூன்று விளக்கங்களைக் கூறி நான்காவது அடியில் முடிவைச் சொல்லக்கூடிய பழமொழிகளும் இருப்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.

❖ தமிழ்ப் பழமொழிகளில் முடிவுரை முதலிலும் தலைப்பு இறுதியிலும் வரக்கூடிய இரு பழமொழிகள் கள ஆய்வில் கிடைத்தது.

❖ பழமொழிகளில் முரணற்ற, முரணுடைய, முரணற்ற முரணுடைய கூறுகளைக் கொண்ட பழமொழிகள் என்பனவற்றை இனங்காண முடிந்தன.

❖ மலையாளத்தில் 'இல்லா' என்ற அமைப்பில் வரக்கூடிய அதிகமான பழமொழிகளையும் இம்மக்கள் பயன்படுத்தி வருவதைக் காணமுடிகிறது.

❖ பாமர மக்கள் வழங்கக்கூடிய பழமொழிகளில் அவர்களறியாமலேயே எதுகை மோனை அமைப்பு இருப்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.

❖ இரு மாவட்டத்திலும், குடும்ப உறவுகள், சில உறவுகள் சுமூகமான நிலையிலும், சில உறவுகள் சுமூகமற்ற நிலையிலும் இருந்தன என்று பழமொழிகள் பதிவு செய்கின்றன.

- கோவை மாவட்ட மக்கள் மச்சினன் என்ற உறவுக்குப் பெரியதொரு இடத்தினை அளிக்கின்றனர்.
- மாமியார் மருமகளின் உறவானது சண்டை சச்சரவோடு இருப்பதாகப் பழமொழிகள் பதிவு செய்கின்றன.
- பெண்ணை கட்டுப்படுத்தும், கட்டமைக்கும், தாழ்மைப்படுத்தும் ஆணாதிக்க மனநிலை சமூகத்தில் இருப்பதைப் பழமொழிகள் சுட்டுகின்றன.
- சமூகத்தில் பழங்காலந்தொட்டு தகாத உறவு, பலதார மணம் போன்றவை இருந்துள்ளன. பாலக்காடு மாவட்டத்தில் பலகணவ மணம் இருந்துள்ளது.
- தந்தை வழி சமூகத்தில் சொத்துக்கள் ஆண்களுக்கு இடையே பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. எனவே சகோதரர்கள் பங்காளிகளாகின்றனர். இந்த பங்காளி உறவு பிரச்சினையுடையதாகவே சமூகத்தில் காணப்படுகிறது. எனவே அண்ணன், தம்பி சார்ந்த பழமொழிகள் வெறுப்பை உணர்த்துவதாக அமைந்துள்ளன.
- கோவை மாவட்டத்தில் மக்கத் தாயமுறையில் இருப்பதால் திருமணமானவுடன் பெண்ணிற்கு தன்னுடைய தந்தை வீட்டில் எந்தவிதமான உரிமையும் அற்றவளாகிறாள்.
- கோவை மாவட்டத்தில் கவுண்டர், செட்டியார் சாதியில் இருப்பவர்கள் உயர்ந்த நிலையில் உள்ளனர்.
- தட்டான், வண்ணான், இடையன், பறையன், பள்ளன், குறவன், சக்கிலியன், போன்றோர் குலத்தொழிலை இன்றும் செய்து வருகின்றனர்.
- பறையன், பள்ளன் சாதியில் இருப்பவர்கள் உயர்ந்த நிலைக்குச் சென்றாலும், இவர்களை உயரவிடாமல் சாதியின் பெயரினைக் கூறி அடிமைப்படுத்துகின்ற நிலை காணப்படுகிறது.
- கோவை மாவட்டத்தில் சாதியக் காழ்ப்புணர்ச்சியுடன் மக்கள் வாழ்ந்துள்ளனர்.

- பாலக்காடு மாவட்டத்தில் சாதீயப் பூசல்கள் காணப்படவில்லை.
- பழங்காலந்தொட்டு இன்று வரையுள்ள வீடுகள் பற்றிய செய்திகளை பழமொழிகள் வழி உணர முடிகிறது.
- இரு மாவட்டத்திலுள்ள மக்கள் இன்று உண்ணக்கூடிய உணவு முறைகளைத்தான் உண்டு வந்துள்ளனர்.
- இரு மாவட்டத்திலும் உள்ள மக்கள் அணியக்கூடிய ஆடை, அணிகலன்கள் பற்றிய செய்திகள் பழமொழிகளில் பதிவாகியுள்ளன.
- புழங்கு பொருள் பயன்பாடின் வழி பெண்களின் புழங்கு வெளி சிறியதாகவும், ஆண்களின் புழங்குவெளி பெரியதாகவும் காணப்படுகிறது.
- பிறருக்கு உதவி செய்யக்கூடிய நிலையில் இருக்கக்கூடிய தொழில்களை இரு மாவட்ட மக்களும் செய்து வருகின்றனர்.
- கோவை மாவட்டம் கோயில்களால் நிறைந்திருக்கக்கூடிய பகுதியாகும். பாலக்காடு மாவட்டம் மலைகளும், செடிகளும், கொடிகளும், குளங்களும் நிறைந்திருக்கக்கூடிய பகுதியாகவும் உள்ளது.
- இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் கடவுள் மீது மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக உள்ளனர்.
- கணபதி, பெருமாள், சிவன், மாரியம்மன், போன்ற கடவுள்கள் கோவை மாவட்டத்தில் அதிகமாகக் காணப்படுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் ஐயப்பன், சிவன், பிள்ளையார் போன்ற கடவுள்கள் அதிகமாகக் காணப்படுகின்றன என்பது பழமொழிகளின் வழி தெரியவருகிறது.
- இரு மாவட்ட மக்களும் இவர்களுக்கு உரியதாக இருக்கக்கூடிய விழாக்களை ஆண்டுதோறும் மறவாமல் கொண்டாடி வருகின்றனர்.
- ஆண்களுக்கு காது குத்துகின்ற வழக்கம் கோவை மாவட்ட மக்களிடம் காணப்படுகிறது.

- பாலக்காடு மாவட்ட மக்கள் எந்தவொரு செயலையும் நாள், நட்சத்திரத்தின் அடிப்படையில் முடிவு செய்கின்றனர். இம்மக்களிடம் நாள், நட்சத்திரம் பற்றிய 23 பழமொழிகள் காணப்படுகின்றன.
- தென்னிந்தியாவில் மிகப்பெரிய கால்நடை சந்தை கோயம்புத்தூர் மாவட்ட பொள்ளாச்சியில் அமைந்துள்ளது.
- கால்நடைகளின் மூலம் விவசாயிகள் பால் வியாபாரம் செய்வதில் மிகவும் ஈடுபாடு கொண்டிருக்கின்றனர்.
- பால் பண்ணை வைத்து நடத்தக் கூடிய மக்கள் உள்ளனர் என்று பழமொழிகள் சுட்டுகின்றன.
- ஆடு, மாடு போன்ற கால்நடைகளைப் பற்றி சிறு சிறு நுணுக்கங்களுடன் இருக்கக்கூடிய 50 பழமொழிகள் கோவை மாவட்டத்திலிருந்து கிடைத்துள்ளன.
- பாலக்காடு மாவட்டத்தில் கால்நடை வளர்ப்பின் இன்றியமையாமையைக் குறித்து பத்து பழமொழிகள் இம்மக்களுடைய வழக்காற்றில் பயன்படுத்தி வருகின்றனர்.
- அவரவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்ற இடத்திற்குத் தக்கவாறு பழமொழிகளில் வட்டார மொழிச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.
- பண்டைய காலந்தொட்டு இன்று வரை நிலையாக இருக்கக்கூடிய செய்திகளை இரு மாவட்ட பழமொழிகளிலும் பதிவாகியுள்ளன.
- இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் அறிவுரை சார்ந்த பழமொழிகளைக் கூறி தீயவழியில் செல்லும் மக்களை நல்வழிப்படுத்தவும் செய்கின்றனர்.
- கெட்ட வார்த்தைகளைச் சர்வசாதாரணமாக இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் பயன்படுத்திய நிலையினைப் பழமொழிகள் பதிவு செய்துள்ளன.
- நகர்ப்புறங்களிலுள்ள மக்கள் இன்றும் பழமொழிகளை மாற்றி நாகரீகம் வளர்ச்சியடைந்துள்ள நிலைக்குத் தக்கவாறு கூறி வருகின்றனர்.

- சாதி, கல்வி, தொழில், இடம் என்ற சூழலுக்குத் தக்க பாடவேறுபாடுடனும், ஒரே சூழலில் பல பழமொழிகளை இரு மாவட்ட மக்களும் வழங்கி வருகின்றனர்.
- தமிழ்ப் பழமொழிகளில் மலையாளச் சொற்களின் தாக்கமும், மலையாளத்தில் தமிழ்ச் சொற்களின் தாக்கமும் காணப்படுகிறது.
- இரு மாவட்ட பெண்களும் தங்களுடைய கூந்தலுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர்.
- இரு மாவட்ட மக்களும் தங்களுடைய முன்னோர்கள் செய்து வந்துள்ள தொழிலான விவசாயத் தொழிலினையே தலைமுறை தலைமுறையாகச் செய்து வருகின்றனர்.
- இம்மக்கள் திருமணம், இறப்பு போன்ற பலவிதமான சடங்குகளை செய்து வந்துள்ளனர்.
- ஒரே போன்று இருக்கக்கூடிய பூச்சிகள், ஊர்வன போன்றவை இரு மாவட்டத்திலும் காணப்படுகின்றன.
- கோவை மாவட்ட வீடுகளில் அதிகமாக மூட்டைப் பூச்சிகள் உள்ளன என்று பழமொழிகள் சுட்டுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் விவசாயம் செய்யக்கூடிய மக்களது வீட்டில் எலி அதிகமாகக் காணப்படுகின்றன.
- கோவை மாவட்டம் வறட்சியான நிலப்பகுதியாகக் காணப்படுவதால் அதிகப்படியான பனைமரங்கள் இருப்பது கள ஆய்வில் புலனானது.
- முக்கனிகளுள் ஒன்று பலா. இப்பலா மரம் பாலக்காடு மாவட்டத்தில் அதிகமாகக் காணப்படுகிறது.
- தமிழ் மலையாளப் பழமொழிகளின் பொருள் வெளியீட்டு முறையும் சொற்தேர்வும் அந்தந்தக் கலாச்சாரத்தைச் சுட்டி நிற்கின்றன.

- இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் தங்களுக்கு வேண்டிய காய்கறிகளை இவர்களே பயிர் செய்து வருகின்றனர்.
- இம்மக்கள், அவர்களுக்குத் தேவையான காய்கறிகளை பயன்படுத்தவும், சந்தைகளில் கொண்டு விற்று வரவும் செய்கின்றனர் என்பது கள ஆய்வின் போது நேரில் காண முடிந்தது.
- பொதுவாக நாட்டுப்புற மக்களே அதிகமாகப் பழமொழிகளைப் பயன்படுத்துவர். இதற்கு விதிவிலக்காக, கோவை மாவட்டத்தில் நாட்டுப்புறம், நகர்ப்புறம் என்று வேறுபாடின்றி சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். இது இம்மாவட்டத்தின் சிறப்பம்சமாகும்.
- பழமொழிகளின் எதிர்காலத்தைப் பொறுத்தவரை எந்தவிதமான பாதிப்பும் இல்லை என்பது புலனாகிறது.
- கள ஆய்வில் கிடைத்த ஆயிரத்துக்கும் மேற்பட்ட பழமொழிகளில் கோவை மாவட்ட வட்டாரச் சுவையோடு அமைந்துள்ளமை இம்மாவட்டத்தின் தனித்தன்மையாகும்.

மேலும் இவ்வாய்வினை,

- அமைப்பியல் கோட்பாடு
- பழமொழிக் கதைகள்
- பழமொழிகளை மீட்டுருவாக்கம் செய்தல்
- பெண்ணியம், தலித்தியம் போன்ற கருத்துக்களின் அடிப்படையிலான விமர்சன நோக்கில் மேற்கொண்டு பழமொழிகளில் ஆய்வு செய்யலாம்.

# I. துணைநூற்பட்டியல்


1. அண்ணாமலை. மு – நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம்,
மருதமலையான் பதிப்பகம்,
27, முத்து முதலி தெரு,
இராயப்பேட்டை,
சென்னை, 1984.

2. அறிவுராஜ் – அமைப்பியல் நோக்கில் நாட்டுப்புறப் பாடல்கள்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை, 2008.

3. அன்னிதாமக – சிலம்பில் குடும்ப அமைவு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை, 1998.

4. அனந்தராமையர். இ.வை – கலித்தொகை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1985.

5. ஆலிஸ். அ – கட்டமைப்பு ஆய்வில் அகநானூறும் புறநானூறும்,
மதுமதி வெளியீடு, அன்னம் (பி) லிட்,
சிவகங்கை, 1991.

6. இராணி எலிசபெத். தே – பழமொழிகளில் நீதிக்கருத்துகள்,
அம்சா பதிப்பகம்,
9எ, மேக்ஸ்மில்லன் காலனி,
நங்கை நல்லூர்,
சென்னை, 2007.

7. இராமநாதன். அரு – சித்தர் ஞானக்கோவை,
பிரேமா பிரசுரம்,
சென்னை, 1986.

8. இராமநாதன். ஆறு – நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல்,
மணிவாசகர் நூலகம்,
சிதம்பரம், 1982.

9. கணேசன். ஆ – இலக்கியத் தென்றல்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41–பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை, 1992.

10. கௌசல்யா விஜயன் – திருமந்திரத்தில் வாழ்வியல் சிந்தனைகள்,
விஜயன் பதிப்பகம்,
சென்னை,1998.

11. சக்திவேல். சு – நாட்டுப்புற இயல் ஆய்வு,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை.

12. சாலை இளந்திரையன் – சமுதாய நோக்கில் பழமொழிகள்,
பாரிநிலையம்,
சென்னை, 1975.

13. சீனிவாசன் புலவர். ச – பழமொழி நானூறு,
பழனியப்பன் வித்துவான். நா
சாந்தா பப்ளிஷர்ஸ்,
முத்துவிழா இல்லம்,
13(5) ஸ்ரீபுரம் 2ஆவது தெரு,
இராயப்பேட்டை, சென்னை, 2008.

14. சுதானந்தா – ஆட்டமும் அமைப்பும்,
பதிப்புத்துறை,
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை, 1991.

15. சுப்பிரமணியன். ச.வே. – தொல்காப்பியம்,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை, சென்னை, 2003.

16. சுரேந்திரன். இரா – நாட்டுப்புற இலக்கியம் நலந்தரு விளக்கம்,
தேன் தமிழ்ப் பதிப்பகம்,
சேலம், 1979.

17. சௌந்தாபாண்டியன். எஸ் – தமிழில் பழமொழி இலக்கியம்,
ஸ்டார் பிரசுரம்,
72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை, 1988.

18. தமிழண்ணல் – ஒப்பிலக்கிய அறிமுகம்,
சோலை நூக வெளியீடு,
மதுரை, 1978.

19. திருமலை. ம – ஒப்பிலக்கிய ஆய்வுகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 1997.

20. திருவாசகன். ஆ – திருவாசகம்,
அருள்சுடர் பதிப்பகம்,
7, கடம்பாடி அம்மன் கோயில் தெரு,
வளசர வாக்கம், சென்னை, 1991.

21. துரைசாமிப்பிள்ளை. ஔவை சு. – பதிற்றுப்பத்து,
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி, சென்னை, 1950.

22. தொல்காப்பியர் (பேராசிரியர் உரை) – தொல்காப்பியம்,
பாரிநிலையம்,
சென்னை, 2001.

23. நாராயணன். ஜெ – சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
தமிழ்நாடு, அரசாங்கம், 1964.

24. பக்தவத்சல பாரதி. சீ – தமிழர் மானிடவியல்,
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம், 2002.

25. பக்தவத்சலபாரதி. சீ – பண்பாட்டு மானிடவியல்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 1999.

26. பெருமாள். வ – பல நோக்கில் பழமொழிகள்,
பகுத்தறிவுப் பதிப்பகம், ஆர்.73,
எம்.எம்.டி.ஏ. காலனி,
அரும்பாக்கம், சென்னை, 1999.

27. பொன்னுசாமி. மு – பழமொழியும் பண்பாடும்,
இந்து பதிப்பகம்,
கோயம்புத்தூர்–2000.

28. மாணிக்கவாசகன். ஞா – சிலப்பதிகாரம்,
உமா பதிப்பகம்,
37(71) பவளக்காரத் தெரு,
மண்ணடி, சென்னை, 2002.

29. மாணிக்கனார். புலவர். அ – அகநானூறு,
வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்,
141, உஸ்மான் சாலை,
தி.நகர், சென்னை, 1999.

30. மாணிக்கனார். புலவர். அ – பரிபாடல்,
வர்த்தமானன் பதிப்பகம்,
ஏ.ஆர்.ஆர். காம்ப்ளக்ஸ்,
141–உஸ்மான் சாலை, தி.நகர்,
சென்னை, 1999.

31. மாணிக்கனார். புலவர். அ – புறநானூறு,
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை, 2001.

32. முருகன். ப – புதிய நோக்கில் பழமொழி,
நியு செஞ்சுரி புக் ஹவுஸ் பி.லிமிடெட்,
41.பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை, 1992.

33. முருகேசன். கு – அமைப்பியல் நோக்கில் நாட்டுப்புற
நடனங்கள்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 2000.

34. ராஜா. எஸ் – அகநானூறு,
5, தம்புச்செட்டித் தெரு,
சென்னை, 1958.

35. லூர்து. தே – தமிழ்ப் பழமொழிகள்: அமைப்பு,
பொருண்மை, செயல்பாடு,
யுனைடெட் ரைட்டர்ஸ்,
63, பீட்டர்ஸ் சாலை,
ராயப்பேட்டை, சென்னை, 2007.

36. லூர்து. தே – நாட்டார் வழக்காற்றியல் சில
அடிப்படைகள்,
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை, 2000.

37. விஜயலட்சுமி. த முனைவர் – இரவாளப் பழங்குடிகளின் வாழ்வியல்,
திருக்குறள் பதிப்பகம்,
66, பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர். நகர், சென்னை, 2008.

38. விஜயலட்சுமி. த முனைவர் – பழங்குடி மக்களின் மருத்துவமும் மருத்துவ முறைகளும்,
தி. பார்க்கர், 293, அகமது வணிக
வளாகம், இரண்டாவது தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை, சென்னை, 2007.

39. வையாபுரிப்பிள்ளை. எஸ் – கம்பராமாயணம்,
கம்பன் அறநிலை,
மணி மேல்நிலைப் பள்ளி வளாகம்,
88, நேதாஜி சாலை,
பாப்புநாயக்கன் பாளையம்,
கோயம்புத்தூர், 1994.

## மலையாள நூற்கள்

1. ராகவன் பையனாடு – கேரள போக்லோர்,
Kerala Bhasha Institute,
Trivandram, 1992.

2. லீலாவதி. எம் – தாரதம்ய சாகித்ய படனம்,
சரித்திர பரமாய ஓரன் வேஷணம்,
பிரபாத் புக் ஹவுஸ்,
திருவனந்தபுரம், 2000.

### ஆங்கில நூற்கள்


1. Abrahams. Rogar. D. Dorson. Richard M. - Folklore and folklife An Introduction.

2. Alex Premingel (Ed) - Princeton Encyclopaedia of Poetry and Poetics, Macmillan Press Ltd, London, 1974.

3. Bhagwat, Durga - An outline of Indian, Folklore, 1958.

4. Brown, Ray B - The wisdom of many 'The proverbs and proverbial Expressions, American Folklore, 1968.

5. Cloude Levi – Strauss - Structural Anthrophology Gardencity, New Delhi, 1967.

6. Hornby, A.S - Oxford Advanced Learner's Dictionary of Correct English, Oxford University Press, London,1975.

7. Leach, Maria (Ed) - Standard Dictionary of Folklore My thology and Legend Funk and Wagnalls, Newyork, 1949.

8. Malinowski - Kinship in Encyclopaedia Britanica, London-1929.

9. Propp - Morphology of the Folktale University of Texas Press Bloomingson Ltd., Austin-1958.

10. Thaninayakam. Fr - Landscape and Poetry.

11. Waylard D. Hard - The feair of Gods Superstition and Popular belief.

## அகராதிகளும் களஞ்சியங்களும்

1. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி,
காா்மேகம் காடன்ஸ்,
அடையாறு,
சென்னை, 1999.

2. கழகத் தமிழ் அகராதி,
கழக வெளியீடு,
சென்னை, 1964.

3. மேல் இலக்கியச் சொல்லகராதி,
மேக்மில்லன், சென்னை, 1983.

4. கலைக்களஞ்சியம்,
தொகுதி–10, சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1990.

5. கலைக்களஞ்சியம்,
தொகுதி–4, சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1990.

6. வாழ்வியற் களஞ்சியம்,
தொகுதி–11.

7. வாழ்வியற் களஞ்சியம்,
தொகுதி–12.

## ஆய்வுக்கோவை

1. ஆய்வுக்கோவை – நான்காம் தொகுதி,
இந்தியப் பல்கலைக்கழகத்தமிழாசிரியர் மன்றம்,
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2010.

2. ஆய்வுக்கோவை – இரண்டாம் தொகுதி,
இந்தியப் பல்கலைக்கழகத்தமிழாசிரியர் மன்றம்,
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை, 2013.

## ஆய்வேடுகள்

1. இராதா. வே – அருணகிரி நாதரின் திருப்புகழ் பாடல்கள்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி, 2006.

2. கிளாரா. இ – தஞ்சாவூர் மாவட்டப் பழமொழிகள் ஓர் ஆய்வு
முனைவர் பட்ட ஆய்வேடு,
நாட்டுப்புறவியல் துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2004.

3. கௌதமன். இரா – விவிலியமும் தமிழ்ப்பழமொழிகளும்
முனைவர் பட்ட ஆய்வேடு,
தமிழ்த்துறை,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி,,
தாம்பரம், சென்னை, 2008.

4. புவனேஸ்வரி. மு – திருமூலரின் சிந்தனைகள்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி, 2011.

5. விஜயலெட்சுமி. த. முனைவர் – பாலக்காடு மாவட்டப் பழங்குடிகளின்
நாட்டுப்புற மருத்துவமும், மருத்துவ முறைகளும்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
கேரளப் பல்கலைக்கழகம்,
திருவனந்தபுரம், 2001.

# ௨. பழமொழித் தொகுப்புகள்
# (கால வரிசையில்)

| | | | |
|---|---|---|---|
| 1. | பெர்சிவல், பெ | 1842 | தமிழகப் பழமொழிகள் |
| 2. | ஹெர்மன் சென்சன், ரெவ | 1857 | தமிழ்ப் பழமொழிகளின் வகைப்படுத்தப்பட்ட தொகுப்பு |
| 3. | லாரிச், டபுள்யூ. எச் | 1870 | பழமொழிகள் |
| 4. | துரைசாமி செட்டி, ஏ.எஸ் | 1870 | பழமொழிகள் |
| 5. | தட்சிணாமூர்த்தி, ஏ | 1873 | தமிழ்ப் பழமொழிகளும் அவற்றையொத்த ஆங்கிலப் பழமொழிகளும் |
| 6. | இராமசாமி ஐயங்கார், எஸ் | 1874 | மாணவர்களுக்கான தமிழ்ப் பழமொழிகளும் ஒத்த ஆங்கிலப் பழமொழிகளும் |
| 7. | வேணுகோபால் நாயுடு, எஸ் | 1877 | பழமொழிப் புத்தகம் |
| 8. | குப்புசாமிநாயுடு & கருப்பண்ணப்பிள்ளை, த | 1888 | பழமொழித் திரட்டு |
| 9. | சத்தியநேசன் | 1888 | Hand Book of Tamil Proverbs and Phrases |
| 10. | சுந்தர சாஸ்திரியார் | 1893 | தமிழ்ப் பழமொழிகளும் அவற்றிற்கு இணையான ஆங்கிலப் பழமொழிகளும் |
| 11. | கிருஷ்ணசாமி செட்டியார் | 1894 | ஆங்கிலப் பழமொழிகளும் அவற்றிற்கு நேரான தமிழ்ப் பழமொழிகளும் |

| | | | |
|---|---|---|---|
| 12. | லாசரஸ், ஜான் | 1894 | தமிழ்ப் பழமொழிகளின் அகர வரிசை |
| 13. | ஹெர்மன் ஜென்சன் | 1896 | தமிழ்ப் பழமொழிகளின் வகைப்படுத்தப்பட்ட தொகுப்பு |
| 14. | சென்னை அரசின் விவசாயத்துறை | 1897 | பயித் தொடர்பான பழமொழிகளும் வழக்குத் தொடர்களும் |
| 15. | செல்வக் கேசவராய முதலியார், தி | 1899 | இணைப் பழமொழிகள் |
| 16. | சபாபதி முதலியார் | 1905 | Parallel Proverbs in Tamil and English |
| 17. | Vengataswami Aiyangar | 1907 | Five hundred in structive Tamil Proverbs with their English equivalents |
| 18. | அனவரதவிநாயகம் பிள்ளை, எஸ் | 1912 | பழமொழி அகராதி |
| 19. | சீனிவாச சாஸ்த்திரி, சி. ஆர் | 1914 | பழமொழி போதனை |
| 20. | சிதம்பரப்பிள்ளை, வே.அ | 1916 | பழமொழித் தீபிகை |
| 21. | செங்கல்வராய முதலியார், ப.செ | 1931 | பழமொழிக் களஞ்சியம் |
| 22. | சபாரத்தின சிங்கம் | 1932 | விவசாயம் பற்றிய பழமொழிகள் |
| 23. | இராமலிங்கம். மு | 1940 | வகைப்படுத்தப்பட்ட தமிழ்ப் பழமொழிகள் |
| 24. | கஸ்தூரி திலகம் | 1946 | 1001 அபூர்வப் பழமொழிகள் |
| 25. | சண்பகவல்லி, ஆர் | 1950 | பழமொழி விளக்கம் |
| 26. | இனியன், க | 1950 | பழமொழி விளக்கக் கதைகள் |
| 27. | கோவைகிழர் | 1951 | எங்கள் நாட்டுப்புறம் |
| 28. | நீலாம்பிகை அம்மையார், திருவருங்க | 1952 | ஆராயந்தெடுத்த அறுநூறு பழமொழிகளும் அவற்றிற்கேற்ற ஆங்கிலப் பழமொழிகளும் |

| | | | |
|---|---|---|---|
| 29. | கழக வெளியீடு | 1952 | கழகப் பழமொழி அகரவரிசை |
| 30. | தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் | – | தமிழ்நாட்டுப் பழமொழி அகர வரிசை சுருக்கம் |
| 31. | முத்தையா, க.பே | 1955 | தமிழ் அறிவு |
| 32. | சுப்பிரமணிய நாவலர், இராம | 1955 | பழமொழித் திரட்டு |
| 33. | நந்த கோபால் | 1957 | பழமொழிக் கொத்து |
| 34. | துர்காதாஸ், எஸ்.கே. சாமி | 1960 | தமிழ்நாட்டுப் பழமொழிகள் |
| 35. | சோமலெ | 1961 | கோயம்புத்தூர் மாவட்டப் பழமொழிகள் |
| 36. | சோமலெ | 1961 | இராமநாதபுரத்து மாவட்டப் பழமொழிகள் |
| 37. | சோமலெ | 1961 | செங்கல்பட்டு மாவட்டப் பழமொழிகள் |
| 38. | லெட்சுமணன், கே.எஸ் | 1962 | தமிழகப் பழமொழிகள் |
| 39. | சேதுப்பிள்ளை, ரா.பி (மற்றும் பலர்) | 1962 | தென்மொழிகளில் பழமொழிகள் |
| 40. | பட்டுச்சாமி, இ | 1962 | பழமொழித் திருமுறை |
| 41. | தமிழ்நாட்டுக் கல்வித் துறை வெளியீடு | 1963 | விவசாயப் பழமொழிகள் |
| 42. | லெட்சுமணன், கே.எஸ் | 1964 | உயிரினங்களும் பழமொழிகளும் |
| 43. | லெட்சுமணன், கே. எஸ் | 1964 | வேடிக்கைப் பழமொழிகள் |
| 44. | லெட்சுமணன், கே.எஸ் | 1965 | கல்விப் பழமொழிகள் |
| 45. | செந்துறைமுத்து | 1965 | பழமொழியும் பண்பாடும் |
| 46. | ஆறுமுகம், பூவை, எஸ் | 1966 | பகுத்தறிவுப் பழமொழிகள் |
| 47. | லெட்சுமணன், கே.எஸ் | 1967 | வாழ்வியல் பழமொழிகள் |

| | | | |
|---|---|---|---|
| 48. | சுலைமான், எஸ்.ஏ | 1968 | பழமொழி ஆயிரம் |
| 49. | ப. இராமசாமி | 1969 | குடும்பப் பழமொழிகள் |
| 50. | கந்தசாமி, இல.செ | 1973 | வேளாண்மைப் பழமொழிகள் |
| 51. | சாலை இளந்திரன் | 1975 | சமுதாய நோக்கில் பழமொழிகள் |
| 52. | தமிழ்வாணன் | 1976 | பழமொழிகள் |
| 53. | துர்காதாஸ் | 1978 | தமிழ்நாட்டுப் பழமொழிகள் |
| 54. | நடராஜன், அலெ | 1978 | 2000 பழமொழிகள் |
| 55. | கந்தசாமி, இல.செ | 1978 | வேளாண்மைப் பழமொழிகள் |
| 56. | வானமாமலை, நா | 1980 | பழங்கதைகளும் பழமொழிகளும் |
| 57. | விசுவநாதன், ஈ.ச | 1980 | சீனமலாய்ப் பழமொழிகள் |
| 58. | செயராமன், ந.வி | 1981 | பழமொழிகளில் வேளாண்மை அறிவியல் |
| 59. | சோமசுந்தரம், டி.எஸ் | 1981 | பழமொழிகளும் பொன்மொழிகளும் |
| 60. | லோகிதாசன், தங்கவயல் | 1982 | உலகப் பழமொழிகள் |
| 61. | வெண்கண்ணன்சாமி | 1982 | இராணுவப் பழமொழிகளும் முதுரைகளும் |
| 62. | லலிதா பாஸ்கர் | 1983 | உலகப் பழமொழிகள் |
| 63. | லோகிதாசன், தங்கவயல் | 1984 | சீனப் பழமொழிகள் |
| 64. | காவிரிச் செல்வன் | 1984 | பழமொழிக் கதைகள் |
| 65. | மீனாக்ஷி சுந்தரம் | 1984 | Kongu Proverbs A Study |
| 66. | சண்முகம், ந | 1986 | பழமொழிகள் 2000 |
| 67. | கணேசன், பி.சி. | 1987 | பாடம் கற்றுத் தரும் பழமொழிகள் |

r

| | | | |
|---|---|---|---|
| 68. | பெருமாள், வ | 1987 | பல நோக்கில் பழமொழிகள் |
| 69. | வீரராகவன், தே | 1987 | கம்பனில் பழமொழிகள் |
| 70. | முத்து எத்திராஜன் | 1987 | கம்பர் தரும் பழமொழிகள் |
| 71. | ராமஸ்வாமி, ப | 1987 | உலகப் பழமொழிகள் |
| 72. | ரமாவேல்சாமி | 1987 | பன்னாட்டுப் பழமொழிகள் |
| 73. | ரமாவேல்சாமி | 1988 | பாவை மொழிகள் |
| 74. | தேவமூர்த்தி | 1988 | 1000 பழமொழிகள் |
| 75. | ரமாவேல்சாமி | 1988 | பணமொழிகள் |
| 76. | சௌந்தரபாண்டியன், எஸ் | 1988 | தமிழில் பழமொழி இலக்கியம் |
| 77. | ஜெகந்நாதன், கி.வா | 1989 | தமிழ்ப் பழமொழிகள் |
| 78. | கருப்பையா | 1989 | பன்னாட்டுப் பழமொழிகள் |
| 79. | ரமாவேல்சாமி | 1989 | பழமொழிகளில் விலங்கினம் |
| 80. | முத்துக்குமரன், டி.எஸ் | 1989 | நல்லறிவுக்கு நாலாயிரம் பழமொழிகள் |
| 81. | தமிழ்நாதன் | 1989 | உலகப் புகழ்பெற்ற பழமொழிகள் |
| 82. | காவிரிச் செல்வன் | 1989 | பழமொழிக் கதைகள் |
| 83. | சங்கரன், எஸ் | 1990 | பயனுள்ள பழமொழிகள் |
| 84. | சங்கரன், எஸ் | 1990 | பழமொழிகள் 600 |
| 85. | ராஜன், எ.மு | 1990 | பழமொழி கூறும் குட்டிக்கதைகள் |
| 86. | தமிழ்வாணன் | 1990 | ஆங்கிலப் பழமொழிகள் தமிழில் விளக்கம் |
| 87. | இலக்கியப் பித்தன், பி.மு | 1991 | அனுபவ மொழிகள் 1000 |
| 88. | கிருஷ்ணபகதூர், கே | 1991 | ஆயிரம் பழமொழிகள் |

| | | | |
|---|---|---|---|
| 89. | சண்முகம், ந | 1991 | புகழ்பெற்ற பழமொழிகள் |
| 90. | சரளா இராசகோபாலன் | 1991 | பெண்களைப் பற்றிய பழமொழிகள் |
| 91. | சுவாமிநாதன், ஏ | 1991 | தமிழ்நாட்டுப் பழமொழிகள் |
| 92. | சோமசுந்தரம், சி.எஸ்.எஸ் | 1991 | முதுமொழி 3000 |
| 93. | சிவசண்முகம், டி.வி | 1991 | ஆட்டோகிராப் பழமொழிகள் |
| 94. | பூங்காவனம், ஆ | 1992 | பழமொழிகள் பலவிதம் |
| 95. | முருகன், ப | 1992 | புதிய நோக்கில் பழமொழிகள் |
| 96. | சங்கரலிங்கம் | 1992 | அறிவூட்டும் பழமொழிகள் |
| 97. | கிருஷ்ணமூர்த்தி, சு | 1992 | வங்காளப் பழமொழிகள் ஆயிரம் |
| 98. | தராசன் | 1993 | உலகப் பழமொழிகள் |
| 99. | கவிஞர். குயிலன் | 1993 | தெலுங்குப் பழமொழிகள் தமிழில் விளக்கம் |
| 100. | இரகுநாதன், எஸ் | 1993 | மேல்நாட்டுப் பழமொழிகள் |
| 101. | சிவகாமி, ச | 1993 | பன்முகப் பார்வையில் பழமொழிகள் |
| 102. | லட்சுமி நாராயணன், க | 1994 | உலகப் பழமொழிகள் |
| 103. | முரளிதரன், அ.கு | 1994 | பழமொழிகளும் கருத்துக்களும் |
| 104. | பழனிச்சாமி, கே.ஜி.எஃப் | 1994 | பழமொழியுடன் பழகுங்கள் |
| 105. | வேலுச்சாமி, பெ | 1994 | வினாவிடைப் பழமொழிகள் |
| 106. | மேரிஜெயிந்தா | 1994 | பழமொழிக் கதைகள் |
| 107. | ரகுநாதன், எஸ் | 1994 | மேல்நாட்டுப் பழமொழிகள் |
| 108. | முகவை மேத்த | 1994 | பசும்பொன் மற்றும் இராமநாதபுர மாவட்டப் பழமொழிகள் |

| | | | |
|---|---|---|---|
| 109. | பழனிச்சாமி, கே.ஜி.எஃப் | 1994 | சிறந்த தமிழ்ப் பழமொழிகளும் விளக்கங்களும் |
| 110. | செவல்குளம் ஆச்சா | 1994 | பன்னாட்டு நன்மொழிகள் |
| 111. | வின்சென்ட், ஜே | 1996 | பன்னாட்டுப் பழமொழிகள் |
| 112. | கமலா கந்தசாமி | 1996 | நாட்டுப்புறப் பழமொழித் தொகுப்பு |
| 113. | மெய்யப்பன், மெ | 1996 | தமிழ்ப் பழமொழிகளில் அறிவியல் |
| 114. | நாகய்யா, ஜெ | 1997 | பண்பை வளர்க்கும் பழமொழிகள் |
| 115. | அன்புக்கஸ்தூரி, க | 1997 | தமிழகப் பழமொழிகள் 1000 |
| 116. | பழனிச்சாமி, கே.ஜி.எஃப் | 1997 | பழமொழிகளும் பின்னணி நகைச்சுவைகளும் |
| 117. | சம்பந்தம் | 1997 | தமிழ்ப் பழமொழிகளில் சுவையான செய்திகள் |
| 118. | ஆப்ரஹாம், ஜே.எஸ் | 1997 | உயர்வுக்கு வழிகாட்டும் உலகப் புகழ் ஆங்கிலப் பழமொழிகள் |
| 119. | குப்புசாமி செட்டியார், நல்லி | 1997 | பழமொழிகளில் நிர்வாகம் |
| 120. | இந்த, இரா | 1998 | அறிவியல் நோக்கில் தமிழ்ப் பழமொழிகள் |
| 121. | கவிதா பாலு | 1998 | ஆங்கிலப் பழமொழிகளும் இணையான தமிழ்ப் பழமொழிகளும் |
| 122. | லீலா, எஸ் | 1998 | உலகப் பழமொழிகள் |
| 123. | சண்முகசுந்தரம், சு | 1998 | பழமொழிக் கதைகள் |
| 124. | நிகரியவாதி | 1998 | வேளாண்மைப் பழமொழிகள் |

| | | | |
|---|---|---|---|
| 125. | சதிஸ்குமார், பெ | 1999 | பயன்தரும் பழமொழிகள் விளக்கங்களுடன் |
| 126. | லீலா, எஸ் | 2000 | பழங்காலத் தமிழ்ப் பழமொழிகள் |
| 127. | ஜீவபாரதி, கே | 2000 | ஜீவா தொகுத்த பழமொழிகள் |
| 128. | ஜெயா மீனாட்சி சுந்தரம் | 2003 | கொங்கு நாட்டுப் பழமொழிகள் |
| 129. | தேவமூர்த்தி | 2005 | பயன்தரும் பழமொழிகள் |
| 130. | சம்பத், இரா | 2005 | பயனுள்ள பழமொழிகள் 2500 |
| 131. | கிருஷ்ணமூர்த்தி | 2006 | தமிழ்ப் பழமொழிகளும் அதற்கிணையான ஆங்கிலப் பழமொழிகளும் |
| 132. | கோதண்டம், கொ.ம, முருகேசன், பா | 2007 | பழமொழிகள் புதிய உண்மை விளக்கம் |
| 133. | ரமாவேலுச்சாமி | 2007 | பன்னாட்டுப் பழமொழிகள் |
| 134. | இராணி எலிசபெத், தே | 2007 | பழமொழிகளில் நீதிக் கருத்துகள் |
| 135. | கீர்த்தி | 2008 | அறிவார்ந்த தமிழ்ப் பழமொழிகள் |
| 136. | செங்கனி | 2008 | தமிழ்நாட்டுப் பழமொழிகள் 2000 |
| 137. | மணிவண்ணன் | 2008 | தமிழ்நாட்டுப் பழமொழிகள் |
| 138. | பழனிச்சாமி | 2008 | சிறந்த தமிழ்ப் பழமொழிகளும் விளக்கங்களும் |
| 139. | மூர்த்தி, அ.கி | 2009 | பழமொழிகள் |
| 140. | கேசவஷர்மா, டி.எஸ் | 2009 | பழமொழிகளும் விளக்கங்களும் |
| 141. | மு. இராமலிங்கம் | – | ஈழத்துப் பழமொழிகள் (கையெழுத்துப் பிரதி) |

## பழமொழி குறித்த ஆய்வு நூல்கள்

## (கால வரிசையில்)

| | | | |
|---|---|---|---|
| 1. | செந்துறைமுத்து | 1965 | பழமொழியும் பண்பாடும் |
| 2. | சாலை இளந்திரையன் | 1975 | சமுதாய நோக்கில் பழமொழிகள் |
| 3. | வெங்கடேசன் | 1981 | பழமொழிகளில் சித்த மருத்துவம் |
| 4. | செயராமன், ந.வி | 1982 | பழமொழிகளில் வேளாண்மை அறிவியல் |
| 5. | முருகன், ப | 1982 | புதிய நோக்கில் பழமொழிகள் |
| 6. | பெருமாள், வ | 1987 | பலநோக்கில் பழமொழிகள் |
| 7. | சௌந்தரபாண்டியன், எஸ் | 1988 | தமிழில் பழமொழி இலக்கியம் |
| 8. | தனம், வே | 1989 | பழமொழிகள் உணர்த்தும் மகளிர் நிலை |
| 9. | பத்மாவதி, இரா | 1990 | பழமொழிகளில் சீர்திருத்தச் சிந்தனைகள் |
| 10. | சரளா இராசகோபாலன் | 1992 | பழமொழிகளில் பெண்மை |
| 11. | சிவகாமி, ச | 1993 | பன்முகப் பார்வையில் பழமொழிகள் |
| 12. | லூர்து, தே | 2007 | தமிழ்ப் பழமொழிகள்: அமைப்பு, பொருண்மை, செயல்பாடு |

## மலையாளப் பழமொழித் தொகுப்புகள்

## (கால வரிசையில்)

| | | | |
|---|---|---|---|
| 1. | கிருஷ்ணகுமார் | 1992 | பழஞ்சொல்லுகள் |
| 2. | நீலகண்டன் நம்பூதிரி | 1997 | பழஞ்சொல்லுகள் |

| | | | |
|---|---|---|---|
| 3. | வாசுதேவசர்மா | 2000 | Proverbs (ஆங்கிலம், மலையாளம், ஹிந்தி) |
| 4. | காவில்ப்பாடு | 2002 | 1001 பழமொழிகள் |
| 5. | நாராயணன் நம்பூதிரி | 2003 | பழஞ்சொல்லுகள் |
| 6. | கிருஷ்ணகுமார் | 2006 | 1001 கடங்கதகளும் பழஞ்சொல்லுகளும் |

# 3. தமிழ், மலையாளப் பழமொழிகள்

## கோயம்புத்தூர் மாவட்டத் தமிழ்ப் பழமொழிகள்

1. அக்கர அரகரானுச்சாம் அதுல ஒரு முடி சிவசிவானுச்சாம்
2. அகராதிக்கு அறுவாமனை மேல நின்ன அறுக்கத்தான் செய்யும்
3. அகமா போயி சுகமா வா
4. அங்காடியில் இருக்கிறவள பாட்டுப் பாடச்சொன்னா வெங்காயம் கருவேப்பிலைனு பாடுவா
5. அச்சில்லாம தேரோடுமா? ஆம்பள இல்லாம புள்ள பெறமுடியுமா?
6. அஸ்திவாரம் பலமா இருந்தா கட்டிடம் பலமா இருக்கும்.
7. அசபோட்டு திங்குமாம் மாடு அசயாம விழுங்குமாம் வீடு.
8. அஞ்சாறு பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியாவான்.
9. அஞ்சு புள்ள பெத்தா அரசனாக இருந்தாலும் ஆண்டியாவான்.
10. அஞ்சும் சரியா இருந்தா தெரியாதவளும் சாப்பாடு சமைப்பாள்
11. அஞ்சுல பிஞ்சுல கொஞ்சாமா அறுபது வயசுல கொஞ்சுது
12. அடமழ ஓஞ்சாலும் செடிமழ ஓயாது.
13. அடி வயித்துல இடி விழுந்த மாதிரி
14. அடிச்சவனோட பின்னால போனாலும் போகலாம்<br>நடிச்சவனோட பின்னால போகக்கூடாது
15. அடி நாக்குல நஞ்சு வெச்சுக்கிட்டு<br>நுனி நாக்குல அமிர்தம் போல பேசறான்
16. அடிமேல அடி வெச்சா அம்மியும் நகரும்
17. அடியான பயப்படாட்டியும் ஆண்டவன பயப்படணும்
18. அடினு சொல்ல பொண்டாட்டி இல்ல புள்ள பேரு பொண்ணுரங்கமா
19. அடுத்த வீட்டுக்காரி புள்ள பெத்தான்னு சொல்லி<br>அம்மிக்கொளவி எடுத்து இடித்துக் கொண்டாளாமா

20. அடுத்தவன் பல்லக் கேக்கரதுக்கு அவனவன் பல்லே பரவாயில்லை

21. அடுப்பங்கரையே கைலாசம் அகமுடையானே வைகுந்தம்

22. அடுப்படியே திருப்பதி வாசப்படியே வைகுந்தம்

23. அடுப்பே திருப்பதி ஆமக்குளமே சேமக்குளம்

24. அடைபட்டுக் கெடக்கிறான் செட்டி அவனை கூப்பிட்டு வா பணம் பாக்கி என்கிறான் பட்டி.

25. அண்ணன் ஆனைகட்டி வாழ்ந்தாலென்ன தம்பி தாழம்பூ பூத்தாலென்னோ

26. அண்ணன் எப்ப சாவான் திண்ண எப்ப காலியாகும்.

27. அண்ணன் தம்பி அடுத்து கெடுப்பான் பங்காளி பாத்து கெடுப்பான்

28. அண்ணன் புள்ளய அண்ணைக்கே அடக்கியிருந்தா
தம்பி புள்ள தானே ஒதுங்கியிருக்கும்

29. அண்ணன் புள்ளய வளத்தறத விட
தென்னம் புள்ளய வளத்தறதே மேல்

30. அணில் ஏங் கெட்டுதுனா தன் வாயால கெட்டுது

31. அத்தி பூத்த மாதிரி

32. அத்தைக்கு மீசை முளைச்சா சித்தப்பா

33. அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் புறந்திருக்கானு சொல்லி
கடப்பார எடுத்து காது குத்தினாங்களாமா

34. அந்த ஊர் மண்ணை முதிச்சதும் அவனையே அவன் மறந்துட்டான்

35. அப்துல் காதருக்கும் அமாவாசைக்கும் முடிச்சுப் போடாதே

36. அப்பன் அரும அப்பன் செத்தா தெரியும்
உப்போட அரும உப்பில்லாட்டா தெரியும்

37. அப்பன் வீட்டுல யானைமேல் உக்காந்து சோறுண்டாலும்
புருசன் வீட்டுல பிச்சையெடுத்து உண்பது மேல்

38. அப்பனுக்கு ஒட்டுக்கோமணம் மகன இழுத்து போத்துனுரான்

39. அம்பட்டன் குப்பையைக் கௌறனா மயிரு மயிராட்டம் வரும்

40. அம்பட்டன் மாப்பளைக்கு மீசை ஒதுக்கின மாதிரி

41. அம்பது வயசுல அத்தும் பித்தும், அறுபது வயசுல எடாவடம், தொண்ணூறு வயசுல தோனிவாசம்

42. அம்மிக் கொளவியே காத்துல பறக்குது
இந்த உலவம் பஞ்சு எந்த மூள

43. அரசன விட்டுவிட்டு புருசனை கைவிட்டு கடைசியில ரெண்டு
பேரும் ஆத்தோட போயிட்டாங்க

44. அரசனும் ஆண்டியாவான்

45. அரசனோட குடுமியை பிடிக்கலாம் என்று
அம்பட்டன் வேலையை விரும்பினது போல

46. அரத்த அரத்தினாலேயும் வைரத்த வைரத்தினாலேயும் தான் அறுக்க வேண்டும்.

47. அரிக்கற அரிசியை விட்டுட்டுச்
சிரிக்கற சித்தப்பனோட போனாளாமா

48. அரிகிற மொளவா சுரீர்ன்னுதாமா அங்க
ரெண்டு மொளவா சஞ்சனக்கா போடுதாம்

49. அரிச்சந்திரன் வீட்டு பொடக்காளியில பொறந்தது மாதிரி பேசுவா

50. அரிசி வாங்கலாமென்னு அக்கா வீட்டுக்குப் போனாளாமா
அக்காக்காரி ஈச்சம்பாயை இடுப்பிலே சுத்திக்கிட்டு எதுக்கா வந்தாளாமா

51. அருகங்காட்டை விட்டவனும் கெட்டான்
ஆனமாட்டை வித்தவனும் கெட்டான்

52. அருப்புக்கோட்டையில உங்கப்பா செருப்பு தெச்சாலும்
நானுமில்லாட்டி உங்காத்தா நாறிப் போயிடுவா

53. அரைக்க அரைக்க அம்மியும் நகரும்
பழகப் பழகப் பாலும் புளிக்கும்

54. அரைச்சு அரைச்சு மிஞ்சினது அம்மி
செரச்சு செரச்சு மிஞ்சினது குடுமி

55. அரையணாக்கு பழம் வாங்கனா
அழுகின பழம் அஞ்சென்னம்

56. அல்பனுக்கு வாழ்வு வந்தா
அர்த்த ராத்திரியும் குடைபிடிப்பான்

57. அலுத்து செலுத்து அக்கா வீட்டுக்குப் போனா
அக்கா தூக்கி மச்சா மடியில போட்டாளா

58. அலுத்து செலுத்து அம்பட்டன் வீட்டுக்குப் போனா
அவன் இழுத்து புடிச்சு செறச்சானா

59. அவ அம்பது சீலைய கட்டீட்டு அக்கா வீட்டுக்குப் போக
அவ எம்பது சீலைய கட்டீட்டு எதுக்கா வந்தாளா

60. அவ மரமேறான்னு சொல்லி இவளப் பாத்தா இவ பனையேறரா

61. அவசரத்துக்கு குண்டு சட்டியிலும் கை நுளையாது

62. அவதான் புள்ளய நொந்து பெத்தாளா நா தவிட்டுக்கா வாங்கினேன்.

63. அவளோட அழகுக்கு ஆயிரம் பேர் வருவாங்க
கண்ணைச் சிமிட்டினால் கால்லட்சம் பேர் மயங்குவாங்க

64. அவனுக்கே ஏளாதா அவனுக்கு அறநூறு பொண்டாட்டியா

65. அழுதழுது பெத்தாலும் அவதான் பெற வேண்டும்

66. அழுதுக்கிட்டேயிருந்தாலும் உழுதுக் கிட்டேயிருக்கணும்

67. அவனே அவனே என்பதுக்கு
கடவுளே கடவுளேனு சொல்லு

68. அழையாத வீட்ல நுளையாதே

69. அள்ளிக் கொடுத்தால் இனாம்
அளந்துக் கொடுத்தால் கடன்

70. அறிஞ்சு செய்யற பாவம் அழுதாலும் தீராது

71. அறிவிருக்கிற பறவை தனக்கு புடிச்ச மரத்தைத் தானே தேடிக் கொள்ற மாதிரி

72. அறிவுள்ள டாக்டர் கூட தன்னோட நோயை தானே குணப்படுத்த முற்படமாட்டாரு

73. அறுக்கத் தெரியாதவளுக்கு இடுப்புல ஆயிரத்தெட்டு அறுவாளு

74. அறுக்க மாட்டாதவனுக்கு ஆயிரம் அருவாள்
ஆடத்தெரியாதவனுக்கு தெருவெல்லாம் கோணை

75. அறுத்த விரலுக்குச் சுண்ணாம்பு தரமாட்டான்
ஆண்டி வந்தாலும் பிச்சை போடமாட்டான்

76. அறுப்புக் காலத்தில் எலிக்கு அஞ்சு பொஞ்சாதி

77. அறைக்கிறவன் அறச்சா குடிக்கிறவனுக்கு எங்க போச்சு புத்தி

78. அன்னத்தை அரங்கப் புடிச்சா மன்னங்குடி மலந்து போகும்

79. அனலில் போட்ட மெழுகு மாதிரி

80. அனலேறி மரம் சாயோ கொசு போயி முட்டுக் காலு குடுத்தது.

81. அனுபவமில்லாத படிப்பை விட படிப்பில்லாத அனுபவம் மேல்

82. ஆக்க பொறுத்தவன் ஆற பொறுக்க மாட்டானா?

83. ஆகாதவன் பொண்டாட்டி கைப்பட்டா குத்தம் கால்பட்டா குத்தம்

84. ஆசாரப் பார்ப்பான் காசிக்குப் போனானாம்
பறையன் கேசம் தலையிலடி பட்டுச்சாமா

85. ஆசை அளைந்து திரிவதைப் பார்க்கிலும் கண்கண்டதே நலம்

86. ஆசை அறுபது நாள்
மோகம் முப்பது நாள்

87. ஆசைதா தாசில்தார் வேலைக்கு
அம்சம் போட்டுக்குது பன்னி மேய்க்கறதுக்கு

88. ஆட்ட அறுபதையும் திம்பா
வெள்ளாட்டப் பாத்தா விருக்குன்னு துள்ளுவா

89. ஆட்டக்கண்டு கூட்டறைக்கறது
அம்மியக் கண்டு மொளகா அறைக்கறது

90. ஆட்டான் புளுக்கையிலிருந்து அடிப்புளுக்க வர நாந்தான் பாக்கணும்

91. ஆட்டுக்குப் பஞ்சாயத்துப் பண்ணப் போயி ஓநாய் வக்கீலா மாறுசாம்மா

92. ஆட்டுக்கு வால ஆண்டவன் அளந்துதான் படச்சிருக்கான்

93. ஆட தெரியாதவ தெருவு கோணயா இருக்குதுன்னு சொன்னாளாமா

94. ஆடிக் கறக்கற மாட்ட ஆடிக்கறக்கணும்
பாடிக்கறக்கற மாட்ட பாடிக் கறக்கணும்

95. ஆடிக்காத்துல அம்மியே பறக்கும் போது எச்சிலைக்கு என்னவாம்

96. ஆடி நோம்பிக்கு அளையாத மாமியார சந்தக்கடைல தேடி அளையோனமா

97. ஆடிப்பட்டம் தேடி விதை

98. ஆடி மாசத்துல குத்தின குத்து ஆவணி மாசத்துல வலி எடுத்துச்சாமா

99. ஆடி மாசத்துல கூப்பிடாத மாமியார தேடிப் புடிச்சு செருப்பாலடி

100. ஆடு அறுப்பதுக்கு முன்னால புடுக்குக்கு அலையாதே

101. ஆடு அறுப்பதுக்கு முன்னால புடுக்குக்கு முந்தாதே

102. ஆடு இருக்க எடயன முழுங்கிடுமா?

103. ஆடு கடிக்குதுன்னு அட்டானி மேல ஏறி உக்காந்திட்டான்

104. ஆடு கரக்க பூன நக்க

105. ஆடுகிட்ட கேட்டிட்டா மொளகு அறைக்கறது

106. ஆடுன காலும் பாடுன நாக்கும் சும்மா இருக்காது

107. ஆடு கொளுத்துதுன்னா இடயனுக்கு இலாபம்

108. ஆடு பகையாமா குட்டி உறவாமா

109. ஆடு பொளச்சா மயிர் கூட குடுக்கமாட்டான்

110. ஆடு மாடு இல்லாத்தவன் அட மழைக்கு ராஜா
புல்லு வெட்டி இல்லாத்தவன் பட்டத்துக்கு ராஜா

111. ஆடு வளத்தறவன நம்பாது வெட்டறவனதான் நம்பும்

112. ஆணிருக்கும் போது பெண் காரியம் பாத்தா
தூணிருக்கக் கூரை காத்துல போகும்

113. ஆத்த மாட்டாதவனுக்கு பொண்ணு குடுத்து
ஆத்தா மகளாக்கி போட்டாங்க

114. ஆத்தரத்துக்கு ஆள் விட்டோனா
சாத்தரத்துக்கு வந்து சேருவான்

115. ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு

116. ஆத்திரத்தை அடக்கினாலும்
மூத்திரத்தை அடக்க முடியாது

117. ஆத்து மணலிலே தெனம் புரண்டாலும் ஒட்டறதுதானே உடம்புல ஒட்டும்

118. ஆத்துல போட்டு கெணத்துலய தேடறது

119. ஆத்துல போற தண்ணிய அப்பாகுடி ஆத்தா குடி

120. ஆத்தோட கோவிச்சுட்டு சூத்தக் கழுவாம போனா
ஆத்துக்குக் கேடா சூத்துக்குக்கேடா

121. ஆதாயமில்லாம செட்டி ஆத்தோட போவானா

122. ஆபத்துக்கு உதவா நண்பனும்
அறும்பசிக்கு உதவா நண்பனும்
இருந்தென்ன இறந்தென்ன

123. ஆம்பள புள்ளைய அடிச்சி வளக்கணும்
பொம்பள புள்ளைய பூட்டி வளக்கணும்

124. ஆமை யாருக்கும் தெரியாம ஆயிரம் முட்டைகள் போடும்
ஆனா கோழி ஊருக்கே தெரிஞ்சு ஒரு முட்டையைத்தான் போடும்

125. ஆய் ஆயின்னு பாடுபட்டா அல்லி விடவு சேரும்

126. ஆயிரம் கொளவி கூட இருக்கலாம்
ஆனா ஒரு கௌவி கூட இருக்க முடியாது

127. ஆயிரம் புள்ளைங்க இருந்தாலும் தாம் பெத்த புள்ள மாதிரி வருமா?

128. ஆயிரம் வந்தாலும் ஆத்திரம் கூடாது

129. ஆழம் தெரியாம கால விடாதே

130. ஆள பாத்தா அழகு போல
வேலையைப் பாத்தா எழவு போல

131. ஆளப்பாரு சோள கட்டு பொம்ம மாதிரி

132. ஆளமாட்டாதவனுக்கு பொண்டாட்டி இல்லாத கேடு

133. ஆளாய் பட்டவங்க அடிமட்டமா கெடக்குது

134. ஆளில்லா சமயத்துல விஷம் கலக்கற வித்தை

135. ஆளு வளந்திருக்கியே ஒழிய மூள வளரல

136. ஆறு நிறைய தண்ணி போனாலும் நாய்க்கு சலுக்கு தண்ணி

137. ஆனமல காட்டுல அய்யன் அறுக்கவும் அம்ம இங்க வறுக்கவும்

138. ஆனா அச்சுல இல்லைன்னா மொடாவுல

139. ஆனைக்கு சறுக்கனதே சாக்காடு

140. இக்கரைக்கு அக்கர பச்சை

141. இசுப்பனுக்கு இரு செலவு

142. இஞ்சி லாபம் மஞ்சளிலே போச்சு

143. இடையன் புத்தி பிடரியிலே

144. இந்தப் பொளப்புக்கு எந்திரிச்சு மொள்ளோனமா

145. இந்திரனுக்கு கொடபிடிச்சு எமனுக்கு பலகாரம் சுட்டுப் போட்டவ

146. இருக்க எடங்குடுத்தா படுக்க பாய் கேக்குதா

147. இருக்கறத விட்டுட்டு பறக்கறத புடிக்கற

148. இருக்கறது அர மொளம் பொளங்கறது பெருவிரலு

149. இருக்கிறவ கட்டிக்கரா இல்லாதவ நீ எதுக்கு குத்திக்கற

150. இருக்கிறவன் நோா இருந்தா செறப்பவன் நல்லா செறப்பான்

151. இருக்கிறவனுக்கு ஒரு வீடு
இல்லாதவனுக்கு பல வீடு

152. இருத்தவன் எந்திரிக்கிறதுள்ளயும் நடந்தவன் காதவளி

153. இரும்படிக்கிற இடத்துல ஈக்கென்ன வேல

154. இரும்பு கரும்பாகி ஈரோடும் பாலாயிருச்சு

155. இரும்பு புடிச்ச கையும் சொறி புடிச்ச கையும் சும்மாவே இருக்காதாம்

156. இலாபமில்லாம செட்டி ஆத்தோட போவானா

157. இன்னைக்கு எல அறுத்தவன்
நாளைக்கு குல அறுக்கமாட்டானா?

158. இன்னைக்கு செத்தா நாளைக்கு பால்

159. இன்னைக்கு வந்தவ பூப்போல
நேத்து வந்தவ வீதியில போகவா?

160. இனம் இனத்தில் சேரும்

161. ஈட்டி எட்டுன மட்டும் பணம் பாதாளம் முட்டும்

162. ஈயத்தைப் பார்த்து இளித்ததாம் பித்தளை

163. ஈரப் பேனாக்கி பேன பெருமாள் ஆக்கிட்டா

164. உங்கம்மா உன்னை கொளுவில பெத்தா
எங்கம்மா என்னை தெருவிலயா பெத்தா

165. உடம்பெல்லாம் எண்ணை தேச்சு உருண்டாலும் ஒட்டற மண்ணுதான் ஒட்டும்

166. உடுக்காத புடவை செல்லரிக்கும்

167. உடுத்திக் கெட்டான் பார்ப்பான்
உண்டு கெட்டான் வெள்ளாளன்

168. உண்ட சோத்துக்கு ஊருகா தேடின மாதிரி

169. உண்ட மயக்கம் தொண்டனுக்கு

170. உண்டவன் குளிச்சா கண்டவனும் குளிப்பான்

171. உண்ட வூட்டுக்கு ரெண்டகம் செய்யறவங்க

172. உண்டு களித்தவனிடம் உருளைக்குப் போ
கண்டு களித்தவனிடம் கந்தைக்குப் போ

173. உண்டு கொழுத்தவளே டீ கொண்டைக்காரி – நான்
உண்ணி வந்தா சேத்தமாட்டேன்டீ கொண்டக்காரி
மணியாரம் கூப்பிட்டு மாண்டேன்னு சொல்லி
மாரியப்பக்காரன் கூட போனவளே

174. உண்மை எப்பவுமே தன்னை மீறி வெளிய வந்திடும்

175. உதடு செய்யறதுக்கு உள்ளங்காலே செய்துக்கலாம்

176. உப்பு உண்டா வாழலாம்
வைரம் உண்டா சாகலாம்

177. உப்பு தின்னவன் தண்ணி குடிக்காமலா இருப்பான்

178. உப்பு தின்னவன் தண்ணி குடிப்பான்

179. உயர உயர பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாது

180. உலக்கையை முழுங்கிவிட்டு உப்பில்லாப் பத்தியம் இருப்பது போல

181. உழுகிற காலத்துல ஊர்சுற்றி விட்டு
அறுக்கற காலத்துல அரிவா எடுத்துட்டுப் போன மாதிரி

182. உழுகிறவன் ஏமாளியாக இருந்தா எருது மச்சானே மச்சானேனு சொல்லும்

183. உழுதவனுக்கு உழவுக் கோலுங்கூட மிஞ்சாது

184. உள்ளங்கை நெல்லிக்கனி போல

185. உள்ளதும் போய் லொள்ளக்கண்ணானு

186. உள்ளூர் கஷ்டமும் சரி
வெளியூர் லாபமும் சரி

187. உள்ளூர் கூரைமேல் ஏறி கோழி பிடிக்கத் தெரியாதவன்
வானம் ஏறி வைகுண்டம் போனானாம்

188. உள்ளூர்ல ஓணான் புடிக்காதவன்
உடையார்பாளையம் போய் உடும்பு புடிப்பானா?

189. உள்ளூர்ல ஓணான் புடிக்க முடியாதவனா போயி வெளியூர்ல ஓணான் புடிப்பான்

190. உளி இல்லாம செல வடிக்க முடியாது
அடிச்சு திட்டாம பிள்ளைய வளக்க முடியாது

191. உலை வாயை மூடினாலும்
ஊர் வாயை மூடமுடியாது

192. உன்னோட வயித்திலென்ன கோழியும் குஞ்சுமா?

193. ஊசி இடம் கொடுத்தாதான் நூலு நுழைய முடியும்

194. ஊசியோட காதுல ஒட்டகம் நுளையாது

195. ஊமக்கள்ளி ஊரு முடிக்கும்

196. ஊட்டி ஊட்டி வளத்தாலும் ஊராம் புள்ள ஊராம் புள்ளதான்

197. ஊம ஊரக் கெடுக்கும்
பெருச்சாளி வீட்டக் கெடுக்கும்

198. ஊம்பயில ஒரு புத்தி
உருஞ்சீல ஒரு புத்தி

199. ஊமையனுக்கு முன்னால மூக்கு சொறிஞ்ச போல

200. ஊர்ல கல்யாணம் மார்ல சந்தனம்

201. ஊரக் கண்டு ஊம்பிப் பழகு
நாட்டக் கண்டு நக்கிப் பழகு

202. ஊரத் தெரட்டி செக்கிழுக்கவா முடியும்

203. ஊராமுட்டு நெய்யே எம் பொண்டாட்டி கையே

204. ஊரான் கோழி எடுத்து உம்மா பேருக்கு பாத்திஹா

205. ஊரான் புள்ளைய உருவத்தக் கொலைச்சா
தன் புள்ள தானே கொலைக்கும்

206. ஊரான் புள்ளய ஊட்டி வளத்தா
தன் புள்ள தானே வளரும்

207. ஊரான் வீட்டு சொத்துனா இப்படியா உள்ளங்கை அறிக்கணும்

208. ஊருக்கு உபதேசம் தனக்கு பரதேசம்

209. ஊருக்கு உபதேசம் வீட்டுக்கல்ல

210. ஊருண்டு கொசவன் ஓடுண்டு

211. ஊரு ரெண்டானா கூத்தாடிக்குக் கொண்டாட்டம்

212. ஊரெல்லா சுத்தி எம்பேரு முத்தி

213. ஊரெல்லாம் வாடுதுன்னு வீடெல்லாம் அழுது புரண்டாலும் வருமா?

214. எங்கப்பன் ஏழாவது குதிருக்குள்ள இல்லைன்னானா

215. எச்சக் கையால காக்கா ஓட்டமாட்டான்

216. எச்சித் தண்ணில ஈ விழற மாதிரி விழுகாதே

217. எச்சிய பன்னீரா நினைக்கறவ

218. எட்டாத பழத்துக்கு கொட்டாவி விடாதே

219. எட்டு எருமக்கண்ணை அவுத்துவிட்டு பால் பீச்சனா வருமா?

220. எட்டுனா கையப் புடிப்பாங்க
எட்டாட்டி காலப் புடிப்பாங்க

221. எடயன் ஆட்டத் தோளுல போட்டு காடுமேடெல்லாம் அலுஞ்சானாமா

222. எண்சான் உடம்புக்கு சிரசே பிரதானம்

223. எண்ணிச் செய்யறவன் செட்டி
எண்ணாம செய்யறவன் மட்டி

224. எத்தனை வௌக்கினாலும் பித்தளை தன் குணம் மாறாது

225. எதத் தின்னா பித்தம் தெளியும்

226. எதுக்கு தஞ்சாவூர் நந்தி மாதிரி வழி மறஞ்சு நிக்கற

227. எதுக்கு திருவாரூர் தேர் மாதிரி அசஞ்சு அசஞ்சு வர்ர

228. எதுக்கு பொழுதுக்கும் சங்கு ஊதீட்டே இருக்க

229. எப்ப கீழ் துப்புவாங்கன்னு தெரியாது

230. எமனுக்கு ஒரு புள்ளய கொடுத்தாலும் உத்தாருக்கு ஒரு புள்ளயும் கூட கொடுக்கமாட்டா

231. எரிகிற வீட்டில் புடுங்கறது லாபம்

232. எரிகிறவன் பொச்சுள சுக்கு வெச்சு ஊத்தாதே

233. எரியற தீயில எண்ணெ ஊத்தனாப்லே

234. எருதும் எருதும் சண்ட கட்டி எளங்கண்ணுக்கு காலு போன மாதிரி

235. எருமையெல்லாம் ஒரு குளம் சேந்த மாதிரி

236. எருமையோட பொறுமை இருக்கணும்

237. எலி ஏ அம்மணத்தோட போகுதுன்னு பாத்தா பட்டுச்சீலையோட போகுது

238. எலிச்சாலையானலும் தனிச்சாலை வேணும்

239. எலி நெல்லுக்குள்ள விழுந்தது மாதிரி

240. எவன் பொண்டாட்டி எவங்கூட போனா லப்பைக்கு ரெண்டு பணம்

241. எள்ளுண்ணா எண்ணையா நிக்கறான்

242. எள்ளுதா எண்ணைக்கு காயுது
எலிப்புளுக்கு எதுக்கு காயுது

243. எள்ளுமா வேண்டாம்னு உரலுக்குள்ளே தலவிட்ட கத

244. எளங்கன்னுக்கு பயம் தெரியாது

245. எளச்சவனுக்கு எள்ளு கொளுத்தவனுக்கு கொள்ளு

246. எறந்து வந்தத பாத்து நின்னவன் திங்கறான்

247. எரியறது புடுங்கினா கொதிக்கறது தானே அடங்கும்

248. எரியறவன் வாயில சுக்கு வெச்சு ஊத்தாதே

249. எறும்புக்கு கொட்டாங்கச்சி தண்ணி சமுத்திரம் மாதிரி

250. எறும்பு தார பாத்து நடக்கற மாதிரி நடக்கறயே

251. எறும்பு நுளைய இடம் கொடுத்தா யானையைக் கொண்டாந்து கட்டுன கதையாப் போச்சு

252. எறும்பு நுளைய எடங்கொடுத்தா யானையக் கொண்டாந்து கட்டுன கதையாப் போச்சு

253. எறும்பு போறது தெரியும்
ஈ போறது தெரியலயா?

254. என்ன சின்னமலைக் கவுண்டன் அதிகாரம் போலிருக்கிறதே

255. என்ன பண்ணினாலும் நாய் வாலு நிமிராது

256. எனக்கே இஞ்சிப் பச்சடி இல்லை
உனக்கு தக்காளிப் பச்சடி கேக்குதா

257. என்னத்த சொல்லி இனமா உரச்சாலும் கந்தனுக்கு புத்தி தவுட்டுக்குள்ள

258. என்னுனவன் ஈடேறமாட்டான் பாத்தவன் பனயேறமாட்டான்

259. ஏங் கொலக்கட்ட சப்புனு போனா ஒரு காசுக்கு வெல்லம் பத்துலானா

260. ஏட்டுச் சுரக்காய் கறிக்குதவுமா?

261. ஏது ஏதுன்னா லேது லேதுங்கர

262. ஏம் பறக்கற ஆட்டுக்குட்டி எங்கையில இருக்குது சூரகத்தி

263. ஏரோட்டத் தெரியாதவன் காரோட்டிப் பழகிட்டு காடுமேடெல்லாம் இளுத்தடிக்கிறான்

264. ஏழு புள்ளத்தாச்சிக்கு ஒரு புள்ளத்தாச்சி மருத்துவம் பாத்தாளாமா

265. ஏழையக் கண்டா எறும்பும் கடிக்கும்

266. ஏழையக் கண்டா மூளையும் பாயும்

267. ஏழையாக இருந்தாலும் கோழையாக இருக்கக்கூடாது

268. ஏழையாப் பொறந்தாலும் எளையவளாப் பொறக்கக் கூடாது.

269. ஏற விட்டு ஏணியப் பிடுங்குவான்

270. ஏறோட்டாத நெலமும் அப்பன் திட்டாத புள்ளயும் உருப்படாது

271. ஐநா. சப குதிர மாதிரி அங்கயும் இங்கயும் நடக்காதே

272. ஐப்படி அட மழ

273. ஐயர் வரும் வரை அமாவாசை காத்திருக்காது

274. ஐயாயிரம் ரூபா பணக்காரன் வந்தா நெய்யால பணியாரம் சுட்டுக் கொடுக்கறா.

275. ஓட்ட வந்த பிடாரிய ஊர்ப்பிடாரி விரட்டிற்றாம்

276. ஒட்டன் கண்டானா லட்டுருண்டை
போயன் கண்டானா பொறியுருண்டை

277. ஒட்டன கவுண்டனா ஒரு கால குத்துவானா

278. ஒட்டனுக்குத் தெரியுமா லட்டுருண்டை வாசனை

279. ஓடக்கா போனா ஏதுவரைக்கும் போகும்

280. ஒடஞ்ச கண்ணாடி ஒட்ட வைக்க முடியாது
பிரிஞ்ச குடும்பம் சேர்க்கவும் முடியாது
அதோட விரிசல் தெரிஞ்சுகிட்டேதானிருக்கும்

281. ஒண்ணக் குடுத்து ஒம்பத வாங்காதே

282. ஒண்ணுக்கு சந்தீமாகறிக்கு வெந்தீமா

283. ஒண்ணுக்கு ரெண்டு ஓதைக்கு மூணு இருக்கு

284. ஒண்ணப் பெத்தாலும் கண்ணைப் பெற்ற மாதிரி

285. ஓதப்பானுக்கு ஓதப்பான் சாதி வண்ணான்
கஞ்சிக்கு வெளுப்பான் குஞ்சி வண்ணான்

286. ஓய்யாரமா இருக்கா தாழம்பூவு
உள்ள இருக்குதான் ஈறும் பேனும்

287. ஒருத்தனுக்கு எந்திரிச்சு நிக்கவே வழியில்லை
அவனுக்கு ஏழு பொண்டாட்டி கேக்குதான்

288. ஒரு கொடம் பாலுக்கு ஒரு துளி ஒர

289. ஒரு சாடி செஞ்சவன் ஒரு மூடி செய்யாமலா இருப்பான்

290. ஒரு நா கூத்துக்கு மீசை எடுத்த மாதிரி

291. ஒரு பானச் சோத்துக்கு ஒரு சோறு பதம் போல

292. ஒரு பொண்டாட்டி கட்டுனவனுக்கு உரியில சோறு
பத்து பொண்டாட்டி கட்டுனவனுக்கு தெருவுல சோறு

293. ஒலைக்கற தாய் வேட்டைக்காகாது

294. ஒவ்வொருத்தரோட வீட்டுப் பானைலயும் கறுப்பிருக்கும்

295. ஒன்னும் தெரியாத்த ஒளி மாதிரி பேசாதே

296. ஒன்னும் தெரியாத ஊருக்கு
ரெண்ணும் தெரியாத வாத்தியார்

297. ஒன்னும் தெரியாத சின்னக்கன்னி
ஒரு கூட திம்பாளா பன்னிக்கறி

298. ஒன்னும் தெரியாத சுப்பணாட்டி
ஒம்பது வீட்டுக்கு தீ வச்சு விட்டிருவா

299. ஒன்னும் தெரியாத பாப்பா, ஒரு மணிக்கு போட்டா தாப்பா

300. ஒன்னும் தெரியாதவனுக்கு வாழ்க்கைப்பட்டு அறுபது வருசம் வாழறது விட
நல்லவனுக்கு வாழ்க்கைப்பட்டு சட்டுனு தாலியறுப்பது நல்லது

301. ஒன்னோட பசியப் பத்தி கள்ளு விக்கறவன் கவலப்படமாட்டான்

302. ஓ செறங்கு சொறிஞ்சிட்டு அடுத்து அடுத்தவன் செறங்கு சொறி

303. ஓ பேச்சும் செரி பழைய சாக்கும் சரி

304. ஓ வாயில என்ன கொழக்கட்டையா வெச்சிருக்கா

305. ஓ ன்னு கத்தவே முடியல, களுத போல கத்தவா

306. ஓசின்னா எனக்கொன்னு எங்கப்பனுக்கொன்னு

307. ஓசுக்கு கஞ்சி கொடுத்தா மசுரு மசுருன்னாமா

308. ஓட்டச் சட்டியானாலும் கொழுக்கட்டை வெந்தா சரி

309. ஓட்டப் பானைக்குள் நண்டு

310. ஓட்டப் பானையில ஈ புகுந்த மாதிரி

311. ஓட்டறது ஒரு ஏரு அது வொளவுல புடி

312. ஓடற தண்ணிய ஓங்கியடிச்சா
கூடற பக்கந்தான் கூடும்

313. ஓடற நாயக்கண்டா தொரத்தர நாய்க்கு தொக்கு

314. ஓடற பாம்ப மிதிக்கற வயசிருந்திட்டு சாதிக்க முடியலயா?

315. ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு பெட்டியில
இருக்கற மீனும் போச்சு

316. ஓ முதுகுல ஆயிரத்தெட்டு அழுக்கு வெச்சிட்டு
அடுத்தவன் முதுகுல இருக்கற அழுக்கெ அப்புறம் பாரு

317. ஓடினாத்தான் அது ஆறு
தேங்கினா அது குட்டை

318. கசந்திட்டு துப்பவும் வய்யா
இனிச்சிட்டு சப்பவும் வய்யா

319. கஞ்சி கஞ்சின்னா பான நெறையாது

320. கட்டருக்கே கருமணியில்லைன்னாலும் பேரு பொன்னம்மா

321. கட்டுத்தர பலமாயிருந்தா தான் கண்ணுக்குட்டி துள்ளி விளையாடும்

322. கட்டுன வேட்டியையும் நம்பாதவங்க

323. கடஞ்ச மோர்ல வெண்ணெய் எடுக்கறவ ஓங்கக்காகாரி

324. கடப்பாறையே காத்துல பறக்கப்போ கருவேப்பில லோலாயம் பேசுது

325. கடம் வாங்கி கடன் குடுக்கறது ஒன்னுதான்
மரம் ஏறி கைவிடறது ஒன்னுதான்

326. கடலு வத்தனப் பெறகு கருவாடு திங்கலாம்னு சொல்லி கொடலு வத்திச் செத்துதாமா கொக்கு

327. கடலுல போட்டு சாக்கடையிலயா தேடறது

328. கடலே வத்தனாலும் ஒங் கண்ணிலுள்ள உப்புத்தண்ணி வத்தாது

329. கடவுள தெரிஞ்சிதான் குதிரைக்கு கொம்பு கொடுக்கல

330. கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது

331. கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைத்தது போல

332. கடையும் போது வராத வெண்ணெய் குடையும் போதா வரப்போகுது

333. கண்டத தின்னவன் குண்டனாவான்
கண்டத படிச்சவன் பண்டிதனாவான்

334. கண்டதை கேக்காட்டி கொண்டவ அடிப்பா

335. கண்டவன் கண்டதை சொன்னா கொண்டவன் கோடி குடுத்திடுவானா?

336. கண்டறியாதவன் கொண்டு படிச்சா காடு மேடெல்லாம் இழுத்தடிச்சான்

337. கண்டு படையாதவன் கொண்டு படைத்தா காடுமேடெல்லாம் இழுத்தடிப்பான்

338. கண்டு மடுத்தவன்கிட்ட கடம் வாங்கனும்
உண்டு மடுத்தவன்கிட்ட உருளை வாங்கனும்

339. கண்ணாடி வூட்டுல இருந்திட்டு கல்ல எறியாதே

340. கண்ணுல மண்ணு தூவி விட்டமாதிரி

341. கணுக்கால் பெருத்தவ கணவனத் திம்பா

342. கத்தியை நம்பாம புத்தியை நம்பு

343. கத்திரிக்கா முத்தினா கடைவீதிக்கு வந்துதானே ஆகணும்

344. கத்தரிக்காய்க்கு கையும் காலும் முளைச்ச மாதிரி

345. கதைக்கு காலில்லை

346. கப்பல்ல பொண்ணு வருதுன்னா எனக்கொண்ணு எங்கப்பனுக்கொண்ணு

347. கம்புக்கு கள வெட்டினாப்பலயும் ஆச்சு
தம்பிக்கு பொண்ணு பாத்தது மாதிரியுமாச்சு

348. கம்பங்காட்டுல உங்காத்தா புள்ள பெத்தால
நாணுமில்லாட்டி உங்காத்தா நாறிப் போயிடுவா

349. கம்மாளன் துணி வாங்கன கால் மயிர் தெரிய வாங்குவான்

350. கமந்த பாலு கலயமேறவா போகுது

351. கமுந்த பாலு கலயமேறவா போகுது

352. கயறப் புடிச்சு இழுத்தாலும் உரைக்காது

353. கரண்ட் கம்பி மிதிச்சது மாதிரி

354. கரப்பார் கறச்சா கல்லும் கரையும்

355. கரிசனம் கட்டிக்கிட்டு அழுகுது
கட்டுச்சோறு புட்டுக்கிட்டு அழுகுது

356. கருகப்பிள்ளை விக்க போனாலும் நம்ம
கெரகப்புல்லு சரியா இருக்கணுமில்ல

357. கருப்ப பாக்காம நாய் ஓலைக்காது

358. கருப்பு தான் கண்ணாடி செகப்புதான் செருப்புலடி

359. கருப்பா இருக்கறதனால காக்கா குயிலாயிருமா?

360. கரும்பு தின்ன கூலி வேணுமா?

361. கரும்புக்கு ஆசப்பட்டு இரும்பக் கடிக்கலாமா?

362. கருவறை முதல் கல்லறை வரை சில்லறை தேவை

363. கருவாட்ட மோந்து பாத்த பூனை மாதிரி

364. கருவாட்டப் பாத்து நாய்போனா கல்லடிதான் கிடைக்கும்
களவாடறவனப் பாத்து நாய்போனா கருப்பட்டி கிடைக்கும்

365. கருவாடு மீன் ஆகாதப்பா

366. கரையா புத்தெடுத்து பாம்பு குடியிருந்த மாதிரி

367. கல்ப கழுகி கர சேராது

368. கல்லடி பட்டாலும் கண்ணடி படக்கூடாது

369. கல்லுல அரிசி கலந்த மாதிரி

370. கல்லோட போட்ட அரிசிய மெல்லவும் முடியல துப்பவும் முடியல

371. கலியாணப் பிரியத்துல வண்ணானை மச்சான் என்று கூப்பிட்டாளாம்

372. கவுண்டனுக்கு எருது போச்சேன்னு கவல
சக்கிலியனுக்கு கொழுப்பில்லைன்னு கவல

373. கழுத உழவுக்கு வரப் போறதுமில்ல
வண்ணான் பண்ணையக்காரன் ஆவப் போவதுமில்லை

374. கழுத கத்தி பொழுது விடியறப் போறதில்ல
கொலைக்கற நாய் கடிக்கறதுமில்ல

375. கழுத கத்தியே பொழுது விடியப் போறதில்லை
பொட்டக்கோழி கூவினாலா பொழுது விடியப்போகுது

376. கழுதகிட்ட பழகறதவிட
குதரகிட்ட பழகறதே மேல்

377. கழுதை கெட்டா குட்டிச்சுவர்

378. கழுதை தேஞ்சு கட்டெரும்பான கதை

379. கழுதைக்கு மூக்கில வேர்க்கற மாதிரி

380. கழுதைக்கு வாக்கப்பட்டா விடிய விடிய பொதி சுமக்கணும்

381. கழுதைகிட்ட பழகினா பின்னால உதைக்கும்
குதிரைகிட்ட பழகினா முன்னாலேயே உதைக்கும்

382. கழுதையைத் தூக்கி மடில வைங்கற மாதிரி

383. கழுதையே கொண்டு வூட்டுல வெச்சாலும் கால்கால்ங்கற புத்தி போகாது

384. கழுவி கழுவி ஊத்தினாலும் கவிச்சி நாத்தம் போகாது

385. கள்ளமனமே துள்ளாதே கருவாட்டு கொளம்பே மணக்காதே

386. கள்ளி கள்ளிம்பாளா கையில புள்ளைம்பாளா

387. கள்ளிக்கு கடக்கண்ணுல தண்ணி

388. கள்ளிக்கு கண்ணுல தண்ணி
நீலிக்கு நெத்தில தண்ணி

389. களவு போய் முனாநாளு கதவு முக்கரணம் போட்டுச்சான்

390. களவும் கற்றும் மற

391. களிக்கிளற துடுப்ப கண்டா கண்டா வெறப்பு

392. களுதப் பாலு குடிச்சா பொளைச்சுக்கலாம்
நாய்ப்பாலு குடிச்சா பொளைக்க முடியுமா?

393. கற்றவனுக்கு கண்ணு ரெண்டும் பொன்னு
கல்லாதவனுக்கு கண்ணு ரெண்டும் குருடு

394. கன்னி வாக்கு கழுதை வாக்கு

395. காக்கா உக்கார பனம்பழம் விழுந்துதாமா

396. காக்கா குஞ்சு கருங்குஞ்சானாலும் தன் குஞ்சு பொன் குஞ்சு

397. காக்கா குளிச்சா கொக்காகுமா?

398. காகத்தை கண்டா அஞ்சாவாளாம்
காவேரி ஆத்துல நீந்துவாளாம்

399. காச்ச மரத்துக்குத்தான் கல்லடி

400. காசிக்கு போயி பரதேசி காலுல விழுந்த கதையாச்சு

401. காஞ்ச மாடு கம்பங்காட்ட பாத்த மாதிரி ஏ பறக்கற

402. காஞ்ச மாடு கம்புள பூந்த மாதிரி

403. காஞ்சிபுரம் போனா காலாட்டி சாப்பிடலாம்

404. காஞ்சு கடந்த கம்மாயில தண்ணி தெரந்தா அது குட்டையிலெல்லாம் உருண்டு புரண்டுதான் வரும்

405. காட்ட வித்து கள்ளு குடிச்சாலும் கவுண்டன் கவுண்டன்தான்

406. காட்ல கெடக்கர அட்டையை எடுத்து தொட்டில்ல போட்டா கெடக்குமா?

407. காடு அறியாதவன் கல்லாங்காட்ட உழவேண்டும்

408. காடு வா வாங்குது வீடு போ போங்குது

409. காடும் செடியுமில்லாத ஊருக்கு களுத முள்ளி கற்பக விருட்சம்

410. காணாதவ கஞ்சிய பாத்தா ஓயாம துவையல அரப்பாளாமா

411. காணியாளனோட வீடு வேகும் போது
காலப்புடிச்சு இழுத்த கதையாயிருக்கு

412. காத்தப் பாக்கறவன் தூத்தமாட்டான்
வானத்தப் பாக்கறவன் விதைக்கமாட்டான்

413. காத்தடிக்குது தூள் பறக்குது கதவில்லாத சங்கட்டம்
கதவடியே நாய் கெடக்குது தடியில்லாத சங்கட்டம்

414. காத்திருக்கப்போ தூத்திக்கணும்

415. காந்திருந்தவன் பொண்டாட்டியை நேத்து வந்தவன் கொண்டு போயிட்டான்

416. காத்து மழ கூட்டும் சிநேகம் பகையை கூட்டும்

417. காத்துல பறந்து வந்த குப்ப நீ அட்டானீல ஒட்டிக்கிட்டியா?

418. காது குத்தறது கடுக்கான் போடறதெல்லாம் எங்கிட்ட வேணாம்

419. காயும் கனியும் காச்சா கார்த்திகை மாசோ கலியாணம்

420. கார்த்திகை சரசரன்னு வரும்

421. கார்த்திகை மாசத்துல மழபெய்தா கல்லுக்கு கீழ இருக்கற புல்லும் கதிர் விடும்

422. கார்த்தீல சொம்பு தடியுமூ விட்டிட்டு போயிட்டேன்னு சொல்லி
மறுபடியும் மழ வரும் அது மாதிரி

423. காலம் அரிதுனு காசு கடம் வாங்குறோம்
காசு கடம் கட்டாம கன்னி தடம் கட்டுனோம்

424. காலச் சுத்தன பாம்பு கடிக்காம விடாது

425. காலுக்கு ஆகாத செருப்பைக் கழற்றி தூற எறிஞ்சிடனும்

426. காலைலயே வாசல்ல கடன்காரன மாதிரி வந்து நின்னுட்டான்

427. காவிரி ஆறு கஞ்சியாப் போனாலும் நாய்க்கு நக்கித்தான் குடிக்கணும்

428. காற்றுள்ள போதே தூற்றிக் கொள்

429. கிட்ட இருந்தா முட்ட பகை
கடக்க இருந்தா கனிய உறவு

430. கிட்டாதாயின் வெட்டென மற

431. கிழவன் பேச்சு கிண்ணாரக் காரனுக்கு கேக்காது

432. கீழ வுளுந்தாலும் மீசைல மண் ஒட்டுன கதையா

433. கீழே தாயினும் தாள உரை

434. கிளிய வளத்து பூன கைல கொடுத்தாச்சு

435. கிளியாட்டமா ஒரு பொண்டாட்டி இருந்தாலும்
கொரங்காட்டமா ஒரு வெப்பாட்டி வேணும்

436. குக்கலை பிடித்து கூண்டுலடைத்தாலும்
குக்கலு குக்கலு தான் அக்குலை வேறதான்

437. குட்டத்தண்ணி வத்திப் போச்சு
குண்டெடுத்தவன் செத்துப் போனான்

438. குட்டி போட்ட நாய்க்கு குப்ப மேடும் கோபுரம் தான்

439. குட்டிப் போட்ட பூன மாதிரி ஏ இந்த அலை அலையற

440. குட்டையைக் கிளப்பாதே

441. குடிக்கறது கூளு கனா காண்பது மச்சு மாளிகை

442. குடிக்கறது கூளு கொப்பளிக்கிறதென்ன பன்னீரா

443. குடிக்கறதுக்கு தண்ணி கேட்டா
குளிக்கறதுக்கு தண்ணி கொண்டு வருவான்

444. குடிகாரன் பேச்சு விடிஞ்சாப் போச்சு

445. குடுக்கமாட்டாதவன் கூத்தப் பழிக்கிறான்

446. குடுக்கற தெய்வம் கூறய பிச்சுக்கிட்டு குடுக்கும்

447. குண்டி காஞ்சா குதர கூட புல்லு தின்னும்

448. குண்டி வத்தும் போது குதிரை புல்லும் தின்னும்

449. குண்டில போற குசுக்கூட தெரியாம தூங்குறான்

450. குண்டு சட்டிக்குள் குதரயோட்டறது

451. குத்து விளக்கு கொடுக்கல் வாங்கல் மாதிரி

452. குதிரை இல்லாத நாட்டுல கழுதை அரசாண்ட மாதிரி

453. குதிரைக்கு குண்டி வத்தனா தானா வைக்கப்புல்லு திண்ணும்

454. குதுர இருப்பரியும் புதுப் பொண்டாட்டி குகயறியும்

455. குப்பமேடு ஏறி கோழி புடிக்காதவன்
வானம் ஏறி வைகுந்தமா போவான்

456. குப்பனா நமக்கு முன்னால நிக்கறானய்யா

457. குப்புற விழுந்தாலும் மீசைல மண்ணொட்டலேனு சொல்லுவான்

458. கும்பிடப் போன சாமி குறுக்க வந்தாப்ளே

459. குமரிக்கு ஒரு புள்ள
பொய்ல ஒரு வாய்

460. குழிஞ்சு நின்னா புடுக்க அறுத்திட்டு போயிடுவாங்க

461. குரங்கு கையில பூமாலை கிடச்சா கொம்பு கொம்பா சாடின மாதிரி

462. குருடன் தூங்கினால் என்ன முழிச்சிருந்தாலென்ன

463. குருடி தண்ணிக்குப் போயி எட்டாளு வேலை மெனக்கெட்டுது

464. குருடி தலையில பனம்பளம் வெச்சது போல

465. குள்ளி குடியக் கெடுக்கும்

466. குளிக்கப் போயச் சேறு பூசிக் கொள்ளலாமா?

467. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும்

468. குறவன் மகன டைக்கட்டி பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினாலும்
டைக்கழட்டி கோமணம் கட்டி வருவான்

469. குன்று இருக்கற இடத்திலதானே குமரனிருப்பான்

470. கூட்டத்துல கோயிந்தா போடுறது

471. கூட்டீட்டு வந்தவன குழியில தள்ளிட்டு
கள்ள புருசன கையோடு கூட்டீட்டு போயிட்டா

472. கூட இருந்தே குழி பறிச்சிடுவாங்க

473. கூட பிறந்தவன் குக்கி அழுகிறான்
அசவீட்டு காக்கா அறிஞ்சு அறிஞ்சு அழுகுது

474. கூந்தலு பெருத்தா கொண்டவனுக்கு ஆகாது

475. கூப்பிடற கோழிக்கு என்ன எழுப்பற பண்ணாடிக்கு என்ன

476. கூப்பிடாத வீட்டுக்கு எதுக்கு எல பொறுக்க போனும்

477. கூரை மேல் சோறு போட்டா ஆயிரம் காக்கா

478. கூழானாலும் குப்பயானாலும் குடிக்கறவன் பொளப்பான்

479. கூள குடியக் கெடுக்கும் குட்டக்கலப்ப ஓலவக் கெடுக்கும்

480. கூளுக்கும் ஆசை மீசையும் நனையக்கூடாது

481. கூறு கெட்ட மாடு ஏழு கட்டு பிள்ள தின்னுச்சாமா

482. கெட்டாலும் செட்டி செட்டிதான்
கிளிஞ்சாலும் பட்டு பட்டுதான்

483. கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளுல தெரியும்

484. கெட்டுப்போன பார்ப்பானுக்குப் பொட்டப்பசு தானங் கொடுத்தாப்லே

485. கெடக்கறதெல்லாம் கெடக்கட்டும் கௌவிய தூக்கி மனையில வை

486. கெடுவான் கேடு நினைப்பான்

487. கெண்ட பெருத்தவ கெண்டவனுக்காகாது

488. கெண்ட பெருத்தவ கூந்தலு பெருத்தவ நெத்தி பெருத்தவ கொண்டவனுக்காகாது

489. கெண்டையப் போட்டு விரால புடிக்கறயா

490. கெணத்துக்கு பயந்து தீயில வுளுந்த மாதிரி

491. கெணத்துக்குள்ள கல்லு பட்ட மாதிரி

492. கெணறு வெட்ட பூத்தம் புறப்பட்ட கதை

493. கெணத்து தவள கெணத்துலேயே மகிழ்ச்சியா வாழுற மாதிரி

494. கெளட்டுப் பையன் ஊர்ல கேணப்பையன் நாட்டாம மாதிரி

495. கௌவி தொட்டா சோறு அழுகிடும்

496. கௌவி தொடாதோ சோறு எளகாதோ

497. கௌவி சொல்லு கிண்ணாரக்காரனுக்கு ஏராது

498. கேக்கறவன் கேனப்பயனா இருந்தா எரும ஏரோப்ளான் ஓட்டுதாமா

499. கேக்கறவன் கேணையா இருந்தா கேப்பையில நெய் வடியுமா?

500. கேக்கறவன் கேணையா இருந்தா கெ.பி. சுந்தராம்பா, ஆர்.பி. சௌத்ரிக்கு கதாநாயகியா நடிச்சானா

501. கேசமுள்ள பொண்ணு கொண்ட போடுவா

502. கேப்பையில நெய் வடிதுனா கேப்பார்க்கு மதி எங்க போச்சு

503. கைப்புடிய புடிச்சா சீவக்கட்டையில அடிப்பாங்க

504. கைப்புண்ணுக்கு கண்ணாடி தேவையில்லை

505. கையப் புடிச்சு இழுத்தே வராதவோ கண்ணக் காட்டுனா வருவாளா

506. கையாலாகாத சிறுக்கி வண்ணப் பொடவைக்கு ஆசைப்பட்டாளாமா

507. கையிலயே வெதச்சு நாவுலேயே கோக்கறது

508. கொக்குல அடங்கறது தான் அடக்கணும்

509. கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்

510. கொசவன் ஓட்டச் சட்டியில சோறு வைக்கற மாதிரி

511. கொசுவுல கொழுப்பு எடுத்து கொரியாவுக்கு அனுப்புவான்

512. கொஞ்சம் தாங்கினா கொப்புல ஏறுறான்

513. கொட்டிக்கிழங்கு பறிக்கப் போனா கோபித்துக் கொள்வார் பண்டாரம்
அவித்துரித்து முன்னே வெச்சா அமுது கொள்வார் பண்டாரம்

514. கொட்டின பால நினைத்து குமுறி அழாதே

515. கொடலு கூளுக்கு அழுகுது
கொண்ட பூவுக்கு அழுகுதா?

516. கொடிக்கு கொம்முட்டிக்கா பாரமா?

517. கொடுக்கறத கொடுத்தா குருடியும் தண்ணிக்குப் போவா

518. கொடும கொடுமன்னு கோயிலுக்குப் போனா அங்கொரு கொடும தலவிரிச்சு போட்டு ஆடிச்சா

519. கொடும கொடுமன்னு கோயிலுக்குப் பானா அங்கொரு கொடும அவுத்துப் போட்டு ஆடிச்சா

520. கொண்டவன் குணமாயிருந்தா கூரையேறி சண்ட புடிப்பா

521. கொண்டவன் துணை இருந்தா குருடி மல என்னடதுனு தூங்கலாம்

522. கொண்டவனிருக்கும் போது கண்டவன கூட்டிட்டு போன மாதிரி

523. கொம்பு சுத்தி காத்தடிச்சா மழவரும்

524. கொமரிப்புள்ள சடக்சடக்
ஒரு குட்டியப் போட்டா லொடக் லொடக்

525. கொரங்கு தான் கெட்டதுமில்லாம வனத்தையும் அழிச்சுதாமா

526. கொரங்குக்கு வாழ்க்கைப்பட்டா மரம் ஏறி தானே ஆகணும்

527. கொல்லன் உலைக்களத்துல கொசுவுக்கு என்ன வேலை

528. கொல்லன் தெருவுல ஊசி வித்த மாதிரி

529. கொல்லி கண்ட மழ கொட கொடன்னு பேயும்

530. கொல செய்தவன் கூட ஒத்துக்கிடுவான் ஆனால்
குசு விட்டவன் ஒத்துக்கிடமாட்டான்

531. கொழுத்து குயவன்கிட்ட போனா இழுத்து சூள மேல போட்டானாமா

532. கொள்ளாதவன் வாயில கொளக்கட்டையை தினிக்காதே

533. கொள்ளிக்கு எதிரே போனாலும் வெள்ளிக்கு எதிரே போகாதே

534. கொள்ளுண்ணா ஆ கடிவாளம்னா ஈ

535. கொள்ளையடிக்கப் போறவனுக்கு குருடன் துணையாவானா?

536. கொளவிக் கூண்டுல கைவச்சா அது கொட்டியே சாகடிச்சிடும்

537. கோட்டையில பொறந்தாலும் போட்ட விதி தப்பாது

538. கோடிக்கு ஒரு வெள்ள
குமரிக்கு ஒரு புள்ள

539. கோடை மழையில மரத்தடியில் ஒண்டக்கூடாது

540. கோபத்துல அறுத்த மூக்கு சிரிச்சா வருமா?

541. கோமணத்துல ரெண்டு காசிருந்தா கோழி கூப்பிட பாட்டு வரும்

542. கோமணம் கெட்டர ஊருல நீ ஏன் வேட்டி கட்டற

543. கோயில் எதுக்கடி கட்டி வெச்சிருக்குது வௌவாலுக்கும் நெறிஞ்சி முள்ளுக்குமா?

544. கோலம் போடு கோலம் போடுன்னு கோலம் போட நேரமில்லைன்னு அள்ளிப் போட்டாளாமா அது மாதிரி

545. கோலு முடி கொண்டவனுக்கு ஆகாது

546. கோவிலுக்கு நேந்து விட்ட மாடு மாதிரி சுத்தி சுத்தி வர்றான்

547. கோழி களவு போனா ஆடு வெட்டியா பொங்கலு போடுவாங்க

548. கோழிக் குஞ்சப் புடிக்க ரெண்டு தானியமணிகள் இருந்தா போதும்

549. கோழி குருடானா கொழம்பு மணமில்லாமலா போகும்

550. கோழி மிதிச்சு குஞ்சு செத்தா போயிடும்

551. கோழியோட காலுல கச்சயக் கட்டுனாலும் அது குப்பையைத் தான் கிளறும்

552. சக்கரம் தேயத் தேய சத்தம் நல்லா கேக்கும்

553. சக்கரை இருக்கற இடத்துல தானே எறும்புகள் இருக்கும்

554. சக்கரை இனிக்குதுனு சொல்லி வெல்லம் கசக்கவொன்னும் செய்யாது

555. சங்குல வார்த்தா தீர்த்தம் சட்டியில வார்த்தா தண்ணீரா

556. சட்டியிலிருந்தா தானே அகப்பையில வரும்

557. சந்தனக்கட்ட தேஞ்சா பெட்டிக்குள்ள தான் போகும்
துடப்பக்கட்ட தேஞ்சா குப்பைக்குத்தான் போகும்

558. சந்துல சிந்து பாடரவங்க

559. சந்தோஷ முகத்தோட வியாபாரம் செய்யாதவன்
வியாபாரம் செஞ்சா எப்படி இருக்குமோ அது மாதிரி

560. சபையிலிருந்தா தாழம்பூவா இருக்கணும் புளியம்பூவா இருக்கக்கூடாது

561. சம்பா வௌஞ்சு சாஞ்சு கெடக்குது
உண்பாரில்லாம ஊர்க்குருவி மேயுது

562. சலுச்சு முடிச்சு அம்பட்டன் வூட்டுக்குப்போனா அவன் இழுத்து புடிச்சு செறச்சானா

563. சலுச்சு முடிச்சு சக்கிலியன் வூட்டுக்குப்போனா அவன் இழுத்து புடிச்சு சூள மேள போட்டானாமா

564. சலுச்சு முடிச்சு சக்கிலியன் வூட்டுக்குப் போனா செருப்பு தையீனு சொல்றான்

565. சவல சொல்ற பல்லியே சானி தொட்டில விழுந்துதாமா?

566. சளிப்புடிச்சிருசின்னு மூக்கு அறுத்து வீசிட முடியுமா?

567. சனி தொனையோடு போகும்

568. சாக்கடைல கல்லு போட்டா அது நம்மேல தான் தெரிக்கும்

569. சாக்கு உடுத்தீட்டு போனா பாயுடுத்தீட்டு நிக்கறா

570. சாட புருஷன் சந்தையில
எம் புருஷன் மந்தையில

571. சாணானுக்கு ஏறும்போது ஒரு புத்தி எறங்கும் போது ஒரு புத்தி

572. சாம்பிராணி இல்லாமயே புகஞ்சிட்டிருக்கு

573. சாமி வரங்குடுத்தாலும் பூசாரி தடுக்கிறாரு

574. சாமியே சைக்கிள்ல போகும் போது பூசாரி புல்லெட் கொடுப்பானா?

575. சாவுக்கு வான்னா ஏழுக்கு வார

576. சாறு இல்லாம சோறு தின்னாலும்
சண்டை இல்லாம சோறு திங்கமாட்டான்

577. ஜாதிக்கொன்னு ஜமாத்துக்கொன்னு

578. ஜான் ஏறுனா முழம் சறுக்குது

579. ஜான் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை

580. சானியோட சேந்து சந்தனமும் நாறும்

581. சானி வழிக்கிறவனுக்கு சந்தனப் பொட்டு எதுக்காம்

582. சிட்டாளு எட்டாளோட வேலயக் கெடுக்கும்

583. சிட்டாளுக்கு எட்டாளு வேலக்காராமா

584. சிட்டுக்குருவிக்கு பட்டம் சூடுன மாதிரி

585. சித்திரை மாசோ அப்பனுக்காகாது

586. சித்திரையில சீர் கூட்டும்

587. சிரமணம் சில்லுனுச்சான்
சீலப்பேனு லொள்ளுனுச்சான்

588. சிரிக்கிற பொண்ணையும் நம்பாதே
அழுகிற ஆம்பளையையும் நம்பாதே

589. சிரிச்ச பக்கம் சீலை அவுத்துப் போடறவ

590. சிரிச்சா ஆயுசு கூடும்
அழுதா அழகு கூடும்

591. சிவ பூசையில கரடி புகுந்த மாதிரி

592. சிறியாரிட்ட வெள்ளா வெளயும் ஆனா வீடு வந்து சேராது

593. சின்ன மீனைப் போட்டாத்தான் பெரிய மீனைப் புடிக்க முடியும்

594. சின்னத குடுத்து பெருச வாங்காதே

595. சின்ன வெரலப் புடிச்சு பெரிய வெலரப் புடிக்கறது

596. சீட்டாளுக்கொரு முட்டாளு சீலப்பேனுக்கு ஒரு கையாளு

597. சீப்ப மறச்சு வெச்சா கலியாணம் நின்னிடுமா?

598. சீலையில்லாம சிணுங்கறா சின்னவூட்டுக்குள்ள, ஆடையில்லாம அழுகறா
அந்த வீட்டுக்குள்ள

599. சீலையில்லைன்னு சின்னாத்தா வூட்டுக்குப் போனா
ஈச்சம்பாயை கட்டிக்கிட்டு எதுக்கால வந்தாளா

600. சீலைல முள்ளுபோட்டா சீலைக்குத்தான் சேதம் முள்ளுக்கில்ல

601. சீவிச் சிங்காரிச்சு கடைசியில மூக்கறுத்திடாதே

602. சுட்டாலும் வேகாது பட்டாலும் நோகாது

603. சுடு தண்ணிய காலுல ஊத்தன மாதிரி நிக்கறான்

604. சுடுகாடு போன பொணம் திரும்பாது

605. சுண்டக்கா கால் பணம்
சுமக்கூலி முக்காப் பணம்

606. சுண்டெலி பொதி மூட்டய தொட்ட மாதிரி

607. சுப்பி சுட்ட பணியாரம் சுடுமா சுடாத சுப்பனுக்கு ஆள்விட்டா வருமா வராதா

608. சும்மா இருந்த சங்க ஊதி கெடுத்தினானா ஆண்டி

609. சும்மா இருந்தவளோட சும்மாட்டப்பாரு
சட்டிப்பான வித்தவளோட தமாசப்பாரு

610. சுருட்ட முடி சோறும் போடும்
கோர முடி குடியக் கெடுக்கும்

611. சுவரிருந்தா தான் சித்திரம் வரைய முடியும்

612. சூரியனைப் பாத்து நாய் கொரச்சா நாய்க்குத்தான் கேடு

613. செஞ்சவன் உடம்பு சேகரும்
செய்யாதவன் உடம்பு நோவேரும்

614. செட்டிக்கிட்ட சிக்கன ஆளும்சரி
செக்குல கட்டன மாடும் சரி

615. செட்டி கெட்டாலும் எட்டு நாளுல பொளச்சிடுவான்

616. செட்டி சரக்கிருந்தா சிறுக்கி கறி சமைப்பா

617. செட்டி சிங்காரிச்சு பட்டணம் பாழாச்சு

618. செட்டியார் தேர்ல போன மாதிரி

619. செட்டி புள்ளயா சுட்டிப் புள்ளயா

620. செட்டி முறுக்கா சரக்கு முறுக்கா

621. செட்டிக்கு ஒரு எட்டு
திருடனுக்கு ஒரு இருட்டு

622. செட்டிக்கு தொட்டதெல்லாம் துட்டு

623. செட்டி சிங்காரிக்கறதுக்குள்ள பட்டணம் பறிபோயிடுமாமா

624. செட்டியோட நட்டம் குடியானவனோட தலையில

625. செத்த பாம்ப திரும்பத் திரும்ப அடிக்கறது ஆம்பளைக்கு அழகில்லை

626. செத்தவன் காலு செமந்தவன் தலமேல
செத்தவன் குண்டி செமந்தவன் தலமேல

627. செத்தவன் கையில வெத்தல பாக்கு கொடுப்பது போல

628. செத்தாடு கண்ணு முழிச்ச மாதிரி

629. செத்தாத்தான் தெரியும் செட்டியாரோட அரும

630. செத்து செத்து பெறந்தாலும் செட்டியார் வகுத்துல பொறக்கணும்

631. செம்மீன் தலையில பீயை வெச்சுக்கிட்டு
நங்கிமீனைப் பாத்து ஒத்தக்கண்ணா ஒத்தக்கணாண்ணானு கூப்பிடுமாமா

632. செய்வன திருந்தச் செய்

633. செவ்வாயோ வெறும் வாயோ

634. செருப்புக்குத் தக்கபடி காலைக் குறைக்க முடியுமா?

635. செல்லும் செல்லாதத செட்டியார் தலையில கட்டு

636. செல்லும் செல்லாததற்குச் செட்டியிருக்கிறானே

637. ஜென்ம குணம் செருப்புல அடிச்சா போகாது

638. ஜென்மக் குருடனுக்கு கண்ணு கெடச்ச மாதிரி

639. சொந்தத்துல போகுதான் சொரப்பொருடன்
அதப்பத்தி போகுதான் பணப்பொருடன்

640. சொமக்கறவனுக்குத் தான் தெரியும் கொடந்தண்ணி அழுத்தறது

641. சொயபுத்தி வேணும் இல்லாட்டி சொல்புத்தி வேணும்

642. சொன்னத விட்டுப்போட்டு சொரக்காக்கு உப்பில்லங்கற

643. சோத்துக்குள்ள கெடக்கற ஈய எடுக்காதவன்
சேத்துல கெடக்கற எருமையைத் தூக்குவானா?

644. சோளியன் குடுமி சும்மா ஆடுமா?

645. சோறு சிந்தினா பொறுக்கிடலாம்?
மானம் சிந்தினா பொறுக்க முடியுமா?

646. சோறு போட்ட கையில நாய் கடிச்ச மாதிரி

647. டில்லிக்கு ராஜானாலும் தாய்க்குப் பிள்ளைதானே

648. தங்கச் செருப்பானாலும் அதை காலுக்குத் தானே போடணும்

649. தங்கம் போட்டு உரசினாலும் எருமை நிறம் வெளுக்குமா?

650. தட்டான் துணி வாங்கனா கால்மயிர் தெரிய வாங்குவான்

651. தட்டானோட பணம் கரியும் பொறியுமாத்தா போகும்

652. தட்டானோட வீட்டு நாய் சம்மட்டி சத்தத்துக்கு பயப்படுமா?

653. தட்டானோட வீட்ல புள்ள பொறந்தா
வெலமக வீட்ல சக்கர கொடுப்பா

654. தட்டுல போட்டாத்தான் சோறா
நெலத்துல போட்டா மண்ணாயிருமா?

655. தட்டுல போட்டா சோறு
நெலத்துல போட்டா மண்ணா?

656. தடியெடுத்தவனெல்லாம் தண்டகாரனாக முடியுமா?

657. தண்ணியும் எண்ணையும் ஒருபோதும் சேராது

658. தண்ணியும் கோபமும் தாந்த எடத்துல தான் இருக்கும்

659. தண்ணில தாமரைய முக்கி வெச்சாலும் வெளிய வந்திடும்

660. தந்திரத்துல மாங்கா கடஞ்சிடுவான்

661. தம்பி தான் தின்ன அசல் பீ விலைக்கு வாங்கறது

662. தயிர் பானைய ஒடச்சு காக்காய்க்கு விருந்து வைத்த மாதிரி

663. தரித்தரம் வந்தாலும் தைரியத்த விடக்கூடாது

664. தரைல தார எடுத்தாலும் தண்ணில தார எடுக்காதே

665. தலவலியும் பல்லுவலியும் தனக்கு வந்தாதானே தெரியும்

666. தலைக்கு வந்தது தலப்பாவோட போச்சாமா

667. தலைக்கு வேற தாடிக்கு வேற சீலக்காயா

668. தலையில ஏறி மொளகு அறச்சிடுவா

669. தலைவலி போய் திருகுவலி

670. தவள தண்ணிக்கு இழுக்க ஓணான் மேட்டுக்கு இழுத்த மாதிரி

671. தன் கையே தனக்குதவி

672. தன்னோட ஊர்ல யான அசலூர்ல பூன

673. தன்னோட கை நல்லாயிருந்தா தலைக்கு வெச்சு படுத்துக்கலாம்

674. தனக்கு மிஞ்சினாதானே தான தருமம் பண்ண முடியும்

675. தனக்குத் தனக்குன்னா புடுக்கும் சேந்து வேலை செய்யும்

676. தனக்குன்னு ஒருத்தி இருந்தா தலமாட்டுல உக்காந்து அழுவா

677. தாகத்துக்கு தண்ணி கேட்டான்னு குடுத்தா
பசிக்குப் பொங்கல் போடுன்னு சொன்னானாம்

678. தாங்கற பக்கந்தான் தளர்ச்ச வரும்

679. தாத்தா வந்தார்னு போத்து பால கறக்குமா?

680. தாந்த பக்கத்துல தான் தண்ணி ஓடும்

681. தாப்பாளுக்கொரு மூப்பாளு தவிடு திண்ணிக்கொரு பண்ணாட்டு

682. தாய் தவிட்டுக்கு அலைகிற போது புள்ள இஞ்சிப் பச்சடி கேட்டு அழுதுச்சா

683. தாய் மடியில தங்கமே இருந்தாலும் புள்ள மடியில தவிடாச்சும் வேணும்

684. தாயதண்ணிக் கெணத்துல பாத்தா புள்ளய வீட்டுல பாக்க வேண்டியுதில்லை

685. தாயப் போல பிள்ளை
நூலப் போல சேலை

686. தாயும் புள்ளயும் ஒன்னா இருந்தாலும் வாயும் வயிறும் வேறு

687. தாயைப் பழித்தாலும் தண்ணியைப் பழிக்கக் கூடாது

688. தாலி கட்டினவன் வேலி போட மறந்திட்டான்

689. தாலி கட்டினாப் பத்தாது வேலியும் கட்டணும்

690. தான் ஒன்னு நினைக்கும் போது தெய்வம் ஒன்னு நினைக்கும்

691. தான்விட்ட குசு தன்னையே சுடும்

692. தான் வெட்டின குழியில் தானே விழுவான்

693. தானும் திங்கமாட்டான் தருமமும் செய்யமாட்டான்

694. தானும் படுக்கமாட்டான் தள்ளியும் இருக்க மாட்டான்

695. திங்கற சோத்தையும் அலம்பற சட்டியையும் வித்தியாசம் பாக்கக்கூடாது

696. திர்ருணச்சான் கோழி தின்னையில் இருந்துச்சான் பொங்கு

697. திருட்டாடு மணியோட போன மாதிரி

698. திருடன தேள் கொட்டுன மாதிரி

699. திருப்பதியில மொட்டைத் தலையனைத் தேடின மாதிரி

700. தின்னையில் இருந்தவனுக்கு திடீர்னு கல்யாணம்

701. தீ எறிஞ்ச வீட்டுலய கரிக்கட்டைக்கு பஞ்சோ

702. தீனுக்குன்ன ஆவோளம் வேலைக்குன்னா கேவளம்

703. துச்சனக்காரிக்கு பொச்சுளகாயம்

704. துணிந்தவனுக்கு தூக்கு மேடையும் பஞ்சு மெத்தையாம்

705. தும்மன வீட்டுல தீயிக்குப் போகாதே

706. தும்ப விட்டுட்டு வாலப்புடிச்ச கதையாயிருக்கு

707. தூரத்திலிருக்கிற சொந்தக்காரன விட
பக்கத்திலிருக்கற அயலானே வாசி

708. தூரத்து தண்ணி தாகத்துக்கு ஒதவுமா?

709. துளுக்கன் உண்டு கெட்டான்
பார்ப்பன் உடுத்திக் கெட்டான்

710. துள்ளற மாடு பொதி சுமக்குமா?

711. துளுக்கன் புத்தி தொண்டகுழி வரைக்கும்

712. தூங்கினவன எழுப்பிடலாம்
நடிப்பவன எழுப்பமுடியாது

713. தெண்டங்கட்ட காசிருக்குது
தேங்கா வாங்க காசில்லை

714. தெய்வம் காட்டுமே தவிர எடுத்து ஊட்டாது

715. தெரிந்து கொள்ளனும் பெண்ணே புரிந்து கொள்ளனும் பெண்ணே
மறுபேச்சு பேசக்கூடாது பெண்ணே

716. தெறந்த வீட்ல நாய் நொளஞ்ச மாதிரி

717. தென்னமரத்து நெழலும் தேவடியா உறவும் நெலைக்காது

718. தென்ன மரத்துல தேள் கடிச்சு பனமரத்துல நெறிக் கட்டுச்சாமா

719. தென்னமரம் வெக்கிறவன் தின்னுட்டு சாவான்
பனமரம் வெக்கிறவன் பாத்துட்டு சாவான்

720. தென்னய வெச்சா எளநீரு
புள்ளய பெத்தா கண்ணீரு

721. தெனமும் இல்லைங்கற மகராசிதான் இன்னைக்கும் இல்லைன்னா
தெனமும் போடுகிற வேசி ஏ இல்லைன்னா

722. தேஞ்சாலும் சந்னக்கட்ட மணம் போகாது

723. தேஞ்சு போன ரெக்கார்ட் மாதிரி திரும்பத் திரும்ப பேசாதே

724. தேயச்சு தேயச்சு தெலுங்கு பொட்டு வைப்பாறா

725. தேரோட போச்சு திருநாளு
தாயோட போச்சு பொறந்த வீடு

726. தேன் இருக்கற எடத்துல தானே ஈ மொய்க்கும்

727. தேன் எடுத்தவன் புறங்கையை நக்குனது மாதிரி

728. தை பிறந்த வழி பிறக்கும்

729. தொட்டுக்கோ தொடச்சுக்கோன்னு நிக்கறா

730. தொண்டுக்கு பட்டாத்தான் தெரியும்
நண்டுக்கு சுட்டாதான் தெரியும்

731. தொண்ணுல ஒட்டுன புண்ணாக்கு மாதிரி

732. தொல்ல பண்ற பூனையை கொண்டு தூர எறிஞ்சிட்டு வந்த கதை

733. தொழுவத்துல கட்டுன மாடு மாதிரி

734. தோட்டக்காரன் வீட்ல போட்டுப் படுக்க பாயில்லை

735. தோப்புல இருக்கற வாழமரம் பூ பூத்தா
தொழுவத்துல கட்டுன மாட்டுக்குத்தான் சந்தோஷம்
தெருவுல போற ஆட்டுக்கல்ல

736. தோலப்பாத்து மாடு புடிச்சா தொழிலுக்கு ஆகாது

737. நக்கவிட்ட நாயும் கொத்த விட்ட கோழியும் சும்மா இருக்காது

738. நகத்த சுத்தமா வெச்சாதான் நகச்சுத்தி வராமலிருக்கும்

739. நகம் நனயாம நத்த எடுக்க முடியுமா?

740. நகமும் சதையும் போல

741. நசகண்ட பூனை நாளைக்கும் வரும்

742. நடக்க முடியாதவன் சித்தப்பன் வீட்டுல பொண்ணு எடுத்தானா

743. நடக்கமாட்டாதவன் சித்தப்பன் வீட்ல பொண்ணு கேட்டானாம்

744. நடுவீட்ல நாச்சி நல்ல புள்ள பீச்சி

745. நண்டு கொளுத்தா வங்குல நிக்காது

746. நத்த வகுத்தலயும் முத்து பொறக்கும்

747. நம்ம கையாலே நம்ம கண்ண குத்திட்டா கைய வெட்டி எரிஞ்சிடவா முடியும்

748. நரி நாலு காலு திருடன்
இடையன் ரெண்டு காலு திருடன்

749. நரிக்கு நாட்டாம குடுத்தா கெடைக்கு ரெண்டு வெள்ளாடு கேக்குமாமா

750. நரியோட நீலசாயம் வெளுத்து போன மாதிரி

751. நரியோட நீலசாயம் வெளுத்துப் போச்சாக்கும்

752. நரைக்க நரைக்க நாய்புத்தி

753. நல்ல பாம்புக்கு பல்லுல விஷம்
பொம்பளைக்கு நாக்கே விஷம்

754. நல்ல மாட்டுக்கு ஒரு சூடு
நல்ல புள்ளைக்கு ஒரு அடி

755. நல்ல மாடு உள்ளூர்க்குள்ள விலையாகுமா?

756. நல்லவங்களுக்கு உயிர் நாப்பது நாள்தான் இருக்கும்

757. நல்லவன் உறவை நாலுபணம் கொடுத்துச் சம்பாதிக்க வேணும்
கெட்டவன் உறவை பத்துப்பணம் கொடுத்து நீக்கிட வேணும்

758. நல்லவன் போல இருப்பான் பரம சண்டாளன்

759. நல்லவனுக்கு அடையாளம் சொல்லாம போறது

760. நல்லவாயன் சம்பாதித்தத நாரவாயன் தின்னு பாக்கறான்

761. நாசமா போயி நேசமா வா

762. நாசுவன் குப்ப கிளச்சா பூரா மசுரு மசுரா வரும்

763. நாய் ஓலப்பாயில மூத்தரம் பேஞ்ச மாதிரி ஒல ஓலன்னு எப்பப்பாரு வீட்ல சத்தம்

764. நாய் சூரியனைப் பாத்து கொலச்சா கொலச்சிட்டு போகுது

765. நாய் பெற்ற தெங்கம் பழம் போல

766. நாய் வால மட்ட வெச்சு கட்டினாலும் நிமுத்த முடியாது

767. நாய் வேசம் போட்டா கொரச்சுத்தான் ஆகணும்

768. நாய்க்கு எச்சிலை
பேய்க்கு வேப்பிலை

769. நாய்க்கு தெரியுமா ஒரு சந்திப்பானை

770. நாய்க்கு நாலு காலு இருந்தாலும் கால் மேல காலு போட்டு இருக்க முடியல

771. நாய்க்கு வேலையில்லை வீட்ல இருப்பில்லை

772. நாய்க்கும் நாட்டாமைக்கும் வித்தியாசம் தெரியாம பேசாதே

773. நாய ஏவுனா நாய் வால ஏவுச்சாமா

774. நாயக்கழுவி நடுகட்டிலில் போட்டாலும் அது குப்பையில தான் படுக்கும்

775. நாயா இருந்தாலும் தாய்

776. நாயக்கழுவி நடுவீட்ல வெச்சாலும் அது லொள்ளு லொள்ளுனு தான் குறைக்கும்

777. நாயக் கூப்படற நேரம் பீய வழி

778. நாயோட சாவாகாசம் சீலையைக் கிளிக்கும்

779. நாலு புள்ள பெத்தவளுக்கு நடுத்தெருவுல சோறு

780. நாலு புள்ள பொறந்தா நாதாங்கி கூட நிக்காது

781. நாலு வீட்டுக்கு மொள குடுக்கப் போற மாதிரி

782. நாப்பது வயசுல நாய்க் கொணம்

783. நின்னா நெடுங்காமரம் வுளுந்தா குட்டிச்சுவரு

784. நின்னுட்டு தூங்குமாம் பேய்
படுத்துட்டுத் தூங்குமாம் நாய்

785. நினைக்கும் கேடு தனக்குத்தான்

786. நிறைகுடம் தளும்பாது குறைகுடம் கூத்தாடும்

787. நீ இருக்கற பச்சக் கொத்தமல்லி

788. நீ போட்டிருக்கறதே ஓட்ட டவுசரு அவனோட குண்டிய நீ எதுக்குப் பாக்கற

789. நீங்க தண்ணில கூளி போட்டா
நாங்க பாறைலயே கூளி போடுவோம்

790. நீசத் தண்ணியும் மொளகும் குடிச்சவன் பணக்காரனும்
பாலும் பழமும் குடிச்சவன் ஏழையுமாயிட்டான்

791. நீண்ட தூரம் ஓடி வந்தாதான் அதிக தூரம் தாண்ட முடியும்

792. நீர் அடிச்சு நீர் வெலகாது

793. நூல் இல்லாம ஊசி தைக்க முடியாது
தண்ணி இல்லாம படகு நகத்த முடியாது

794. நூறுல பொறந்தா ஆயிரத்துல கண்ணு முழிச்ச மாதிரி பேசற

795. நெகம் கெட்டா மனங்கெடும்

796. நெஞ்சுல கல்லு நெருக்குன்னு விழுந்துச்சு

797. நெட்டையன நம்பனாலும் குட்டையன நம்பக்கூடாது

798. நெட்டையன நம்பினாலும் குட்டையன நம்பாதே

799. நெருப்பில்லாம பொகையாது

800. நெருப்புல தீ வெச்ச மாதிரி

801. நெல்லிக்கா ஆரம்பத்துல கசந்தாலும் போக போக இனிக்கத்தான் செய்யும்

802. நெல்லு போட்டா நெல்லு மொளைக்கணும்
சொல்லு போட்டா சொல்லு மொளைக்கணும்

803. நெல்லு விளைகிற நெலமும் தெரியாது
நெலங்காய்கிற எடமும் தெரியாது

804. நெல்லுக்குப் பாயற தண்ணி புல்லுக்கும் பாஞ்ச மாதிரி

805. நெறஞ்ச ஆத்துல பெருங்காயம் கரைத்தது போல

806. நெனஞ்ச கௌவி வந்தாளாமா இருந்த வெறகு சேதமாச்சாமா

807. நெனப்பு தான் பொழப்ப கெடுத்துச்சாமா

808. நொங்கு தின்னவன் ஓடிப்போயிட்டான்
நோண்டிப் பாத்தவன் மாட்டிக்கிட்டான்

809. நோகாம நோம்பி கொண்டாடறது

810. நோகாம நொங்கு திங்க முடியுமா?

811. நோயாளிக்குத் தானே நோயோட வருத்தம் தெரியும்

812. பக்கத்துல இருக்கற உறவுக்காரனோட காலில் விழுகிறதவிட பொறத்தையன்
காலில் விழுவதே மேல்

813. பகல் கனவு எப்பவுமே பலிக்காது

814. பகல்ல பாத்து பேசு ராத்திரி அதும் பேசாதே

815. பகல்லயே பசு போறது தெரியலயாமா
ராத்திரி எருமை போறதா தெரியும்

816. பங்காளி உறவும் சரி
பனமரத்து நிழலும் சரி

817. பங்கி தின்னா பசி ஆறிடும்

818. பங்குனி என்று பகுக்கிறதுமில்ல
சித்திரை என்று சிரிக்கறதுமில்ல

819. பங்குனி மாசத்துல மழபேஞ்சா பசு குடிக்கக்கூட தண்ணி கெடைக்காது

820. பச்ச மரத்துக்கே இந்த நெலமனா பட்ட மரத்துக்கு எந்த நெலம

821. பச்சிலையைப் பாத்து பழுத்தெல சிரிச்சுது

822. பசாரிச்சு பசாரிச்சு பச்சக்கிளி வாங்கி
விசாரணை இல்லாம வீதியில கெடக்குது

823. பசி ருசியறியாது நித்திரை சுகம் தெரியாது

824. பசி வந்தா பத்தும் பறக்கும்

825. பசிச்ச செட்டி பாக்கத் தின்னானாமா

826. பசின்னு வந்தா பத்தும் பறக்கும்

827. பட்ட மரம் பூக்காது

828. பட்டக் காட்டுல தென்னமரம் வெச்சுப் பார்க்க ஆசப்படாதே

829. பட்டணத்தைப் பிடித்தவனைப் பார்க்கிலும் மனதை அடக்கிறவன் நல்லவன்

830. பட்டம் கண்டு பயிரிடு
பருவங் கண்டு பெண்ணெடு

831. பட்டாத் தெரியும் பார்ப்பானுக்கு
கெட்டாத் தெரியும் கோமுட்டிக்கு

832. பட்டிக்காட்டான் முட்டாய் கடையைப் பாத்த மாதிரி

833. பட்டை உடுத்தி ரோட்டுல போனாலும் பறச்சி பறச்சி தான்

834. பட்டாத்தான் தெரியும் பறையனுக்கு
சுட்டாத்தான் தெரியும் குசவனுக்கு

835. படிக்கத் தெரியாதவகிட்ட படிக்கச் சொல்லி பேப்பர் கொடுத்தா
எங்கம்மா கையெழுத்துன்னு சொல்லி அழுற மாதிரி

836. படிச்சவன் பாட்டக் கெடுத்தான்
எழுதினவன் ஏட்டக் கெடுத்தான்

837. பண்ணாடி படி ஏச்சானா ஆள்க்காரன் நடைல ஏப்பான்

838. பணக்கள்ளி பாயில படுக்கமாட்டா

839. பணக்காரப் பெண்ணைத் திருமணம் செய்வது பஞ்சு மெத்தையில விழுவதைப் போன்றது

840. பணக்காரன் பின்னாலயும் பத்துபேர்
பைத்தியக்காரன் பின்னாலயும் பத்துபேர்

841. பண்ணக் கெணத்துல தண்ணிக்குப் போயி அண்ணத்தப் பொழுது அங்கயே போச்சு

842. பணத்தாலானால் வீடு
பொணத்தாலானால் சுடுகாடு

843. பணம் பத்தும் செய்யும்

844. பணம் பாதாளம் வரை பாயும்

845. பணியாரத்த திங்கச் சொன்னா குழியவா எண்ண சொன்னாங்க

846. பத்தியத்துக்கு முருங்கைக்காய் கொண்டு வரச் சொன்னா
பால் தெளிக்க அகத்திக்கீரை கொண்டு வருவான்

847. பத்தினி சாபம் போட்ட பச்சை மரமும் பத்திக்கிட்டு எறியும்

848. பத்துப் பேருக்கு பல்லுக்குச்சி ஒருத்தனுக்குத் தலச்சும

849. பத்தும் தெரிஞ்சு பொத்தல் கைவிட்டவர்

850. பத்து விரலால் பாடுபட்டு அஞ்சு விரலால் அள்ளித் தின்னணும்

851. பந்திக்கு முந்தோணோம் படைக்குப் பிந்தோனோம்

852. பந்திக்கு வேண்டாங்கறாங்களாமா எலைய ஓட்டைங்கறாங்களாமா

853. பம்மாத்து குளம் அழிஞ்சு போச்சு
பயங்கள கூப்பிடு மீன் பிடிக்க

854. பயிரு பாக்காம கெட்டுது
மாடு மேயக்காம கெட்டுது

855. பரங்கி அளவு செலவை கவனியாது கடுகளவு செலவில் கவனமா?

856. பருப்பில்லாம கல்யாணமா?

857. பருவத்துக்கு வந்தா பன்னிக்குட்டியுமு பத்து பணத்துக்கு போகும்

858. பல்லில்லாமல் நவடு கடிச்சு என்ன பண்ணுவாங்க

859. பல்லு போனா சொல்லு போச்சு

860. பல்லுக்கு இடையில நாக்கு பட்ட மாதிரி

861. பல நாள் கள்ளன் ஒரு நாள் அகப்படுவான்

862. பலாப்பழத்துல ஈயைப் புடிச்சு விட முடியுமா?

863. பழகப் பழக அழகப்பா

864. பழகப் பழகப் பாலும் புளிக்கும்
பன்னிரெண்டு கொல்லம் போனா தேனும் புளிக்கும்

865. பழம் கொண்டு போனவன் உள்ளயும்
வாய் கொண்டு போனவன் வெளியவும்

866. பழம் பழுத்திட்டா கொம்புல நிக்காது

867. பழுத்த பழம் தானே விழும்

868. பழுத்தோலைய பாத்து குருத்தோல சிரிச்சுது

869. பள்ளத்துல இருந்தா பொண்டாட்டி
மேட்டுல இருந்த அக்கா

870. பள்ளப் புள்ளய பள்ளிக்கூடத்தில படிக்க வெச்சாலும் அனேங்கற புத்தி போகாது

871. பறக்க பறக்க பாடுபட்டு படுக்க பாயில்ல

872. பறச்சி முலை அழகு
பாப்பாத்தி குண்டி அழகு
செட்டிச்சி குறி அழகு

873. பறச்சிகிட்ட தாலி வாங்கன மாதிரி

874. பறச்சேரியில வில்வம் முளச்சது போல

875. பறச்சியோட பெண் ஆனாலும் தொடச்சு விட்ட மாதிரி இருக்கு

876. பறட்ட முடி பாலூரட்டும்

877. பறத்தெருவுல பிச்சை எடுத்தாவது
இனத்தெருவுல காச்சிக்குடி

878. பறந்து போற எச்சிலைக்கு மேல பாறாங்கல்லைத் தூக்கி வெச்ச மாதிரி

879. பறையன் உறவும் சரி
பனமரத்து நிழலும் சரி

880. பறையன் பாக்கு தின்கறதும்
பறைச்சி மஞ்சள் குளிப்பதும்
அரிப்பும் பழிப்பும் மட்டும்

881. பன்னிக்குட்டி கூட சேந்தா கன்னுக்குட்டியும் பீயத் தின்னும்

882. பன்னி முன்னால முத்தப் போட்ட மாதிரி

883. பனம் மரம் மாதிரி நட்டமா நிக்காதே

884. பனமரத்திலிருந்து விழுந்தவன பாம்பு கடிச்ச மாதிரி

885. பனமரத்து நிழலும் சரி
பரதேசி உறவும் சரி

886. பனைமரத்துக்கு அடியில் நின்னு பால் குடிச்சாலும் கள்ளு குடிக்கிறான்
என்பாங்க அது மாதிரி

887. பாக்க கொடுத்த மாங்காய அண்டியோட முழுங்கின மாதிரி

888. பாக்க மடியில மறைக்க முடியும்
தோப்ப தொப்பையில மறைக்க முடியுமா?

889. பாசாங்கி வாசல்ல படுத்திருந்தேனாத்தா
இந்தப் பாவி வந்து எழுப்பும் போது தூங்கீட்டேனாத்தா

890. பாடுபட்டவனுக்கு பழைய சோறு
கூறு கெட்டவனுக்கு கறியுஞ் சோறு

891. பாத்தவனுக்கு மாடு பாக்காதவனுக்கு சிம்மாடு

892. பாத்திரம் அறிந்து பிச்சை போடு

893. பாத்திஹா சீரன படிகடத்தக் கூடாது

894. பாம்பு கடிச்சு பொழச்சவனும் உண்டு
செருப்பு கடிச்சு செத்தவனும் உண்டு

895. பாம்பும் சாகக்கூடாது கம்பும் ஒடையக்கூடாது

896. பாம்பு திங்கற ஊர்ல போனா நடுத்துண்டந்தான் சாப்பிடணும்

897. பாம்புக்கு பல்லுலதான் வெசம்
பங்காளிக்கு உடம்பெல்லாம் வெசம்

898. பால் சட்டிக்கு பூனைய காவல் வெச்ச மாதிரி

899. பாவமுன்னு பழைய சீலயக் குடுத்தா வீட்டுக்குப் பின்னால போய் மொளம் போட்டு பாத்தாளாமா

900. பான புடிச்சவ பாக்யசாலி

901. பிச்சக்காரன் வாந்தி எடுத்த மாதிரி

902. பிச்சை எடுக்கறாரு பெருமாளு அதைப் புடுங்கி தின்னானா அனுமாரு

903. பிச்சைக்கும் போக வேண்டாம் நாய் கடியும் வேண்டாம்

904. பிடிச்சு வெச்ச பிள்ளையார் மாதிரி

905. பிள்ளை இல்லாத வீட்டுல கௌவன் துள்ளிக்குதிச்சானா

906. பிள்ளையார் கோயிலை இடித்து பெருமாள் கோயிலை கட்டலாமா?

907. பின்னப்படுத்து முன்ன எந்திரிக்கணும்

908. பீத்த மொறம் கையில பிள்ளைக ரெண்டும் இடுப்புல

909. பீ திங்கற புத்தி பீ திங்கத்தான் போகும்

910. பீயில காசு பொருக்கி

911. புடிச்சாலும் புடிச்சா புளியங்கொம்பு

912. புடுங்கி புடுங்கப் போய் பூனை குறுக்க வந்தது.

913. புண்ணியத்துக்குக் கொடுத்த மாட்ட பல்லப் புடுங்கிப் பாத்தாங்களாமா

914. புண்ணியம் தேடி போறவன் பூனைய மடியில கட்டிட்டா போவான்

915. புரட்டாசி விதைக்கக் கூடாது
ஐப்பசி நடக் கூடாது

916. புலிக்கு பிறந்தது பூனையாகுமா?

917. புள்ள பெற பெற ஆசை
பணம் சேர சேர ஆசை

918. புதுச் செருப்பு காலக்கடிக்கும்
புதுப் பொண்டாட்டி பர்ஸக் கடிக்கும்

919. புதுசா புதுசா வெள்ளாம செய்து
மசுரா மசுரா மொளச்சுதாமா

920. புதுசுக்கு வண்ணான் கடுசுக்கு வெளுத்தான்
பழசுக்கு வண்ணான் சோத்துக்கு வெளுத்தான்

921. புருசன் செத்தா பொண்டாட்டி வாழாவெட்டி
பொண்டாட்டி செத்தா புருசனுக்குக் கொண்டாட்டம்

922. பூ இல்லாம கல்யாணமில்லை
கண்ணுல தண்ணியில்லாம துக்கமுமில்லை

923. பூட்டிருந்தா சாவியும் வேணும்

924. பூ வாசன பூவுக்குத் தெரியாது

925. பூ வித்தகாசு தான் மணக்குமா?
புலால் வித்த காசு என்ன நாறுமா?

926. பூன குட்டி போட்டது போல தூக்கிக் கொண்டலையறான்

927. பூன குறுக்காச்சு ஒத்தப்பாப்பா முன்னாச்சு
சாந்தி குறுக்காச்சு சர்ப்பம் தடயாச்சு

928. பூன எளச்சா எலி விளையாடக் கூப்பிடுமாம்

929. பூன கண்ணு மூடிச்சின்னா உலகமே இருட்டுன்னு இல்ல

930. பூனைக்கு சந்தோசம் வந்த பீத்தப்பாயை சொரண்டுமாம்

931. பூனைக்கு யாரு மணிகட்டுவா?

932. பெத்த தாயும் இல்ல
செத்தா நாயும் இல்ல

933. பெத்த புள்ள ஏமாத்தினாலும்
வச்ச புள்ள ஏமாத்தாது

934. பெத்த மனசு பித்த
புள்ள மனசு கல்லு

935. பெத்தவகிட்டயே உன்னோட வித்தைய காணிக்கறயே

936. பெம்பேச்சு கேட்ட பேய் பெருமாளே மக்கத்து போயி தொப்பி இடு

937. பெரியவங்க சொன்னா பெருமாள் சொன்னது மாதிரி

938. பேச்சு படிச்ச நாய் வேட்டைக்காகாது

939. பேண்டவனை வெட்டாம பீயை வெட்டிக்கிட்டிருக்கிறான்

940. பேய்க்கு வாழ்க்கைப்பட்டா புளிய மரத்தில் தான் தொங்க வேணும்

941. பேயோட புள்ளையானாலும் தாய் தள்ளி விடுவாளா?

942. பேராசை பெருநட்டோ

943. பேரு பொன்னம்மா கழுத்துல வாழநாறு

944. பொகை இருக்குதுன்னா நெருப்பு இருக்குதுன்னு தானே அர்த்தம்

945. பொங்கச் சோறும் வேண்டாம்
பூசாரி தனமும் வேண்டாம்

946. பொட்டக் கோழி கூவிப் பொழுது விடியப்போறதில்லை

947. பொட்டயன் செல்லப்பா பொண்டாட்டிய தடவின மாதிரி ஏ தடவுற

948. பொண்டாட்டிய கட்டுன காலக்கெட்டு
புள்ளையப் பெத்தா வாயக்கட்டு

949. பொண்டாட்டி சொல்றது தந்திரம்
தாய் சொல்றது மந்திரம்

950. பொண்ணும் வாழமரமும் ஒண்ணு

951. பொணந்திண்ணி கழுகு வட்டமிடற மாதிரி எதுக்கு வட்டமிடற

952. பொம்பள சிரிச்சாப் போச்சு
பொகையில விரிச்சாப் போச்சு

953. பொய் பேசின வாய்க்கு போஜனம் கிடைக்காது

954. பொய் பொருந்தப் பேசினா நெசம் நின்னுக்கிட்டு முழிக்குமா

955. பொரம்போக்கு நெலத்துல பட்டா போட விரும்பாதே

956. பொல்லாத நாசுவன் பொண்டாட்டி தலைய செறச்சானாமா

957. பொல்லாத நேரம் வந்தா ஹ ஹ ஹ

958. பொல்லாத நேரம் வந்தா புல்லும் சாரப்பாம்பாயிடும்

959. பொலச்சா பொலைக்கணும் இல்லாட்டி பொலைக்கறவ பொறகால போ

960. பொளச்ச வீட்ல ஒரு கருகமணிக்குன்றாவது தங்க வேண்டாமா?

961. பொளைக்கற பொளப்புக்கு பொண்டாட்டி ரெண்டு

962. பொறுக்கி திங்கற கோழிக்கு மூக்கு தறிச்ச மாதிரி

963. பொறுத்தவன் பூமியாழ்வான் பொங்கினவன் காடாள்வான்

964. பொன்னும் வாழமரமும் ஒன்னு

965. போக்கிரிகளுக்கு பொங்கல் வெச்ச மாதிரி

966. போசனம் சிறுசானாலும் ஆசனம் பெருசா இருக்கணும்

967. போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து

968. போரோட திங்கற மாட்டுக்கு புடுங்கிப் போட்டா கட்டுபடியாகுமா?

969. போன மச்சான் திரும்பி வந்தான் பூ மனத்தோட

970. போனா கவுண்டன் கூடத்தான் போவான்
இல்லாட்டி கல்ல வெச்சு கொட்டுவானா

971. மக்களே உண்டெந்திரிங்கோ
மருமக்களே கண்டெந்திரிங்கோ

972. மக கெட்ட கேட்டுக்கு மாசம் பத்துக்கட்டு வெளக்குமாறு

973. மகன் செத்தாலும் சாகட்டும் மருமக கொட்டம் அடங்கினால் சரி

974. மஞ்சள் லாபம் இஞ்சியிலே
சுக்கு லாபம் மஞ்சளிலே

975. மச்சான் செத்தா என்ன மயிராச்சு எனக்கு நாளு கம்பளியும் ஆச்சு

976. மச்சினன் இருக்கற எடத்துல பெண் பார்த்தோன்னா மலையேறியும் பொளைக்கலாம்

977. மடியப் புடிச்சி மாங்கா வாங்கி குடுமியப் புடிச்சு காசு வாங்கறது

978. மண் குதிரையை நம்பி ஆத்துல இறங்காதே

979. மண்டையிருந்தா மசுரு மொளைக்கும்

980. மண்ணை கூட்டி வைக்கனும்
பொண்ணைப் பூட்டி வைக்கனும்

981. மத்து போட்ட தயிறு மாதிரி புத்தி குழம்பி போச்சா

982. மத்து போட்ட தயிறு மாதிரி புத்தி கொழம்பி போச்சா

983. மந்தரத்துல மாங்கா காய்க்காது

984. மப்புக்கு ஊறுகா மாதிரி

985. மயிர் உள்ள சீமாட்டி எப்படி முடிஞ்சா என்ன?

986. மயிலு காலு பாத்து உறங்கற மாதிரி உறங்கணும்

987. மரத்த எல காக்கும்
மானத்த பணம் காக்கும்

988. மலடிக்கு புள்ள பேரு பாக்காதே

989. மலடியப் புடிச்சு புள்ள பெருன்னு சொன்ன மலடி எப்படி பெறுவா?

990. மலமேல மாடு மேஞ்ச்சாலும் மாட்டுக்காரன் பேர்தான் சொல்லும்

991. மலைமாதிரியான கஷ்டம் பனி போல ஆண்டவன் நீக்கிடுவான்

992. மலையாட்டமா மகன வளத்து மண்கரையான் தின்னவிட மனம் வருமா?

993. மலையும் மலையும் முட்டிக்கிறப்போ மண்ணாங்கட்டி எந்த மூல

994. மழை நின்னாலும் தூரல் நிக்கல

995. மழை வரும்போது கொடபிடிக்காம இடி வரும்போது கொடபிடிக்கற மாதிரி

996. மனசு சலிச்சா மண்ட புளுக்கும்

997. மனசுல கனமிருந்தா மையித்துக்கு கனம்

998. மனத்திலே பகையும் உதட்டிலே உறவுமாய் இருப்பது போல

999. மறைக்கத் தெரியணும் திருடவும் போகணும்

1000. மாட்டுக்காரனுக்கு மாடு போச்சேன்னு வெசனம்
பறையனுக்கு கொழுப்பு இல்லைன்னு வெசனம்

1001. மாட்ல கறந்த பால் மறுபடியும் மடி ஏறுமா?

1002. மாடு எங்க மேஞ்ச்சாலும் மேய்க்கறவன் பேர சொல்லாது
மாட்டுக்காரன் பேரத்தான் சொல்லும்

1003. மாடு எளச்சாலும் கொம்பு எளைக்காது

1004. மாடு செத்தா கண்ணுக்குட்டிக்கு புல் புடுங்கி வெச்கிட்டா சாகுது

1005. மாடு மாதிரி வளந்தா பத்தாது

1006. மாடு மேஞ்ச்ச சேரி
மனுசன் கொண்ட சேரி

1007. மாடு மேயறது பாக்கலாம்
மனுசன் மேயறது பாக்கமுடியுமா?

1008. மாடு வேற நிறமானாலும்
பாலு வேற நிறமாகுமா?

1009. மாதா ஊட்டாத சோத்த மாங்கா ஊட்டும்

1010. மாமியா மெச்சின மருமகளுமில்ல
மருமக மெச்சின மாமியாருமில்ல

1011. மாமியார் முடியப் புடுங்கி மருமகன் தானம் விட்டானாம்

1012. மார்கழி மாசோ மாபெரும் குளிரு

1013. மாலைல வரும் ஒறம்பர காலைல தான் போகும்

1014. மாவிடிக்க மனசு வேணும்

1015. மாற்றான் தோட்டத்து மல்லிகைப்பூவுக்கு ஆசைப்படாதே

1016. மானம் கிடுகிடுங்குது மழைக்கு எத்தனம் பண்ணுது
கெளவி மொணமொணங்கறா சண்டைக்கு எத்தனம் பண்ணறா

1017. மானமெல்லாம் கண்ணு மாமியா தலையில கையி

1018. மானுக்கு வெச்ச வலையில மொசலு குட்டி மாட்டிடுச்சா

1019. மிஞ்ச வெஞ்ச சாறு சுண்ட வெச்ச மாதிரி

1020. மின்னப்பாத்து பின்னப்பாரு

1021. மீன் இரையைப் பிடிக்குமே தவிர தூண்டிலப் பாக்காது

1022. மீன் குஞ்சுக்கு நீச்சல் கத்துக் கொடுக்கணுமா?

1023. மீனுக்கு வாலும் பாம்புக்கு தலையும் காண்பிக்கற மாதிரி

1024. முட்டாத் துளுக்கனும் முரட்டு நாயக்கனும் கொண்டது விடமாட்டாங்க

1025. முடி இருக்கற மகராசி எப்படி வேணும்னாலும் முடிவா

1026. முடி இருக்கறவ ஜடை போட்டுக்கலாம் இல்லாதவ நீ சுண்டி போடக்கூட ஆசைப்படக்கூடாது.

1027. முடியிருந்தா தான் கோத முடியும்

1028. முடியுள்ள பொம்பளைக்குத் தானே கொண்ட போட முடியும்

1029. முட்டை போடுற கோழிக்குத்தாண்டி தெரியும் அதோட குண்டி எரிச்சல்

1030. முண்ணூறுருட்டி மொளக்கு ஈமான் கொண்டவன் சீரேத்தி கலிமா கொண்டவன் ஷைறராக்கி

1031. முணு முணுன்னு இருந்திட்டு முன்னூறு வீட்டுக்கு தீ வைப்பா

1032. முருங்கையை ஒடிச்சு வளத்தனும்
பிள்ளையை அடிச்சு வளத்தனும்

1033. முழு பூசணிக்காய சோத்துல மறைக்காதே

1034. முழுசா நனஞ்ச பெறகு முக்காடு எதுக்கு

1035. முள்ளுச் செடிய புடுங்கி நெருப்பு வைக்கற மாதிரி

1036. முள்ளு மேல சேலையைப் போட்டு மொல்ல மொல்ல எடுக்கற

1037. முள்ளு மேல விழுந்த சேல போல

1038. முழு பூசணிக்காய சோத்துல மறச்சாலும் வயித்துல உள்ள புள்ளைய மறச்சாலும் கத்தரிக்காய் முத்தினா கடைவீதிக்கு வந்துதானே ஆகணும்.

1039. முன்கை நீண்டாதான் முழங்கை நீளும்

1040. முன்னப் பின்ன செத்தாத்தானே சுடுகாடு தெரியும்

1041. முன்னால பல்லுல சிரிச்சிட்டு பின்னால பல்லுல கடிக்காதே

1042. முன்னொன்றாக இருந்து பேசிப் பின்னொன்றாகப் பேசுவார் முகத்தில் விழிக்கப்படாது

1043. மூக்கு மயிற புடுங்காத சாமி எருமக்கடா பலி கேட்டுதாம்மா

1044. மூக்குள்ளவரை சளி

1045. முஞ்சியில முள்ளு வெச்சு கட்டன மாதிரி

1046. முட்டப்பூச்சிக்கு பயந்து வீட்ட காலி பண்ணின மாதிரி

1047. மூத்தது மோள இளையது காள

1048. மெரண்டவனுக்கு இருண்டதெல்லாம் பயம்

1049. மேச்சா மாமியார மேப்பேன் இல்லாட்டி பரதேசம் போவேன்

1050. மேட்டாங்காட்ட ஓட்டுனவனும் கெட்டான்
மேனாமினிக்கிய கட்டினவனும் கெட்டான்

1051. மேயற மாட்ட நக்கற மாடு கேடு வருத்துச்சா

1052. மேனாமினுக்கியை கட்டுனவனும் கெட்டான்
மேட்டாங்காட்ட உழுதவனும் கெட்டான்

1053. மொட்டத்தலைக்கும் மொளங்காலுக்கும் முடிச்சுப் போடாதே

1054. மொட்டமரம் காத்துக்கு அஞ்சாது

1055. மொட்டி எந்திரிச்சா பொல்லாதவன்

1056. மொடக்கடிக்காரனுக்கு பொடக்காளி தடம்

1057. மொடங்கரதுக்கு பாய் இல்லைங்கிரதுக்கு ஓசாரம் சடங்கு பாக்காம இருக்க முடியுமா?

1058. மொடவன் கொம்புத் தேனுக்கு ஆசப்பட்ட மாதிரி

1059. மோப்பம் புடிக்கற நாய மொகத்தப் பாத்தாலே தெரியும்

1060. மோரு வாங்கவே போறாளாமா
சொப்பு ஒளிக்காட்டி என்னோ

1061. யானப் பசிக்கு சோள பொறி போதுமா?

1062. யானை காணாமல் போன குண்டுச் சட்டில தேடினா கிடைக்குமா?

1063. யானை போறது தெரியும் பூனை போறது தெரியலயா?

1064. யானை மேல ஏறி பாறைமேல விழலாம்
நாய் மேல ஏறி பீய்மேல விழக்கூடாது

1065. யானைமேல போறவன்கிட்ட சுண்ணாம்பு கேட்ட கணக்கா இருக்குது

1066. யானை வாங்க காசு இருக்காம
சங்கிலி வாங்க காசு இல்லையாம

1067. யானைக்கு சிட்டுக்குருவி மத்தியஸ்தம் செய்த மாதிரி

1068. யானைக்கு தீனி போடுற வீட்ல ஆட்டுக்குட்டிக்கென்ன பஞ்சமா?

1069. யானையும் யானையும் முட்டும்போது எடைல அகப்பட்ட கொசுவோட கதி என்னாகும் அது மாதிரி

1070. யாரோட காரியம் எப்படி இருந்தாலும் உன்னோட காரியம் சிட்டயா நடக்குதல்ல

1071. யோக்யன் வாரான் சொப்பெடுத்து உள்ளவை

1072. ருசிகண்ட பூன உரிக்கு உரி தாவும்

1073. ரெண்டு பொம்பளக சேந்தா குட்டிச்சுவர்
பத்து ஆம்பளக சேந்தா நெலச்சுவரு

1074. லவடுக்கு பொண்டாட்டியொன்னு வெப்பாட்டியொன்னு

1075. வகுத்தக் கட்டுனா புருசனக் காப்பாத்தலா
வாயக் கட்டுனா புள்ளயக் காப்பாத்தலா

1076. வண்ணாங்கிட்ட துணியப் போட்டு கொக்கு பின்னால போனாளாமா

1077. வண்ணான் ஆட்டுத்தலைக்கு பறந்தாப்லெ

1078. வந்த தண்ணி இருந்த தண்ணிய அடிச்சிட்டு போச்சாமா

1079. வந்த வேலையை விட்டுட்டு பந்தக்கால புடிச்ச கதையாயிருக்கு

1080. வயசானவங்க காசு வெளுக்குமா?

1081. வயித்து வலிக்காரனுக்கு கட்டில திருப்பிப் போட்டானாம்

1082. வர வர மாமியா கழுத போளானாளாமா

1083. வல்லவனுக்கு புல்லும் ஆயுதம்

1084. வலுத்தவன் தண்ணி வடக்கேயும் பாயுமாம் தெக்கேயும் பாயுமாம்

1085. வழி தெரியாம வண்ணான்கிட்ட போனா அவன் இழுத்துச் சூள மேல போட்டானாம்

1086. வளத்த மாடு மார்ல பாயுது

1087. வளையாமாரி வேலைக்குப் போனாலும் கூலி கெடைக்காது

1088. வனத்தோட அலஞ்சாலும் இனத்தோட அலையணும்

1089. வாக்கத்தவனுக்கு வாத்தியார் வேலை
போக்கத்தவனுக்கு போலீஸ் வேலை

1090. வாங்கன்னு கூப்பிட வாயிலே எச்சில்
உக்காருன்னு சொல்ல வீடெல்லாம் ஈரமாம்

1091. வாய் கருப்பட்டி கை கருணை கிழங்கு

1092. வாய் வெல்லும் போது பொய் வெல்லாது

1093. வாயக் கட்டுனவளுக்கு புள்ள
வயித்தக் கட்டுனவளுக்கு புருஷன்

1094. வயிறு குடலை காட்டினாலும்
வாழை நார் என்பது போல

1095. வாயக் குடுத்து வம்பு வெளைக்கு வாங்காதே

1096. வாயக் கொண்டு போனவ நடுவீட்டுக்குள்ள நின்னுட்டாளா
வாழப் பழத்தக் கொண்டு போனவ வாசப்படிக்கிட்ட நிக்கற

1097. வாயால கெட்டான் கௌதாரி

1098. வாயிருந்தா வாழச் சொன்னா இல்லைன்னா
வாழவாடி சந்த மேல வந்தரச் சொன்னான்

1099. வாழ்ந்தாலும் வயித்தெரிச்சலு
பொளச்சாலும் பொச்செரிப்பு

1100. வயிறு நிறைய சாப்பிட்டு கண்ணு நிறைய தூங்காதே

1101. வாழ்ந்து கெட்டவன் வடக்கே போ
வாழாமல் கெட்டவன் கிழக்கே போ

1102. வாழற வீட்டுக்கு ஒரு பொண்ணு
வைக்கோல் போருக்கு ஒரு கண்ணு

1103. விக்க விக்கத் தின்னாலும்
கௌக்க வெளுக்கப் பீதான்

1104. வித்தாரக்கள்ளி வெரகுக்குப் போயி கத்தாள முள்ளு கொத்தோட வந்துச்சாம்மா

1105. விதையொன்னு போட்டு சொறயொன்னு மொளைக்குமா?

1106. விட்டில் பூச்சி வெளக்கச் சுற்றி பறந்து தன்னையே சாகடித்துக் கொண்ணு விடறமாதிரி

1107. விடாக்கண்டனுக்கு கொடா கண்டவன்

1108. விடியா மூஞ்சிக்கு வேல கெடச்சாலும் கூலி கெடைக்காது

1109. விபசாரம் செய்யறவன் சுட்டாலும் விடமாட்டான்

1110. விரலுக்குத் தகுந்த வீக்கம்

1111. விழுந்த எடத்துல வித்தையெடுக்கறது

1112. வீட்ட முழுங்குகிற பேய் வந்தா வீட்டை சாத்தினால் சரியாவா போகும்

1113. வீட்டுக்கு வீடு வாசப்படி

1114. வீட்டு தலைவன் கவனிக்காமலிருந்தால் வேலையாளும் காரியத்தில் கருத்தோடில்லாம இருப்பான்

1115. வீட்டுத் தலைவியைப் போல அவள் வேலைக்காரியும் இருப்பாள்

1116. வீட்டுக்குப் பொண்டாட்டி வேம்பு
நாட்டுக்குப் பொண்டாட்டி கரும்பு

1117. வீடு தேடி வந்த மகாலட்சுமிய விரட்டி விட்ட மாதிரி

1118. வீடு பத்தி எறியும் போது வெளக்கு புடிச்ச மாதிரி

1119. வீதிக்கு ஒரு தேவடியா யாருக்குன்னு ஆடுவா

1120. வீதியில போனத புடிச்சு கூதியில விட்டு குத்துது கொடையுதுனு சொன்னாளாமா

1121. வெட்டனவனுக்கு ஒரு கெணறு
வண்ணாத்திக்கு பல கெணறு

1122. வெட்டிட்டு வான்னா கட்டிட்டு வாரான்

1123. வெட்டிட்டு போனா கட்டிட்டு வாரான்

1124. வெட்டொண்ணு துண்டு ரெண்டு

1125. வெட்ற காடு வேகற வூட்டுக்கு ஆகுமா

1126. வெண்ணெய் தெரண்டு வரும்போது தாளி ஒடஞ்ச மாதிரி

1127. வெதைக்கற காலத்துல விட்டுட்டு அறுக்கற காலத்துல அரிவாளைத் தூக்கன மாதிரி

1128. வெந்தப் புண்ணுல வேல் பாய்ச்சினது மாதிரி

1129. வெந்த மொகரையைக் கூப்பிடு வந்த ஓரம்பர போகட்டும்

1130. வெந்து கிடக்கையில விளையாடக் கூப்பிட்டது மாதிரி

1131. வெந்தத திங்க வேண்டியது விதி வந்தா சாக வேண்டியது

1132. வெல்லம் தின்னவன் ஓடிப் போயிட்டான்
வெரல சூப்பனவன் மாட்டிக்கிட்டான்

1133. வெல்லப் பானையை எறும்பு மொச்சது மாதிரி

1134. வெளக்கு புடிச்சிட்டு கெணத்துல விழுந்த கதை

1135. வெளக்குமாத்து கட்டைக்கு பட்டுக் குஞ்சமா?

1136. வெளக்கு மாத்துக்கு பட்டுக் குஞ்சமா?

1137. வெள்ளாட நனையுதுன்னு ஓநாய் அழுதுதாமா

1138. வெள்ளாளன் புத்தி வேலிக்குள்ள

1139. வெளியூர்க்காரன் சுடுகாட்டுக்குப் பயப்படமாட்டான்
உள்ளூர்க்காரன் ஆத்துக்குப் பயப்படமாட்டான்

1140. வெளுப்பானுக்கு வெளுப்பான் சாதி வண்ணான்

1141. வெறுங்கஞ்சியைக் குடிச்சிட்டு மீசைல நெய்யைத் தடவிக் கொள்ற மாதிரி

1142. வெறும் வாயில புளி திங்காதே

1143. வெறக காட்டுல விக்க மாட்டாங்க
மீன ஏரிக்கரைலயும் விற்கமாட்டாங்க

1144. வெறகுக்காரனுக்கு நோய் வந்தா வெறகால அடிச்சாலே போயிடும்

1145. வேகாத சோத்துக்கு விருந்தாளிக ரெண்டு பேருங்கற கதை மாதிரி

1146. வேண்டாம்னா சீனி கூட கசக்கும்

1147. வேணும் வேணும்னுர கோத்தா வெள்ளி கொடிபோலும் நூக்கலாம்
வேண்டா வெட்டிக்கு நூத்தா என்னத்த நூத்தா வரும்

1148. வேணுன்னு சொன்னா வேரெல்லாம் காய்க்கும் பலா
வேண்டான்னு சொன்னா உச்சியிலயும் காய்க்காது

1149. வேதாளம் முருங்கமரம் ஏறின மாதிரி

1150. வேலைக்கார புள்ளய பேளவிட்டுப் பாத்தா தெரியும்

1151. வேலி உறுதியா இருந்துச்சுன்னா நாய் நுளையாது

1152. வேலி சாடின வெள்ளாடு கதையாயிருக்கு

1153. வேலிக்கு ஓணான் சாட்சி

1154. வேலிக்கு போட்ட முள்ளு கடைசியில காலுக்கு வெனையாயிடுச்சு

1155. வேலியில போற ஓணானைப் பிடிச்சு வீட்டுக்குள்ள விட்டு
கொடையுது கொடையுதன்னு சொல்வாங்க

1156. வேலியில போன ஓணானை மடியில கட்டுன கதையாயிருக்கு

1157. வேலை செய்ய கையாலாகாது பன்னாட்டுப் பன்ன மட்டும் தெரியும்

1158. வேலைக்கு புள்ளையே சாக்காடு

1159. வேலையத்த மாமியா மருமகன ரோராட்டனாங்களா

1160. வேலையில்லாம வெறகுக்கு போனவக கொடியெல்லாம் குக்கீட்டு அழுதாங்களாமா

1161. வேளாளன் கல்யாணம் விடிஞ்சா தீர்ந்தது

1162. வேளாளன் புத்தி வேலிவரை
வடுகன் புத்தி வாசப்படிவரை

1163. வௌவாலாத் தொங்கனாலும் நடக்காத காரியம் நடக்காது

1164. வௌவாலுக்கு வாக்கப்பட்டா நீயும் தொங்கணும் நானும் தொங்கணும்.

# பாலக்காடு மாவட்ட மலையாளப் பழமொழிகள்

1. *அகங்காரம் ஆயுசினெ குறைக்கும்*

   (அங்காரம் ஆயுளை குறைத்து விடும்)

2. *அகத்து லக்ஷணம் புறத்தறியாம்*

   (அகத்தின் அழகு முகத்தில் தெரியும்)

3. *அகத்து குசும்பனும் புறத்து நல்லவனும்*

   (மனதில் கேடு நினைப்பவன் வெளியில் நல்லவன்)

4. *அகலத்தெ பந்துவினேக்கால் அடுத்துள்ள சத்ருவானு நல்லது*

   (தூரத்தில் இருக்கின்ற சொந்தக்காரனைவிட பக்கத்திலிருக்கின்ற பகைவனே நல்லவன்)

5. *அங்ஙாடியில் தோற்றதினு அம்மயோடானோ கோவம் காணிக்கினு*

   (அங்காடியில் தோல்வி அடைந்ததற்கு அம்மாவிடமா கோபத்தைக் காண்பிப்பது)

6. *அஞ்ஞனம் எந்நால் ஞானறியும்*
   *மஞ்ஞளு போலே வெளித்திரிக்கும்*

   (கண்மை என்பதை நானறிவேன்
   மஞ்சளைப் போன்று வெண்மையாக இருக்கும்)

7. *அடுப்பெத்ர செறுதாயாலும் காலு மூணுவேனம்*

   (அடுப்பு எவ்வளவு சிறியதாக இருந்தாலும் கால்கள் மூன்று வேண்டும்)

8. *அதிகமாயால் அமிர்தவும் விஷம்*

   (அதிகமானால் அமிர்தமும் நஞ்சு)

9. *அவன்டெ வாக்கும் செரி பழைய சாக்கும் செரி*

   (அவனுடைய வார்த்தைகளும் சரி பழைய சாக்கும் சரி)

10. *அவனவன்டெ கண்ணிலு போரல் வெச்சிட்டு*
*மற்றவருடெ கண்ணிலு கரடு களயான் வரண்டா*
(அவனவனுடைய கண்களில் காயத்தை வைத்துக் கொண்டு
பிறருடைய கண்களிலுள்ள தூசியை எடுக்க வருதல் கூடாது)

11. *அவனவன்டெ குஞ்ஞிநெ ஊட்டி வளர்த்தியா தன்டெ குஞ்ஞு தானே வளரும்*
(அவனுடைய குழந்தையை ஊட்டி வளர்த்தினால் தன்னுடைய குழந்தைகள் தானாக வளருவார்கள்)

12. *அவனவன்டெ குற்றம் மரச்சு வெச்சு*
*ஆரான்டெ குற்றம் சூண்டிக் காட்டருது*
(அவனவனுடைய கண்ணில் குறைகளை மறைத்து வைத்து விட்டு
பிறருடைய கண்களிலுள்ள குறைகளை சுட்டிக்காட்டுதல் கூடாது)

13. *அவனவன்டெ பல்லினெக் குத்தி ஆரான்னெ நாற்றிக்கனோ?*
(அவரவர்களுடைய பல்லினைக் குத்தி பிறரிடம் நாற்றத்தைக் காண்பிக்கலாமா?)

14. *அவிடெ மண்ணு திரிக்குன்னது ஆரானு நோக்கண்டா எந்நு பரஞ்ஞு போலே*
(அங்கு மண்ணைப் புரட்டுவது யார் என்று பார்க்க வேண்டாம் என்று கூறியது போல)

15. *அழகுள்ள சக்கயில் சுளயில்லா*
(அழகாக இருக்கின்ற பலாப்பழத்தில் சுளைகள் இல்லை)

16. *அச்சன் ஆன கேரி என்னுவெச்சு மகனு தழும்புண்டாகுமோ?*
(அப்பா யானை ஏறினார் என்று மகனுக்கு தழும்பு ஏற்படுமா?)

17. *அச்சனு மக்களு தீரணம்*
*அஸ்வதியில் வித்து இறக்கணம்*
(அப்பாவுக்கு பிள்ளைகள் வேண்டும்
அஸ்வதி நட்சத்திரத்தில் வித்தினை போட வேண்டும்)

18. *அஸ்வதி அச்சனாகா*

(அஸ்வதி நட்சத்திரம் அப்பாவிற்கு ஆகாது)

19. *அட்டயப்பிடிச்சு மெத்தைலு கிடத்தியா கிடக்குமோ?*

(அட்டையைப் பிடித்து மெத்தையில் படுக்க வைத்தால் படுக்குமா?)

20. *அடி தெற்றியா ஆனயும் வீழும்*

(காலடி தவறிவிட்டால் யானையும் விழுந்துவிடும்)

21. *அடிச்ச வழியெ நடன்னில்லெங்கில் நடன்ன வழியெ அடிக்குக*

(அடித்த வழியில் நடக்கவில்லையெனில் நடந்து சென்ற வழியில் அடித்து விட வேண்டும்)

22. *அடித்தர நன்னெங்கில் கெட்டிடம் பலமாயிரிக்கும்*

(அஸ்திவாரம் நன்றாக இருந்தால் கட்டிடம் பலமாக இருக்கும்)

23. அடுத்தவன்டெ மக்களே ஊட்டி வளர்த்தியா தன்டெ குஞ்ஞு தானே வளரும்

(அடுத்தவர்களுடைய பிள்ளைகளை ஊட்டி வளர்த்தினால் தன்னுடைய பிள்ளைகள் தானாக வளருவார்கள்)

24. *அடுப்பெத்ர செறுதாயாலும் காலு மூணுவேணம்*

(அடுப்பு எவ்வளவு சிறியதாக இருந்தாலும் கால்கள் மூன்று வேண்டும்)

25. *அடைக்கயானெங்கி மடியி வெக்காம் மரமாயாலோ*

(பாக்காக இருந்தால் மடியில் வைக்கலாம் மரமாக இருந்தால்)

26. *அண்ணான் மூத்தால் மரம் கேற்றம் மறக்குமோ?*

(அணில் வளர்ந்து விட்டது எனில் மரம் ஏறுவதை மறந்து விடுமா?)

27. *அத்தம் கருத்தா ஓணம் வெளுக்கும்*

(அத்தம் நட்சத்திரம் கருமையாக இருந்தால் ஓணத்தினத்தன்று வானம் வெண்மையாக இருக்கும்)

28. *அத்தாழம் முடக்கான் நீர்க்கோலி மதி*

(இரவு நேர உணவினை தடை செய்ய தண்ணீர் பாம்பு போதும்)

29. *அத்திப்பழம் பழுக்கும்போல் காக்கய்க்கு வாய்ப்புண்ணு*

(அத்திப்பழம் பழுக்கும் போது காக்காவிற்கு வாயில் புண்)

30. *அதிகம் கூவுன்ன கோழி அல்ப்பமே முட்டயிடூ*

(அதிகமாக கூவிக் கொண்டிருக்கின்ற கோழி கொஞ்சமாகத் தான் முட்டை போடும்)

31. *அதி மோகம் குடி கெடுத்தும்*

(மிகுதியான ஆசை வீட்டினைக் கெடுத்துவிடும்)

32. *அதிரு நீக்கியவன் கதிராயி போகும்*

(வீட்டின் வேலியினை நீக்கிக் கட்டியவன் கதிராகப் போவான்)

33. *அப்பம் தின்னா மதி குழியென்னண்டா*

(அப்பம் சாப்பிட்டால் போதும் குழி எண்ண வேண்டாம்)

34. *அப்பன் சத்தாலே அப்பன்டெ விலயறியூ*

(அப்பா இறந்தால் தான் அப்பாவின் அருமை தெரியும்)

35. *அம்பலம் செருதாணெங்கிலும் ப்ரதிஷ்டா வலுது*

(கோயில் சிறியதாக இருந்தாலும் சிலை பெரியது)

36. *அம்ம வேலி சாடியா மகள் மதிலு சாடும்*

(அம்மா வேலியினைத் தாண்டினால் பிள்ளை மதிலினைத் தாண்டி விடும்)

37. *அம்மய்க்கு பிரசவ வேதனா மகள்க்கு வீண வாயனா*

(அம்மாவிற்கு பிரசவ வலி மகள் வீணை மீட்டுகிறாள்)

38. *அம்மயுடெ பாலு குடிக்குகயும் வேணம்*
*அச்சன்டெ மடியிலு இரிக்குகயும் வேணம்*

(அம்மாவினுடைய பாலினையும் குடிக்க வேண்டும்
அப்பாவினுடன் படுக்கவும் வேண்டும்)

39. *அம்மாயம்மா ஒடைக்கண சட்டிக்கு வெலயில்லா*
*மருமகளு ஒடைக்கண சட்டிக்கு வெலயுண்டு*

(மாமியா உடச்சா மண்கலம் மருமகள் ஒடச்சா பொன்கலம்)

40. *அமര്ത്തി சொറிஞ்ஞாலும் தலயிலெழுத்து மாஹல்லா*

(அழுத்திச் சொறிந்தாலும் தலையில் எழுதிய எழுத்து மாறாது)

41. *அரச்சது தன்னெ அரச்சால் முகத்து தெறிக்கும்*

(அரைத்ததினை அரைத்தால் முகத்தில் தெறித்து விடும்)

42. *அரிவாளு தேச்சு சந்தி மாந்தி அன்னத்த நேரம் அங்ஙனயும் போயி*

(அரிவாள் தேய்த்து குண்டியினை சொறிந்து அன்றைய பொழுதும் அப்படியே போய்விட்டது)

43. *அருதாத்து செய்தவன் கருதாத்தது கேள்க்கும்*

(தேவையில்லாத வேலைகளைச் செய்தவன் தேவையில்லாத வார்த்தைகளையும் கேட்க வேண்டும்)

44. *அல்ப்ப சுகம் அனேகம் துக்கம்*

(சிறிய இன்பம் பெரிய துன்பம்)

45. *அவனவன்டெ கொக்கிலு ஒதுங்ஙுன்னதே கொத்தாவு*

(அவரவர்களுடைய வாயில் போட முடிவதைத் தான் எடுக்க வேண்டும்)

46. *அவனவன்டெ பல்லினெக் குத்தி ஆரான்னெ நாற்றிக்கணா*

(அவனவனுடைய பல்லினைக் குற்றிவிட்டு பிறரிடம் நாற்றத்தைக் காண்பிக்க வேண்டுமா?)

47. *அவிட்டம் நாளு தவிட்டிலும் நேடும்*

(அவிட்டம் நட்சத்திரம் தவிட்டிலும் சம்பாதிப்பார்கள்)

48. *அவிடெ மண்ணு திரிக்குன்னது ஆரானு நோக்கண்டா எந்து பரஞ்ஞு போலே*

(அங்கு மண்ணினை புரட்டுவது யாரென்று பார்க்க வேண்டாம் என்று கூறினது போல)

49. *அழகுள்ள சக்கயில் சுளயில்லா*

(அழகாக இருக்கின்ற பலாப்பழத்தில் களைகள் இல்லை)

50. *அறியாத்த பிள்ள சொறியும் போழரியும்*

(தெரியாத பிள்ளை சொறிந்து கொள்ளும் போது புரிந்து கொள்வாள்)

51. *அறுபது கழிஞ்ஞால் இருபதின்றெ பவுரு*

(அறுபது வயது முடிந்து விட்டாலும் இருபது வயதினுடைய இளமை)

52. *ஆசான்றெ நெஞ்சத்து அல்லங்கில் களரிக்குப் புறத்து*

(களரி பயிற்சி கற்றுத் தருகின்ற ஆசிரியரின் முன்னிலையில் அல்லாவிட்டால் களரி பயிற்சி கற்றுக் கொண்டிருக்கும் இடத்திற்கு வெளியில்)

53. *ஆட்டு தோலனிஞ்ஞ சங்ஙாதி*

(ஆட்டினுடைய தோலினைப் போர்த்திப தோழன்)

54. *ஆடின்டிடடுத்து சோதிச்சிட்டு வேணோ முளகரைய்க்கான்*

(ஆட்டினிடம் கேட்டுவிட்டா மிளகு அரைப்பது)

55. *ஆணாயால் நாணம் வேணம் முகத்தஞ்சு மீச வேணம்*

(ஆண்களாக இருந்தால் வெட்கம் வேண்டும் முகத்தில் ஐந்து மீசையும் வேண்டும்)

56. *ஆத்யம் செல்லுண்ணவன் அப்பம் நேடும்*

(முதலில் சென்றவன் அப்பத்தைப் பெறுவான்)

57. *ஆயிரம் பர அரியிலு அரகுனியன் பட்ட போலே*

(ஆயிரம் பரை நெல்லிற்குள் அரை பதர் பட்டது போல)

58. *ஆயிரம் வருஷம் நாயின்றெ வாலு குழலிலிட்டாலும் வளஞ்ஞேயிரிக்கூ*

(ஆயிரம் வருடம் நாயினுடைய வாலினை குழலில் போட்டாலும் வளைந்து தான் இருக்கும்)

59. *ஆயில்யம் அயலு முடிக்கும்*

(ஆயில்யம் நட்சத்திரம் பக்கத்து வீட்டாருக்கு ஆகாது)

60. *ஆரான்றெ அம்மய்க்கு பிராந்து பிடிச்சால் காணான் நல்ல சேலு*

(பிறருடைய அம்மாவிற்கு பைத்தியம் பிடித்தால் பார்ப்பதற்கு நன்றாக இருக்கும்)

61. *ஆரான்டெ தோட்டத்திலு புல்லுகண்டு பசு வாங்ஙிக்கருது*

(பிறருடைய தோட்டத்தில் புற்களைப் பார்த்து மாட்டினை வாங்குதல் கூடாது)

62. *ஆழும் அறியாதெ காலிடருது*

(ஆழம் தெரியால் காலினை போடுதல் கூடாது)

63. *ஆளேறியால் பாம்பு சாவில்லா*

(ஆட்கள் அதிகமானால் பாம்பு சாகாது)

64. *ஆற்றில் களஞ்ஞாலும் அளந்து களயணம்*

(ஆற்றில்போட்டாலும் அளந்து போட வேண்டும்)

65. *ஆறடி மண்ணில் எல்லாம் துல்யம்*

(ஆறடி மண்ணில் அனைவரும் சமமானவர்)

66. *ஆளு செறுதானெங்கிலும் அடி அமரவாயிரிக்கும்*

(ஆட்கள் சிறியவர்களாக இருந்தாலும் அடி பலமாக இருக்கும்)

67. *ஆன அரக்காடு*

*ஆடு ஆயிரங்காடு*

(யானை அரைக்காடு ஆடு ஆயிரங்காடு)

68. *ஆன கொடுத்தாலும் ஆச கொடுக்கருது*

(யானை கொடுத்தாலும் ஆசையினை வளர்க்கக்கூடாது)

69. *ஆன புறத்து கேரணம்*

*அங்ஙாடியில் கூடி போகணம்*

*கொட்டும் மேளவும் வேணம்*

*ஆரும் காணான் பாடில்லா*

(யானை மீது ஏற வேண்டும்

அங்காடியின் வழியாக போக வேண்டும்

கொட்டும் வாத்யங்களும் வேண்டும்

யாரும் பார்க்கவும் கூடாது)

70. *ஆன மேலே போனவனோடு சுண்ணாம்பு கேட்ட கச்சோடம்*

(யானை மீது உட்கார்ந்து போகின்றவனோடு சுண்ணாம்பு கேட்ட வியாபாரம்)

71. *ஆன மெலிஞ்ஞால் தொழுத்தில் கெட்டுமோ?*

(யானை மெலிந்தால் தொளுவில் கட்டுவார்களா?)

72. *ஆனய்க்கு தடி பாரம் உறும்பினு அரி பாரம்*

(யானைக்கு பெரும் மரம் பாரம்; எறும்பிற்கு அரிசி பாரம்)

73. *ஆணாயால் நாணம் வேணம் முகத்தஞ்சு மீச வேணம்*

(ஆணாக இருந்தால் நாணத்துடன் இருக்க வேண்டும் முகத்தில் ஐந்து மீசையும் இருக்க வேண்டும்)

74. *இஷ்டமில்லாத்த அச்சி தொட்டதெல்லாம் குற்றம்*

(பிடிக்காத்த மனைவி தொடுவதெல்லாம் குறை)

75. *இஞ்சி தின்ன குரங்ஙினெப் போலே*

(இஞ்சி சாப்பிட்ட குரங்கினைப் போல)

76. *இடுப்பு ஒடிஞ்ஞாலும் நடிப்பு விடில்லா*

(இடுப்பு ஒடிந்தாலும் நடிப்பினை விட மாட்டார்கள்)

77. *இத்தில் பிடிச்ச மரம் கெடும்*

(இத்தில் கொடி படர்ந்த மரம் கெட்டுவிடும்)

78. *இப்போழத்த தெய்வம் அப்போழய்க்கப்பல்*

(இப்பொழுதுள்ள கடவுள் உடனுக்குடன்)

79. *இரிக்கும் மும்பு காலு நீட்டருது*

(உட்காருவதற்கு முன்பு கால்களை நீட்டக்கூடாது)

80. *இரிக்குன்ன கொம்பின்றெ இட முரிக்கருது*

(உட்கார்ந்திருக்கின்ற கொம்பினுடைய இடையில் வெட்டுதல் கூடாது)

81. *இரிக்குன்னதினெ விட்டிட்டு பறக்குன்னதினெ பிடிக்கன போலே*

(இருப்பதை விட்டுவிட்டு பறப்பதைப் பிடிப்பது போல)

82. *இரும்பு கட்டவன் துரும்பாயி போகும்*

(இரும்பினைத் திருடினவன் துரும்பாகப் போய்விடுவான்)

83. *இரும்பும் வித்யயும் இரிக்கெ கெடும்*

(இரும்பும் படிப்பும் இருக்கும் பொழுது கெட்டுவிடும்)

84. *இருன்னிட்டெ கால் நீட்டாவு*

(உட்கார்ந்த பிறகு தான் கால்களை நீட்ட வேண்டும்)

85. *இருன்னு உண்ணருது கிடன்னு உரங்ஙருது*

(உட்கார்ந்து சாப்பிடக்கூடாது படுத்துத் தூங்கக்கூடாது)

86. *இல வன்னு முள்ளு மேலே வீணாலும் முள்ளு வன்னு*
*இல மேலே வீணாலும் இலைக்கானு கேடு*

(இலை வந்து முள்ளின் மீது விழுந்தாலும் முள் வந்து இலையின் மீது விழுந்தாலும் இலைக்குத் தான் சேதம்)

87. *இறச்சி காணாத்தவன் செம்பரத்திப்பூ கண்ட போலே*

(இறைச்சி பார்க்காதவன் செம்பருத்திப் பூவினைப் பார்த்ததைப் போல)

88. *இறச்சி திண்ணா போறே எல்லு கழுத்தில் கெட்டனோ*

(இறைச்சி சாப்பிட்டால் போதாதா எலும்புகளை கழுத்தில் கட்டவேண்டுமா?)

89. *இறச்சிக்கு போயவன் விரச்சு சத்து*
*வீட்டிலிருன்னவன் கொதிச்சு சத்து*

(இறைச்சி வாங்கச் சென்றவன் விரைத்து இறந்துவிட்டான் வீட்டில் காத்திருந்தவன் ஆசை வைத்து இறந்துவிட்டான்)

90. *இறயிட்டு மீன் பிடிக்குன்னது போலே*

(இறையினைப் போட்டு மீன் பிடிப்பதைப் போல)

91. *இறயிட்டாலே மீன் பிடிக்கான் பற்றூ*

(இறையினைப் போட்டால்தான் மீன் பிடிக்க முடியும்)

92. *ஈக்கொக்கு எத்ரகுளம் கண்டதா*

(இந்தக் கொக்கு எத்தனை குளம் பார்த்ததுண்டு)

93. ஈச்ச கூட்டிய தேனும் லுப்தன் நேடிய தனவும் மற்றுள்ளவர்க்கே உபகரிக்கூ

(தேனீக்கள் சேகரித்த தேனும் பெரியவர்கள் சேகரித்த பொருட்களும் பிறருக்குத் தான் பயன்படும்)

94. ஈப் பருப்பொன்னும் இவிடெ வேகில்லா

(இந்தப் பருப்பு இங்கு வேகாது)

95. ஈற்றெடுக்கான் போயவளு இரட்ட பிரசவிச்சு

(பிரசவம் பார்க்கச் சென்றவள் இரண்டு குழந்தைகளைப் பிரசவித்து விட்டாள்)

96. உண்ட சோற்றிலு கல்லிடுன்னது போலே

(உருண்டை பிடித்த சோற்றில் கல்லினைப் போடுவது போல)

97. உண்டவன் அறியுமோ உண்ணாதவன்டெ விசப்பு

(சாப்பிட்டவனுக்குத் தெரியுமா? சாப்பிடாதவனுடைய பசி)

98. உண்டிட்டு குளிக்குன்னவனெ கண்டாக் குளிக்கணம்

(சாப்பிட்டுவிட்டு குளிக்கின்றவனைப் பார்த்தால் குளிக்க வேண்டும்)

99. உண்டிரிக்கண நாயர்க்கு விளி கேட்ட கச்சோடம்

(சாப்பிட்டுக் கொண்டிருந்த நாயருக்கு யாரோ அழைத்தது போன்று தோன்றியது)

100. உண்ணான் கொடுத்தால் அம்மாவன் இல்லெங்கில் கும்மாவன்

(சாப்பிடக் கொடுத்தால் மாமன் இல்லையெனில் கூமன்)

101. உண்ணியெ கண்டாலறியாம் ஊரிலெ பஞ்சம்

(பிள்ளையைப் பார்த்தால் தெரியும் ஊரிற்குள் ஏற்பட்டிருக்கின்ற பஞ்சம்)

102. உத்சாஹமுன்டெங்கில் அத்தாழமுண்ணாம்

(சந்தோஷமாக இருந்தால் இரவு நேர உணவினை உண்ணலாம்)

103. உத்தரத்திலிரிக்குன்னது எடுக்குகயும் வேணம்
கக்ஷத்திலிரிக்குன்னது களயானும் பாடில்லா

(மேற்கூரையில் இருப்பது எடுக்கவும் வேண்டும் அக்குலில் இருப்பது விழுந்து போகவும் கூடாது)

104. *உத்ரம் உத்திரம் வைக்கும்*

(உத்ரம் நட்சத்திரம் வீடு கட்டும்)

105. *உத்தரம் முட்டும்போ கொஞ்சனம் காட்டுக*

(பதில் கிடைக்காமல் ஆகும்பொழுது கொஞ்சல் காண்பிப்பது)

106. *உப்பு தின்னவன் வெள்ளம் குடிக்கும்*

(உப்பு சாப்பிட்டவன் தண்ணீர் குடிப்பான்)

107. *உப்போளம் வருமோ உப்பிலிட்டது*

(உப்பினைப் போன்று வருமா உப்பில் போட்ட பொருட்கள்)

108. *உரலின்டெ சங்கடம் மத்தளத்தோடு காணிக்குன்னது போலெ*

(உரலினுடைய துன்பம் மத்தளத்திடம் காண்பிப்பது போல)

109. *உருட்டும் பிரட்டும் சம்சாரிக்குன்னவனு ஒடுக்கம் சிறட்டா*

(பொய்யும் பொரட்டும் பேசுபவன் இறுதியில் ஓடு எடுக்க வேண்டும்)

110. *உருளுண்ண கல்லில் பாயலு பிடிக்குமோ?*

(உருண்டு கொண்டிருக்கின்ற கற்களில் பாசி பிடிக்குமா?)

111. *உருளைக்கு உப்பேரி*

(உருளைக்கிழங்கிற்கு ஏற்ற பொறியல்)

112. *உள்ளிலுள்ளது கண்ணிலறியாம்*

(மனிதனுள் இருப்பது கண்களில் தெரியும்)

113. *உறக்கெ சிரிக்குண்ணாளெ உலக்க கொண்டடிக்கணும்*

(சத்தமாக சிரிக்கின்றவர்களை உலக்கை வைத்து அடிக்க வேண்டும்)

114. *எண்ணப்பாடம் புளி மண்ணு தேச்சு குளி*

(எண்ணப்பாடம் என்ற ஊரில் புளி மண்ணினை தேய்த்துக் குளித்தல்)

115. *எத்தாத்த முந்திரிங்ஙா புளிக்குன்னது போலே*

(பறிக்க முடியாத திராட்சை புளிப்பது போல)

116. *எலிக்கு மரணவேதனா பூச்சய்க்கு கொண்டாட்டம்*

(எலிக்கு மரணத்தினுடைய வேதனை பூனைக்கு சந்தோஷம்)

117. *எலியவனெ வலியவனடிச்சால் வலியவனெ வல்லவனடிக்கும்*

(தாழ்ந்தவர்களை உயர்ந்தவர்களடித்தால் உயர்ந்தவர்களை கடவுளடித்து விடுவார்)

118. *எலியெ கொன்ன பாபத்தினு பூச்சா காசிக்கு போயிட்டெந்து காரியம்*

(எலியினைக் கொன்ற பாவத்திற்கு பூனை காசிக்கு சென்று என்ன பயன்)

119. *எலியெ பேடிச்சு இல்லம் சுடுக*

(எலியினை பயந்து வீட்டினை எரித்தது போல)

120. *எலியெ பேடிச்சு இல்லம் சுட்டபோலே*

(எலிக்கு பயந்து வீட்டினைச் சுட்டெரித்தது போல)

121. *எழுதாப்புறம் வாயிக்கருது*

(எழுதாமல் இருக்கின்ற பக்கத்தினை படிக்கக்கூடாது)

122. *எள்ளு எண்ணைக்கு காயும்போ குருஞ்சாத்தன் கூடெ எந்தினு காய்யுனு*

(எள்ளு எண்ணைக்கு காய்ந்து கொண்டிருக்கும் போது சிறிய வண்டுகள் சேர்ந்து எதற்கு காய்ந்து கொண்டிருக்கிறது)

123. *எல்லு முறியப் பணி செய்தா பல்லு முறியத் தின்னாம்*

(எலும்பு ஒடிய வேலை செய்தால் பற்கள் விழ சாப்பிடலாம்)

124. *எறிஞ்ஞு கல்லும் பரஞ்ஞுவாக்கும் திரிச்செடுக்கானாவில்லா*

(எறிந்த கற்களும் சொன்ன சொல்லும் திரும்ப எடுக்க முடியாது)

125. *எரியுன்ன தீயில் எண்ண ஒழிக்கருது*

(எரிகின்ற தீயில் எண்ணையினை ஊற்றக் கூடாது)

126. *எல்லிலு கண்டில்லெங்கிலும் கொள்ளிலு காணும்*

(எலும்பில் பார்க்க முடியாவிட்டாலும் பிறருக்கு கொடுக்கும் போது தெரிந்து கொள்ளும்)

127. *എറുമ്പു മുട്ടയും കൊണ്ടു തിട്ടയിൽ കയറിയാൽ മഴ പെയ്യും*

(எறும்பு முட்டையினை எடுத்துக் கொண்டு திண்ணையில் ஏறிச் சென்றால் மழை பொழியும்)

128. *എന്റെ കഞ്ഞിയിലു പൂഴി വാരിയിട്ടു*

(என்னுடைய கஞ்சியில் தூசியினை வாரி போட்டுவிட்டார்கள்)

129. *എന്റെ മാവും പൂക്കാതിരിക്കില്ലാ*

(என்னுடைய மாமரமும் பூக்காமல் இருக்காது)

130. *എന്നെക്കണ്ടാൽ കിണ്ണം കട്ടെന്നു തോന്നുമോ?*

(என்னைப் பார்த்தால் பாத்திரம் திருடினேன் என்று தோன்றுமா?)

131. *ഏച്ചു കെട്ടിയാൽ മുഴച്ചിരിക്കും*

(சேர்த்துக் கட்டினால் புடைத்துக் காணப்படும்)

132. *ഏറേ കറന്നാൽ ചോരാ*

(அதிகமாக கரந்தால் இரத்தம் வரும்)

133. *ഏറേ കൊയ്തവൻ താഴെ ചുമക്കും*

(கீழ்பகுதிவரை நெற்கதிர்களை அறுவடை செய்தவன் முற்றிலும் சுமக்க வேண்டும்)

134. *ഏറേ ചിത്രം ഓട്ടപ്പാത്രം*

(அதிகமான படம் ஓட்டைப்பாத்திரம்)

135. *ഒക്കത്തു പണമുണ്ടെങ്കിൽ മുറ്റത്തു രണ്ടു ചാട്ടം*

(இடுப்பில் பணமிருந்தால் வாசலில் இரண்டு குதி)

136. *ഒടുക്കത്തെ കുട്ടി ഓമനക്കുട്ടി*

(இறுதியில் உள்ள குழந்தை பாசக்குழந்தை)

137. *ഓണം വന്നാലും ഉണ്ണി പിറന്നാലും കോരനു കഞ്ഞി കുമ്പിളിൽ തന്നെ*

(ஓணம் வந்தாலும் குழந்தை பிறந்தாலும் கோரண் என்பவனுக்கு கஞ்சி குடுவையில் தான்)

138. *ഒന്തു നിറംമാറും പോലേ*

(ஓந்து நிறம் மாற்றுவதைப் போல)

139. *ഒരിക്കൽ ചക്കവീണു മുയലു ചത്തെന്നു വെച്ചു എല്ലായ്പ്പോഴും ചക്കവീണു മുയലു ചാകണമെന്നില്ലാ*

(ஒரு முறை பலாப்பழம் விழுந்து முயல் இறந்து விட்டது என்று எப்பொழுதும் பலாப்பழம் விழுந்து முயல் சாக வேண்டும் என்பது இல்லை)

140. *ഒരു ഏട് എടുത്താൽ രെണ്ടു പാകവും വായിക്കണം*

(ஒரு காகிதம் எடுத்தால் இரண்டு பக்கமும் படிக்க வேண்டும்)

141. *ഒരു കൈ കൊണ്ടു കൊടുത്തു*

*മറു കൈ കൊണ്ടു വാങ്ങിക്കരുതു*

(ஒரு கையினால் கொடுத்து மறு கையினால் வாங்குதல் கூடாது)

142. *ഒരു കോഴി കൂവിയാൽ നേരം പുലരില്ലാ*

(ஒரு கோழி கூவினால் நேரம் விடியாது)

143. *ഒരു പട്ടിക്കു രെണ്ടു എല്ലു എന്തിനു*

(ஒரு நாய்க்கு இரண்டு எலும்பு எதற்கு)

144. *ഒരുമയുണ്ടെങ്കിൽ ഉലക്കമേലും കിടക്കാം*

*ഒത്തു പിടിച്ചാൽ മലയും പോരും*

(ஒற்றுமையாக இருந்தால் உலக்கையின் மீதும் படுக்கலாம்

ஒன்றாகப் பிடித்தால் மலையும் பெயர்ந்து வரும்)

145. *ഒരു വാതിൽ അടക്കുംപോൾ ദൈവം ഒമ്പതു വാതിൽ തുറക്കും*

(ஒரு கதவு சாத்தும் போது கடவுள் ஒன்பது கதவைத் திறப்பார்)

146. *ഒരു വെടിക്കു രെണ്ടു പക്ഷി*

(ஒரு குண்டில் இரண்டு பறவைகள்)

147. *ഒഴിഞ്ഞ പാത്രം മുഴക്കം ഉണ്ടാക്കുന്നതു പോലെ*

(காலியான பாத்திரம் ஒலி எழுப்புவதைப் போல)

148. *ஒன்னாநெங்கிலும் ஒலக்க கொண்டு அடிக்கணம்*

(ஒரு பிள்ளையாக இருப்பினும் உலக்கை வைத்து அடிக்க வேண்டும்)

149. *ஒன்னில் தொட்டா மூணு*

(ஒன்றில் துவங்கினால் மூன்று தடவை)

150. *ஒன்னு சீஞ்ஞால் மற்றொன்னினு வளம்*

(ஒன்று அழுகிவிட்டால் மற்றொன்றிற்கு வளமாக இருக்கும்)

151. *ஓடுன்ன தோணிக்கு ஒருந்தலு*

(ஓடிக் கொண்டிருக்கின்ற படகினை ஒரு முறை தள்ளிவிடுதல்)

152. *ஓந்து கொட்டப்பாலு குடிச்ச போலே*

(ஓந்து கொட்டப்பாலு குடித்தது போல)

153. *ஓந்து நிறம்மாரும் போலே*

(ஓந்து நிறம் மாற்றுவதைப் போல)

154. *கக்கான் அறிஞ்ஞா போறா நிக்கான் அறியணம்*

(திருடத் தெரிந்தால் பத்தாது அதை மறைக்கவும் தெரியனும்)

155. *கஷ்டகாலம் பிடிச்சவன்டெ தல மொட்டயடிச்சப்போ கல்லு மழ பெய்து*

(கஷ்டகாலம் பிடித்தவனுடைய தலை மொட்டையடித்த பொழுது கல் மழை பெய்தது)

156. *கட்டில் செறுதாநெங்கிலும் காலு நாலு வேணம்*

(கட்டில் சிறியதாக இருந்தாலும் கால்கள் நான்கு வேண்டும்)

157. *கட்டு குடிக்குன்ன வெள்ளத்தினு ஸ்வாது கூடுன்னது போல*

(திருடிக் குடிக்கின்ற தண்ணீரிற்கு ருசி கூடுவதைப் போல)

158. *கடம் கொடுத்தால் இட கொடுக்கணம்*

(கடம் கொடுத்தால் அதற்கான நேரமும் கொடுக்க வேண்டும்)

159. *கடலில் சென்னாலும் நக்கிக் குடிக்கண நாய நக்கியெ குடிக்கூ*

(கடலில் சென்றாலும் நக்கிக் குடிக்கின்ற நாய் நக்கியே தான் குடிக்கும்)

160. *கடன்னல் கூட்டில் கல்லெறியருது*

(தேனீ கூட்டில் கல்லெறிதல் கூடாது)

161. *கடிக்கும்போ தொடைக்கணம்*

(கடிக்கும் பொழுது தொடைக்க வேண்டும்)

162. *கடிச்ச பாம்பினெக் கொண்டு விஷம் இறக்கணம்*

(கடித்த பாம்பினை வைத்து நஞ்சு எடுக்க வேண்டும்)

163. *கண்டக சனி கொண்டே போகு*

(கண்டக சனி கொன்றே விடும்)

164. *கண்டது பரஞ்ஞா கஞ்ஞியில்லா*

(பார்த்ததைக் கூறினால் சாப்பாடு இல்லை)

165. *கண்டதெ காணூ காட்டவும் கூடி காணில்லா*

(பார்த்தது தான் கிடைக்கும்; மலத்தைக் கூட பார்க்க முடியாது)

166. *கண்டால் அறியாத்தவன் கொண்டால் அறியும்*

(பார்த்தால் புரிந்து கொள்ளாதவன் பிறர் கூறும் பொழுது புரிந்து கொள்வான்)

167. *கண்டு மடுத்தவன்டெடுத்து கந்த வாங்ஙி உடுக்கணம்*
*உண்டு மடுத்தவனெக் கொண்டு உருள வாங்ஙித் திண்ணனம்*

(பார்த்து மடுத்தவனிடம் துணி வாங்கி உடுக்க வேண்டும்
சாப்பிட்டு மடுத்தவனிடம் உருளை வாங்கி சாப்பிட வேண்டும்)

168. *கண்ணீரிக்கும்போ காழ்ச்சயறியில்லா*

(கண் இருக்கும் பொழுது பார்வை தெரியாது)

169. *கண்ணில் தட்டேன்டது பிரீயோடெ போயி*

(கண்ணில் பட வேண்டியது புருவத்தோடு போய்விட்டது)

170. *கண்ணிலு குத்தியிட்டு கண்ணீரின்டெ காரணம் சோதிக்குன்னது போலே*

(கண்ணில் குத்திவிட்டு கண்ணீரினுடைய காரணத்தைக் கேட்பது போல)

171. *கண்ணுண்டாயால் போறா காணனம்*

(கண்கள் இருந்தால் பத்தாது பார்க்க வேண்டும்)

172. *கணபதிக்கு வெச்சது காக்க கொண்டு போயி*

(கணபதிக்கு வைத்தது காக்காய் எடுத்து சென்றுவிட்டது)

173. *கத்தன வீட்டிலு ஊருண கல்கோலு லாபம்*

(எரிந்து கொண்டிருக்கின்ற வீட்டிலிருந்து எடுக்கின்ற குச்சிகள் லாபம்)

174. *கதிரின்மேல் கொண்டு வளமிட்டிட்டு காரியமில்லா*

(நெற்கதிரின் மீது வளம் வைத்தால் ஒரு பயனுமில்லை)

175. *கர்க்கடக சேனா கட்டிட்டெங்கிலும் திண்ணனம்*

(ஆடி மாத சேனைக்கிழங்கை திருடியாவது சாப்பிட. வேண்டும்)

176. *கர்க்கடக வெயிலு கள்ளனும் கொள்ளில்லா*

(ஆடி மாத வெயிலின் போது திருடனும் வெளியில் இறங்கமாட்டான்)

177. *கர்க்கடகத்திலு சத்த ப்ரேதம் போலே*

(ஆடி மாதத்தில் இறந்த சடலத்தைப் போல)

178. *கர்க்கடகத்திலு துர்கடம்*

(ஆடி மாதத்தில் துன்பம்)

179. *கரயுண்ண குஞ்ஞினெ பாலுள்ளு*

(அழுகின்ற குழந்தைக்குத்தான் பால் கிடைக்கும்)

180. *கருப்பு தோட்டத்தில் ஆன கேரியது போலே*

(கரும்புத் தோட்டத்தில் யானை ஏறினது போல)

181. *கல்யாண பந்தலிலு சூலு ஒலிச்சு வெக்கண்டா*

(கல்யாணப் பந்தலில் சீமாறு மறைத்து வைக்க வேண்டாம்)

182. *கல்லின்டெ மேலே காற்றடிச்ச போலே*

(கல்லின் மீது காற்றடித்தது போல)

183. *கள்ளன் கட்டிட்டு மெக்கிட்டு கேருகா*

(திருடன் திருடிவிட்டு நம் மீது ஏறுவது)

184. *கள்ளன்டெ கையில் தாக்கோலு கிட்டிய போலே*

(திருடனுடைய கையில் சாவி கிடைத்தது போல)

185. *காக்க இருன்னதும் பனம்பழம் வீணு*

(காக்காய் உட்கார்ந்ததும் பனம்பழம் விழுந்துவிட்டது)

186. *காக்க கூட்டிலு கல்லெரியருது*

(காக்காவின் கூட்டில் கல் எரிதல் கூடாது)

187. *காக்கக் கூட்டிலு கல்லிட்ட போலே*

(காக்காவின் கூட்டில் கல்லினை போட்டது போல)

188. *காக்க தின்னுன்னது கோழிக்கு கண்டுகூடா*

(காக்காய் சாப்பிடுவது கோழிக்கு பார்க்கப் பிடிக்காது)

189. *காக்க கண்டறியும் கொக்கு கொண்டறியும்*

(காக்காய் பார்த்து புரிந்து கொள்ளும் கொக்கு அடிவாங்கி தெரிந்து கொள்ளும்

190. *காச்ச மரமே கல்லேரு கொள்ளு*

(காய்த்த மரத்துக்குத் தான் கல்லடி கிடைக்கும்)

191. *காசினெ மோஹிச்சு காசிக்கு போய போலே*

(பணத்திற்கு ஆசைப்பட்டு காசிக்கு போனது போல)

192. *காடாறு மாசம் வீடாறு மாசம்*

(காடு ஆறு மாதம் வீடு ஆறு மாதம்)

193. *காடியாயாலும் மூடிக் குடிக்கணம்*

(கஞ்சியாக இருந்தாலும் மூடிக் குடிக்க வேண்டும்)

194. *காணான் போகுன்ன பூரத்தினு எந்தினு கேட்டறியனு*

(பார்க்கப் போகின்ற பூரவிழாவினை எதற்கு கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்)

195. *கார்த்திகப் பட்டு கனகப்பட்டு*

(கார்த்திகை நட்சத்திரத்தில் முளைக்கக்கூடிய நெற்பயிர்களிலுள்ள பூக்கள் நல்ல பூக்கள்)

196. *கார கோலு செதலு புடிச்ச போலே*

(சிமெண்ட் குச்சிகள் சிதல் பிடித்தது போல)

197. *காரியம் காணான் கழுத காலும் பிடிக்கணம்*

(காரியங்கள் நடக்க வேண்டுமெனில் கழுதையினுடைய கால்களையும் பிடிக்க வேண்டும்)

198. *காலத்திநொத்து கோலம் கெட்டணம்*

(காலத்திற்கு ஏற்றாற் போன்று நாமும் மாற வேண்டும்)

199. *காலனுமுண்டோ காலக்கேடு*

(எமனுக்கும் இருக்கிறது காலத்தினுடைய தீமை)

200. *காலிநெ சுற்றிய பாம்பு கடிக்காதே விடில்லா*

(காலைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் விடாது)

201. *காள பெற்றென்னு கேட்டு கயரெடுக்குன்னது போலே*

(எருது பிரசவித்தது எனக் கேட்டு கயிறினை எடுப்பது போல)

202. *காள வாலு பொக்குன்னது போல*

(காளை வாலினை தூக்குவது போல)

203. *காற்றுள்ளப்போ பாற்றனம்*

(காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்)

204. *கானம் விற்றெங்கிலும் ஓணம் உண்ணனம்*

(காடுகளை விற்றாவது ஓண விழாவினைக் கொண்டாடி சாப்பிட வேண்டும்)

205. *கிட்டாத்த முந்திரிங்ஙா புளிக்கும்*

(கிடைக்காத்த திராட்சை புளிப்பாக இருக்கும்)

206. *கிட்டியால் ஊட்டி இல்லெங்கில் சட்டி*

(கிடைத்தால் ஊட்டி இல்லாவிட்டால் சட்டி)

207. *கிடையிலெ வெள்ளமில்லா போடொக்க வலிய போடு*

(அணைக்கட்டில் நீரில்லை ஒட்டைகளெல்லாம் பெரிய ஒட்டை)

208. *குடிக்குன்ன கஞ்ஞியிலு பூழிவாரியிடண்டா*

(குடிக்கின்ற கஞ்சியில் தூசி வாரிப் போட வேண்டாம்)

209. *குத்துன ஓலக்கயிட்டிட்டு குதிரகளி காணாம் போய போலே*

(குத்துகின்ற உலக்கையினைப் போட்டுவிட்டு குதிரை விளையாட்டை பார்க்கப் போனது போல)

210. *குந்தம் போயால் குடத்திலும் தப்பணம்*

(வேல் காணாமல் போய்விட்டால் குடத்திலும் பார்க்க வேண்டும்)

211. *குந்தம் மிழுங்கிய போலெ நிக்கனு*

(வேல் விழுங்கியது போன்று நிக்கற)

212. *கும்பத்திலு கொடமுருட்டும்*

(மாசி மாதத்தில் குடம் உருண்டு விடும்)

213. *கும்பத்திலு மழபெய்தா குப்பயிலும் நெல்லு*

(மாசி மாதத்தில் மழை பொழிந்து விட்டால் குப்பயிலும் கூட நெல்லிருக்கும்)

214. *குருக்கண்ட கண்ணு எப்பழும் கோழிக்கூட்டிலா*

(குள்ளநரியின் கண்கள் எப்பொழுதும் கோழிக் கூட்டில்தான்)

215. *குருடன் நாட்டில் கோங்கண்ணன் ராஜாவு*

(குருடாக இருப்பவனுடைய ஊரில் மாருகண்ணுடன் இருப்பவன் ராஜாவாம்)

216. *குரைக்கும் பட்டி கடிக்கில்லா*

(குரைக்கின்ற நாய் கடிக்காது)

217. *குளத்திலெ மீனினு கடலின்டெ கதயரியுமோ?*

(குளத்திலுள்ள மீனிற்கு கடலிலுள்ள கதையைப் பற்றித் தெரியுமா?)

218. *குளத்தின்டெடுத்து சோதிச்சிட்டானோ குளிக்குன்னது*

(குளத்தினிடம் கேட்டுவிட்டா குளிப்பது)

219. *குளிக்காதே ஈரம் சுமக்குன்னது போலே*

(குளிக்காமல் நனைந்து கொண்டிருப்பது போல)

220. *குளிப்பிச்சு குளிப்பிச்சு குஞ்ஞில்லாதாயி*

(குளிக்கவைத்து குளிக்கவைத்து குழந்தையில்லாமல் ஆயிற்று)

221. *குனிஞ்ஞு கயறி ஞெளிஞ்ஞிறங்ஙுன்னது போலே*

(குனிந்து ஏறி நெளிந்து இறங்குவது போல)

222. *குன்னின்டெ மேலே குரு*

(கூனின் மீது மற்றொரு புண்)

223. *கூட்டு பிரி குடும்பத்தினு ஆகா*

(இரு புருவங்களின் முடி ஒட்டியிருப்பின் குடும்பத்திற்கு நல்லதல்ல)

224. *கூட நடன்னு குழியில் தள்ளுக*

(ஒன்றாக நடந்து குழியில் தள்ளிவிடுவது)

225. *கூலிக்கு மாறடிக்குக*

(கூலிக்கு வேலை செய்வது)

226. *கெடயானெங்கில் வலிய கெடா*

*கெடயில் ஓட்டும் வெள்ளமில்லா*

(அணைக்கட்டு பெரியதாக இருக்கும்

கட்டுல கொஞ்சம் கூட தண்ணீர் இருக்காது)

227. *கெடன்னு நெரங்ஙன அம்மாயி அம்மயிக்கு இருன்னு நெரங்ஙன மருமகளு*

(படுத்து நகர்ந்து கொண்டிருக்கின்ற மாமியாவிற்கு உட்கார்ந்து நகர்ந்து கொண்டிருக்கின்ற மருமகள்)

228. *கெடாராகும்போ வெளக்கு ஆளிக்கத்தும்*

(கெட்டுவிடும் போது விளக்கு நன்றாக எரியும்)

229. *கேட்டி விட்டிட்டு ஏணி வலிக்குக*

(ஏற்றி விட்டுவிட்டு ஏணியை இழுப்பது)

230. *கை நனயாதெ மீன் பிடிக்குன்னது போலே*

(கை நனையாமல் மீன் பிடிப்பது போல)

231. *கைச்சிட்டு துப்பானும் வய்யா*
*மதுரிச்சிட்டு இறக்கானும் வய்யா*

(கசப்பாக இருப்பதால் துப்பவும் முடியவில்லை
இனிப்பாக இருப்பதால் இறக்கவும் முடியவில்லை)

232. *கைப்ப குத்தியா கும்பிளைங்ஙா முளைக்குமோ?*

(பாகற்காய் விதைத்தால் பூசணிக்காய் முளைக்குமா?)

233. *கையூக்குள்ளவன் காரியக்காரன்*

(திறமையாக இருப்பவன் காரியக்காரனாக இருப்பான்)

234. *கொக்கினு வெச்சது கொளக்கோழிக்கு பட்டு*

(கொக்கிற்கு வைத்தது குளக் கோழிக்குப் பட்டுவிட்டது)

235. *கொச்சி கண்டவனு அச்சி வேண்டா*
*கொல்லம் கண்டவனு இல்லம் வேண்டா*
*அம்பலப்புழ வேல கண்டவனு அம்மயும் வேண்டா*

(கொச்சி பார்த்தவனுக்கு மனைவி தேவையில்லை
கொல்லம் பார்த்தவனுக்கு வீடு தேவையில்லை
அம்பலப்புழை விழாவினைப் பார்த்தவனுக்கு அம்மாவும் தேவையில்லை)

236. *கொச்சு பாம்பாயாலும் வலிய வடி கொண்டடிக்கணம்*

(சிறிய பாம்பாக இருந்தாலும் பெரிய தடியினை வைத்து அடிக்க வேண்டும்)

237. *கொடுத்தா அப்பன் கொடுத்தில்லெங்கில் சப்பன்*

(கொடுத்தா அப்பன் கொடுக்காவிட்டால் குப்பன்)

238. *கொத்திய பாம்பினெ கொண்டு விஷம் இறக்கணம்*

(கொத்தின பாம்பினை வைத்து நஞ்சு எடுக்க வேண்டும்)

239. *கொதிச்சது கிட்டில்லா விதிச்சதே கிட்டூ*

(ஆசைப்பட்டது கிடைக்காது விதித்தது தான் கிடைக்கும்)

240. *கொல்லக் குடியில் சூஜி வைக்கல்லே மோளே*

(கொல்லன் தெருவில் ஊசி வைக்காதே மகளே)

241. *கொன்னால் பாவம் தின்னால் தீரும்*

(கொன்ற பாவம் சாப்பிட்டால் தீர்ந்து விடும்)

242. *கோரிய கிணற்றிலே வெள்ளமுறு*

(இரைக்கும் தோறும் ஊறும் கிணறு)

243. *கோரிய கைலு எறயத்து*

(சாப்பாடு எடுத்த கரண்டி மேற்கூரையில்)

244. *கோழி கஞ்சாவடிச்ச போலே*

(கோழி சாராயம் குடித்தது போல)

245. *கோழி சவுட்டி குஞ்ஞு சாகுமோ?*

(கோழி மிதித்து குஞ்சு சாகுமா?)

246. *ஞண்டு கொழுத்தால் குண்டில் கிடக்குமோ?*

(நன்டு குண்டாகிவிட்டால் குன்றில் கிடக்குமா?)

247. *ஞண்டு போயால் எவிடம் வரெ போகும்*

(நண்டு போனால் எவ்விடம் வரை போகும்)

248. *ஞான் பிடிச்ச முயலினு மூணு காலு*

(நான் பிடித்த முயலிற்கு மூன்று கால்கள்)

249. *ஞானே ராஜா ஞானே மந்திரி*

(நானே ராஜா நானே மந்திரி)

250. *சக்க முறிக்குன்னிடத்தே ஈச்ச கூடு*

(பலாப்பழம் அறுக்கும் இடத்தில் ஈ நிறைந்து விடும்)

251. *சக்கயெ சூழ்ன்னு நோக்குன்னது போலே*

(பலாப்பழத்தை தோண்டிப் பார்ப்பது போல)

252. *சக்கிக் கொத்தொரு சங்கரன்*
*சக்கைக் கொத்தொரு பிச்சாத்தி*

(பெண்ணிற்கு ஏற்ற ஆண்
பலாப்பழத்திற்கு ஏற்ற கத்தி)

253. *சகிரியில்லெங்கில் கயருண்டாக்கான் பற்றுமோ?*

(தேங்காய் நார் இல்லாவிட்டால் கயிறு திரிக்க முடியுமா?)

254. *சட்டியும் கலவும் ஆகும்போ*

*தட்டும் முட்டியும் இரிக்கும்*

(சட்டியும் யானையும் ஆகும் போது

தட்டவும் முட்டவும் செய்யும்)

255. *சத்த குஞ்ஞின்றெ ஜாதகம் நோக்கீட்டெந்து காரியம்*

(செத்த குழந்தையின் ஜாதகம் பார்த்து என்ன செய்வது)

256. *சத்த சவமும் கெடக்கில்லா*

*வெச்ச சோறும் பாக்கிவரில்லா*

(செத்த பிணமும் இருக்காது

ஆக்கிய சோறும் மிச்சம் வராது)

257. *சத்தவன்றெ நாளு நோக்கீட்டு எந்து செய்யான்*

(இறந்தவனுடைய நட்சத்திரம் பார்த்து என்ன செய்வது)

258. *சத்தவன்றெ வீட்டிலு மரிச்சவன் போயபோலே*

(இறந்தவனுடைய வீட்டில் இறந்தவன் போனது போல)

259. *சத்து கெடன்னாலும் சமஞ்ஞு கெடக்கணம்*

(செத்துப் படுத்திருந்தாலும் அலங்காரத்துடன் படுக்க வேண்டும்)

260. *சத்ய மறன்னாலும் பட்டினி மறக்கில்லா*

(விருந்து உணவினை மறந்தாலும் பட்டினியை மறக்க முடியாது)

261. *சதயம் நாளு சதஞ்ஞு சதஞ்ஞு கிடக்கும்*

(சதயம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் சதைந்து சதைந்து இருப்பார்கள்)

262. *சம்பத்து காலத்து தைப்பத்து வெச்சால்*

*ஆபத்து காலத்து காப்பத்து திண்ணாம்*

(செல்வச் செழிப்புடன் இருக்கின்ற காலத்தில் பத்து செடிகளை நட்டு வைத்தால் வறுமையில் இருக்கின்ற காலத்தில் அதனுடைய பகுதியையாவது சாப்பிடலாம்)

263. *சவத்திநெக் குத்தி பழி ஏல்க்கருது*

(இறந்த சடலத்தினைக் குத்தி பழி ஏற்கக் கூடாது)

264. *சவுட்டியால் கடிக்காத்த பாம்புண்டோ*

(மிதித்தால் கடிக்காத்த பாம்பு இருக்கிறதா)

265. *சளியில் கிடன்னாலும் தங்கம் தங்கம் தந்நெ*

(சேற்றில் கிடந்தாலும் தங்கம் தங்கம் தான்)

266. *சனியாழ்ச்சா சவத்திலும் கத்தி வெக்கருது*

(சனிக்கிழமை இறந்த சடலத்தின் மீது கத்தி வைத்தல் கூடாது)

267. *சாக்குடுத்தி போயவடெ பரம்புடுத்தி நிக்கனு*

(சாக்கினை உடுத்து சென்ற இடத்தில் பாயினை உடுத்தி நிற்கிறாள்)

268. *ஜாதியில் உள்ளது தூத்தால் போகுமோ?*

(சாதியில் இருப்பது கூட்டினால் போகுமா?)

269. *சிங்ஙத்தில் சீஞ்ஞிரிக்கும்*

(ஆவணி மாதத்தில் மழை சிறியதாக பெய்து கொண்டேயிருக்கும்)

270. *சித்திரப்பன் தெருவோடும்*

(சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் தெருத் தெருவாக ஓடுவார்கள்)

271. *சிலம்பிட்ட பாணன் நிலத்து நிக்கில்லா*

(சிலம்பணிந்த பாணன் நிலத்தில் நிக்கமாட்டான்)

272. *சீறக் கறி சிங்கார கறி இங்கிடு கொண்டா*
*கோழிக்கறி கொள்ளிக்கறி மருமகனு கொண்டு கொடு*

(கீரைக் குழம்பு நல்ல குழம்பு இந்தப் பக்கம் கொண்டு வா
கோழிக்குழம்பு கிழங்குக் குழம்பு மருமகனுக்குக் கொண்டு கொடு)

273. *சுட்டயிலே சீலம் சுடலவரே*

(தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்)

274. *சுடுகாட்டில் போய சவம் திரிச்சு வருமோ?*

(சுடுகாட்டிற்குச் சென்ற சடலம் திரும்ப வருமா?)

275. *சுண்டங்ஙா கொடுத்து வழுதனங்ஙா வாங்ஙிக்கல்லே*

(சுண்டைக்காய் குடுத்து கத்தரிக்காய் வாங்காதே)

276. *சுரத்தும்போ கரன்னாலெ பாலு கிட்டூ*

(சுரந்து வரும் போது கரந்தால் தான் பால் கிடைக்கும்)

277. *சூஜி குத்தான் இடங்கொடுத்தா தும்ப கடத்துன்னது போலே*

(ஊசி வைத்து எடுக்க வேண்டியதற்கு இடம் கொடுத்தால் அதன் இறுதி பகுதியினையும் நுளைப்பது போல)

278. *சூஜி கொண்டு எடுக்கேண்டது தும்ப கொண்டு எடுக்கருது*

(ஊசி வைத்து எடுக்க வேண்டியது அதன் இறுதி பகுதியினை வைத்து எடுத்தல் கூடாது)

279. *செம்மானம் கண்டால் அம்மானத்து மழயில்லா*

(சிகப்பு நிறமாக வானம் இருந்தால் அந்த வானத்திலிருந்து மழை பெய்யாது)

280. *செம்மீன் சாடியால் முட்டோளம் பின்னயும் சாடியால் சட்டியோளம்*

(செம்மீன் சாடினால் முட்டுங்கால்வரை பிறகும் சாடினால் சட்டியினுள் வரை)

281. *செவ்வாய்ச்சா வெட்டிய குற்றி அவைக்கில்லா*

(செவ்வாய் கிழமை வெட்டின குற்றி கிளைவிடாது)

282. *செளியில் சவுட்டியால் நீளத் தெரிக்கும்*

(சேற்றில் மிதித்தால் நீளமாகத் தெரிக்கும்)

283. *செறம புத்தி பெடனீலு*

(செறுமரின் புத்தியானது பொடனீல)

284. *சேகு பெரீது பாலக்காடு போய போலெ*

(சேகுபெரீது என்பவர் பாலக்காடு போனது போல)

285. *சேரயெ தின்னுன்ன நாட்டில் சென்னால் நடுத்துண்டம் திண்ணனம்*

(நாகபாம்பினை சாப்பிடுகின்ற ஊரிற்குச் சென்றால் நடுத்துண்டாவது சாப்பிட வேண்டும்)

286. *சொந்தம் காரியம் சிந்தாபாத்*

(சொந்தம் காரியம் சிந்தாபாத்)

287. *சொர்ணசூஜி என்னு கருதி கண்ணில் ஆரெங்கிலும் குத்துமோ?*

(தங்க ஊசி என்று நினைத்து கண்ணில் யாராவது குத்துவார்களா?)

288. *சொரம் நன்னாயிரிக்கும்போ பாட்டு நிர்த்துக.*

(குரல் நன்றாக இருக்கும் போது பாட்டினை நிறுத்திவிட வேண்டும்)

289. *சோதி நாளு சோற்றினு பஞ்சமில்லா*

(சோதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களின் வீட்டில் சோற்றிற்கு பஞ்சம் ஏற்படாது)

290. *தட்டிப்பறிச்ச முதலு பொட்டித் தெரிச்சு போகும்.*

(நேர்வழியில் அல்லாமல் கிடைத்த பொருட்கள் பயனின்றி போய்விடும்)

291. *தடவானாளுண்டெங்கில் தளர்ச்சயுமுண்டாகும்.*

(தடவுவதற்கு ஆட்கள் இருந்தால் சோர்வும் ஏற்படும்)

292. *தமாச பரஞ்ஞு புண்ணில் குத்துன்னது போலே*

(நகைச்சுவை கூறி புண்களில் குத்துவது போல)

293. *தல மறன்னு எண்ண தேய்க்கருது*

(தலை மறந்து எண்ணெய் தேய்க்கக்கூடாது)

294. *தலமுடியில்லாத்தவர்க்கு சீப்பெந்தினு*

(தலைமுடியில்லாமல் இருப்பவர்களுக்கு சீப்பு எதற்கு)

295. *தலயிரிக்கும்போ வாலாடண்டா*

(தலையிருக்கும் போது வால் ஆடக்கூடாது)

296. *தலயில் வெச்சா பேனரிக்கும*
*தரயில் வெச்சா உரும்பரிக்கும்*

(தலையில் வைத்தால் பேன் அரித்துவிடும்
தரையில் வைத்தால் எறும்பு அரித்துவிடும்)

297. *தலயெ சுற்றி வாயிலிடருது*

(தலையினைச் சுற்றி வாயில் போடக்கூடாது)

298. *தள்ளு கொள்ளான் செண்டா*

*காசு வாங்நான் மாறாரு*

(அடி வாங்குவது செண்டை

பணம் வாங்குவது மாறாரு)

299. *தன்றெ மூக்கு முறிஞ்ஞாலும்*

*ஆரான்றெ சகுனம் முடக்கணம்*

(தன்னுடைய மூக்கில் காயம் ஏற்பட்டாலும்

பிறருடைய சகுனத்தை முடக்குதல் வேண்டும்)

300. *தனிக்கு பற்றாத்த கலம் உடஞ்ஞாலெந்து? இருன்னாலெந்து?*

(தனக்கு பயன்படாத பானை உடைந்தால் என்ன? இருந்தால் என்ன?

301. *தன்னத்தானறியாத்தான் பின்னெத்தானறியும்*

(தனியாக ஒன்றும் தெரியாதவன் பிறகு தெரிந்து கொள்வான்)

302. *தன்னைப் போலே தன்னெ தன்றெ அயல்காரனெயும் ஸ்நேகிக்குக*

(தன்னைப் போன்று தன்னுடைய பக்கத்தில் இருக்கக் கூடியவர்களிடமும் அன்பாக இருக்க வேண்டும்)

303. *தாங்நான் ஆளுண்டெங்கில் தளர்ச்சயுமுண்டாகும்.*

(தாங்குவதற்கு ஆட்கள் இருந்தால் சோர்வும் ஏற்படும்)

304. *தாளத்தினொத்து துள்ளண்டா*

(தாளத்திற்கு ஏற்ப துள்ளுதல் கூடாது)

305. *தான் நன்னாயிட்டு மற்றுள்ளவரே நன்னாக்கியா மதி*

(தான் நன்றான பிறகு பிறரை நன்றாக்கினால் போதும்)

306. *தான் பாதி தம்புரான் பாதி*

(தான் பகுதி கடவுள் பகுதி)

307. *தான இடத்தெ வெள்ளம் நில்கூ*

(தாழ்ந்த இடத்தில் தான் தண்ணீர் இருக்கும்)

308. *தானும் തിന്നില്ല ധർമവും ചെയ്യില്ല*

(தானும் சாப்பிடமாட்டார் பிறருக்கு தருமம் செய்யவும் மாட்டான்)

309. *താനേ വീണു താൻതന്നേ എണീക്കണം*

(நானே விழுந்து நானேதான் எழுந்திருக்க வேண்டும்)

310. *തിങ്കൾ നെടുനാളു*

(திங்கட்கிழமை நீண்டநாள்)

311. *തീയിൽ കരിഞ്ഞതു വെയിലത്തു വാടുമോ?*

(தீயினில் கறிந்தது வெயிலில் வாடி விடுமா?)

312. *തീയില്ലാതെ പുകയില്ല*

(தீயில்லாமல் புகை வராது)

313. *ദുഷ്ടന്മാരെ കണ്ടാൽ ദൂരേ വിലകണം*

(துஷ்டரைப் பார்த்தால் தூர விலகிட வேண்டும்)

314. *തുടക്കം നന്നായാൽ ഒടുക്കവും നന്നായിരിക്കും*

(தொடக்கம் நன்றாக இருந்தால் இறுதியும் நன்றாக இருக்கும்)

315. *തുമ്പച്ചെടിയിലു തൂങ്ങിച്ചാകാൻ പോണോ*

(தும்பைச் செடியில் தொங்கிச் சாகப் போறியா?)

316. *തുലാം പത്തു കഴിഞ്ഞാൽ പ്ലാപ്പൊത്തിൽ ഇരിക്കാം*

(ஐப்பசி மாதம் பத்து நாட்கள் முடிந்து விட்டால் பலாமரப் பொந்தில் இருக்க முடியும்)

317. *തൂണു ചാരിയിരുന്നവൻ പെണ്ണുങ്കൊണ്ടു പോയി*

(வீட்டின் தூணினை சாரினின்றவன் பெண்ணினையும் கொண்டு சென்றுவிட்டான்)

318. *തൂറാത്തവൻ തൂറിയാൽ തീട്ടംകൊണ്ടു ആറാട്ടു*

(மலங்கழிக்காத்தவன் மலங்கழித்தால் மலத்தைக் கொண்டு நீராட்டு நடத்துவர்)

319. *தூரியில்லெங்கில் தூரியில்லா தூரியில்லா தூரான் துடங்ஙியால் பத்துபர கண்டம் நிறயோளம் தூரும்*

(பேலவில்லை என்றால் பேலவில்லை பேலவில்லை. பேலத் தொடங்கிவிட்டால் பத்து பறை வயல்கள் நிறையும் வரை பேலுவார்)

320. *தூரேயுள்ள பந்துவினேக்கால் அடுத்துள்ள சத்ரு நல்லது*

(தூரத்தில் இருக்கின்ற சொந்தக்காரனைவிட பக்கத்தில் இருக்கின்ற எதிரியே நல்லது)

321. *தெய்வம் தன்னாலும் சனியன் தின்னான் விடில்லா*

(சிவன் தந்தாலும் சனியன் சாப்பிட விடமாட்டார்)

322. *தெங்ஙு சாரினின்னவன் பெண்ணுங் கொண்டு போயி*

(தென்னை மரத்தில் சாய்ந்து நின்றவன் பெண்ணினையும் கொண்டு சென்றுவிட்டான்)

323. *தெங்ஙிலு தேளு குத்தியால் கரும்பனைக்கானோ ஓதம்*

(தென்னை மரத்தில் தேள் குத்தினால் கருமையாக இருக்கின்ற பனைமரத்திற்கா வேதனை)

324. *தேடிய வள்ளி காலில் சுற்றி*

(தேடின கொடி காலில் சுற்றிவிட்டது)

325. *தேளினு வாலில் விஷம் தேவிடிசிக்கு உடலாகெ விஷம்*

(தேளிற்கு வாலில் நஞ்சு தேவடியாளுக்கு உடம்பு முழுவதும் நஞ்சு)

326. *தேளினெ பேடிச்சோடியவன் பாம்பின்றெ வாயில்*

(தேளினை பயந்தோடியவன் பாம்பின் வாயில்)

327. *தேனொளிச்சு வளர்த்தியாலும் காஞ்ஞிரம் கய்க்கேயுள்ளு*

(தேன் ஊற்றி வளர்த்தினாலும் காஞ்ஞிரம் என்ற மரம் கசப்பாகத் தான் இருக்கும்)

328. *தொட்டதினும் பிடிச்சதினும் குற்றம்*

(தொடுவதற்கும் பிடிப்பதற்கும் குறைகள்)

329. *தொட்டாவாடி நட்டு வளர்த்தனோ?*

(தொட்டாவாடிச் செடி நட்டு வளர்த்த வேண்டுமா?)

330. *தொடக்கம் நன்னாயால் ஒடுக்கவும் நன்னாயிரிக்கும்*

(துவக்கம் நன்றாக இருந்தால் இறுதியும் நன்றாக இருக்கும்)

331. *தோட்டத்திலு பழமிருக்கெ தூரே போகுன்னதெந்தினு*

(தோட்டத்தில் பழம் இருக்கும் போது தூரத்தில் செல்வது எதற்காக)

332. *தோளத்திருன்னு செவிகடிக்கருது*

(தோளின் மீதிருந்து காதுகளைக் கடிக்கக்கூடாது)

333. *நடக்கான் மடிச்சு கிடக்கயில் தூரியால் கிடக்கயும் கொண்டு பொழய்க்கு போய கச்சோடம்*

(நடப்பதற்கு சோர்வு காண்பித்து மெத்தையில் பேண்டதால் மெத்தையினையும் எடுத்துக்கொண்டு ஆற்றிற்கு சென்ற கதையாப் போச்சு)

334. *நடக்குன்னதினெ விட்டு பறக்குன்னதினெ பிடிக்கருது*

(நடந்து கொண்டிருப்பதை விட்டுவிட்டு பறந்து செல்வதைப் பிடிக்கக்கூடாது)

335. *நடுக்கடலில் சென்னாலும் நக்கிக் குடிக்குன்ன நாய் நக்கியே குடிக்கூ*

(நடுக்கடலில் சென்றாலும் நக்கிக் குடிக்கின்ற நாய் நக்கித்தான் குடிக்கும்)

336. *நம்மளு நிக்கேண்டிடத்து நம்மளு நில்க்கணம் தாயினெ நிர்த்தேண்டிடத்து நாயினெ நிர்த்தனம்*

(நாம் உட்கார வேண்டிய இடத்தில் நாம் உட்கார வேண்டும் நாயினை உட்கார வைக்க வேண்டிய இடத்தில் நாயினை உட்கார வைக்க வேண்டும்)

337. *நம்மளொன்னு விஜாரிக்கும்போ தெய்வம் ஒன்னு விஜாரிக்கும்*

(நாம் ஒன்று நினைக்கும் போது கடவுள் ஒன்று நினைப்பார்)

338. *நனயாதெங்ஙன ஈரம் சுமக்கணு*

(நனையாமல் எப்படி ஈரம் சுமப்பது)

339. *நாட்டுகாருடெ வாய்க்கு வேலி கெட்டான் பட்டில்லா*

(ஊரில் இருப்பவர்களின் வாயிற்கு வேலியினைக் கட்ட முடியாது)

340. *நாடு மறன்னாலும் வீடு மறக்கருது*

(ஊரினை மறந்தாலும் வீடினை மறக்கக்கூடாது)

341. *நாயய்கரியுமோ நாயருடெ வேதனா*

(நாய்க்குத் தெரியுமா நாயர் சாதியிலுள்ளவரின் துன்பம்)

342. *நாயய்க்கு பொதியாத்த தேங்ஙா கிட்டியிட்டெந்து காரியம்*

(நாய்க்கு பொதிக்காத்த தேங்காய் கிடைத்து என்ன பயன்)

343. *நாயய்க்கு மீச வளர்ண்ணால் அம்பட்டனெந்து காரியம் அது போலே*

(நாயிற்கு மீசை வளர்ந்தால் நாசுவனுக்கு என்ன பயன் அது போல)

344. *நாயாயி பிறன்னாலும் தரவாட்டில் பிறக்கணம்*

(நாயாக பிறந்தாலும் தரவாட்டு வீட்டில் பிறக்க வேண்டும்)

345. *நாலாமத்தெ பெண்ணு தரவாடு முடிக்கும்*

(நாலாவது பெண் தரவாட்டு வீட்டினை இல்லாமல் செய்துவிடும்)

346. *நாளெ நாளெ நீளெ நீளெ*

(நாளைக்கு நாளைக்கு நீளமாக நீளமாக)

347. *நாலு தல சேரும் நாலு முல சேரில்லா*

(நான்கு தலைகள் சேர்ந்து விடும் நான்கு முலைகள் சேராது)

348. *நிலா வெளிச்சமுண்டென்னு கருதி வெளுக்கு வோளம் கக்கான் பாடில்லா*

(நிலா வெளிச்சம் இருக்கிறது என்று நினைத்து விடியும் வரை திருடக்கூடாது)

349. *நிறகுடம் துளும்பில்லா*

(நிறைந்திருக்கக்கூடிய குடத்திலுள்ள நீர் அசையாது)

350. *நீதிமான் பனபோலே தழைக்கும்*

(உண்மையினை மட்டும் பேசக்கூடியவன் பனமரம் போன்று உயர்ந்து வருவான்)

351. *நீர்க்கோலி கடிச்சால் அத்தாழம் முடங்ஙூம்*

(தண்ணீர் பாம்பு கடித்தால் இரவு நேர உணவு சாப்பிட முடியாது)

352. *நீளத்தில் தள்ளியால் வட்டத்தில் தெரிக்கும்*

(தண்ணீரில் நீளமாக அடித்தால் வட்டமாகத் தெரிந்துவிடும்)

353. *நெஞ்ஞத்து குறிகொண்ட சவமில்லா*

(நெஞ்சில் அடையாளங்களுடன் இறந்த சடலமில்லை)

354. *நெஞ்ஞத்து கொல வாழ நாட்டிய போலே*

(நெஞ்சில் குலையுடன் இருக்கக்கூடிய வாழையினை நட்டது போல)

355. *நோவிச்சால் கடிக்காத்தா பாம்பில்லா*

(துன்பப்படுத்தினால் கடிக்காத்த பாம்பில்லை)

356. *நோவிச்சால் கொத்தாத்த பாம்பில்லா*

(துன்பப்படுத்தினால் கொத்தாமல் இருக்கக்கூடிய பாம்புகளில்லை)

357. *பகலு முழுவனும் வெள்ளம் கோரி ராத்ரி குடம் உடச்சது போலே*

(பகல் முழுவதும் தண்ணீர் எடுத்து இரவில் குடத்தினை உடைத்தது போல)

358. *பஞ்சாங்கம் கீறியால் உதயாஸ்தமனம் முடங்ஙுகுமோ?*

(பஞ்சாங்க புத்தகம் கிழிந்து விட்டால் சூரியன் உதிப்பது இல்லாமல் ஆகிவிடுமா?)

359. *பட்டக் குண்டைக்கு பாரம் வெச்சபோலே*

(பனையோலைகளின் மீது பாரம் வைத்தது போல)

360. *பட்டர்க் கெந்தா படயிலு காரியம்*

(பட்டருக்கு என்ன படையில் காரியம்)

361. *பட்டி சந்தைக்கு போய போலே*

(பெண் நாய் சந்தைக்கு போனது போல)

362. *பட்டி தின்னுகயில்லா பசுவினெக் கொண்டு தீட்டிக்குகயுமில்லா*

(நாய் சாப்பிடவும் செய்யாது மாட்டினை சாப்பிடவும் விடாது)

363. *படெ பேடிச்சு பந்தளத்து சென்னப்போ பந்தம் கொளுத்தி படெ*

(படைக்கு பயந்து பந்தளத்திற்கு சென்றபோது அங்கும் படை தீயாக இருந்தது)

364. *பண்டு பந்தீராண்டு கழிஞ்ஞு தெய்வம் சிக்ஷிக்கும்*

*இப்பழத்த தெய்வம் அப்பழய்க்கப் போழயானு*

(முற்காலத்தில் பனிரெண்டு ஆண்டுகள் முடிந்த பின்னர் கடவுள் தண்டனை கொடுப்பார் ஆனால் இப்பொழுதுள்ள கடவுள் உடனுக்குடன்)

365. *பணம் கொடுத்து மாடு வாங்ஙியால்*

*பவன் கொடுத்து தொழுத்து கெட்டணம்*

(பணம் கொடுத்து மாடு வாங்கினால்

பவன் கொடுத்து தொளுவம் கட்ட வேண்டும்)

366. *பணமில்லெங்கிலும் பத்தாளு வேணம்*

(பணம் இல்லாவிட்டாலும் பத்து ஆட்கள் வேண்டும்)

367. *பணி தீர்ன்னால் படிக்கு புறத்து*

(வேலை முடிந்தால் வாசப்படிக்கு வெளியில்)

368. *பத்தம்மா சமஞ்ஞாலும் பெத்தம்மயாவில்லா*

(பத்து அம்மா இருந்தாலும் பெத்தம்மாவாகாது)

369. *பதினாறாயால் பறயனும் பிடிச்சு கொடுக்கணும்*

(பதினாறு வயது ஆனவுடன் பறையனுக்காவது திருமணம் செய்து கொடுக்க வேண்டும்)

370. *பதுக்கெ பரஞ்ஞாலும் பந்தளத்து கேல்க்காம்*

(மெதுவாகக் கூறினாலும் பந்தளத்தில் கேட்க முடியும்)

371. *பந்தியில் பக்சபேதம் காணிக்கருது*

(பந்தியில் வேறுபாடு காண்பித்தல் கூடாது)

372. *பந்தீராண்டு கழிஞ்ஞாலும் மாணிக்கம் மங்ஙில்லா*

(பனிரெண்டு ஆண்டுகள் முடிந்தாலும் மாணிக்கத்தின் நிறம் மாறாது)

373. *பயரு தின்ன பூரு போலே*

(பயிறு சாப்பிட்ட குண்டி போல)

374. *பயரு தின்ன பர்யம்பரம் போலே*

(பயிறு சாப்பிட்டு வீட்டின் பின்புறமாக இருக்கக்கூடிய இடத்திற்குச் சென்றது போல)

375. *பயரு முளச்சால் பசு தொழுத்திலு கிடக்குவோ?*

(பயிறு முளைத்து விட்டால் மாடு தொழுவில் படுக்குமா?)

376. *பரணி நாளு படிக்காலு பிடுங்ஙும்*

(பரணி நட்சத்திரம் வாசப்படியை பிடுங்கிவிடும்)

377. *பரணீலு குட்டி தரணீலும் கிட்டில்லா*

(பரணி நாளில் பிறந்த குழந்தை இவ்வுலகத்தில் கிடைக்காது)

378. *பழங்கஞ்ஞி குடிச்சாலும் பத்ராஸ் விடில்லா*

(பழைய சோறு சாப்பிட்டாலும் பெருமை பேசுவதை விடமாட்டார்கள்)

379. *பழஞ்சொல்லில் பதிரில்லா*

(பழமொழியில் பதர்களில்லை)

380. *பழம பரஞ்ஞு கொண்டிருன்னால் விசப்பு மாறுமோ?*

(பழமை பேசிக் கொண்டிருந்தால் பசி போய் விடுமா?)

381. *பழுத்த ப்லாவிலா வீழும்போ பச்ச ப்லாவில சிரிக்குன்னது போலே*

(பழுத்த பலாமர இலை விழும் போது பச்சை பலாமர இலை சிரிப்பது போல)

382. *பறயன்டெ முற்றத்து பசு வாழுகயில்லா*

(பறையன் சாதியில் உள்ளவர்களின் வீட்டு முற்றத்தில் பசு வாழாது)

383. *பன்னிக்கு பத்தெண்ணம் எந்தினு புலிக்கு ஒண்ணு மதி*

(பன்றிக்கு பத்து குட்டிகள் எதற்கு புலிக்கு ஒரு குட்டி போதும்)

384. *பாம்பானெங்கிலும் பழகியதானு நல்லது*

(பாம்பாக இருந்தாலும் பழமையாக இருப்பதுதான் நல்லது)

385. *பாம்பின்றெ இடையில் தவள பட்ட போலே*

(பாம்பினுடைய வாயில் தவளை விழுந்தது போல)

386. *பாலசாபவும் நாரீசாபவும் இறக்கிக்கூடா*

(குழந்தைகளின் சாபமும் பெண்களின் சாபமும் பெறுதல் கூடாது)

387. *பாலம் கடக்குவோளம் நாராயணா*

*பாலம் கடன்னால் கூராயணா*

(பாலத்தைக் கடந்து செல்லும் வரை நாராயணா

பாலத்தைக் கடந்து சென்று முடிந்துவிட்டால் கூராயணா)

388. *பாலு குடிச்சிட்டு கெடக்கீலு கிடக்காம் பரஞ்சா*

*கள்ளு குடிச்சிட்டு கட்டையிலே கெடக்கூனு*

(பால் குடித்துவிட்டு மெத்தையில் படுக்கச் சொன்னால்

கள் குடித்துவிட்டு விறகு கட்டையில் படுக்கிறான்)

389. *பானனிக்கு ஆய மூதேவி*

(பானனுக்கு ஏற்ற மனைவி)

390. *பிக்ஷய்க்கு வன்னவன் பெண்ணினேம் கொண்டு போயி*

(பிச்சை எடுக்க வந்தவன் பொண்ணையும் கூட்டிச் சென்றுவிட்டான்)

391. *பிச்ச எடுத்த பாதி தானம் செய்து*

(பிச்சை எடுத்தது பகுதி பிறருக்கு கொடுத்தல்)

392. *பிடிச்ச வலிச்சு குப்பாயமிட்டால் வலிச்சு கீறி ஊறேண்டி வரும்*

(பிடித்து இழுத்து சட்டை அணிவித்தால் இழுத்து கிழித்து எடுக்க வேண்டும்)

393. *பிம்பம் போயால் பிரதிபிம்பம் நில்க்குமோ?*

(உருவம் போய்விட்டால் மறுஉருவம் நிற்குமா?)

394. *பிரஸ்னங்ஙளுடெ அடித்தரயானு குடும்ப ஜீவிதம்*

(பிரச்சினையின் அஸ்திவாரம் தான் குடும்ப வாழ்க்கை)

395. *பிரசவிச்சாலல்லே பிரசவ நோவு அறியுல்லூ*

(குழந்தை பெற்றால் தான் அதனுடைய வேதனை புரியும்)

396. *பிள்ள மனசில் கள்ளமில்லா*

(குழந்தையின் மனதில் திருட்டுத்தனம் இருக்காது)

397. *பின்னயும் சங்கரன் தெங்ஙே தன்னெ*

(பிறகும் சங்கரன் தென்னை மரத்தில் ஏறிவிட்டான்)

398. *புகஞ்ஞு கொள்ளி புறத்து*

(புகைந்து கொண்டிருக்கின்ற விறகு வெளியில்)

399. *புட்டினு தேங்ஙாப் பூபோலே*

(குழாப் புட்டிற்கு தேங்காய்ப் பூவினைப் போல)

400. *புத்தனச்சி படிப்புரம் தூத்தபோலே*

(புதுப்பெண் வாசல் பெருக்கினது போல)

401. *புத்தி கெட்ட அப்பனு போதங் கெட்ட மக்களு*

(புத்தி இல்லாத அப்பாவிற்கு உணர்ச்சியில்லாத்த பிள்ளைகள்)

402. *புதுக்கத்தில் அம்மாயி வருத்திட்டும் பொடிச்சிட்டும்*
*பழக்கத்தில் அம்மாயி சுட்டிட்டும் கரிச்சிட்டும்*

(புதுமையில் மாமியார் வறுக்கவும் பொடிக்கவும்
பழமையில் மாமியார் சுடசெய்தும் கரியவைத்தும்)

403. *புதுக்கத்தில் அம்மாயி வருத்திட்டும் பொறிச்சிட்டும்*
*பழக்கத்தில் அம்மாயி சுட்டிட்டும் பொறிச்சிட்டும்*

(புதுமையில் மாமியார் வறுத்தும் பொறியாக்கியும்
பழமையில் மாமியார் சுடவைத்தும் பொறு பொறு என்றாக்கியும்)

404. *புர கத்தும்போ வாழ வெட்டருது*

(வீடு எரிந்து கொண்டிருக்கும் பொழுது வாழை மரம் வெட்டக்கூடாது)

405. *புலி போலே வன்னது எலி போலே போயி*

(புலி போன்று வந்தது எலி போன்று போய்விட்டது)

406. *பூரம் பிறந்த புருஷன்*

(பூர நட்சத்திரத்தில் பிறந்த ஆண்)

407. *பூராடம் ஊரோடும்*

(பூராடம் நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் ஊர் ஊராக அலைந்து கொண்டிருப்பார்கள்)

408. *பெட்டவள்க்கு பிள்ள பாரமில்லா*

(பெற்ற பெண்ணிற்கு குழந்தைகள் கனம் கிடையாது)

409. *பெண் வாக்கு கேட்டவனு பெருவழியில் தன்னெ*

(பெண்களின் சொற்களைக் கேட்டவன் பெருவழியில் தான் நிற்க வேண்டும்)

410. *பெண்ணுங்ஙல்க்கு முலயழகும் முடியழகும் வேணம்*

(பெண்களுக்கு முலை அழகும் முடி அழகும் வேண்டும்

411. *பெண்ணுங்ஙல்க்கு முன்னழகும் பின்னழகும் வேணம்*

(பெண்களுக்கு முன் அழகும் பின் அழகும் வேண்டும்)

412. *பெரும பீத்தக்கலம் வைக்கனது ஓட்டக்கலம்*

(பெருமையடிப்பது பீத்த பானை வைப்பது ஓட்டைப் பானையில்)

413. *பெற்றொனங்ஙிய பெண்ணும் நட்டொனங்ஙிய நாறும் போலே*

(பிரசவித்து வாடிப் போன பெண்ணும் நட்டு வைத்து காய்ந்து போன நாற்றும் போல)

414. *பைய்யத் தின்னா பனயும் தின்னாம்*
*மெல்லத் தின்னா முள்ளும் தின்னாம்*
(மெதுவாக சாப்பிட்டால் பனையையும் சாப்பிடலாம்
மெதுவாக சாப்பிட்டால் முற்களையும் சாப்பிடலாம்)

415. *பொட்டன் சந்தைக்கு போய போலே*

(கண் தெரியாதவன் சந்தைக்கு போனது போல)

416. *பொட்டனெ செட்டி சதிச்சால்*
*செட்டியெ தெய்வம் சதிக்கும்*
(முட்டாளினை செட்டியார் ஏமாற்றினால்
செட்டியாரினை கடவுள் ஏமாற்றிவிடுவார்)

417. *பொதப்பினெக் கொடுத்து கோணாகம் வாங்ஙருது*

(போர்வையினைக் கொடுத்து கோமணத்தை வாங்கக்கூடாது)

418. *பொதியிரிக்கும்போ பிச்சய்க்கு போகருது*

(கையில் பொருட்கள் இருக்கும் போது பிச்சைக்கு போகக்கூடாது)

419. *பொள்ளாச்சி கெடக்கனு பொதப்பு அதினு இவிடெ எந்தினு காலிட்டு கீறுணு*

(பொள்ளாச்சியில் இருக்கின்ற போர்வைக்கு அதற்கு இங்கு எதற்கு கால்கள் போட்டு கிழிக்கிறாய்)

420. *பொன்னின் குடத்தினு பொட்டெந்தினு*
*பொட்டக் குடத்தினு வக்கெந்தினு*

(தங்கக் குடத்திற்கு பொட்டு எதற்கு
ஓட்டைக் குடத்திற்கு வக்கு எதற்கு)

421. *பொன்னு காய்க்கன மரமாயாலும்*
*புரய்க்கு சாஞ்ஞால் வெட்டணம்*

(தங்கம் காய்க்கின்ற மரமாக இருந்தாலும்
வீட்டின் மேல் சாய்ந்தால் வெட்ட வேண்டும்)

422. *போஜனம் செருதானெங்கிலும் வாசனம் வலுதாகனம்*

(சாப்பாடு குறைவாக இருந்தாலும் பாத்திரம் பெரிதாக இருக்க வேண்டும்)

423. *போத்து பிடிச்சு போத்து பிடிச்சு அவசானம் மாப்ள போத்து பிடிச்ச போலயாகுமோ?*

(எருமை பிடித்து எருமை பிடித்து இறுதியில் மாப்பிளை எருமை பிடித்தது போன்றாகிவிடுமா?)

424. *போயால் ஒரு வாக்கு கிட்டியால் ஒரானா*

(போனால் ஒரு வார்த்தை கிடைத்தால் ஒரு யானை)

425. *போரு காலு புன்னு பொன்னு கொடுத்தாலும் கிட்டில்லா*

(கெண்டைக்கால் புண் தங்கம் கொடுத்தாலும் கிடைக்காது)

426. *மக்களே மன துக்கமே நினக்கொரு அச்சனுள்ளது இங்ஙனெ*

(பிள்ளைகளே மனதிலுள்ள துக்கங்களே உனக்கொரு அப்பா இருப்பது இப்படி)

427. *மக்களோடுள்ள ஸ்னேகம் மனசிலிரிக்கணம்*

(பிள்ளைகளின் மீதுள்ள அன்பு மனதில் இருக்க வேண்டும்)

428. *மகரத்தில் மரம் பொளிக்கும்*

(தை மாதத்தில் மரம் உடைந்து விடும்)

429. *மகம் பிறந்ந மங்க*

(மகம் நட்சத்திரத்தில் பிறந்த பெண்)

430. *மகன் சத்திட்டெங்கிலும் மருமகளுடெ துக்கம் காணனம்*

(மகன் இறந்த பிறகாவது மருமகளினுடைய துக்கம் பார்க்க வேண்டும்)

431. *மச்சிப் பசுவினெ தொழுத்து மாற்றி கெட்டியால் பிரசவிக்குமோ?*

(கன்றுகளை ஈன்று எடுக்க முடியாத மாட்டினை தொளுமாற்றிக் கட்டினால் கன்றுகளை ஈன்றுவிடுமா?)

432. *மடியன் ஆடினு கம்பிளி பாரம் போலே*

(சோம்பேறி ஆட்டிற்கு கம்பிளி கனம் போல)

433. *மடியன் மல சுமக்கும்*

(சோம்பேறி மலையினைச் சுமக்க வேண்டும்)

434. *மண்டைலடிச்ச மாடு அலையும் போலே அலைனு*

(தலையில் அடித்த மாடு அலைவதைப் போல அலைகிறாய்)

435. *மண்பிள்ளயாயாலும் தன்பிள்ளயாயிரிக்கணம்*

(மண் குழந்தைகளானாலும் தன் குழந்தைகளாக இருக்க வேண்டும்)

436. *மரத்தினு வேரு பலம் வேணம்*
*மனுஷ்யனு பந்து பலம் வேணம்*

(மரத்திற்கு வேர்கள் பலமாக இருக்க வேண்டும்
மனிதனுக்கு சொந்தக்காரர்கள் பலமாக இருக்க வேண்டும்)

437. *மரம் கோணியால் செத்தி நிவர்த்தாம்*
*மனசு கெட்டால் ஒன்னும் செய்யான் பட்டில்லா*

(மரம் வளைந்தால் செதுக்கி நிமித்திவிடலாம்
மனது கெட்டுவிட்டால் ஒன்றும் செய்ய முடியாது)

438. *மருமகளாயிட்டல்லே அம்மாயியம்மா ஆகுண்ணது*

(மருமகள் ஆனபிறகு தான் அத்தை ஆக முடியும்)

439. *மல குலுங்ஙியாலும் எல குலுங்ஙில்லா*

(மலை ஆடினாலும் இலைகள் ஆடாது)

440. *மலதன்னெ மண்ணாங்கட்டயாகும்போல் மண்ணாங்கட்ட எந்தாகும்*

(மலைகள் மண்கட்டைகள் ஆகும்போது மண்கட்டைகள் என்னாகும்)

441. *மலபோல வன்னது மஞ்ஞுபோலே போயி*

(மலைமாதிரி வந்தது பனிபோன்று நீங்கிவிட்டது)

442. *மலயானெங்கிலு வெட்டித் தெளியிக்கும்*

(மலையாக இருந்தால் வெட்டிக் காண்பித்து விடலாம்)

443. *மழபெய்யுன்னதும் பிள்ளப்பேரும் கண்டவரில்லா*

(மழை எப்பொழுது பொழியும் என்றும் குழந்தை எப்பொழுது பிறக்கும் என்பதும் யாருக்கும் தெரியாது)

444. *மனுசன் கொதிச்சால் நடக்கில்லா*
*தெய்வம் விதிச்சாலே நடக்கூ*
(மனிதன் ஆசைப்பட்டால் நடக்காது
கடவுள் விதித்தால் தான் நடக்கும்)

445. *மாங்ஙா பழுத்தா தானே வீழும்*

(மாங்காய் பழுத்தால் தானாக விழும்)

446. *மானத்தெ மழயும் வயற்றிலெ பிள்ளயும் கண்டவரில்லா*

(வானத்திலிருந்து பொழியும் மழையும் வயிற்றில் இருக்கின்ற குழந்தையினையும் பார்த்தவர்களில்லை)

447. *மிண்டாப் பூச்சா கலமுடய்க்கும்*

(அமைதியாக இருக்கின்ற பூனை பானையினை உடைத்து விடும்)

448. *மிதுனம் தீர்ன்னால் விஷமம் தீர்ண்ணு*

(ஆனி மாதம் முடிந்துவிட்டால் துன்பங்கள் தீர்ந்துவிட்டது)

449. *மீச நரச்சாலும் ஆச நரய்க்குமோ?*

(மீசை நரைத்தாலும் ஆசை இல்லாமலாகிவிடுமா?)

450. *மீன் குஞ்ஞிநெ நீந்தல் படிப்பிக்கணோ?*

(மீன் குஞ்சிற்கு நீச்சல் கத்துக் கொடுக்க வேண்டுமா?)

451. *மீனத்தில் மீன் செளுக்கா எளகில்லா*

(பங்குனி மாதத்தில் மீன் செதில் அசையாது)

452. *மீன மாசத்திலெ இடி மீன் கண்ணிலும் வெட்டும்*

(பங்குனி மாதத்தில் வருகின்ற இடி மீனினுடைய கண்ணிலும் பட்டுவிடும்)

453. *முகம் சந்திரபிம்பம் அகம் பாம்பின் விஷம்*

(முகம் நிலாவின் உருவம் அகம் பாம்பினுடைய நஞ்சு)

454. *முகம் நன்னாவத்ததினு கண்ணாடி உடச்சிட்டு காரியமில்லா*

(முகம் நல்லா இல்லாத்ததுக்குக் கண்ணாடி உடைச்சு காரியமில்லை)

455. *முங்ஙி குளிச்சால் குளிரு விட்டு*

(முங்கி குளித்தால் குளிர் போய் விடும்)

456. *முட்டயிடுண்ண கோழிக்கல்லே முண வேதன அறியூ*

(முட்டை போடுற கோழிக்குத்தான் குண்டி வலி தெரியும்)

457. *முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கெட்டும் சரிச்சிட்டும் கெட்டும்*

(முடியுள்ள பெண் சாய்த்தும் கட்டுவாள் சரித்தும் கட்டுவாள்)

458. *முயலு இளகும்போ நாய் தூரான் போயி*

(முயல் அசையும் போது நாய் மலங்கழிக்கச் சென்றுவிட்டது)

459. *முள்ளெடுக்குன்னது முள்ளு கொண்டு தன்னெ*

(முற்கள் எடுப்பது முற்களினால் தான்)

460. *முருங்ஙயெ ஒடிச்சு வளர்த்தனம்*
மக்களே அடிச்சு வளர்த்தனம்
(முருங்கையை ஒடித்து வளர்க்க வேண்டும்
குழந்தைகளை அடித்து வளர்க்க வேண்டும்)

461. *முற்றத்தெ முல்லய்க்கு மணமில்லா*

(வாசலில் இருக்கின்ற மல்லிகைப் பூவிற்கு மணம் கிடையாது)

462. *மூக்கில்லா ராஜ்யத்து முரிமூக்கன் ராஜாவு*

(மூக்கு இல்லாத நாட்டில் மொண்ண மூக்கன் ராஜாவாம்)

463. *மூத்தது நன்னெங்கில் மூணும் நன்னு*

(மூத்தவர்கள் நன்றாக இருந்தால் மூன்று பேரும் நல்லவர்கள்)

464. *மூரியோடு சோதிச்சிட்டு வேணோ நுகம் வெக்கான்*

(காளையிடம் கேட்டுவிட்டா நுகம் வைப்பது)

465. *மூவர் சேர்ன்னால் முற்றம் தூக்கில்லா*

(மூன்று பேர் சேர்ந்தால் வாசல் கூட்டமாட்டார்கள்)

466. *மேடத்தில் மேடுருகும்*

(சித்திரை மாதத்தில் மேட்டு நிலப்பகுதி உருகிவிடும்)

467. *மேயுன்ன மாட்டினெ நக்குன்ன மாடு கேடு வருத்தும்*

(மேய்ந்து கொண்டிருக்கின்ற மாட்டினை நக்கிக் கொண்டிருக்கின்ற மாடானது மேயவிடாமல் செய்துவிடும்)

468. *யானைக்குத் தடிபாரம் உரும்பினு அரி பாரம்*

(யானைக்கு பெரும் மரம் பாரம் எறும்பிற்கு அரிசி பாரம்)

469. *ராவிலத்தெ மழயும் அந்திக்கத்தெ விருண்ணும் விஸ்வாசிக்கண்டா*

(காலையில் பெய்கின்ற மழையும் இரவில் வருகின்ற விருந்தினரையும் நம்புதல் கூடாது)

470. *ரெண்டு பட்டிக்கு ஒரெல்லு எந்தினு*

(இரண்டு நாய்க்கு ஒரு எலும்பு எதற்கு)

471. *ரெண்டு வஞ்சியில் காலிட்ட போலே*

(இரண்டு படகில் கால்களை வைத்தது போல)

472. *ரேவதி நாளில் அறுபது சீலம்*

(ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு அறுபது குணங்கள் இருக்கும்)

473. *ரோமம் கொழிஞ்ஞாலும் பாரம் குறயில்லா*

(முடி கொழிந்தாலும் கனம் குறையாது)

474. *ரோஹிணி பட்டு களையும் மொளயும் வரும்*

(ரோஹினி நட்சத்திரத்தின் போது களைகளும் அரும்புகளும் வரும்)

475. *வண்ணம் குறஞ்ஞாலும் எண்ணம் குறஞ்ஞிட்டில்லாலோ*

(தடி குறைந்தாலும் எண்ணிக்கை குறையவில்லை)

476. *வயசாயவர்க்கு குட்டிகளுடெ சொபாவம்*

(வயதானவர்களுக்கு குழந்தைகளினுடைய குணம்)

477. *வயறு பிரிஞ்ஞாலும் சட்டி பிரிஞ்ஞிட்டில்லா*

(வயிறு பிரிந்தாலும் சட்டி பிரியவில்லை)

478. *வரானுள்ளது வழியிலு தங்ஙில்லா*

(வரவேண்டியது வழியில் தங்கி நிற்காது)

479. *வல்லம் கெட்டுன அப்பனேக்காலும்*
*வட்டி கெட்டுன அம்மயானு நல்லது*
(பெரிய கூடை பின்னுகின்ற அப்பாவை விட
சிறிய கூடை பின்னுகின்ற அம்மா மேல்)

480. *வலியச்சன் வரும்போல் கொச்சச்சன் படிக்கு புறத்தாய போலே*

(பெரியப்பா வரும்போது சித்தப்பா வீட்டுப்படியின் வெளியில் போனது போல)

481. *வழியம்பலத்தில் வெச்சு பொதியழிக்கருது*

(வழியில் தெரிகின்ற கோயிலுக்கு முன்பு பொதியினை அழிக்கக்கூடாது)

482. *வழியே போய நய்யாவேலி தலையில் வெச்சது போலேயாயி*

(வழியில் போகின்றவரை அழைத்து தலையில் வைத்தது போன்றாகிவிட்டது)

483. *வள்ளிக்கு காய் பாரமல்லா*

(கொடிக்கு காய் பாரமல்ல)

484. *வன்ன வெள்ளம் நின்ன வெள்ளத்தினெக் கொண்டு போயி*

(வந்த தண்ணீர் நின்ற தண்ணீரினை அடித்துச் சென்றுவிட்டது)

485. *வாடிய பூ சூடியாலும் சூடிய பூ சூடருது*

(வாடின பூ சூடினாலும் சூடின பூ சூடக்கூடாது)

486. *வாய் சக்கர கை கொக்கர*

(வாய் சர்க்கரை கை கொக்கரை)

487. *வாயில் தேனும் வாலில் விஷவும் வெச்சிட்டுள்ளது போலே*

(வாயில் தேனும் வாலில் நஞ்சினையும் வைத்தது போல)

488. *வாயில் வன்னது கோதைக்குப் பாட்டு*

(வாயில் வந்தது கோதைக்கு பாட்டு)

489. *வாழ நனய்க்கும் போல் சீறயும் நனயும்*

(வாழை நனைக்கும் போது கீரைச் செடியும் நனையும்)

490. *வாளெடுத்தவனெல்லாம் வெளிச்சப்பாடல்லா*

(வாள் எடுத்தவர்கள் அனைவரும் பூசாரிகள் கிடையாது)

491. *வித்து குணம் பத்து குணம்*

(விதை பத்து விதமான குணங்களைக் கொண்டிருக்கும்)

492. *விதிச்சதே கிட்டூ கொதிச்சது கிட்டூல்லா*

(விதித்தது தான் கிடைக்கும் ஆசைப்பட்டது கிடைக்காது)

493. *வியாதிக்கு மருண்ணுண்டு*

*விதிக்கு மருண்ணுண்டோ?*

(நோய்க்கு மருந்து உள்ளது

விதிக்கு மருந்து இருக்கிறதா?)

494. *விருன்னாணெங்கிலும் மருன்னாணெங்கிலும் மூணு திவசம்*

(விருந்தாக இருந்தாலும் மருந்தாக இருந்தாலும் மூன்று நாட்கள்)

495. *விளிக்காத்த சத்யய்க்கு உண்ணான் வரில்லா*

(அழைக்காத விருந்திற்கு உண்ண வரமாட்டேன்)

496. *விளிச்ச வழி அல்லெங்கில் தெளிச்ச வழி*

(அழைத்த இடத்திற்கு அல்லது போகின்ற இடத்திற்கு விடு)

497. *விற்ற மாற்றினு புல்லில்லா*

(விற்றுப் போன மாட்டிற்கு புற்கள் இல்லை)

498. *வீணிடம் விஷ்ணுலோகம்*

(விழுந்த இடம் விஷ்ணுவின் உலகம்)

499. *வீட்டிலுண்டெங்கில் விருண்ணு சோருண்ணாம்*

(வீட்டில் இருந்தால் விருந்து சாப்பாடு சாப்பிடலாம்)

500. *வீட்டு சோறுண்டெங்கிலெ விருண்ணு சோறுள்ளு*

(வீட்டு சாப்பாடு இருந்தால் தான் விருந்து சாப்பாடு கிடைக்கும்)

501. *வீண மரத்தில் ஓடி கயரும்*

(விழுந்த மரத்தில் ஓடி ஏறுதல்)

502. *வெச்சால் குடுமா செறச்சால் மொட்டா*

(வைத்தால் குடுமி சிரைத்தால் மொட்டை)

503. *வெட்டான் போகுன்ன போத்தினோடு வேதம் ஓதியால் நடக்குமோ?*

(வெட்டப் போகின்ற எருமையிடம் வேதம் ஓதினால் நடக்குமா?

504. *வெடி கேட்ட பந்நி பாயும் போலே*

(வெடி சப்தம் கேட்ட பன்றி பாய்வதைப் போல)

505. *வெண்ண கையில் வெச்சிட்டு நெய்யன்னேஷிக்குன்னதெந்தினு*

(வெண்ணெய் இருக்கும் போது நெய்க்கு அலைவானேன்)

506. *வெப்பின்டெ குணம் தீட்டயிலறியாம்*

(சமைக்கின்ற முறை சாப்பிடும் போது தெரிந்து கொள்ளலாம்)

507. *வெயிலத்து வண்ணான் சக்க குரு சுட்டு திண்ணானும்*

*மழயத்து வண்ணான் அலக்கானும் போய போலே*

(வெயிலின் பொழுது வண்ணான் பலாப்பழக் கொட்டையினை சுட்டு சாப்பிடுவதற்கும் மழையின் பொழுது வண்ணான் துணிகளை துவைக்கவும் சென்றது போன்று)

508. *வெரச்சு வெரச்சு மீன் பிடிச்சா மீன் கழிக்கான் ஆளு வேண்டே*

(விரைத்து விரைத்து மீன் பிடித்தால் மீன் சாப்பிடுவதற்கு ஆட்கள் வேண்டுமல்லவா?)

509. *வெருதெ இருன்ன நாயர்க்கு விளி கேட்ட கச்சோடம்*

(சும்மா உட்கார்ந்திருந்த நாயர் சாதியில் இருப்பவருக்கு யாரோ அழைத்தது போன்று கேட்ட வியாபாரம்)

510. *வெருதெ கிட்டிய மாட்டினெ பல்லு பிடிச்சு நோக்கருது*

(சும்மா கிடைத்த மாட்டினை பற்கள் பிடித்து பார்க்கக் கூடாது)

511. *வெள்ளம் வற்றியேடத்து மீன் களிக்கும் போலே*

(தண்ணீர் வற்றிய இடத்தில் மீன் விளையாடுவது போல)

512. *வெளுக்கான் தேச்சது பாண்டாயி*

(வெண்மையாவதற்கு தேய்த்தது வெள்ளைப் பாண்டாகிவிட்டது)

513. *வெளுத்த சோறும் கருத்த முகவும் காணிக்கருது*

(வெண்மையான சோறும் கருமையான முகமும் காண்பித்தல் கூடாது)

514. *வெளுத்ததெல்லாம் பாலு கருத்ததெல்லாம் வெள்ளம்*

(வெண்மையான அனைத்தும் பால் கருமையான அனைத்தும் தண்ணீர்.

515. *வேகோளம் இரிக்காவே ஆரோளம் இரிக்கான் பட்டில்லே*

(ஆக்கப் பொறுத்தவனுக்கு ஆறப் பொறுக்க முடியாதா?)

516. *வேண்டது வேண்டப்போ செய்யுன்னது போலே*

(செய்ய வேண்டியது செய்ய வேண்டிய நேரத்தில் செய்வதைப் போல)

517. *வேணமெங்கில் சக்க வேரிலும் காய்க்கும்*

(வேணும் என்றால் பலாப்பழம் வேரிலும் காய்க்கும்)

518. *வேணமெங்கில் வேலியில் காய்க்கும்*

*வேண்டெங்கில் கொம்பத்தும் காய்க்கில்லா*

(வேணும் என்றால் வேலியிலும் காய்கள் காய்க்கும்

வேண்டாம் என்றால் மரத்தின் உச்சியிலும் காய்கள் காய்க்காது)

519. *வேலி சாடுன்னவனு கோலு கொண்டு சாவு*

(வேலியின் மீது சாடிச் செல்பவன் தடியினால் தான் அடி வாங்கி சாவான்)

520. *வேலி தன்னெ விளவு தின்னுன்னு*
(வேலி பயிரினைச் சாப்பிடுகிறது)

521. *வேலிமேல் கிடன்ன பாம்பினெ எடுத்து கழுத்தில் சுற்றிய போலே*

(வேலியின் மீது கிடந்த பாம்பினை எடுத்து கழுத்தில் சுற்றியது போல)

522. *வைதியனோடும் வக்கீலினோடும் கள்ளம் பறயருது.*

(வைத்தியருடனும் வக்கீலினிடமும் பொய் கூறுதல் கூடாது)

# 4. தகவலாளர்களின் பட்டியல்

## கோயம்புத்தூர் மாவட்ட தகவலாளர் பெயர்ப்பட்டியல்

| பெயர் | வயது | கல்வி | சாதி | தொழில் | ஊர் |
|---|---|---|---|---|---|
| அக்பர் அலி | 37 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | கசாப்புக்கடை | அம்பராம்பாளையம் |
| அங்கம்மா | 45 | 7–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| அம்மாசைக் கவுண்டர் | 70 | படிப்பு இல்லை | " | ஆடு மேயத்தல் | குமார்நகர் |
| அமலலிங்கேஸ்வரி | 38 | 5–ம் வகுப்பு | " | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| அன்னமேரி | 68 | படிப்பு இல்லை | கிறித்தவர் | ஆடுமேய்த்தல் | செல்லப்பம்பாளையம் |
| ஆனந்தன் | 45 | +2 | " | கம்பெனி வேலை | இந்திரா நகர் |
| உதயகுமார் | 53 | 8–ம் வகுப்பு | " | வாகன பழுது பார்ப்பவர் | சங்கோதிபாளையம் |
| ஏசய்யா | 70 | " | " | வீட்டில் இருப்பவர் | இந்திரா நகர் |
| கண்ணாத்தா | 75 | 3–ம் வகுப்பு | பறையன் | " | பிள்ளையார்ப்பட்டி |
| கதீஜா | 40 | 8–ம் வகுப்பு | முஸ்லீம் | " | போத்தனூர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கபீர் | 60 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | குனியமுத்தூர் |
| கருப்பாயி | 90 | 8–ம் வகுப்பு | சக்கிலியர் | வீட்டில் இருப்பவர் | கணுவாய் |
| கருப்பாயி | 68 | படிப்பு இல்லை | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதுப்பாளையம் |
| காளியப்பன் | 60 | 4–ம் வகுப்பு | பறையன் | கூலி வேலை | அம்பராம்பாளையம் |
| காளியம்மா | 60 | 7–ம் வகுப்பு | சக்கிலியர் | பஞ்சாயத்து வேலை | கெட்டிமன்னம்புதூர் |
| காளியம்மா | 37 | 5–ம் வகுப்பு | " | பாய் நெய்தல் | அம்பராம்பாளையம் |
| காளீஸ்வரி | 45 | 8–ம் வகுப்பு | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதுப்பாளையம் |
| கிட்டத்தக்கா | 60 | படிப்பு இல்லை | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| கிருஷ்ணன் | 60 | 7–ம் வகுப்பு | பறையன் | வீட்டில் இருப்பவர் | குழந்தைக் கவுண்டர் வீதி |
| குர்ஷித்பானு | 50 | 6–ம் வகுப்பு | முஸ்லீம் | " | சுந்தராபுரம் |
| கௌசல்யா | 38 | 8–ம் வகுப்பு | மாதேரி | பஞ்சாயத்து வேலை | சிங்காநல்லூர் |
| கௌசல்யா | 40 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | சுந்தராபுரம் |
| சக்கீலா | 35 | 8–ம் வகுப்பு | முஸ்லீம் | " | பிஸ்மிநகர் |
| சகீதா | 39 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | " | அம்பராம்பாளையம் |
| சகுந்தலா | 32 | " | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | " |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சண்முகம் | 55 | 7–ம் வகுப்பு | பறையன் | கூலி வேலை | பிள்ளையார்ப்பட்டி |
| சந்திரலேகா | 52 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | இந்திரா நகர் |
| சம்சாத் | 30 | +2 | முஸ்லீம் | " | பிஸ்மிநகர் |
| சரஸ்வதி | 42 | 8–ம் வகுப்பு | மாதேரி | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| சரஸ்வதி | 60 | படிப்பு இல்லை | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | கொள்ளுப்பாளையம் |
| சரோஜா | 65 | 7–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | மாச்சாம்பாளையம் |
| சரோஜா | 50 | 6–ம் வகுப்பு | " | " | குறிச்சி |
| சரோஜினி | 47 | 5–ம் வகுப்பு | கிறித்தவர் | " | சாமணாபுரம் |
| சர்மா | 19 | இளங்கலை இரண்டாம் ஆண்டு | " | படித்தல் | சாமணாபுரம் |
| சர்மிளா | 30 | +2 | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | பிஸ்மி நகர் |
| சாமிநாதன் | 65 | 7–ம் வகுப்பு | பறையன் | விவசாயம் | பிள்ளையார் பெட்டி |
| சாயிதா | 45 | 9–ம் வகுப்பு | முஸ்லீம் | ஆசிரியர் | பிஸ்மிநகர் |
| சிபானா | 20 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | பிஸ்மி நகர் |
| சின்னக்கா | 70 | 5–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | சங்கோதி பாளையம் |
| சின்னம்மினி | 60 | படிப்பு இல்லை | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | இந்திராநகர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுகன்யா | 19 | இளங்கலை இரண்டாம் ஆண்டு | பறையர் | படித்தல் | மாச்சாம்பாளையம் |
| சுதீர் | 15 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | படித்தல் | இந்திராநகர் |
| சுந்தரன் | 54 | +1 | கிறித்தவர் | கண்காணிப்பாளர் | தட்டான்புதூர் |
| சுப்பாத்தா | 74 | படிப்பு இல்லை | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | கெட்டிமன்னம்புதூர் |
| சுரேஷ்குமார் | 19 | இளங்கலை பட்டம் பெற்றவர் | கவுண்டர் | படித்தல் | அம்பராம்பாளையம் |
| சுவாமிநாதன் | 70 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | கொள்ளுப்பாளையம் |
| செல்லப்பக்கவுண்டர் | 67 | படிப்பு இல்லை | கவுண்டர் | மேஸ்த்திரி | தட்டான்புதூர் |
| செல்லம்மா | 60 | 3–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | சிங்காநல்லூர் |
| செல்லம்மா | 65 | படிப்பு இல்லை | கிறித்தவர் | ஆடு மேய்த்தல் | இந்திரா நகர் |
| செல்லம்மா | 67 | படிப்பு இல்லை | கவுண்டர் | விவசாயம் | இந்திரா நகர் |
| செல்லாத்தா | 75 | 4–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | குழந்தைக் கவுண்டர் வீதி |
| செல்வகுமார் | 40 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | பெயிண்டர் | சங்கோதிபாளையம் |
| செல்வராஜ் | 65 | 7–ம் வகுப்பு | கிறித்தவர் | விவசாயம் | எல்லக்காடு |
| செல்வி | 30 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | கம்பெனி வேலை | இந்திரா நகர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செல்வி | 35 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | கம்பெனி வேலை | இந்திரா நகர் |
| சென்னிமலைக் கவுண்டர் | 80 | படிப்பு இல்லை | கவுண்டர் | விவசாயம் | ஊஞ்சப்பாளையம் |
| சைத்தூன் பீவி | 59 | படிப்பு இல்லை | முஸ்லீம் | கசாப்புக்கடை | அம்பராம்பாளையம் |
| சௌந்தரம் | 50 | +1 | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | இந்திராநகர் |
| தங்கராஜ் | 65 | 7–ம் வகுப்பு | கவுண்டர் | " | சங்கோதிபாளையம் |
| தங்கராஜு | 60 | 4–ம் வகுப்பு | கிறித்தவர் | காரத்தொழில் | இந்திராநகர் |
| தங்காத்தா | 60 | 5–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | சங்கோதிபாளையம் |
| தங்காத்தா | 63 | 5–ம் வகுப்பு | " | " | அம்பராம்பாளையம் |
| தங்காத்தா | 80 | படிப்பு இல்லை | " | " | புதுப்பாளையம் |
| தயாமணி | 90 | படிப்பு இல்லை | " | " | புதுப்பாளையம் |
| தனமணி | 55 | 3–ம் வகுப்பு | கிறித்தவர் | " | பொன்னாண்டாம் பாளையம் |
| தனலட்சுமி | 32 | 8–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | கெட்டிமன்னம்புதூர் |
| தாஜ்னீசா | 52 | 6–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | கெட்டிமன்னம்புதூர் |
| திருமா | 52 | 3–ம் வகுப்பு | மாதேரி | பஞ்சாயத்து வேலை | கெட்டிமன்னம்புதூர் |
| தெய்வானம்மா | 65 | படிப்பு இல்லை | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | இந்திரா நகர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தேவசுந்தரம் | 90 | படிப்பு இல்லை | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | தென்னம்பாளையம் |
| நசீத்பானு | 40 | 4–ம் வகுப்பு | முஸ்லீம் | கம்பெனி வேலை | கனியூர் |
| நாயகம் | 52 | 6–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | அம்பாரம்பாளையம் |
| நேசம்மா | 60 | 3–ம் வகுப்பு | சக்கிலியர் | விவசாயம் | கனியூர் |
| பதர்னீசா | 33 | 7–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | பிஸ்மிநகர் |
| பழனிச்சாமி | 64 | 10–ம் வகுப்பு | பறையன் | ஆசிரியர் | அம்பராம்பாளையம் |
| பழனியப்பன் | 36 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | பெயின்டர் | இந்திராநகர் |
| பழனியப்பன் | 80 | படிப்பு இல்லை | கவுண்டர் | விவசாயம் | மாப்பிளக்கவுண்டன் குட்ட |
| பழனியப்பன் | 39 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | கிராம நிர்வாக அதிகாரி | இந்திராநகர் |
| பாத்திமா | 50 | 8–ம் வகுப்பு | முஸ்லீம் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| பாத்திமா கனி | 70 | படிப்பு இல்லை | முஸ்லீம் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| பாத்திமா பீவி | 32 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| பிரதீப் | 45 | முதுகலை பட்டம் பெற்றவர் | கிறித்தவர் | பாதிரியார் | கனியூர் |
| பேச்சியம்மா | 45 | 5–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | கனியூர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பொன்னாத்தா | 50 | படிப்பு இல்லை | பறையன் | கூலி வேலை | பிள்ளையார்ப்பட்டி |
| மயிலாத்தா | 80 | படிப்பு இல்லை | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | மாச்சாம்பாளையம் |
| மாராத்தா | 64 | படிப்பு இல்லை | கவுண்டர் | ஆடு மேய்த்தல் | கனியூர் |
| மாரியாத்தா | 56 | 3–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | கணுவாய் |
| மாரியாத்தா | 75 | படிப்பு இல்லை | சக்கிலியர் | வீட்டில் இருப்பவர் | கணுவாய் |
| மாலதி | 59 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | எல்.ஐ.சி. முகவர் | குறிச்சி |
| மஞ்சுளா | 35 | 8–ம் வகுப்பு | மாதேரி | பஞ்சாயத்து வேலை | கெட்டிமன்னம்புதூர் |
| மயிலாத்தா | 80 | படிப்பு இல்லை | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | கெட்டிமன்னம்புதூர் |
| மின்னல்கொடி | 43 | 6–ம் வகுப்பு | பறையர் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| மீனா | 50 | 10–ம் வகுப்பு | பண்டாரம் | எல்.ஐ.சி. முகவர் | குறிச்சி |
| மீனாட்சி | 70 | 5–ம் வகுப்பு | பறையன் | கூலி வேலை | பிள்ளையார்ப்பட்டி |
| முகமூதா | 32 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| முத்தம்மா | 50 | படிப்பு இல்லை | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | சிங்காநல்லூர் |
| முத்தம்மா | 80 | படிப்பு இல்லை | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | சிங்காநல்லூர் |
| முத்தம்மா | 65 | 5–ம் வகுப்பு | கவுண்டர் | விவசாயம் | மாச்சாம்பாளையம் |
| மூக்கம்மா | 60 | படிப்பு இல்லை | சக்கிலியர் | வீட்டில் இருப்பவர் | கணுவாய் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரஹ்மத் | 48 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | போத்தனூர் |
| ரங்கசாமி | 78 | படிப்பு இல்லை | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | தென்னம்பாளையம் |
| ரங்கசாமி | 60 | 7–ம் வகுப்பு | செட்டியார் | விவசாயம் | எல்லக்கோடு |
| ரங்கன் | 65 | படிப்பு இல்லை | குறவர் | கூடை பின்னுதல் | கனியூர் |
| ரஞ்சிதா | 70 | படிப்பு இல்லை | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | பொன்னண்டாம் பாளையம் |
| ரவி | 51 | 6–ம் வகுப்பு | கிறித்தவர் | பெயின்டர் | இந்திராநகர் |
| ரவிக்குமார் | 35 | 10–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | இந்திராநகர் |
| ரவிக்குமார் | 13 | 8–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | இந்திராநகர் |
| ராஜன் | 40 | 5–ம் வகுப்பு | கிறித்தவர் | பெயின்டர் | இந்திராநகர் |
| ராசாத்தி | 30 | 5–ம் வகுப்பு | கிறித்தவர் | கம்பெனி வேலை | சங்கோதிபாளையம் |
| ராஜேந்திரன் | 58 | 6–ம் வகுப்பு | செட்டியார் | விவசாயம் | தட்டான்புதூர் |
| ராபி | 45 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | மேஸ்த்திரி | கனியூர் |
| ரிசானா | 20 | +2 | முஸ்லீம் | கடையில் நிற்பவர் | கரும்புக்கடை |
| ருக்மணி | 25 | +2 | கிறித்தவர் | அலுவலக உதவியாளர் | கனியூர் |
| ரேகா | 45 | 6–ம் வகுப்பு | பண்டாரம் | கம்பெனி வேலை | குறிச்சி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| லட்சுமி | 25 | +2 | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | அம்பராம்பாளையம் |
| லட்சுமி | 40 | 9–ம் வகுப்பு | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | மாச்சாம்பாளையம் |
| லட்சுமி | 55 | 5–ம் வகுப்பு | பறையன் | கூலி வேலை | மாச்சாம்பாளையம் |
| லட்சுமி | 64 | படிப்பு இல்லை | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதுப்பாளையம் |
| லட்சுமி | 70 | படிப்பு இல்லை | பறையன் | வீட்டில் இருப்பவர் | குறிச்சி |
| வஞ்சியம்மா | 80 | படிப்பு இல்லை | பள்ளர் | பஞ்சாயத்து வேலை | கெட்டினாம் பாளையம் |
| வசந்தி | 30 | 9–ம் வகுப்பு | பறையன் | அரசாங்க வேலை | பிள்ளையார்ப்பட்டி |
| வள்ளிநாயகி | 60 | 10–ம் வகுப்பு | பறையர் | ஆசிரியர் | அம்பராம்பாளையம் |
| வள்ளியம்மா | 47 | 5–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | பச்சப்பாளையம் |
| வள்ளியம்மாள் | 50 | 3–ம் வகுப்பு | தெலுங்குச் செட்டியார் | கம்பெனி வேலை | மாச்சாம்பாளையம் |
| வளர்மதி | 50 | 8–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| விசாலம் | 42 | 6–ம் வகுப்பு | பண்டாரம் | ஆசிரியர் | போத்தனூர் |
| விசாலாட்சி | 52 | 9–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | குழந்தை கவுண்டர் வீதி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| விவேக் | 18 | 10–ம் வகுப்பு | பறையர் | படித்தல் | குழந்தை கவுண்டர் வீதி |
| வேதமுத்து | 72 | 8–ம் வகுப்பு | கிறித்தவர் | வீட்டில் இருப்பவர் | இந்திரா நகர் |
| வேலும்மா | 70 | படிப்பு இல்லை | சக்கிலியர் | வீட்டில் இருப்பவர் | கணுவாய் |
| ஹிதாயத்னீசா | 32 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | விட்டில் இருப்பவர் | பிஸ்மிநகர் |
| ஹேமா | 37 | பட்டப்படிப்பு | கவுண்டர் | ஆசிரியர் | புதுப்பாளையம் |
| ஜாஸ்மின் | 29 | 9–ம் வகுப்பு | முஸ்லீம் | விட்டில் இருப்பவர் | மாச்சாம்பாளையம் |
| ஜானகி | 35 | 5–ம் வகுப்பு | கிறித்தவர் | கம்பெனிவேலை | இந்திரா நகர் |
| ஜெய்லானி | 19 | இளங்கலை இரண்டாம் ஆண்டு | முஸ்லீம் | படித்தல் | அம்பராம்பாளையம் |
| ஜெயலட்சுமி | 40 | 6–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | அம்பராம்பாளையம் |
| ஷெரின் | 15 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | படித்தல் | பிஸ்மிநகர் |
| ஜொகரா | 59 | 7–ம் வகுப்பு | முஸ்லீம் | விட்டில் இருப்பவர் | பிஸ்மிநகர் |
| ஜோண்பிரதாப் | 50 | 8–ம் வகுப்பு | கிறித்தவர் | பெயிண்டர் | இந்திரா நகர் |
| ஜோதி | 33 | 9–ம் வகுப்பு | கவுண்டர் | பஞ்சாயத்து வேலை | கெட்டிமன்னம்புதூர் |

## பாலக்காடு மாவட்ட தகவலாளர் பெயர்ப்பட்டியல்

| பெயர் | வயது | கல்வி | சாதி | தொழில் | ஊர் |
|---|---|---|---|---|---|
| அசோகன் | 35 | 10–ம் வகுப்பு | ஈழவர் | பேருந்து நடத்துனர் | வேங்கப்பாறா |
| அப்துல்பாரி | 52 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | Real Estate Business | மஞ்சளூர் |
| அன்சிராபானு | 22 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | தேக்கின்சிறா |
| அனிதா | 25 | இளங்கலை பட்டம் பெற்றவர் | ஈழவர் | படித்தல் | கொல்லங்கோடு |
| ஆயிஷாமா | 45 | 8–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | செங்கம்பொட்டா |
| ஆறுச்சாமி | 32 | முனைவர் பட்ட ஆய்வாளர் | பறையன் | ஆசிரியர் | வாளையார் |
| இஸ்மாயில் | 55 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | அரசாங்க பேருந்து ஓட்டுனர் | போத்தம்பாடம் |
| இஸ்மாயில் | 67 | 2–ம் வகுப்பு | முஸ்லீம் | விவசாயம் | தேக்கின்சிறா |
| உமா | 18 | இளங்கலை முதலாம் ஆண்டு | கவுண்டர் | படித்தல் | எருத்தேன்பதி |
| கண்ணன் | 47 | 7–ம் வகுப்பு | செறுமன் | கூலி வேலை | செங்கம்பொட்டா |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கமர்னீசா | 37 | 7–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | ஆலத்தூர் |
| கமலம் | 60 | 4–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | நென்மேனி |
| கமலாட்சி | 42 | 6–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கரிப்போடு |
| கல்யாணி | 85 | 2–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | செங்கம்பொட்டா |
| கவிதா | 27 | இளங்கலை பட்டம் பெற்றவர் | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | எருத்தேன்பதி |
| கார்த்தியாணி | 45 | படிப்பு இல்லை | செறுமர் | விவசாயம் | சிங்கஞ்சிறா |
| காவ்யா | 17 | +2 | செட்டியார் | படித்தல் | சித்தூர் |
| கிருஷ்ணன் | 50 | 10–ம் வகுப்பு | ஈழவர் | விவசாயம் | செங்கம்பொட்டா |
| கீது | 21 | எம்.பி.ஏ | செறுமர் | படித்தல் | கொழிஞ்சாம்பாறை |
| குமாரி | 45 | 7–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கரிப்போடு |
| கோதா | 65 | படிப்பு இல்லை | செறுமர் | வீட்டில் இருப்பவர் | கருங்குளம் |
| சங்கீதா | 23 | முதுகலை பட்டம் பெற்றவர் | செறுமர் | படித்தல் | கொழிஞ்சாம்பாறை |
| சந்திரன் | 47 | 10–ம் வகுப்பு | ஈழவர் | விவசாயம் | தேக்கின்சிறா |
| சந்திரன் | 72 | 7–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கருங்குளம் |
| சபீதா | 27 | இளங்கலை பட்டம் பெற்றவர் | முஸ்லீம் | அலுவலக வேலை | பந்தப்பறம்பு |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சபீனா | 29 | இளங்கலை பட்டம் பெற்றவர் | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | மஞ்சளூர் |
| சம்பத்குமார் | 28 | முன் முனைவர் பட்டம் பெற்றவர் | செட்டியார் | ஆசிரியர் | புதூர் |
| சாமிநாதன் | 35 | 8–ம் வகுப்பு | ஆசாரி | ஆசாரி வேலை | பல்லசேனா |
| சாமிநாதன் | 40 | 8–ம் வகுப்பு | செறுமன் | கூலி வேலை | செங்கம்பொட்டா |
| சைபுனீசா | 39 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | காம்பரத்துச்சள்ளை |
| சைனபா | 80 | படிப்பு இல்லை | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | போத்தம்பாடம் |
| சுஜா | 25 | T.T.C | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கொடுவாயூர் |
| சுதா | 35 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | எருத்தேன்பதி |
| சுப்பாத்தா | 72 | படிப்பு இல்லை | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதூர் |
| சுமதி | 25 | 10–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கொடுகப்பாறா |
| சுமதி | 25 | 10–ம் வகுப்பு | பிராமின்ஸ் | வீட்டில் இருப்பவர் | கொல்லங்கோடு |
| சுலோசனா | 55 | 8–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | செங்கம்பொட்டா |
| செந்தில் | 29 | ஆய்வாளர் | செட்டியார் | படித்தல் | கொழிஞ்சாம்பாறை |
| செந்தில் | 32 | +2 | செட்டியார் | ஓட்டுனர் | புதூர் |
| செல்வி | 38 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | ஒழலப்பதி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செல்லா | 85 | படிப்பு இல்லை | செறுமன் | வீட்டில் இருப்பவர் | தேக்கின்சிறா |
| சொயம்ப்ரபா | 65 | 10–ம் வகுப்பு | ஈழவர் | ஆசிரியர் | நென்மேனி |
| தங்கராஜ் | 55 | 8–ம் வகுப்பு | கவுண்டர் | விவசாயம் | ஒழலப்பதி |
| தங்கா | 80 | படிப்பு இல்லை | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | மாத்தூர் |
| தத்தா | 72 | 3–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கொடுகப்பாறா |
| தாஜ்னிசா | 53 | 9–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | நென்மேனி |
| தாமோதரன் | 45 | 7–ம் வகுப்பு | ஈழவர் | விவசாயம் | பெருங்கோட்டுகாவு |
| தேவகி | 65 | 2–ம் வகுப்பு | ஈழவர் | விவசாயம் | மலயாம்பள்ளம் |
| தேவகி | 65 | 7–ம வகுப்பு | ஈழவர் | கூலி வேலை | பெருங்கோட்டுகாவு |
| தேவி | 45 | 5–ம் வகுப்பு | ஈழவர் | விவசாயம் | செங்கம்பொட்டா |
| நிதி | 15 | 9–ம் வகுப்பு | ஈழவர் | படித்தல் | செங்கம்பொட்டா |
| நீது | 14 | 8–ம் வகுப்பு | ஈழவர் | படித்தல் | செங்கம்பொட்டா |
| பங்கஜவள்ளி | 50 | +2 | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதூர் |
| பத்மாவதி | 36 | +2 | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | செங்கம்பொட்டா |
| பாக்யம் | 60 | 5–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கரிப்போடு |
| பாக்யம் | 75 | படிப்பு இல்லை | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | கருங்குளம் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாக்யலட்சுமி | 40 | 8–ம் வகுப்பு | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதூர் |
| பாப்பாத்தி | 60 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | வீட்டில் இருப்பவர் | புதூர் |
| பாலசுப்ரமணியன் | 60 | 10–ம் வகுப்பு | கவுண்டர் | விவசாயம் | எருத்தேன்பதி |
| பிரவீனா | 42 | முதுகலை பட்டம் பெற்றவர் | ஈழவர் | ஆசிரியர் | கொடுவாயூர் |
| பிரோஸ் | 25 | +2 | முஸ்லீம் | ஓட்டுனர் | வடக்கஞ்சேரி |
| புஷபா | 42 | 10–ம் வகுப்பு | பிராமின்ஸ் | வீட்டில் இருப்பவர் | கொல்லங்கோடு |
| பெட்டச்சி | 75 | படிப்பு இல்லை | ஈழவர் | கூலி வேலை | மாத்தூர் |
| பெட்டம்மா | 75 | படிப்பு இல்லை | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | செங்கம்பொட்டா |
| பொன்னு | 65 | 4–ம் வகுப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | நென்மேனி |
| மகேஷ்குமார் | 28 | இளங்கலை பட்டம் பெற்றவர் | நாயர் | அரசாங்க வேலை | கொல்லங்கோடு |
| மணிகண்டன் | 29 | பட்ட முன் படிப்பு | செட்டியார் | கம்பெனி வேலை | புதூர் |
| மீனாட்சி | 60 | 8–ம் வகுப்பு | பட்டர் | வீட்டில் இருப்பவர் | கொல்லங்கோடு |
| யூசப் | 45 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | வாகன ஓட்டுநர் | தேக்கின்சிறா |
| ரங்கராஜ் | 59 | 9–ம் வகுப்பு | கவுண்டர் | விவசாயம் | தேக்கின்சிறா |
| ரங்காத்தா | 80 | படிப்பு இல்லை | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதூர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரஞ்சினி | 42 | 10–ம் வகுப்பு | ஈழவர் | ஆசிரியர் | கொடுகப்பாறா |
| ரோஹினி | 35 | இளங்கலை பட்டம் பெற்றவர் | பட்டர் | வீட்டில் இருப்பவர் | கொல்லங்கோடு |
| லட்சுமி | 75 | 9–ம் வகுப்பு | ஆசாரி | வீட்டில் இருப்பவர் | பல்லசேனா |
| லட்சுமி | 45 | 10–ம் வகுப்பு | பிராமின்ஸ் | வீட்டில் இருப்பவர் | கொல்லங்கோடு |
| லீலா | 35 | 7–ம் வகுப்பு | செறுமன் | கூலி வேலை | செங்கம்பொட்டா |
| வளர்மதி | 28 | இழங்கலை பட்டம் பெற்றவர் | செட்டியார் | வீட்டில் இருப்பவர் | புதூர் |
| விஸ்வநாதன் | 50 | 10–ம் வகுப்பு | ஈழவர் | விவசாயம் | செங்கம்பொட்ட |
| விஜயலட்சுமி | 39 | முனைவர் பட்டம் பெற்றவர் | கவுண்டர் | ஆசிரியர் | புதூர் |
| வெள்ளத்தாயி | 50 | 4–ம் வகுப்பு | செறுமர் | விவசாயம் | தேக்கின்சிறா |
| வேலாயுதசாமி | 47 | 10–ம் வகுப்பு | செட்டியார் | மண்பாண்டத் தொழில் | கொடுவாயூர் |
| ரஹ்மத் | 55 | படிப்பு இல்லை | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | தேக்கின்சிறா |
| ஷெரீனா | 28 | 10–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | தேக்கின்சிறா |
| ஜெய்லாவுதீன் | 48 | 5–ம் வகுப்பு | முஸ்லீம் | வீட்டில் இருப்பவர் | போத்தம்பாடம் |
| ஷைனி | 32 | பட்ட முன் படிப்பு | ஈழவர் | வீட்டில் இருப்பவர் | செங்கம்பொட்டா |

# 6. புகைப்படங்கள்

## களப்பணியில் ஆய்வாளர்





# 6. ஆய்வுக்கட்டுரை வெளியீடுகள்

இங்கு ஆய்வாளர் கருத்தரங்குகளில் படித்தளித்த ஆய்வுக் கட்டுரை குறித்த விவரங்கள் தரப்படுகின்றன.

1. Presented a Paper titled "Tamil – Malayalappazhamozhikal – or oppiedu" in International Seminar at 42nd International Seminar of All India Univeristy Tamil Teachers Association, Kamaraj University, Madurai.
2. Presented a Paper titled "Tamil – Malayalappazhamozhikalil Nambikai" in International Seminar at 43rd International Seminar of All India Univeristy Tamil Teachers Association, Bangalore.
3. Presented a Paper titled "Palakkad Mavatta Muslim Makkalidayea Vazhangakkudiya Sila Pazhamozhikal" in International Seminar at 44th International Seminar of All India University Tamil Teachers Association, Karaikudi.
4. Presented a Paper titled "Tamil Malayalappazhamozhikalil Soozhaliyal" in National Seminar of Tamil Research Scholars Association, School of Tamil Studies at Madurai Kamaraj University, Madurai.



# PROVERBS OF COIMBATORE AND PALAKKAD DISTRICTS – A COMPARATIVE STUDY

*Thesis submitted to the University of Kerala for the award of the Degree of Doctor of Philosophy in Tamil*

*Research Scholar*

**SABEELA. I**

*Under the Supervision of*

**Dr. T. VIJAYALAKSHMI**

DEPARTMENT OF TAMIL

UNIVERSITY OF KERALA

KARIAVATTOM

THIRUVANANTHAPURAM - 695 581

MAY - 2014

# கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் – ஓர் ஒப்பீடு

கேரளப் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**சபீலா. இ**

மேற்பார்வையாளர்

**முனைவர். த. விஜயலட்சுமி**

**தமிழ்த்துறை**

**கேரளப் பல்கலைக்கழகம், காரியவட்டம்**

**திருவனந்தபுரம் – 695 581**



**மே – 2014**

# இயல் — 4

# கோயம்புத்தூர், பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஒப்பீடு

4.1 ஒப்பிலக்கியம்

4.2 பழமொழிகளின் சொற்தேர்வு

4.3 புழங்கு பொருள் பண்பாடு

4.4 தொழில்கள்

4.5 நம்பிக்கைகள்

4.6 உயிரினங்கள்

4.7 சாதிகள்

4.8 பிற பழமொழிகள்

4.9 ஒரே சூழலில் வழங்கக்கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள்

தொகுப்புரை

# 4. கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஒப்பீடு

## 4.1 ஒப்பிலக்கியம்

ஒன்றை வேறு ஒன்றுடன் ஒப்பிடும் தன்மையை ஒப்பீடு என்றும் ஒப்புமை என்றும் கூறலாம். ஓர் இலக்கியத்தை இன்னொரு இலக்கியத்துடன் ஒப்பிடுவதை ஒப்பிலக்கியம் என்பர். ஒப்பு நோக்கப்படுவது இலக்கியம் என்பதால் ஒப்பிலக்கியம் என்று வழங்கப்பட்டது.

"ஒப்பிலக்கியம் என்ற தொடர் ஒப்பிடப்படும் இலக்கியம் என்று பொருள்படும் "Comparative Literature" எனும் ஆங்கிலத் தொடர் போன்றே, உருவாக்கம் பெற்ற தமிழ்த் தொடராகும். இத்தொடர் "Literature Composer" எனும் பிரெஞ்சு மொழித் தொடரைப் பின்பற்றி ஆக்கப்பட்டது"[1].

'ஒப்பியல் இலக்கியம்' என்னும் சொற்றொடரைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை க.கைலாசபதி அவர்களையே சாரும். இவருடைய 'தமிழ் வீரயுகப்பாடல்' என்னும் கட்டுரையில் "Comparative Leterature" என்னும் ஆங்கிலத் தொடரைத் தமிழாக்கம் செய்ய முயன்ற போது கிடைத்த அரிய சொற்றொடரே 'ஒப்பியல் இலக்கியம்' ஆகும். ஆனால் வாரன், வெல்லக் ஆகியோரின் நூலை மொழிபெயர்ப்பு செய்த பேராசிரியை குளோரியா சுந்தரமதி தமது இலக்கியக் கொள்கையில் ஒப்பிலக்கியம் என்ற தொடரையே பயன்படுத்தினார்.

'ஒப்பியல் இலக்கியம்' என்ற இச்சொற்றொடர் உருவாகும் முன்னரே தமிழில் ஒப்பாய்வுகள் நடந்துள்ளன. டாக்டர் கால்டுவெல் தமிழ் மற்றும் பிற திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammar of Dravidian Languages)

என்னும் நூலை எழுதியுள்ளார். வ.வே.சு.ஐயர், 'Kambaramayana – A study' என்னும் தமது நூலில் கம்பனின் படைப்புகளை மேனாட்டு மில்டன், ஹோமர் முதலானோரின் படைப்புகளோடு ஒப்பிட்டுள்ளதை அறிய முடிகின்றது.

தமிழ் அறிஞர்களின் பங்களிப்பு மட்டுமின்றி பிறநாட்டு அறிஞர்களின் பங்களிப்புகளும் கவனிக்கத்தக்கன. இலக்கியங்களின் ஒட்டுமொத்த நிலையினை ஆராய்ச்சி செய்வதே ஒப்பிலக்கியம் என்பர்.

இலக்கியத்தை இலக்கியத்தோடு ஒப்பிடுவது பிரெஞ்சு கோட்பாடாகும். அமெரிக்கர் இலக்கியத்தை பிற கலை துறைகளோடு அதாவது ஓவியங்கள், சினிமா போன்ற துறைகளோடும் ஒப்பீடு செய்து ஒப்பிலக்கிய கோட்பாட்டை விரிவுபடுத்தியுள்ளனர்.

“பன்னாட்டு இலக்கியங்களின் உறவுகள் பற்றிய வரலாறு”[2] என கையார்டு கூறுகின்றார்.

‘தாரதம்யம்’ என்பது ஒப்பிலக்கியம் என்ற சொல்லுக்கு நிகரான மலையாளச் சொல். “19–ஆம் நூற்றாண்டில் Literature Composer என்ற பிரெஞ்சு இலக்கியத்தில் வந்ததை மேத்யூ ஆர்னால்டு என்ற ஆங்கில இலக்கிய எழுத்தாளர் 1841–ஆம் ஆண்டில் "Comparative Literature" என்று ஆங்கிலத்தில் அறிமுகம் செய்தார்”[3].

இருபதாம் நூற்றாண்டில் “ஹோமரின் இலியட், வால்மீகியின் ராமாயணம் இரண்டினையும் டாக்டர் பி.கே. நாராயண பிள்ளை முதன் முதலில் ஒப்புமை செய்தார். அதன் பிறகு ‘தாரதம்யம்’ என்ற மலையாளச் சொல் வரத் தொடங்கியது”[4].

இங்குக் கோயம்புத்தூர் மாவட்டத் தமிழ்ப் பழமொழிகளையும் பாலக்காடு மாவட்ட மலையாளப் பழமொழிகளையும் ஒப்பீடு செய்து கூறப்படுகின்றது. பழமொழிகள் வாழ்க்கைச் சூழலில் இருந்து தான்

உருவாக்கப்படுகின்றன. எனவே அவற்றிற்கு வாழ்க்கையோடு நிச்சயமாகத் தொடர்பிருக்கும். அத்தொடர்பை மீட்டுருவாக்கம் செய்து, இருவேறு பண்பாடு, வாழ்க்கைப் பின்னணியின் ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறிய இவ்வியல் முனைகிறது.

## 4.2 பழமொழிகளின் சொற்தேர்வு

ஒரே பொருளில் தமிழிலும் மலையாளத்திலும் கூறப்படும் பழமொழிகள் இவை,

*கும்பிடப் போன தெய்வம் குறுக்க வந்தது மாதிரி*

*தேடிய வள்ளி காலில் சுற்றி*
(தேடிய கொடி காலைச் சுற்றியது)

இவ்விரண்டு பழமொழிகளுமே எதிர்பார்த்த செயல் இயல்பாக நடந்தது என்னும் பொருளில் பயன்படுத்தப்படுகின்றன. பொருள் ஒன்றாக, சூழல் ஒன்றாக இருப்பினும் இப்பழமொழிகளின் வெளியீட்டு முறையும் சொற்தேர்வும் அந்தந்தக் கலாசாரத்தை சுட்டி நிற்பதைக் காணலாம். கோவில்கள் நிறைந்த தமிழர் வாழ்வும்; செடி, கொடிகள், மலைகள், ஆயுர்வேதம் நிறைந்த கேரள வாழ்வும் மிக அருமையாக பதிவாகியுள்ளன.

## 4.3 புழங்கு பொருள் பண்பாடு

கோவை மாவட்டப் பெண்களும், பாலக்காடு மாவட்டப் பெண்களும் வீட்டிற்கு உட்புறமும் அயலகப் பகுதியிலும் இருக்கக் கூடிய இடங்களையும் தங்களுடைய புழங்கு வெளிகளாகக் கொண்டிருந்தனர். இதனை,

*அடுப்பே திருப்பதி வாசப்படியே வைகுந்தமாம்*

*அரிக்கிற அரிசிய விட்டிட்டு சிரிக்கற சித்தப்பனோட போனாளாமா*

*சும்மா இருந்தவளோட சும்மாட்டப் பாரு*
*சட்டிப்பான வித்தவளோட தமாசப்பாரு*

*குத்துன ஒலக்கயிட்டிட்டு குதிரக்களி காணான் போய போல*
(குத்துகின்ற உலக்கையினை போட்டுவிட்டு குதிரை விளையாட்டைப் பார்க்கப் போனது போல)

*கோரிய கிணற்றிலெ வெள்ளமுறு*
(இறைத்த கிணற்றில் தண்ணீர் ஊற்றெடுத்து வரும்)

எனும் பழமொழிகளால் அறிந்து கொள்ள முடிகின்றன. மேலும் இப்பெண்கள் frT (yji^^eoTjOfiuT, (S
விவசாயம் சார்ந்த தொழில்களையும் செய்து வந்துள்ளனர் என்பதை,

*கம்புக்கு கள வெட்டினாப்லயும் ஆச்சு*
*தம்பிக்கு பொன்னு பாத்தாப்லயும் ஆச்சு*

*பெற்றொனங்கிய பெண்ணும் நட்டொனங்கிய நாறும் போலே*
(பிரசவித்து எழும்பிய பெண்ணும் நட்டு வாடிப் போன நாற்றும் போல)

எனும் பழமொழிகள் மூலம் இரு மாவட்டப் பெண்களின் ஒற்றுமையினை அறியமுடிகின்றது. கோவை மாவட்ட பெண்கள் மரம் ஏறுபவர்களாக உள்ளனர் இதனை,

*அவ மரமேறான்னு சொல்லி இவளப் பாத்தா இவ பனையேறரா*

எனும் பழமொழி வெளிப்படையாகக் கூறுவதைக் காணலாம். பாலக்காடு மாவட்டத்தில் இவ்வமைப்புடன் இருக்கக்கூடிய பழமொழி கிடைக்கவில்லை.

### 4.3.1 உணவு முறைகள்

இவ்விரு மக்களும் தங்களுடைய காலை நேர உணவாக கஞ்சியினைப் பயன்படுத்தியுள்ளனர். இதை,

*ஓசுக்கு கஞ்சி கொடுத்தா மசுரு மசுருன்னானாமா*

*கஞ்சி குடிச்சாலும் பத்ராஸ் விடில்லா*

(கஞ்சி சாப்பிட்டாலும் பெருமை பேசுவதை விடமாட்டார்கள்)

போன்ற பழமொழிகளால் அறியலாம். இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் விவசாயம் செய்யக்கூடியவர்களாக இருப்பதால், காலையில் விரைவில் வயல்களுக்குச் செல்ல வேண்டும் எனக் கருதி காலை நேர உணவாக கஞ்சியினை இம்மக்கள் பயன்படுத்தியிருக்கலாம். ஆனால் நாகரீகம் வளர்ச்சியடைந்த இக்காலகட்டத்தில், கோவை மாவட்ட மக்கள் பொங்கலினையும், பாலக்காடு மாவட்ட மக்கள் அப்பம் என்று கூறக்கூடிய உணவு வகையினையும் உண்டு வருகின்றனர். இதை,

*போக்கிரிகளுக்கு பொங்கல் வெச்ச மாதிரி*

*அப்பம் திந்நா மதி குழியெண்ணன்டா*

(அப்பம் சாப்பிட்டா போதும் குழியை எண்ண வேண்டாம்)

போன்ற பழமொழிகளின் மூலம் இவ்விரு மக்களினுடைய ஒற்றுமை வேற்றுமைகளையும், பண்பாட்டினையும் அறியமுடிகின்றது.

*கத்தரிக்காய்க்கு கையும் காலும் முளைத்த மாதிரி*

*சுண்டைக்காய் கால் பணம் சுமக்கூலி முக்காப்பணம்*

*வித்து ஒண்ணு போட்டு சொறயொன்னு முளைக்குமா?*

*கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைத்தது போல*

*சுண்டங்ஙா கொடுத்து வழுதனங்ஙா வாங்ஙிக்கல்லே*

(சுண்டைக்காய் கொடுத்து கத்தரிக்காய் வாங்கக்கூடாது)

*கைப்ப குத்தி கும்பளைங்ஙா முளைக்குமோ*

(பாகற்காய் விதை விதைத்து பூசணிக்காய் முளைத்து வருமா?)

போன்ற பழமொழிகள் மூலம் இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் ஒரே போன்று இருக்கக்கூடிய காய்கறி வகைகளைத் தான் உட்கொண்டு வந்துள்ளனர் என்பதை அறியலாம். மட்டுமின்றி, இக்காய்கறி வகைகளையெல்லாம் அவர்களுடைய வீடுகளிலேயே பயிர் செய்து உணவிற்காக பயன்படுத்தி வருகின்றனர் என்பதை கள ஆய்வின் போது காண நேர்ந்தது. காய்கறி மட்டுமின்றி மாமிச உணவு வகைகளையும் உண்டு வருகின்றனர். இதனை,

*ஆட்ட அறுபதையும் திம்பாளாமா வெள்ளாட்டப் பாத்தா*
*விருக்குன்னு துள்ளுவாளாமா*

*ஓட்டப் பானைக்குள்ள நண்டு*

*ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு*
*பெட்டியில இருக்கற மீனும் போச்சு*

போன்ற பழமொழிகள் கோவை மாவட்ட மக்கள் அனைத்து விதமான மாமிச உணவினை உண்டு வந்துள்ளனர் என்பதை தெளிவுறுத்தி நிற்பதைக் காணலாம். அதேபோன்று பாலக்காடு மாவட்ட மக்களும் நண்டு, இறைச்சி, மீன், போன்ற அனைத்தையும் உண்டு வந்துள்ளனர் என்பதை,

*ஞண்டு போயால் எவிடம் வரே போகும்*

(நண்டு சென்றால் எந்த இடம் வரை செல்லும்)

*இறைச்சிக்கு போயவன் விரச்சு சத்து*
*வீட்டிலிருன்னவன் கொதிச்சு சத்து*

(இறைச்சி வாங்க சென்றவன் நடுங்கி செத்தான்
வீட்டிலிருந்தவன் ஆசைப்பட்டு செத்தான்)

*செம்மீன் சாடியால் முட்டோளம்*

*பின்னயும் சாடியால் சட்டியோளம்*

(இறால் சாடினால் முட்டு வரை

பிறகும் சாடினால் சட்டி வரை)

போன்ற பழமொழிகளில் தெள்ளத் தெளிவாக பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். மேற்கூறப்பட்ட பழமொழிகளின் மூலம் இருமாவட்டங்களிலுள்ள மக்களினுடைய உணவுகளில் ஒற்றுமையைக் காணமுடிகின்றது.

### 4.3.2 கட்டிடம்

கோவை மாவட்டத்தில் கிராமப்புறங்களிலுள்ள மக்கள் விவசாயம் செய்யக்கூடிய மக்களாக உள்ளனர். இவர்கள் சாளைவீடு, கூரைவீடு போன்ற வீடுகளில் வசித்து வரக்கூடியவர்களாக இருக்கின்றனர்.

*எலிச்சாளையானாலும் தனிச்சாளை வேண்டும்*

*கூரைமேல் ஏறி கோழி பிடிக்காதவன் வானம் ஏறி*

*வைகுந்தம் போனானாம்*

எனும் பழமொழிகள் சான்றாக நிற்பதைக் காணலாம். நாகரீகம் வளர்ச்சியடைந்த பின்னர் இம்மக்கள் அட்டானி வீடு, கண்ணாடி வீடு, மாளிகை வீடு போன்ற வீடுகளில் வசிக்கத் தொடங்கினர். இதனை,

*ஆடு கடிக்குதுன்னு அட்டானி மேல ஏறி உக்காந்திட்டான்*

*கண்ணாடி வீட்டுல இருந்திட்டு கல் எறியாதே*

*குடிக்கறது கூழு கனா காண்பது மச்சு மாளிகை*

போன்ற பழமொழிகளால் அறியலாம்.

அதே போன்று பாலக்காடு மாவட்டத்திலுள்ள விவசாயம் செய்யக்கூடிய மக்கள் சிமெண்ட் தூண்களால் ஆகிய வீடுகளை கட்டி வாழ்ந்து வந்துள்ளனர். இதனை தெளிவுபடுத்தும் வகையில்,

*கார கோலு செதலு புடிச்ச போலே*

(சிமெண்ட் குச்சிகள் சிதல் பிடித்தது போன்று)

என்று பழமொழியில் பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். இதன் மூலம் இரு மாவட்ட மக்களினுடைய வீடுகளினுடைய வேற்றுமைகளை அறியலாம்.

### 4.3.3 ஆடை அணிகலன்கள்

கோவை பாலக்காடு மாவட்ட மக்கள் விவசாயம் செய்யக் கூடிய மக்கள் என்று உறுதிப்படுத்தும் வகையில் ஆண்கள் தங்களுடைய ஆடைகளை அணிந்திருந்தனர். இதை கள ஆய்வின் போது விவசாயம் செய்யக்கூடிய இடத்தில் நேரில் காண முடிந்தது. ஆண்கள் கோமணம், டிரவுசர், வேட்டி தலைப்பாகை என்பனவற்றை அணிந்திருந்தனர். இதனை பழமொழிகள் தெளிவுறுத்தி நிற்பதைக் காண முடிகின்றது.

*கோமணம் கட்டற ஊர்ல நீ ஏன் வேட்டி கட்டற*

*நீ போட்டிருக்கறதே ஓட்ட டவுசரு*

*அடுத்தவன் குண்டிய நீ எதுக்கு பாக்கற*

*தலைக்கு வந்தது தலப்பாவோட போச்சு*

இப்பழமொழிகள், விவசாயம் செய்யும் பொழுது தங்களுடைய ஆடைகளில் அதிகப்படியான சேறு ஏற்படாமல் இருப்பதற்காக இந்த வகையான ஆடைகளை ஆண்கள் அணிந்திருக்கலாம். அதே போன்று பாலக்காடு மாவட்ட ஆண்கள், கோமணம் சட்டை போன்றவற்றை அணிந்து வந்துள்ளனர். இதனை

*பொதப்பினேக் கொடுத்து கோணாகம் வாங்ஙருது*

(போர்வையினைக் கொடுத்து கோமணத்தினை வாங்குதல் கூடாது)

*பிடிச்சு வலிச்சு குப்பாயமிட்டால்*

*வலிச்சு கீறி ஊரேண்டிவரும்*

(பிடித்து இழுத்து சட்டையினை அணிவித்தால்

இழுத்து கிழித்து அழித்து எடுக்க வேண்டும்)

எனும் பழமொழி மூலம் உணரலாம். கோவை மாவட்டப் பெண்கள்,

*கையாலாகாத சிறுக்கி வண்ணப்புடவைக்கு ஆசைப்பட்டாளாமா*

*எலி ஏ கோமணத்தோட போகுதுன்னு பாத்தா*

*பட்டுச்சீலையோட போகுது*

*முழுசா நனஞ்ச பெறகு முக்காடு எதற்கு*

போன்ற பழமொழிகள் தமிழர் பண்பாட்டைக் காட்டும் பெண்களின் ஆடைகளான சீலை, வண்ணப்புடவை, பட்டுச்சீலை போன்றவற்றை கூறுவதாக அமைந்துள்ளது எனலாம். பாலக்காடு மாவட்டத்தில் கள ஆய்வின் போது பெண்களின் ஆடை வகைகளைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் எதுவும் கிடைக்கவில்லை. இரு மாவட்டங்களிலும் உள்ள மக்கள் இரு பாலினருக்கும் உரியதாக இருக்கக்கூடிய கம்பிளி, போர்வை போன்றவற்றையும் பயன்படுத்தியுள்ளனர் என்பதை பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணலாம். சான்றாக,

*மச்சான் செத்தா மயிராச்சு எனக்கு ரெண்டு கம்பிளியுமாச்சு*

*பொள்ளாச்சி கெடக்கனு பொதப்பு அதினு இவிடெ எந்தினு*

*காலிட்டு கீறுணு*

(பொள்ளாச்சியில் இருக்கிறது போர்வை அதை இங்கிருந்து எதற்கு

காலை வைத்து கிழிக்கிறாய்)

எனும் பழமொழிகளைக் கூறலாம்.

இரு மாவட்டங்களிலுமுள்ள பெண்கள் தங்களை அலங்காரம் செய்து கொள்வதில் ஆர்வம் கொண்டவர்களாக உள்ளனர். கோவை மாவட்ட பெண்கள் தமிழர்களின் பண்பாட்டினை வெளிப்படுத்தும் விதமாக தங்களுடைய கூந்தலை அலங்காரம் செய்து கொண்டுள்ளனர் என்பதை,

'முடியுள்ள சீமாட்டி அள்ளியும் முடியுவா அவுத்தும் விடுவா' எனும் பழமொழி சுட்டுகிறது. அதே போன்று பாலக்காடு மாவட்ட பெண்களும் தங்களுடைய கூந்தலுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர் என்பதை, 'முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கெட்டும் சரிச்சிட்டும் கெட்டும்' (முடியிருக்கின்ற பெண் சாய்த்தும் கட்டுவாள் சரித்தும் கட்டுவாள்) என்கிறது.

## 4.4 தொழில்கள்

இரு மாவட்டங்களிலுள்ள ஆண்கள் மீன் பிடித்தல், மரம் வெட்டுதல் போன்ற தொழில்களைச் செய்து வந்துள்ளனர். இதனை,

*ஓடற மீனுக்கு ஆசப்பட்டு புடிச்ச மீனும் போச்சு பெட்டியில இருக்கற மீனும் போச்சு*

*இறயிட்டு மீன் பிடிக்குன்னது போலே*
(இறையினை போட்டு மீன் பிடிப்பதைப் போன்று)

என்னும் பழமொழிகளாலும்,

*வெட்டீட்டு வான்னா வேரோட புடுங்கிட்டு வாரான்*

*இரிக்குன்ன கொம்பின்டெ இட முறிக்கருது*
(உட்கார்ந்திருக்கின்ற கொம்பினுடைய இடையில் வெட்டக்கூடாது)

எனும் பழமொழிகளாலும் இருமாவட்டத்திற்கும் இருக்கின்ற ஒற்றுமையினைக் காணமுடிகின்றது. மேலும்,

*அம்பட்டன் குப்பையக் கிளறனா பூரா மசுரு மசுராட்டாம் வரும்*

*நாய்க்கு மீச வளர்ன்னால் அம்பட்டனெந்து காரியம்*

(நாய்க்கு மீசை வளர்ந்தால் நாவிதனுக்கு என்ன பயன்)

எனும் பழமொழிகளின் மூலம் இரு மாவட்டங்களில் உள்ள நாவிதன் தொழிலின் ஒற்றுமையினைக் காணலாம்.

### 4.4.1 விவசாயம்

இரு மாவட்டங்களிலுமுள்ள மக்கள் விவசாயத்தைத் தங்களுடைய முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளனர். இதில் கோவை மாவட்டம் சற்று வறண்ட காலநிலையைக் கொண்டதாக இருப்பதால் இங்கு அதற்கேற்ற பயிர்களான கம்பு, சோளம், மேட்டில் விளையும் நெல் போன்றவற்றைப் பயிர் செய்கின்றனர். இதனை,

*நெல்லுக்குப் பாயர தண்ணி புல்லுக்கும் பாஞ்சா என்ன*

*கம்புக்கு கள வெட்டினாப்லயும் ஆச்சு*

*தம்பிக்கு பொண்ணு பாத்தது மாதிரியுமாச்சு*

*ஆளப்பாரு சோளக்காட்டு பொம்ம மாதிரி*

எனும் பழமொழிகள் மூலம் அறியலாம்.

*கதிரின் மேல் கொண்டு வளமிட்டிட்டு காரியமில்லா*

(நெற் கதிரான பின்பு வளம் போட்டால் ஒரு பயனுமில்லை)

என்று பாலக்காடு மாவட்டத்தில் நெற்பயிரினை விவசாயம் செய்து வந்துள்ளனர் என்பதை பழமொழி வெளிப்படையாகக் கூறியுள்ளமையைக் காணலாம்.

## 4.5 நம்பிக்கைகள்

நம்பிக்கையைப் பற்றிக் குறிப்பிடுகையில் கோவை மாவட்ட மக்கள் உடலுறுப்பு, பேய், இயற்கை, மாதம், நாட்கள் போன்றவற்றின் மீது மிகுந்த நம்பிக்கை

கொண்டு வாழ்ந்து வந்துள்ளனர். பாலக்காடு மாவட்ட மக்கள் நாட்கள், நட்சத்திரம், இயற்கை, உடலுறுப்பு, அதிர்ஷ்டம் போன்றவற்றின் மீது அளவு கடந்த நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பது பழமொழிகளில் பதிவாகியுள்ளன. சான்றாக,

*கணுக்கால் பெருத்தவ கொண்டவனுக்காகாது*

*கருப்பப் பாக்காம நாய் ஓலைக்காது*

*பங்குனி மாசத்துல மழ பேஞ்சா பசு குடிக்கக்கூட*
*தண்ணி கெடைக்காது*

*திங்கள் நெடுநாளு*

எனும் பழமொழிகளில், இன்றைய காலங்களைப் போன்று நம் முன்னோர்கள் வாழ்ந்திருக்கக் கூடிய காலகட்டத்தில் ஒரு பெண்ணை திருமணம் செய்ய வேண்டுமெனில் நாள் நட்சத்திரம் பார்க்கக் கூடிய வழக்கம் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆதலால் பெண்ணின் உடலுறுப்பினை வைத்து பெண் என்பவள் எத்தன்மை கொண்டவளாக இருப்பாள் என்று கூறுவதற்காக முதற்பழமொழியினை கூறியிருப்பர். இரண்டாவது பழமொழியானது, கிராமப்புறம் என்பதால் தங்களுடைய பாதுகாப்பிற்காக வீடுகளில் நாய் வளர்த்தக் கூடியவர்களாக இருப்பார்கள். இரவு நேரங்களில் மனிதனுடைய கண்களுக்குப் புலப்படாத சில செயல்கள் நாய்களினுடைய கண்களுக்கு புலப்பட்டிருக்கலாம். ஆதலால் முன்னோர்கள் சூழலுக்குத் தக்கவாறு இப்பழமொழியினைக் கூறியிருக்கலாம். அதே போன்று மழை பெய்வதை வைத்து காலத்தைக் கணித்தும் வந்துள்ளனர் என்பதை மேற்கூறப்பட்ட பழமொழியால் உணரலாம்.

*செவ்வாய்ச்ச வெட்டிய குற்றி அவைக்கில்லா*
(செவ்வாய்க்கிழமை வெட்டின செடி கிளை விடாது)

*அஸ்வதி அச்சனாகா*
(அஸ்வதி நட்சத்திரத்தில் குழந்தை பிறந்தால் தந்தைக்கு ஆகாது)

*கூட்டு பிரி குடும்பத்திறு ஆகா*

(சேர்ந்திருக்கக் கூடிய புருவம் குடும்பத்திற்கு நல்லதல்ல)

*புலி போலே வன்னது எலி போலே போயி*

(புலி போன்று வந்தது எலியைப் போன்று போய்விட்டது)

இப்பழமொழிகளின் மூலம் உடலுறுப்பு, நாள், மாதம் போன்றவற்றின் மீதுள்ள நம்பிக்கைகளின் ஒற்றுமைகள் இரு மாவட்டத்திலும் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

### 4.5.1 சடங்குமுறைகள்

சடங்குகள் செய்வதில் தமிழ் மக்கள் தான் முன்னிலையில் நிற்கின்றனர் என்பதை கோவை மாவட்ட கள ஆய்வின் போது காண நேர்ந்தது. இம்மாவட்டத்தில் காது குத்தும் வழக்கம் உள்ளது என்பதை,

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் பொறந்தான்னு*
*சொல்லி கடப்பார எடுத்து காது குத்தினாங்களாமா*

என்றும்,

*சானியோட சேந்து சந்தனமும் நாறும்*

*எச்சிய பன்னீரா நினைக்கறவ*

போன்ற பழமொழிகளில் ஆண்களுக்கு காது குத்தக் கூடிய வழக்கம் சில சாதி மக்களிடம் காணமுடிகின்றது. திருமணம் போன்ற மகிழ்ச்சியான நிகழ்வின் போது வீட்டிற்கு வரக்கூடிய விருந்தினரை மனமுவந்து பன்னீர், சந்தனம் போன்றவற்றை வைத்து வரவேற்பது என்பது தமிழர் மரபு என்ற கருத்தினைத் தெளிவுறுத்துவதாகவும் இப்பழமொழிகள் அமைந்துள்ளன எனலாம்.

இதே போன்று பாலக்காடு மாவட்டத்தில் திருமணச் சடங்கு, இறப்புச் சடங்கு போன்றவைகள் உள்ளன. இதனை,

*தெங்ஙு சாரினின்னவன் பெண்ணுங் கொண்டு போயி*

(தென்னை மரத்தில் சாய்ந்து நின்றவன் பெண்ணையும்

கொண்டு சென்று விட்டான்)

*பதினாறாயால் பறயனும் பிடிச்சு கொடுக்கணம்*

(பதினாறு வயது ஆகி விட்டால் பறையனுக்காவது திருமணம் செய்து கொடுக்க வேண்டும்)

*சத்து கெடன்னாலும் சமஞ்ஞு கெடக்கணம்*

(சடலமாகப் படுத்தாலும் அலங்காரத்துடன் படுக்க வேண்டும்)

*சத்த சவமும் கெடக்கில்லா வெச்ச சோறும் பாக்கி வரில்லா*

(இறந்த சடலத்தையும் போட்டு வைக்க மாட்டார்கள்

வைத்த சாப்பாட்டினையும் மீதி வைக்க மாட்டார்கள்)

போன்ற பழமொழிகளின் மூலம் உணர முடிகின்றது. மட்டுமின்றி இம்மாவட்டத்தில், வீட்டிற்கு வரும் விருந்தினரை 'சத்யா' என்று கூறக்கூடிய விருந்து உணவினைக் கொடுத்து உபசரிக்கின்ற நிலையினைப் பழமொழியில் காணமுடிகிறது. சான்றாக,

*சத்ய மறன்னாலும் பட்டினி மறக்கில்லா*

(விருந்து உணவினை மறந்தாலும் பட்டினியை மறக்க மாட்டோம்)

எனும் பழமொழி மூலம் அறியலாம். இப்பழமொழி இவர்களுடைய அதாவது மலையாள இன மக்களின் பண்பாட்டினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. புதிதாக வீட்டிற்கு வருபவர்களுக்கு மட்டுமின்றி கோயில் திருவிழா, திருமணம் போன்ற அனைத்து இடங்களிலும் இவ்வுணவினைத் தான் கொடுத்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

### 4.5.2 கடவுள் வழிபாடு

இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் பிள்ளையாரை வழிபட்டு வருகின்றனர். இதனை,

*பிள்ளையார் கோயிலை இடித்து பெருமாள் கோயிலை கட்டலாமா*

*கணபதிக்கு வெச்சது காக்க கொண்டு போயி*

(பிள்ளையாருக்கு வைத்தது காக்காய் கொண்டு சென்று விட்டது)

எனும் பழமொழியால் அறிய முடிகிறது. பாலக்காடு மாவட்ட மக்கள் பிள்ளையாரை, 'கணபதி' என்னும் பெயரால் வழங்கி வருகின்றனர். இப்பழமொழிகளின் மூலம் இரு மாவட்டங்களிலுள்ள மக்களினுடைய ஒற்றுமையை அறியலாம். கோவை மாவட்டத்திலுள்ள நம் முன்னோர்கள் பிள்ளையார் மட்டுமின்றி மாரியம்மன், அனுமன் போன்ற கடவுள்களையும் வழிபட்டு வந்துள்ளனர். இதனை,

*பிச்சை எடுக்கறாரு பெருமாளு அதைப் புடுங்கித் திங்கறாரு அனுமாரு*

*எங்கேயோ போற மாரியாத்தா எம்மேல வந்து ஏறாதே*

எனும் பழமொழிகள் மூலம் இரு மாவட்ட மக்களினுடைய வேற்றுமையை அறியலாம். இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் ஒரு கடவுளை மட்டுமல்லாது, அனைத்து கடவுள்களையும் வழிபடுபவர்களாக உள்ளனர் எனும் கருத்தும் இப்பழமொழிகளின் மூலம் புலனாவதைக் காணலாம்.

### 4.5.3 திருவிழாக்கள்

தேர்த்திருவிழா சிறப்பான முறையில் கோவை மாவட்டத்தில் கொண்டாடி வருகின்றனர் என்பதை,

*தேரோட போச்சு திருநாளு*

*தாயோட போச்சு பொறந்த வீடு*

எனும் பழமொழியால் உணரலாம். பாலக்காடு மாவட்டத்தில் ஆராட்டு (கொல்லங்கோடு ஆராட்டு), வேலை (நெம்மார வேல) போன்ற விழாக்களை இம்மக்கள் சிறப்பான முறையில் கொண்டாடி வருகின்றனர். இதில் 'ஆராட்டு' என்பது கடவுளினைக் குளிப்பாட்டி ஊர்வலமாகக் கொண்டு செல்கின்ற நிலையினை ஆராட்டு என்பர். இந்த மாதிரியான சொல் வரக்கூடிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைத்துள்ளது. இதை,

*தூராத்தவன் தூரியால் தீட்டங்கொண்டு ஆராட்டு*

(மலங்கழிக்காத்தவன் மலங்கழித்தால் மலத்தைக் கொண்டு

நீராட்டு நடத்துவர்)

எனும் பழமொழியால் உணரலாம். இந்த ஆராட்டு விழாவின் போது யானைகளை அலங்கரித்து ஊர்வலமாகக் கொண்டு செல்வர் என்பது தான் இவ்விழாவின் சிறப்பாகும். இதனை,

*ஆன புறத்து கேரணம்*

*அங்ஙாடியில் கூடி போகணம்*

*கொட்டும் மேளவும் வேணம்*

*ஆரும் காணன் பாடில்லா*

(யானையின் மீது ஏற வேண்டும்

கடைத் தெருக்களின் வழி செல்ல வேண்டும்

கொட்டும் வாதிய மேளமும் வேண்டும்

யாரும் பார்க்கக் கூடாது)

எனும் பழமொழி மூலம் அறிய முடிகிறது.

### 4.6 உயிரினங்கள்

#### 4.6.1 கால்நடைகள்

உயிரினங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், இரு மாவட்டங்களிலும் யானை, காளை, ஆடு, மாடு, கழுதை, நாய், பூனை போன்றவை காணப்படுகின்றன. இம்மக்கள் தங்களுடைய வீடுகளில் காளை, மாடு, ஆடு, நாய், பூனை, கழுதை, குதிரை போன்றவற்றை வளர்த்து வந்துள்ளனர். தென்னிந்தியாவில் மிகப்பெரிய கால்நடை சந்தை பொள்ளாச்சியில் தான் அமைந்துள்ளது. ஆடு, மாடு என்ற கால்நடைகளின் மூலம் இரு மாவட்டங்க்ளிலுள்ள விவசாய மக்கள் பால் வியாபாரம் செய்வதில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தனர். இரு மாவட்டத்திலும் யானைகள் இருந்தன என்பதை,

*யானப் பசிக்கு சோள பொறி போதுமா?*

*யானை காணாமல் போனா குண்டுச் சட்டில தேடினா கிடைக்குமா?*

*யானை மேல ஏறி பாறைமேல விழலாம்*
*நாய் மேல ஏறி பீய் மேல விழக்கூடாது*

*ஆன மெலிஞ்ஞால் தொழுத்தில் கெட்டுமோ?*
(யானை மெலிந்து விட்டால் தொளுவில் கட்டுவார்களா)

*ஆன கொடுத்தாலும் ஆச கொடுக்கருது*
(யானையினைக் கொடுத்தாலும் ஆசையினை வளர்த்தக் கூடாது)

எனும் பழமொழிகளின் மூலம் புலனாகிறது. கோவை மாவட்டத்தில் எருதுகள் இருந்தன என்பதற்குச் சான்றாக,

*உழுகிறவன் ஏமாளியாக இருந்தால் எருது மச்சானே*
*மச்சானேனு சொல்லுமாமா*

*கவுண்டனுக்கு எருது போச்சேன்னு கவல*

*சக்கிலியனுக்கு கொழுப்பில்லைனு கவல*

எனும் பழமொழிகள் மூலம் அறியலாம். அதே போன்று பாலக்காடு மாவட்டத்திலும் காளைகள் இருந்தன என்பதற்கு சான்றாக,

*காள பெற்றென்னு கேட்டு கயரெடுக்குன்னது போலே*

(மூரி பிரசவித்தது என்று கேட்டு கயிற்றினை எடுப்பது போன்று)

எனும் பழமொழியினைக் கூறலாம். இப்பழமொழிகள் இரு மாவட்டத்திலும் காளைகள் உள்ளன என்ற ஒற்றுமையினை தெளிவுறுத்துவதாக அமைந்துள்ளது.

இரு மாவட்டங்களிலும் மாடுகள் இருந்தன என்பதை,

*ஆடு மாடு இல்லாதவன் அடமழைக்கு ராஜா*

*புல்லு வெட்டி இல்லாதவன் பட்டத்துக்கு ராஜா*

என்று தமிழிலும்,

*பட்டி தின்னுகயில்லா பசுவினெக் கொண்டு தீட்டிக்குகயுமில்லா*

(நாய் சாப்பிடவும் செய்யாது மாட்டை சாப்பிடவும் விடாது)

என்ற மலையாளப் பழமொழியும் மாடுகள் இருந்ததற்கான சான்றுகளாக அமைந்துள்ளன. கோவை மாவட்டத்தில் மாடுகள் மட்டுமின்றி ஆடுகளும் இருந்தன என்பதை,

*ஆடு கொளுத்துதுன்னா இடயனுக்கு இலாபம்*

*ஆடு பொளச்சா மயிர் கூட குடுக்கமாட்டான்*

*ஆடு பகையாமா குட்டி உறவாமா*

எனும் பழமொழிகள் புலப்படுத்துவதைக் காணலாம். அதே போன்று பாலக்காடு மாவட்டத்தில்,

*ஆட்டு தோலனிஞ்ஞ சங்ஙாதி*

(ஆடு வேடமணிந்த தோழன்)

*ஆடின்டிடடுத்து சோதிச்சிட்டு வேணோ முளகரைய்க்கான்*

(ஆட்டிடபா் கேட்டு விட்டா மிளகரைப்பது)

எனும் மலையாளப் பழமொழிகள் மூலமும் இரு மாவட்டங்களிலுள்ள ஒற்றுமையினை அறியமுடிகின்றது.

கோவை – பாலக்காடு மாவட்டத்தில் உள்ள மக்கள் வீட்டிற்குப் பாதுகாவலாக நாயினை வளர்த்து வந்துள்ளனர். இதனை,

*நக்க விட்ட நாயும் கொத்தவிட்ட கோழியும் சும்மா இருக்காது*

*நாய்க்குத் தெரியுமா ஒரு சந்திப் பானை*

*நாயா இருந்தாலும் தாய்*

*நாயக் கூப்பிடற நேரம் பீய வழி*

எனும் பழமொழிகள் கோவை மாவட்டத்தில் நாய் இருந்ததற்கான சான்றாக அமைந்துள்ளது. அதே போன்று பாலக்காடு மாவட்டத்தில்

*நாயய்கரியுமோ நாயருடெ வேதன*

(நாயிற்குத் தெரியுமா நாயர் சாதியில் இருப்பவர்களுடைய துக்கம்)

*நாயய்க்கு மீச வளர்ண்ணால் அம்பட்டனெந்து காரியம்*

(நாயிற்கு மீசை வளர்ந்தால் நாவிதனுக்கு என்ன பயன்)

எனும் பழமொழிகள் பாலக்காடு மாவட்டத்திலும் நாய்கள் இருந்தன என்ற ஒற்றுமை நிலையினைக் கூறுவதாக அமைந்துள்ளது. இம்மாவட்ட கள ஆய்வின் போது

நாய்கள் மட்டுமின்றி காளை, மாடு, ஆடு போன்ற கால்நடைகளையும் நேரில் காணமுடிந்தன. இரு மாவட்டங்களிலும் பூனைகள் உள்ளன என்பதை,

*பூன குறுக்காச்சு ஓத்தப்பாப்ப முன்னாச்சு*
*சாந்தி குறுக்காச்சு சர்ப்பம் தடயாச்சு*

*பூன எளச்சா எலி விளையாடக் கூப்பிடுமாம்*

*பூனைக்கு சந்தோசம் வந்தா பீத்தப்பாயை சொரண்டுமாம்*

*பூனைக்கு யாரு மணிகட்டுவா*

*மிண்டாப் பூச்சா கலமுடைக்கும்*
(பேசாமல் இருக்கக் கூடிய பூனை சட்டியினை உடைத்து விடும்)

போன்ற பழமொழிகள் மூலம் இரு மாவட்டங்களுக்கிடையுள்ள ஒற்றுமையினை அறிய முடிகின்றது. அதே போன்று இரு மாவட்டங்களிலும் பன்றிகள் உள்ளன என்பதை,

*பன்னி முன்னால முத்தப் போடாதே*

*பன்னிக்கு பத்தென்னம் எந்தினு*
*புலிக்கு ஒன்னு மதி*
(பன்றிக்கு பத்து குட்டிகள் எதற்கு, புலிக்கு ஒரு குட்டி போதும்)

எனும் பழமொழிகள் ஒற்றுமையினை புலப்படுத்துவதாக அமைந்துள்ளது எனலாம்.

கோவை மாவட்ட வண்ணான் இனத்தைச் சார்ந்த மக்கள் Loas^r தங்களுடைய உதவிக்காக கழுதையினை வளர்த்து வந்துள்ளனர். இதற்கு சான்று கூறும் விதமாக,

*வண்ணான் பண்ணையக்காரன் ஆவப் போவதுமில்ல*
*கழுதை உழவுக்கு வரப் போறதுமில்ல*

எனும் பழமொழி கூறப்படுகிறது. பாலக்காடு மாவட்ட விவசாயம் செய்யக்கூடிய மக்கள் தங்களுடைய உழவுப் பணிக்காக காளையினை வளர்த்து வந்துள்ளனர் என்பதை,

*மூரியோடு சோதிச்சிட்டு வேணோ நுகம் வெக்கான்*
(எருதிடம் கேட்டா நுகம் வைப்பது)

எனும் பழமொழிகள் இரு மாவட்டங்களிலுள்ள வேற்றுமைகளைக் கூறுவதாக அமைந்துள்ளது எனலாம்.

### 4.6.2 பறவைகள்

இரு மாவட்டங்களிலும் ஒரே போன்று இருக்கக் கூடிய பறவைகள் தான் காணப்படுகின்றன. இதனை,

*காக்கா உக்கார பனம்பழம் விழுந்துதாமா*

*காக்கா குஞ்சு கருங்குஞ்சானாலும் தன் குஞ்சு பொன் குஞ்சு*

*காக்க கண்டறியும் கொக்கு கொண்டறியும்*
(காக்கை பார்த்தவுடன் புரிந்து கொள்ளும்
கொக்கிற்கு பிறர் கூறி புரிய வைக்க வேண்டும்)

*அத்திப் பழம் பழுக்கும் போ காக்கைக்கு வாய்ப்புண்ணு*
(அத்திப்பழம் பழுக்கும் போது காக்காவிற்கு வாயில் புண்ணு)

போன்ற பழமொழிகள் இரு மாவட்டத்திலும் காக்கைகள் இருந்தன என்ற கருத்தினையும் ஒற்றுமையினையும் கூறுவதாக அமைந்துள்ளது. இதே போன்று இம்மாவட்டங்களில் கோழிகளும் இருந்தன என்பதற்குச் சான்றாக,

*கோழி காலுல கச்சயக் கட்டுனாலும் அது குப்பையைத் தான் கிளறும்*

*கோழி களவு போனா ஆடு வெட்டியா பொங்கலு போடுவாங்க*

*கோழி குருடானா கொழம்பு மனமில்லாமலா போகும்*

*கோழி கஞ்சாவடிச்ச போலே*
(கோழி சாராயம் குடித்தது போன்று)

*கோழி சவுட்டி குஞ்ஞு சாகுமோ*
(கோழி மிதித்து குஞ்சு செத்தா போயிடும்)

எனும் பழமொழிகள் மூலம் அறியலாம்.

காக்காய், கோழி மட்டுமின்றி கொக்கும் இருந்தது என்பதை,

*வண்ணான் துணியைக் காயப் போட்டு கொக்கு பின்னால போன மாதிரி*

*ஈக் கொக்கு எத்ரகுளம் கண்டதா*
(இந்த கொக்கு எத்தனை குளம் பார்த்ததுண்டு)

எனும் பழமொழிகளால் இரு மாவட்டத்தினுடைய ஒற்றுமைகள் புலனாகின்றன. பாலக்காடு மாவட்டத்தில் குளங்கள் அதிகமாகக் காணப்படுவதால் அங்கு அதிகப்படியான கொக்குகள் அமர்ந்திருப்பதைக் கள ஆய்வின் போது காணமுடிந்தது.

### 4.6.3 ஊர்வன

ஊர்வனவற்றில் எலி, அணில், தேள், பாம்பு போன்றவைகள் காணப்படுகின்றன. இதனை,

*எலி நெல்லுக்குள்ள விழுந்த மாதிரி*

*அறுப்புக் காலத்துல எலிக்கு அஞ்சு பொஞ்சாதி*

*எலியெ பேடிச்சு இல்லம் சுடுக*

(எலியினை பயந்து வீட்டினை எரிப்பது)

போன்ற பழமொழிகள் எலி இருந்தமைக்கு சான்றாக அமைந்துள்ளது.

*அணில் ஏங் கெட்டுதுன்னா தன் வாயால கெட்டுது*

*அண்ணான் மூத்தால் மரம் கேற்றம் மறக்குமோ*

(அணில் வளர்ந்துவிட்டால் மரத்தில் ஏறுவதை மறந்து விடுமா)

எனும் பழமொழிகள் இரு மாவட்டங்களிலும் அணில் இருந்தது என்ற ஒற்றுமையினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

*தேளிற்கு வாலில் விஷம் தேவிடிசிக்கு உடம்பு முழுவதும் விஷம்*

*தேளினெ பேடிச்சோடியவன் பாம்பின்டெ வாயில்*

(தேளினை பார்த்து பயந்து ஓடியவன் பாம்பினுடைய வாயில் விழுந்து விட்டான்)

எனும் பழமொழிகள் தேள் இருந்தமைக்கு சான்றாக அமைந்துள்ளது. எலி, அணில், தேள் போன்ற ஊர்வன மட்டுமின்றி பாம்புகளும் இருந்தன. இதற்குச் சான்றாக,

*பாம்புக்கு பல்லுல தான் வெசம்*
*பங்காளிக்கு உடம்பெல்லாம் வெசம்*

*பாம்பு கடிச்சு பொளச்சவனும் உண்டு*
*செருப்பு கடிச்சு செத்தவனும் உண்டு*

*பாம்பானெங்கிலும் பழகியதானு நல்லது*

(பாம்பாக இருந்தாலும் பழமையடைந்தது நல்லது)

*பாம்பின்டெ இடையில் தவள பட்ட போலே*

(பாம்பிற்கு இடையில் தவளை நசுங்கியது போன்று)

எனும் பழமொழிகள் மூலம் இரு மாவட்டங்களிலுள்ள ஒற்றுமைகள் புலனாவதைக் காணமுடிகின்றது.

கோவை மாவட்டத்தில் வெப்பம் அதிகரித்துக் காணப்படுவதால் அதிகப்படியான மூட்டைப் பூச்சிகள் காணப்படுகின்றன என்பதை வெளிப்படுத்தும் வகையில்,

*மூட்டப்பூச்சிக்கு பயந்து வீட்டக் காலி பண்ணின மாதிரி*

எனும் பழமொழி அமைந்திருப்பதைக் காணலாம். அதே போன்று பாலக்காடு மாவட்டத்தில் நெல் விவசாயம் செய்யக்கூடிய மக்களுடைய வீட்டில் அதிகமான எலிகள் காணப்படுகின்றன. இதை,

*எலியேப் பேடிச்சு இல்லம் சுடுக*

(எலியினை பயந்து வீட்டினை எரிப்பது)

எனும் பழமொழியால் அறியலாம். இப்பழமொழிகள் காரணமாகவும் கோவை மாவட்டத்தில் மூட்டைப் பூச்சியின் காரணமாகவும், பாலக்காடு மாவட்டத்தில் எலியின் காரணமாகவும் வீட்டினைக் காலி செய்துள்ளனர் என்பதன் மூலம் இரு மாவட்டங்களினுடைய வேற்றுமைகள் புலனாவதைக் காணலாம்.

## 4.7 சாதிகள்

சாதிகளைப் பற்றிக் குறிப்பிடுகையில், கோவை மாவட்டத்தில் பல சாதிகள் உள்ளன என்பதை கள ஆய்வின் போது கிடைத்த பழமொழிகளால் அறிய

முடிந்தது. சாதி என்ற பெயரினுடைய கட்டமைப்பில் தான் இம்மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இதன் மூலம் ஒவ்வொரு சாதியினருக்கும் உரியதாக இருக்கக்கூடிய குணநலன்கள், பண்பாடு போன்றவை வெளிப்பட்டு நிற்பதைக் காணலாம். சான்றாக, கோவை மாவட்டத்தில் மிகவும் உயர்ந்த சாதியில் இருப்பவர் கவுண்டர் இன மக்கள். இம்மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'காட்ட வித்துக் கள்ளக் குடிச்சாலும் கவுண்டன் கவுண்டந்தான்' எனும் பழமொழியின் மூலம் இழிவான குடிப்பழக்கம் உடையவனாக இருப்பினும் கவுண்டர் என்ற அந்தஸ்து குறைவதில்லை என்று கவுண்டர் இன மக்கள் தன்மானத்துடன் கூறிக் கொள்கின்ற நிலையைக் காண முடிகின்றது. இதன் மூலம் சமூக அதிகார வைப்பு முறையில் அவர்களின் இடத்தை உணர முடிகிறது. மேலும், செட்டியார் இன மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், இவர்கள் நன்கு சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டவர்களாக இருக்கக் கூடிய மக்கள் என்பதை கள ஆய்வின் மூலம் அறியமுடிந்தன. இதை,

*ஆதாயமில்லாம செட்டி ஆத்தோட போவானா?*

*செல்லும் செல்லாததற்கு செட்டியார் தொன இருக்கு*

*செட்டி கெட்டாலும் எட்டு நாளுல பொளச்சிடுவான்*

*செட்டிக்கு தொட்டதெல்லாம் துட்டு*

*செல்லும் செல்லாதத செட்டியார் தலையில கட்டு*

எனும் பழமொழிகளால் உணரலாம்.

*முண்ணூறு உருட்டி மொளக்கு ஈமான் கொண்டவன் சீரேத்தி*
*கலிமா கொண்டவன் ஹைராக்கி*

எனும் பழமொழி முஸ்லீம் இன மக்களினுடைய வேதங்களைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது.

*புதுசுக்கு வண்ணான் கடுசுக்கு வெளுத்தான்*
*பழசுக்கு வண்ணான் சோத்துக்கு வெளுத்தான்*

*இடையன் புத்தி பொடனீல*

*குயவன் மகன டைக்கட்டி பள்ளிக் கூடத்துக்கு*
*அனுப்பினாலும் டையக்கழட்டி கோமணம் கட்டீட்டு வருவான்*

*பள்ளப் புள்ளய பள்ளிக் கூடத்துக்கு அனுப்பினாலும்*
*'அனே'ங்கற புத்தி போகாது*

எனும் பழமொழிகள் ஒவ்வொரு சாதியினருக்கும் உரியதாக இருக்கக்கூடிய குணத்தினை வெளிப்படையாகக் கூறியுள்ள நிலையினைக் காணமுடிகிறது. இவை மட்டுமின்றி கோவை மாவட்டத்தில் சாதியக் காழ்ப்புணர்ச்சியினைத் தூண்டும் வகையில் ஒரு மதத்திலுள்ள மக்கள் பிற மதத்தினை கேலி செய்கின்ற :S)69r (Sa6lS] QfflI நிலையினையும் பழமொழியில் காணமுடிகிறது. சான்றாக,

*பெம்பேச்சு கேட்ட பேய் பெருமாளே மக்கத்துக்குப் போயி*
*தொப்பி இடு*

இப்பழமொழி, பெண்ணினுடைய பின்னால் சுற்றிக் கொண்டும் அவர்களுடைய பேச்சினைக் கேட்டு நடக்கக்கூடிய பெருமாளினை விளித்து, முஸ்லீம்களது புண்ணிய இடமான மக்காவிற்குச் சென்று, இவ்வளவு நாட்களும் செய்த தவறுகளைக் களைந்து பாவமன்னிப்பு கோரி தொப்பியினை அணிந்துவா என்று கூறுவதாக அமைந்துள்ளது. அதன் பிறகு பெண்களினுடைய பின்னால் செல்லக் கூடாது என்று கேலி செய்வதாக மேற்கூறப்பட்ட பழமொழி அமைந்துள்ளதைக் காணலாம்.

கோவை மாவட்டத்தைப் போன்று பாலக்காடு மாவட்டத்திலும் சாதிகள் பல உண்டு. இருப்பினும் சாதி எதிர்ப்பு, கலவரம் போன்றவை ஒன்றும் இம்மாவட்டத்தில் காணப்படுவதில்லை. ஆதலால் சாதியினைப் பற்றிக் கூறக்கூடிய

பழமொழிகள் அதிகமாகக் கிடைக்கவில்லை. தொல்காப்பியர் தொல்காப்பியத்தில் சாதியினை நால்வகை சாதியினர் என்று குறிப்பிட்டுச் சொல்வதைப் போல, பாலக்காடு மாவட்டத்தில் நால் வகை சாதியினரைப் பற்றிக் கூறக்கூடிய பழமொழிகள் கிடைத்துள்ளன. அவை,

*பட்டர்கெந்தா படயிலு காரியம்*
(பட்டர்க்கு என்ன போர் செய்யும் இடத்தில் வேலை)

*பறையன்டெ முற்றத்து பசு வாழுகயில்லா*
(பறையனுடைய வீட்டு வாசலில் பசு உயிருடன் இருக்காது)

*பறையன் புத்தி பெடனீலு*
(பறையனுடைய புத்தியானது பொடனியில்)

*வெருதே இருந்ந நாயர்க்கு விளிகேட்ட கச்சோடம்*
(சும்மா இருந்த நாயருக்கு யாரோ அழைத்தது போன்று கேட்ட வியாபாரம்)

எனும் பழமொழிகள், ஒவ்வொரு சாதியிலுள்ள மக்களினுடைய குணத்தினை வெளிப்படுத்துவது போன்று அமைந்திருப்பதைக் காணலாம்.

இரு மாவட்டங்களிலும் நிலையாக இருக்கக் கூடிய செய்தியினைப் பற்றிக் கூறுவதாக தத்துவம் சார்ந்த பழமொழிகள் அமைந்துள்ளன. பாமர மக்களுக்கு விரைவில் கருத்துக்களைத் தெரிவிப்பதற்காக பழமொழிகளைக் கூறி அறிவுரை புகட்டுகின்ற நிலை இரு மாவட்டங்களிலும் காணப்படுகின்றன.

## 4.8 பிற பழமொழிகள்

### 4.8.1 மரங்கள்

இரு மாவட்டங்களிலும் முருங்கை, தென்னை, பனை போன்ற மரங்கள் உள்ளன. இதை,

*வேதாளம் முருங்கை மரம் ஏறிடுச்சு*

*தென்னமரம் வெச்சவன் சாப்பிட்டு சாவான்*
*பனமரம் வெச்சவன் பாத்துட்டு சாவான்*

*அவ மரமேறான்னு சொல்லி இவளப் பாத்தா இவ பனையேறரா*

*முருங்ஙயெ ஓடிச்சு வளர்த்தனம்*
*மக்களை அடிச்சு வளர்த்தனம்*
(முருங்கையினை ஒடித்து வளர்த்த வேண்டும்
பிள்ளைகளை அடித்து வளர்க்க வேண்டும்)

*தெங்ஙு சாரினின்னவன் பெண்ணுங் கொண்டு போயி*
(தென்னை மரத்தில் சாய்ந்து நின்றவன் பெண்ணைக் கொண்டு
சென்று விட்டான்)

*காக்க இருன்னதும் பனம் பழம் வீணு*
(காக்காய் உட்கார்ந்ததும் பனம்பழம் விழுந்துவிட்டது)

போன்ற பழமொழிகளின் மூலம் அறியமுடிகின்றது. பாலக்காடு மாவட்டத்தில் அதிகமான பலாமரங்களும், கோவை மாவட்டத்தில் அதிகமான பனை மரங்களும் காணப்படுகின்றன. இதனை,

*சக்க வீணு முயலு சத்து*
(பலாப்பழம் விழுந்து முயல் இறந்துவிட்டது)

*காக்கா உக்கார பனம்பழம் விழுந்துதாமா*

எனும் பழமொழியாலும் இரு மாவட்டங்களுக்கும் இடையே இருக்கக் கூடிய வேற்றுமை புலனாவதைக் காணலாம்.

### 4.8.2 தகாத உறவுகள்

இரு மாவட்டங்களிலும் தகாத உறவுகள் இருந்தன என்பதை,

*அருப்புக் கோட்டையில உங்கப்பா செருப்பு தெச்சாலும்*
*நானுமில்லாட்டி உங்காத்தா நாறிப் போயிடுவா*

*அரிக்கிற அரிசிய விட்டுப் போட்டு*
*சிரிக்கற சித்தப்பனோட போனாளாமா*

*வலியச்சன் வரும்போ கொச்சச்சன் படிக்கு பறத்தாய போல*
(பெரியப்பா வரும்போது சித்தப்பா வாசப்படிக்கு வெளியில்
சென்றது போல)

எனும் பழமொழிகள் தகாத உறவுகள் இருந்தன என்ற ஒற்றுமை நிலையினைக் கூறுவதாக அமைந்துள்ளமையைக் காணலாம்.

### 4.8.3 பலதார, பலகணவ மணம்

கோவை மாவட்டத்தில் நம் முன்னோர்கள் காலந்தொட்டு இன்றுவரையிலும் பலதார மணம் மிகச் சாதாரணமாக இருந்து வருகிறது. என்பதை,

*அலுத்து செலுத்து அக்கா வீட்டுக்குப் போனா*
*அக்கா தூக்கி மச்சான் மடியில போட்டாளா*

எனும் பழமொழி மூலம் அறியலாம். பாலக்காடு மாவட்டத்தில் பலகணவர் மணம் மிகப் பரவலாக இருந்தது என்பதற்குச் சான்று கூறும் விதமாக,

*வலியச்சன் வரும்போல் கொச்சச்சன் படிக்கு புறத்தாய போலே*
(பெரியப்பா வரும்போது சித்தப்பா வாசப்படிக்கு வெளியில்
சென்றது போல)

எனும் பழமொழியால் உணரலாம்.

இப்பழமொழிகள் இரு மாவட்டங்களுக்கு இடையேயுள்ள (பலதார மணம், பல கணவர் மணம்) வேற்றுமைகளைக் கூறுவதாக அமைந்துள்ளன.

### 4.8.4 குணம்

கோவை பாலக்காடு மாவட்ட மக்களினுடைய மனதானது, நிலைதடுமாறும் வகையில் அமைந்துள்ளது. இதனை,

*வாய் சக்கரை கை கொக்கர*

*வெளுத்த சோறும் கருத்த முகமும் காணிக்கருது*
(வெண்மையான சோற்றினையும் கருமையான முகத்தினையும்
காண்பித்தல் கூடாது)

எனும் பழமொழிகள் குணம் மாறக்கூடிய மக்களினுடைய ஒற்றுமையினை எடுத்தியம்புவதாக அமைந்துள்ளது எனலாம்.

## 4.9 ஒரே சூழலில் வழங்கக்கூடிய தமிழ் – மலையாளப் பழமொழிகள்

பழமொழிகளுக்கு சூழல் என்பது மிகவும் முக்கியமான ஒன்றாகும். சூழல் இல்லையெனில் பழமொழிகளின் பொருள் புரிந்து கொள்ள முடியாது. இப்பகுதியில் ஒரே சூழலில் கூறப்படும் தமிழ் – மலையாளப் பழமொழிகளைக் காண்போம்.

ஒரு குடும்பத்திலுள்ள அனைத்துப் பொறுப்புக்களையும் வேலைகளையும் ஒருவர் மட்டும் செய்ய வேண்டும் என்ற சூழலில்,

*அடிப்புளுக்கையிலிருந்து ஆட்டான் புளுக்க வர நாந்தான்*
*பாக்கணும்*

என்று தமிழிலும்,

*தானേ വീണു താന് തന്നെ എണീക്കണം*

(தானே கீழே விழுந்து தானாக எழுந்திருக்க வேண்டும்)

என்று மலையாளப் பழமொழியும் கூறுவதைக் காணலாம்.

ஒருவரிடம் பல குறைகள் இருக்கும் பொழுது, அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் பிறருடைய குற்றங்களையும், குறைகளையும் கூறும் வழக்கம் இரு மாவட்டங்களிலுள்ள மக்களிடமும் காணமுடிகிறது. இதனை,

*ஓ முதுகுல ஆயிரத்தெட்டு அழுக்க வெச்சிட்டு*

*அடுத்தவன் முதுகுல இருக்கற அழுக்க எடுக்கப் போறயா*

என்று தமிழிலும்,

*അവനവന്റെ കുറ്റം മറച്ചു വെച്ചിട്ട്*

*ആരാന്റെ കുറ്റം ചൂണ്ടിക്കാട്ടരുത്*

(அவனவனுடைய குற்றங்களை மறைத்து வைத்துவிட்டு

பிறருடைய குற்றங்களைச் சுட்டிக் காட்டுதல் கூடாது)

என்று மலையாளத்திலும் கூறிச் செல்வதைக் காணலாம்.

ஒரு வேலை செய்து அதனால் ஏற்படக் கூடிய துன்பங்கள் அவ்வேலையினைச் செய்தவர்களுக்கு மட்டுமே தெரியும் என்பதற்குச் சான்றாக,

முட்ட போடுற கோழிக்குத் தாண்டி குண்டி வலி தெரியும்"

என்று தமிழிலும்,

*മുട്ടയിടുന്ന കോഴിക്കല്ലേ മൂണ വേദന അറിയൂ*

(முட்டை போடுகின்ற கோழிக்குத்தான் குண்டி வலி தெரியும்)

என்று மலையாளத்திலும் ஒரே சூழலில் கூறுகின்றனர்.

ஒரு பொருள் நம்மிடம் இருக்கும் பொழுது அதற்கான மதிப்பினைப் பற்றி யாரும் உணர்ந்து கொள்ளமாட்டார்கள். ஆனால் அப்பொருளை நாம் இழந்துவிடும் பொழுது அதன் மதிப்பை நம்மால் உணர்ந்து கொள்ள முடியும் எனும் சூழ்நிலையில்,

*அப்பனோட அரும அப்பனில்லாட்டி தெரியும்*
*உப்போட அரும உப்பில்லாட்டி தெரியும்*

என்று தமிழிலும்,

*கண்ணிரிக்கும்போ காழ்ச்ச அறியில்லா*
(கண் இருக்கும் பொழுது காட்சி தெரியாது)

என்று மலையாளத்திலும் கூறுவதைக் காணலாம்.

தன்னிடம் இருக்கின்ற பொருளைத் தானும் பயன்படுத்தமாட்டார்கள் பிறருக்கு கொடுத்து உதவி செய்யவும் மாட்டார்கள் என்ற சூழ்நிலையில்,

*தானும் படுக்க மாட்டான் தள்ளியும் இருக்க மாட்டான்*

என்று தமிழிலும்,

*பட்டி தின்னுகயில்லா பசுவினெக் கொண்டு தீட்டிக்குகயுமில்லா*
(நாய் சாப்பிடவும் செய்யாது மாட்டைச் சாப்பிடவும் விடாது)

என மலையாளப் பழமொழியின் ஊடாக அறியமுடிகிறது.

நாம் எந்த இடத்திற்குச் சென்றாலும் அந்த இடத்திலுள்ள மக்களைப் போன்றும், அவ்விடத்திலுள்ள பண்பாடு, கலாச்சாரம் போன்றவற்றிற்குக் கட்டுப்பட்டுத்தான் வாழ வேண்டும் எனும் சூழலில்,

*பாம்பு திங்கற ஊர்ல போனா நடுத்துண்டந்தான் சாப்பிடணும்*

என்று தமிழிலும்,

*நடுத்துண்டம் தின்னுன்ன நாட்டில் சென்னால் நடுத்துண்டம் திண்ணனம்*
(நடுப்பகுதி சாப்பிடுகின்ற நாட்டிற்குச் சென்றால் நடுத்துண்டு சாப்பிட வேண்டும்)

என்று மலையாளத்திலும் கூறுவதைக் காணலாம்.

யாரிடமாவது இருக்கக் கூடிய கோபத்தை, அவர்களிடம் காண்பிக்காமல் வேறு யாராவது மீது காட்டி கோபத்தைத் தீர்த்துக் கொள்ளக்கூடிய நிலையைக் காணலாம். இது மனித இயல்பு. அந்த மாதிரியான சூழ்நிலையில்,

*எங்கேயோ போற மாரியாத்தா எம்மேல வந்து ஏறாதே*

என்ற தமிழ்ப் பழமொழியினையும்,

*அங்஖ாடியில் தோற்றதினு அம்மயோடானோ கோபம் காணிக்கனு*
(அங்காடியில் தோல்வியடைந்ததற்கு அம்மாவிடமா கோபப்படுவது?)

எனும் மலையாளப் பழமொழி சுட்டிச் செல்வதைக் காணலாம்.

யாருக்கும் நடக்காத ஒரு செயல் ஒருவருக்கு மட்டும் நடந்தது எனில், அவர் சில வித்தியாசத்துடன் இருக்கின்ற செயல்களையெல்லாம் செய்து கொண்டிருப்பார். அது போன்ற சூழலில்,

*அதிசயமான ஊர்ல ஆம்பள பையன் பொறந்தான்னு சொல்லி கடப்பாற எடுத்து காது குத்தினாங்களாமா*

என தமிழிலும்,

*தூரராத்தவன் தூரரியால் தீட்டங் கொண்டு ஆராட்டு*

(மலங்கழிக்காத்தவன் மலங்கழித்தால் மலத்தைக் கொண்டு நீராட்டு நடத்துவர்)

எனும் மலையாளப் பழமொழியாலும் கூறுவதைக் காணலாம்.

தமிழ்ப் பழமொழியில் ஆண் பிள்ளைகளுக்கு காது குத்தக் கூடிய வழக்கம் உள்ளது என்றும், மலையாளப் பழமொழியில் ஆராட்டு திருவிழா நடத்துகின்ற வழக்கம் உள்ளது என்பதைக் கூறுவதாகவும் அமைந்துள்ளன.

நல்ல பொருள் எந்தச் சூழலிலும் அதன் குணமானது மாறாமல் எப்பொழுதும் ஒரே தன்மையில் இருக்கும். இதனை,

*குப்பையில கிடந்தாலும் குன்றிமணி குன்றிமணி தான்*

என்ற தமிழ்ப் பழமொழியினையும்,

*பந்தீராண்டு கழிஞ்ஞாலும் மாணிக்கம் மங்ஙில்லா*

(பனிரெண்டு ஆண்டு முடிந்தாலும் மாணிக்கத்தின் ஒளி குன்றிவிடாது)

என்று மலையாளத்திலும் ஒரே சூழ்நிலையில் கூறுவதைக் காணலாம்.

தானொரு உயர்வான இடத்தில் பிறக்க வேண்டும் எனும் சூழ்நிலையில்,

செத்து செத்துப் பொறந்தாலும் செட்டியார் வகுத்துல பொறக்கணும்"

என்று தமிழிலும்,

*நாயாயி பிறந்நாலும் தரவாட்டில் பிறக்கணம்*

(நாயாக பிறந்தாலும் தரவாட்டு வீட்டில் தான் பிறக்க வேண்டும்)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் கூறுகின்றனர்.

நமக்குத் தேவையான பொருட்கள் நம்மிடம் இருக்கும் பொழுது அதையெல்லாம் பொருட்படுத்தாமல் பிறரிடம் உதவிகேட்டு செல்லக் கூடிய சூழ்நிலையில்,

*கையில் வெண்ணையை வெச்சுக்கிட்டு நெய்க்கு அலையற மாதிரி*

என்று தமிழிலும்,

*தோட்டத்திலு பழமிரிக்கெ தூரே போகுன்னதெந்தினு*
(தோட்டத்தில் பழம் இருக்கும் பொழுது தூரத்தில் போவது எதற்கு)

என்ற மலையாளப் பழமொழியும் கூறுவதைக் காணமுடிகின்றது.

சில மனிதர்களுக்கு இரண்டு முகங்கள் இருப்பதைக் காணலாம். அதாவது நம்முன் நமக்குச் சாதகமாகப் பேசுவதும், நாம் அவ்விடத்திலிருந்து விலகிச் சென்றதும் நம்முடைய குறைகளை பிறரிடம் கூறிக் கொண்டிருப்பதையும் காணலாம். இதனை,

*முன்னால பல்லுல சிரிச்சிட்டு பின்னால பல்லுல கடிக்கறது*

என்று தமிழிலும்,

*அகத்து குசும்பனும் புறத்து நல்லவனும்*
(மனதினுள் வஞ்சகனும் வெளியில் நல்லவனும்)

என்று மலையாளத்திலும் ஒரே சூழலில் பழமொழிகளைக் கூறுகின்றனர்.

எந்தவொரு செயலாக இருப்பினும் நடக்க வேண்டிய காரியங்கள் அதற்குரிய சமயத்தில் நடக்கும் என்னும் சூழலில்,

*கத்தரிக்காய் முற்றினால் கடைவீதிக்கு வந்து தானே ஆகணும்*

*காணான் போகுந்ந பூரத்திநு எந்திநு கேட்டறியனு*

(பார்க்கப் போகின்ற பூர விழாவை எதற்குக் கேட்டுத் தெரிய வேண்டும்)

என்ற தமிழ் மலையாளப் பழமொழிகள் சூழலுக்குத் தக்கவாறு கூறுவதைக் காணலாம். மிகவும் கோபத்துடன் இருப்பவர்களை,

*மிஞ்ச வெச்ச சாறு சுண்ட வெச்ச மாதிரி*

*இஞ்சி கடிச்ச குரங்கினெ போலே*

(இஞ்சியைக் கடித்த குரங்கினைப் போன்று)

என்ற தமிழ் மலையாளப் பழமொழிகள் வெளிப்படுத்தி நிற்பதைக் காணலாம்.

எந்தவொரு செயலையும் நிதானத்துடனும், பொறுமையுடனும் செய்யாமல் எதற்கும் பொறுமையின்றி செயல்படுபவர்களை,

*வாலுல தீப் பிடிச்ச மாதிரி*

என்று தமிழிலும்,

*வெடி கொண்ட பன்னி பாயும் போலே*

(வெடியின் சத்தம் கேட்ட பன்றி பாய்வதைப் போல)

என்று மலையாளத்திலும் கூறுவதைக் காணமுடிகின்றது.

மிகவும் செல்வச் செழிப்புடன் இருக்கின்றவர்களிடம் உறவினர்களும், சுற்றத்தார்களும், நண்பர்களும் இருப்பார்கள் என்பதை,

*சதை இருக்கற இடத்துலதான் கத்தி பாயும்*

என்று தமிழிலும்,

*சக்க முறிக்குன்னிடத்தே ஈச்ச கூடு*

(பலாப்பழம் இருக்கின்ற இடத்தில் தான் ஈ மொய்க்கும்)

என்ற மலையாளத்திலும் பழமொழி கூறுகின்றனர்.

நாம் ஒருவரைத் தேடிக் கொண்டு செல்கிறோம். ஆனால் அவர் நம் முன் தென்படுவதில்லை. திடீரென்று ஒரு நாள் நாம் அறியாமலேயே நம் முன் வந்து நிற்பதைக் காண்கிறோம். அச்சூழலில்,

*கும்பிடப் போன தெய்வம் குறுக்க வந்தது மாதிரி*

என்று தமிழிலும்,

*தேடிய வள்ளி காலில் சுற்றி*

(தேடிச் சென்ற கொடி காலில் சுற்றிவிட்டது)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் கூறப்படுவதைக் காணலாம்.

கையில் செல்வம் இருப்பவர்கள் எப்படி வேண்டுமானாலும் நடப்பார்கள் என்பதை,

*முடியுள்ள மகராசி அள்ளியும் முடிப்பா அவுத்தும் விடுவா*

என்று தமிழிலும்,

*முடியுள்ள சீமாட்டி சாச்சிட்டும் கட்டும் சரிச்சிட்டும் கட்டும்*

(முடியிருக்கின்றவள் சாய்த்தும் கட்டுவாள் சரித்தும் கட்டுவாள்)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் ஒரே சூழலில் கூறப்படுகின்றன. அதிர்ச்சி தரும்படியாக இருக்கக்கூடிய செய்தியினைப் பற்றிக் கூறுகையில்,

*கரண்ட் கம்பி மிதிச்ச மாதிரி*

என்று தமிழிலும்,

*குந்தம் விழுங்கிய போலே நிக்கனு*

(வேல் விழுங்கியது போன்று நிற்கிறாய்)

என்று சூழ்நிலைக்கு ஏற்றவாறு கூறுவதைக் காணலாம்.

சில செயல்கள் நடைபெறுவதற்கு நாம் அறியாமலேயே நாம் காரணமாகிவிடுவோம். அவ்வாறு இருக்கக்கூடிய சூழலில்,

*காக்கா உக்கார பனம்பழம் விழுந்துவிட்டது*

என்று தமிழிலும்,

*சக்க வீணு முயலு சத்து*

(பலாப்பழம் விழுந்து முயல் இறந்து விட்டது)

என்று மலையாளத்திலும் பழமொழிகள் கூறப்படுவதைக் காணலாம்.

## தொகுப்புரை

- இப்பகுதியில் 'ஒப்பியல் இலக்கியம்' என்ற தொடரை முதன் முதலில் தமிழில் க. கைலாசபதி அவர்கள் பயன்படுத்திய முறை பற்றிக் கூறப்பட்டுள்ளது.
- ஒப்பியல் இலக்கியம் என்ற தொடரிற்கு பிற ஆசிரியர்கள் கூறிய கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.
- மலையாளத்தில் ஒப்பியல் துறையில் ஈடுபட்டுள்ள ஆசிரியர்களையும், அவர்கள் ஒப்பாய்வு செய்துள்ள நூற்களைக் குறித்தும் கூறப்பட்டுள்ளன.
- கோயில்களால் நிறைந்திருக்கக் கூடிய கோயம்புத்தூர் மாவட்டத்தையும், மலைகளும் செடிகளும், கொடிகளும், குளங்களும் நிறைந்திருக்க கூடிய பாலக்காடு மாவட்டத்தையும் பழமொழியின் மூலம் ஒப்பீடு செய்து விளக்கப்பட்டுள்ளது.
- இரு மாவட்டங்களிலுள்ள புழங்கு பொருட்களின் அடிப்படையில் அந்தந்தப் பண்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன. பெண்களின் புழங்கு வெளிகள், ஆண்களின் புழங்கு வெளிகள் போன்றவையும் பழமொழிகள் மூலம் கண்டறியப்பட்டுள்ளன.
- மக்களின் தொழில்கள் என்று பார்க்கும் போது உழவுத் தொழில், மரம் வெட்டுதல், முடி வெட்டுதல், எண்ணெய் எடுத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்துள்ளனர் என்ற ஒற்றுமை நிலை பழமொழிகளின் மூலம் ஒப்பிடப்பட்டுள்ளது.
- இரு மாவட்டத்திலுள்ள மக்கள் தங்களுடைய உணவுப் பொருளாக அரிசி, கஞ்சி, பால், தயிறு போன்ற உணவு வகைகளையும், கத்தரிக்காய், சுண்டைக்காய், பாகற்காய் என்ற காய்கறி வகைகளையும், மாமிச உணவு வகைகளான நண்டு, மீன், இறைச்சி போன்ற உணவினையும் உண்டு வந்துள்ளனர்.

- கோவை மாவட்ட மக்கள் கூரைவீடு, சாளைவீடு, மச்சுவீடு போன்ற வீடுகளில் வாழ்ந்து வந்துள்ளனர். நாகரீகம் வளர்ச்சியடைந்த காலத்தில் கண்ணாடி வீடுகளில் மக்கள் வாழத் தொடங்கிவிட்டனர். பாலக்காடு மாவட்ட மக்கள் சிமெண்டினால் கட்டிய வீடுகளில் வாழ்ந்து வந்துள்ளனர் என்பதை பழமொழிகள் வழி விளக்கப்பட்டுள்ளது. இதில் இரு மாவட்டத்திலுள்ள மக்களினுடைய வேற்றுமைகள் புலனாவதைக் காணமுடிந்தது.
- இரு மாவட்டத்திலுள்ள ஆண்கள் வேட்டி, சட்டை, டிரவுசர், கோமணம், தலைப்பாகை போன்றவற்றை அணிந்து வந்துள்ளனர்.
- கோவை மாவட்டப் பெண்கள் தமிழர் பண்பாட்டிற்கு உரியதாக இருக்கக் கூடிய சீலை, வண்ணப்புடவை, பட்டுச்சீலை, முக்காடு போன்றவற்றை அணிந்து வந்துள்ளனர்.
- பாலக்காடு மாவட்டப் பெண்கள் அணியக் கூடிய ஆடைகளைப் பற்றிய பழமொழிகள் கள ஆய்வின் போது கிடைக்கவில்லை.
- இரு பாலினருக்கும் உரியதாக இருக்கக் கூடிய கம்பிளி, போர்வை போன்றவற்றை இரு மாவட்டங்களிலும் உள்ள மக்கள் பயன்படுத்தியுள்ளனர்.
- பெண்கள் தங்களுடைய கூந்தலுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர்.
- இரு மாவட்ட மக்கள் விவசாயத்தைத் தங்களுடைய முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளனர். பாலக்காடு மாவட்ட மக்கள் நெற்பயிரினை விவசாயம் செய்துள்ளனர். கோவை மாவட்ட மக்கள் நெற்பயிர், கம்பு, சோளம் போன்றவற்றைப் பயிர் செய்து வந்துள்ளனர்.
- இரு மாவட்ட மக்களும் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கின்றனர் என்பதை கள ஆய்வின் போது சேகரித்த பழமொழிகளின் மூலம் அறிய முடிந்தது.
- கோவை மாவட்ட மக்கள் உடலுறுப்பு, பேய், இயற்கை, மாதம், நாட்கள் போன்றவை சார்ந்த நம்பிக்கை கொண்டு வாழ்ந்து வந்துள்ளனர்.

- பாலக்காடு மாவட்ட மக்கள் நாட்கள், நட்சத்திரம், இயற்கை, உடலுறுப்பு, அதிர்ஷ்டம் போன்றவற்றின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர்.
- கோயம்புத்தூர் மாவட்டத்தில் காதுகுத்துதல், திருமணத்தின் போது செய்யக்கூடிய சடங்குமுறைகள் போன்றவை காணப்படுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் திருமணம், இறப்புச் சடங்குகள் போன்றவை செய்து வந்துள்ளனர்.
- கோவை மாவட்ட மக்கள் பிள்ளையார், சிவன், பெருமாள், மாரியம்மன் போன்ற கடவுள்களை வழிபட்டு வருகின்றனர். பாலக்காடு மாவட்ட மக்கள் சிவன், பிள்ளையார், ஐயப்பன் போன்ற கடவுள்களை வழிபட்டு வருகின்றனர். இதில் இரு மாவட்டத்திலுள்ள மக்களினுடைய ஒற்றுமை வேற்றுமைகள் புலனாவதைக் காணமுடிந்தது.
- கோவை மாவட்டத்தில் தேர்த் திருவிழாவினை மிக ஆராவரமாகக் கொண்டாடி வருகின்றனர். பாலக்காடு மாவட்டத்தில் ஆராட்டு என்ற விழாவினை மிக மகிழ்ச்சியுடன் ஆராவரமாகக் கொண்டாடி வருகின்றனர்.
- இரு மாவட்டத்திலும் ஒரே போன்று இருக்கக் கூடிய உயிரினங்கள் அதாவது யானை, குதிரை, காளை, ஆடு, மாடு, கழுதை, நாய், பூனை போன்றவை காணப்படுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் காளை என்பதை மூரி எனும் சொல்லால் வழங்கி வருகின்றனர்.
- பறவை இனங்களான கோழி, காக்கை, கொக்கு போன்றவற்றையும், அணில், தேள், எலி போன்ற ஊர்வனவும் இரு மாவட்டங்களிலும் காணப்படுகின்றன.
- கோவை மாவட்டத்தில் கவுண்டர், செட்டியார், முஸ்லீம், வண்ணான், இடையன், குயவன், பள்ளன், சக்கிலியன் போன்ற சாதியிலுள்ள மக்கள் உள்ளனர்.
- கவுண்டர் இன மக்கள் சமூக அந்தஸ்த்தில் உயர்ந்த நிலையில் உள்ளன. செட்டியார் இன மக்கள் சம்பாதிக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டவர்களாக உள்ளனர்.

- முஸ்லீம் இன மக்கள் அவர்களுக்கு உரியதாக இருக்கக் கூடிய செய்திகளைப் பற்றிக் கூறுவதாக பழமொழி சுட்டிச் சென்றுள்ளதைக் காண முடிகின்றது.
- வண்ணான், இடையன், குயவன், பள்ளன் போன்ற சாதியினரைப் பற்றிய பழமொழிகளில் அச்சாதியினரை மட்டம்தட்டும் படியான செய்திகளை வெளிப்படையாகக் கூறியுள்ள நிலையினைக் காணமுடிகின்றது.
- கோவை மாவட்டத்தில் சாதியக் காழ்ப்புணர்ச்சியினைத் தூண்டும் வகையில் ஒரு மதத்திலுள்ள மக்கள் பிற மதத்தினைக் கேலி செய்கின்ற நிலையினையும் பழமொழியில் காணமுடிந்தது.
- பாலக்காடு மாவட்டத்தில் சாதிக் கலவரம், எதிர்ப்பு போன்றவை இடம்பெறவில்லை. ஆதலால் பட்டர், பறையன், நாயர், செறுமர் போன்ற நால்வகைச் சாதியினரைப் பற்றி மட்டுமே பழமொழிகள் கிடைத்தன.
- கோவை, பாலக்காடு மாவட்டங்களில் தென்னை, பனை, முருங்கை போன்ற மரங்கள் காணப்படுகின்றன.
- கோவை மாவட்டத்தில் பனைமரமும், பாலக்காடு மாவட்டத்தில் பலாமரமும் அதிகமாகக் காணப்படுகின்றன என்பது இரு மாவட்டங்களுக்கு இடையிலான வேற்றுமையாக அமைந்துள்ளது என்பதை ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளது.
- இரு மாவட்டத்திலும் தகாத உறவு இருந்திருக்கின்றன என்பதையும் பலதார பலகணவ திருமண முறைகள் இருந்தன என்பதையும் பழமொழிகளின் மூலம் ஒப்பீடு செய்து கூறப்பட்டுள்ளன.
- மக்களினுடைய குணம் மாறக்கூடிய நிலையில் இருப்பதை இரு மாவட்டப் பழமொழிகளிலும் காணப்படுகின்றன.
- இரு மாவட்டங்களிலும் ஒரே சூழலில் வழங்கக் கூடிய தமிழ் மலையாளப் பழமொழிகள் சூழலுக்குத் தக்கவாறு எவ்வாறு வழங்கி வருகின்றன என்பதை பழமொழிகளில் பதிவாகியுள்ள நிலையினைக் காணமுடிந்தது.

## அடிக்குறிப்புகள்

1. ம.திருமலை, ஒப்பிலக்கிய ஆய்வுகள், ப.19.
2. தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், ப.58–59.
3. எம்.லீலாவதி, தாரதம்ய சாகித்ய படனம், ப.29.
4. மேலது, ப.52.

# முடிவுரை

'கோயம்புத்தூர் பாலக்காடு மாவட்டப் பழமொழிகள் ஓர் ஒப்பீடு' என்னும் தலைப்பில் மேற்கொண்ட ஆய்வில் கண்டறிந்த முடிவுகள் இங்கே தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

- நாட்டுப்புறக் கூறுகளில் ஒன்றான பழமொழி வாய்மொழி இலக்கியம் சார்ந்தது என்று ஏற்றுக் கொண்டாலும் பழமொழிகளுக்கும் நாட்டுப்புறப் பாடல்களுக்கும் இடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் உள்ளன.
- பழமொழிகள் தோன்றிய காலத்தைத் திட்டவட்டமாகக் கூற இயலாது.
- காலங்காலமாகப் பழமொழிகள் வளர்ச்சியடைந்து வருகின்றன. தற்காலத்தில் பழமொழியின் செல்வாக்கு அனைத்து இடங்களிலும் பரவலாகக் காணப்படுகின்றது.
- காலந்தோறும் இலக்கியங்களில் பழமொழிகள் பயன்படுத்தப்பட்டு வருவதிலிருந்து பழமொழிகளுக்கு என்றிருக்கக் கூடிய தனிச்சிறப்பினை உணர்ந்து கொள்ள முடிகின்றது.
- ஒவ்வொரு ஊரிலும், நாட்டிலும், வட்டாரங்களிலும் பழமொழியைக் குறிக்கக் கூடிய பல்வேறு சொற்களைக் கூறுகின்றனர். ஆனால் அனைவரும் பழமொழி என்ற ஒரு சொல்லினை அறிந்து வைத்துள்ளனர்.
- தமிழில் நமக்குக் கிடைத்த முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்தில் பழமொழிக்கு என்று இலக்கணம் வகுத்திருப்பதும், பழமொழி நானூறு என்னும் நூல் பழமொழிக்கென்று நானூறு பாடல்களை உருவாக்கியிருப்பதும், பழமொழி பெற்றிருந்த செல்வாக்கினை எடுத்தியம்புவதாக உள்ளன.

- தமிழ் மலையாளப் பழமொழிகளில் ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், இரு விளக்கக் கூறுடைய பழமொழிகள், மூன்று விளக்கக் கூறுடைய பழமொழிகள் காணப்படுகின்றது.
- தமிழில் 687 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், 480 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மூன்று விளக்கக் கூறுடைய ஒரு பழமொழியும் கிடைத்துள்ளன.
- மலையாளத்தில் 421 ஒரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், 83 இரு விளக்கக் கூறுடைய பழமொழிகளும், மூன்று விளக்கக் கூறுடைய ஒரு பழமொழியும் கிடைத்துள்ளன.
- தமிழ் மலையாளப் பழமொழிகளை ஆராய்ந்த போது மூன்று அடியில் மூன்று விளக்கங்களைக் கூறி நான்காவது அடியில் முடிவைச் சொல்லக்கூடிய பழமொழிகளும் இருப்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.
- தமிழ்ப் பழமொழிகளில் முடிவுரை முதலிலும் தலைப்பு இறுதியிலும் வரக்கூடிய இரு பழமொழிகள் கள ஆய்வில் கிடைத்தது.
- பழமொழிகளில் முரணற்ற, முரணுடைய, முரணற்ற முரணுடைய கூறுகளைக் கொண்ட பழமொழிகள் என்பனவற்றை இனங்காண முடிந்தன.
- மலையாளத்தில் 'இல்லா' என்ற அமைப்பில் வரக்கூடிய அதிகமான பழமொழிகளையும் இம்மக்கள் பயன்படுத்தி வருவதைக் காணமுடிகிறது.
- பாமர மக்கள் வழங்கக்கூடிய பழமொழிகளில் அவர்களறியாமலேயே எதுகை மோனை அமைப்பு இருப்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.
- இரு மாவட்டத்திலும், குடும்ப உறவுகள், சில உறவுகள் சுமூகமான நிலையிலும், சில உறவுகள் சுமூகமற்ற நிலையிலும் இருந்தன என்று பழமொழிகள் பதிவு செய்கின்றன.

- கோவை மாவட்ட மக்கள் மச்சினன் என்ற உறவுக்குப் பெரியதொரு இடத்தினை அளிக்கின்றனர்.

- மாமியார் மருமகளின் உறவானது சண்டை சச்சரவோடு இருப்பதாகப் பழமொழிகள் பதிவு செய்கின்றன.

- பெண்ணை கட்டுப்படுத்தும், கட்டமைக்கும், தாழ்மைப்படுத்தும் ஆணாதிக்க மனநிலை சமூகத்தில் இருப்பதைப் பழமொழிகள் சுட்டுகின்றன.

- சமூகத்தில் பழங்காலந்தொட்டு தகாத உறவு, பலதார மணம் போன்றவை இருந்துள்ளன. பாலக்காடு மாவட்டத்தில் பலகணவ மணம் இருந்துள்ளது.

- தந்தை வழி சமூகத்தில் சொத்துக்கள் ஆண்களுக்கு இடையே பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. எனவே சகோதரர்கள் பங்காளிகளாகின்றனர். இந்த பங்காளி உறவு பிரச்சினையுடையதாகவே சமூகத்தில் காணப்படுகிறது. எனவே அண்ணன், தம்பி சார்ந்த பழமொழிகள் வெறுப்பை உணர்த்துவதாக அமைந்துள்ளன.

- கோவை மாவட்டத்தில் மக்கத் தாயமுறையில் இருப்பதால் திருமணமானவுடன் பெண்ணிற்கு தன்னுடைய தந்தை வீட்டில் எந்தவிதமான உரிமையும் அற்றவளாகிறாள்.

- கோவை மாவட்டத்தில் கவுண்டர், செட்டியார் சாதியில் இருப்பவர்கள் உயர்ந்த நிலையில் உள்ளனர்.

- தட்டான், வண்ணான், இடையன், பறையன், பள்ளன், குறவன், சக்கிலியன், போன்றோர் குலத்தொழிலை இன்றும் செய்து வருகின்றனர்.

- பறையன், பள்ளன் சாதியில் இருப்பவர்கள் உயர்ந்த நிலைக்குச் சென்றாலும், இவர்களை உயரவிடாமல் சாதியின் பெயரினைக் கூறி அடிமைப்படுத்துகின்ற நிலை காணப்படுகிறது.

- கோவை மாவட்டத்தில் சாதியக் காழ்ப்புணர்ச்சியுடன் மக்கள் வாழ்ந்துள்ளனர்.

❖ பாலக்காடு மாவட்டத்தில் சாதீயப் பூசல்கள் காணப்படவில்லை.

❖ பழங்காலந்தொட்டு இன்று வரையுள்ள வீடுகள் பற்றிய செய்திகளை பழமொழிகள் வழி உணர முடிகிறது.

❖ இரு மாவட்டத்திலுள்ள மக்கள் இன்று உண்ணக்கூடிய உணவு முறைகளைத்தான் உண்டு வந்துள்ளனர்.

❖ இரு மாவட்டத்திலும் உள்ள மக்கள் அணியக்கூடிய ஆடை, அணிகலன்கள் பற்றிய செய்திகள் பழமொழிகளில் பதிவாகியுள்ளன.

❖ புழங்கு பொருள் பயன்பாடின் வழி பெண்களின் புழங்கு வெளி சிறியதாகவும், ஆண்களின் புழங்குவெளி பெரியதாகவும் காணப்படுகிறது.

❖ பிறருக்கு உதவி செய்யக்கூடிய நிலையில் இருக்கக்கூடிய தொழில்களை இரு மாவட்ட மக்களும் செய்து வருகின்றனர்.

❖ கோவை மாவட்டம் கோயில்களால் நிறைந்திருக்கக்கூடிய பகுதியாகும். பாலக்காடு மாவட்டம் மலைகளும், செடிகளும், கொடிகளும், குளங்களும் நிறைந்திருக்கக்கூடிய பகுதியாகவும் உள்ளது.

❖ இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் கடவுள் மீது மிகுந்த நம்பிக்கை கொண்டவர்களாக உள்ளனர்.

❖ கணபதி, பெருமாள், சிவன், மாரியம்மன், போன்ற கடவுள்கள் கோவை மாவட்டத்தில் அதிகமாகக் காணப்படுகின்றன.

❖ பாலக்காடு மாவட்டத்தில் ஐயப்பன், சிவன், பிள்ளையார் போன்ற கடவுள்கள் அதிகமாகக் காணப்படுகின்றன என்பது பழமொழிகளின் வழி தெரியவருகிறது.

❖ இரு மாவட்ட மக்களும் இவர்களுக்கு உரியதாக இருக்கக்கூடிய விழாக்களை ஆண்டுதோறும் மறவாமல் கொண்டாடி வருகின்றனர்.

❖ ஆண்களுக்கு காது குத்துகின்ற வழக்கம் கோவை மாவட்ட மக்களிடம் காணப்படுகிறது.

- பாலக்காடு மாவட்ட மக்கள் எந்தவொரு செயலையும் நாள், நட்சத்திரத்தின் அடிப்படையில் முடிவு செய்கின்றனர். இம்மக்களிடம் நாள், நட்சத்திரம் பற்றிய 23 பழமொழிகள் காணப்படுகின்றன.
- தென்னிந்தியாவில் மிகப்பெரிய கால்நடை சந்தை கோயம்புத்தூர் மாவட்ட பொள்ளாச்சியில் அமைந்துள்ளது.
- கால்நடைகளின் மூலம் விவசாயிகள் பால் வியாபாரம் செய்வதில் மிகவும் ஈடுபாடு கொண்டிருக்கின்றனர்.
- பால் பண்ணை வைத்து நடத்தக் கூடிய மக்கள் உள்ளனர் என்று பழமொழிகள் சுட்டுகின்றன.
- ஆடு, மாடு போன்ற கால்நடைகளைப் பற்றி சிறு சிறு நுணுக்கங்களுடன் இருக்கக்கூடிய 50 பழமொழிகள் கோவை மாவட்டத்திலிருந்து கிடைத்துள்ளன.
- பாலக்காடு மாவட்டத்தில் கால்நடை வளர்ப்பின் இன்றியமையாமையைக் குறித்து பத்து பழமொழிகள் இம்மக்களுடைய வழக்காற்றில் பயன்படுத்தி வருகின்றனர்.
- அவரவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்ற இடத்திற்குத் தக்கவாறு பழமொழிகளில் வட்டார மொழிச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.
- பண்டைய காலந்தொட்டு இன்று வரை நிலையாக இருக்கக்கூடிய செய்திகளை இரு மாவட்ட பழமொழிகளிலும் பதிவாகியுள்ளன.
- இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் அறிவுரை சார்ந்த பழமொழிகளைக் கூறி தீயவழியில் செல்லும் மக்களை நல்வழிப்படுத்தவும் செய்கின்றனர்.
- கெட்ட வார்த்தைகளைச் சர்வசாதாரணமாக இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் பயன்படுத்திய நிலையினைப் பழமொழிகள் பதிவு செய்துள்ளன.
- நகர்ப்புறங்களிலுள்ள மக்கள் இன்றும் பழமொழிகளை மாற்றி நாகரீகம் வளர்ச்சியடைந்துள்ள நிலைக்குத் தக்கவாறு கூறி வருகின்றனர்.

- சாதி, கல்வி, தொழில், இடம் என்ற சூழலுக்குத் தக்க பாடவேறுபாடுடனும், ஒரே சூழலில் பல பழமொழிகளை இரு மாவட்ட மக்களும் வழங்கி வருகின்றனர்.
- தமிழ்ப் பழமொழிகளில் மலையாளச் சொற்களின் தாக்கமும், மலையாளத்தில் தமிழ்ச் சொற்களின் தாக்கமும் காணப்படுகிறது.
- இரு மாவட்ட பெண்களும் தங்களுடைய கூந்தலுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர்.
- இரு மாவட்ட மக்களும் தங்களுடைய முன்னோர்கள் செய்து வந்துள்ள தொழிலான விவசாயத் தொழிலினையே தலைமுறை தலைமுறையாகச் செய்து வருகின்றனர்.
- இம்மக்கள் திருமணம், இறப்பு போன்ற பலவிதமான சடங்குகளை செய்து வந்துள்ளனர்.
- ஒரே போன்று இருக்கக்கூடிய பூச்சிகள், ஊர்வன போன்றவை இரு மாவட்டத்திலும் காணப்படுகின்றன.
- கோவை மாவட்ட வீடுகளில் அதிகமாக மூட்டைப் பூச்சிகள் உள்ளன என்று பழமொழிகள் சுட்டுகின்றன.
- பாலக்காடு மாவட்டத்தில் விவசாயம் செய்யக்கூடிய மக்களது வீட்டில் எலி அதிகமாகக் காணப்படுகின்றன.
- கோவை மாவட்டம் வறட்சியான நிலப்பகுதியாகக் காணப்படுவதால் அதிகப்படியான பனைமரங்கள் இருப்பது கள ஆய்வில் புலனானது.
- முக்கனிகளுள் ஒன்று பலா. இப்பலா மரம் பாலக்காடு மாவட்டத்தில் அதிகமாகக் காணப்படுகிறது.
- தமிழ் மலையாளப் பழமொழிகளின் பொருள் வெளியீட்டு முறையும் சொற்தேர்வும் அந்தந்தக் கலாச்சாரத்தைச் சுட்டி நிற்கின்றன.

❖ இரு மாவட்டங்களிலுள்ள மக்கள் தங்களுக்கு வேண்டிய காய்கறிகளை இவர்களே பயிர் செய்து வருகின்றனர்.

❖ இம்மக்கள், அவர்களுக்குத் தேவையான காய்கறிகளை பயன்படுத்தவும், சந்தைகளில் கொண்டு விற்று வரவும் செய்கின்றனர் என்பது கள ஆய்வின் போது நேரில் காண முடிந்தது.

❖ பொதுவாக நாட்டுப்புற மக்களே அதிகமாகப் பழமொழிகளைப் பயன்படுத்துவர். இதற்கு விதிவிலக்காக, கோவை மாவட்டத்தில் நாட்டுப்புறம், நகர்ப்புறம் என்று வேறுபாடின்றி சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் பழமொழிகளைப் பயன்படுத்துகின்றனர். இது இம்மாவட்டத்தின் சிறப்பம்சமாகும்.

❖ பழமொழிகளின் எதிர்காலத்தைப் பொறுத்தவரை எந்தவிதமான பாதிப்பும் இல்லை என்பது புலனாகிறது.

❖ கள ஆய்வில் கிடைத்த ஆயிரத்துக்கும் மேற்பட்ட பழமொழிகளில் கோவை மாவட்ட வட்டாரச் சுவையோடு அமைந்துள்ளமை இம்மாவட்டத்தின் தனித்தன்மையாகும்.

மேலும் இவ்வாய்வினை,

❖ அமைப்பியல் கோட்பாடு

❖ பழமொழிக் கதைகள்

❖ பழமொழிகளை மீட்டுருவாக்கம் செய்தல்

❖ பெண்ணியம், தலித்தியம் போன்ற கருத்துக்களின் அடிப்படையிலான விமர்சன நோக்கில் மேற்கொண்டு பழமொழிகளில் ஆய்வு செய்யலாம்.